# ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்

கொழும்பு 6

ஆங்கிலமூல நூலாசிரியர்:

திரு வி கனகசபை,

பி ஏ, பி எல்

*

தமிழாக்கம்:

திரு கா அப்பாத்துரை,

எம் ஏ, எல் டி

941.101
கனக
SL/PR

கழக வெளியீடு

கழக வெளியீடு: ௮௱௧

# ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்

E. BOOK ..By K.Rajalingam


ஆங்கில நூலாசிரியர் :

**திரு வி கனகசபை,** பி ஏ, பி எல்.

※

தமிழாக்கம் :

பன்மொழிப்புலவர்,

**கா அப்பாத்துரை,** எம் ஏ., எல் டி



*திருநெல்வேலித் தென்னிந்திய*

*சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,*

*திருநெல்வேலி-6 1962 சென்னை-1.*

காசிநாத பிள்ளை அப்பாத்துரை (1909)

(C) 1962 THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,

Ed 1 July 1956

Reprint April 1962

V211'DI
K2

THE TAMILS
EIGHTEEN HUNDRED YEARS AGO

MUTHIAH ACHAKAM, 202, Jani Jhan Khan Road, Madras-14.

# பதிப்புரை

தமிழர் ஆர்வம் இன்று தடம் புரண்டோடுகிறது. ஆனால் அந்த ஆர்வம் இன்னும் ஆர்வத்தை வளர்ப்பதற்கே பயன்படுத்தப் பெறுகிறது. இது முற்றிலும் கிளர்ச்சி தரும் செய்தி அன்று. ஆர்வம் அறிவாக வேண்டும். அறிவு செயலை ஊக்கவேண்டும். ஆர்வம், அறிவு, செயல் ஆகிய மூன்றும் தமிழ்ப் பண்பில் நின்று, அதன் வேர் முதல் கண்டு, வளமார்ந்த வளர்ச்சிக்குரிய சூழ்நிறங்கள் உருவாக்க வேண்டும். அவை தமிழர் வாழ்வை இயக்கிப் புதிய தமிழகத்தை ஆக்கப் பயன்பட வேண்டும்.

மூன்று தென்றல் அலைகள், முத்திறப்பட்ட மறுமலர்ச்சி ஆர்வ அலைகள் இன்று தமிழை நோக்கித் தவழ்கின்றன.

ஒன்று அக அலை, தமிழக அலை. தமிழினத்தின் பருவ மலர்ச்சியாக எழுந்துள்ள மறுமலர்ச்சி இயக்கம் இதுவே. அது தமிழகப் பொதுமக்கள் உள்ளங்களின் உள்ளே நின்று எழுந்து அவர்களைப் புத்தாக்க முயற்சியில் தூண்டி, புதுவாழ்வு நோக்கி ஊக்குகின்றது. இதனின்று மிகத் தொலைவில், தமிழகத்தைப் புறநின்றியக்கும் புத்தலை ஒன்று அகன்ற பேருலகில் எழுந்துள்ளது. அதுவே தமிழ் பற்றி அறிவுலகில் இன்று ஏற்பட்டு வரும் ஆர்வம். அது திருக்குறளில் ஊன்றிற்று. தொல்காப்பியத்தில் படர்ந்தது. சங்க இலக்கியத்தில் உலவிற்று,

இப்போது தமிழ், தமிழினம் தமிழ்ப் பண்பு ஆகியவை பற்றி எல்லாம் அறியவேண்டுமென்று துடிக்கிறது.

அக அலை, புற அலை ஆகிய இவ்விரண்டினுக்கும் இடையே, மூன்றாவது ஓர் அலை உண்டு. அது மேற் கண்ட இரண்டு ஆர்வ அலைகளையும் அறிவு நோக்கி, செயல் நோக்கி, நாட்டு வாழ்வு நோக்கிச் செலுத்த விரும்புகிறது. அது ஆட்சித் துறையில் தமிழை அரியணை ஏற்றக் கனவு காண்கிறது. சமயத் துறையில் அது அரியோடும் அரனோடும் தமிழ் அளவளாவும்படி செய்ய விரும்புகிறது. கல்வித்துறையில் அது தமிழை ஆளவிடுவதற்கான முயற்சிகள் செய்கிறது. இவற்றுக்கான சூழ்நிலைகளை வகுக்க முனைகிறது. தமிழர் கனவை நனவாக்குவதற்கு வேண்டிய மெய்விளக்கங்கள், அறிவாராய்ச்சிகள், கலைப் பிரசாரங்கள், அறிவுப் பிரசாரங்கள் ஆகியவற்றை ஏடுகளாலும், மாநாடுகளாலும், நாளேடுகளாலும் உருவாக்கப் பாடுபடுகிறது.

'தமிழர் பிறமொழி அறிவின்றித் தம்மை ஆள முடியாது; பிறமொழி பயின்றாலன்றி உலக அறிவுபெற முடியாது. தமிழகத்தில் அறிஞன் என்பவன் பிறமொழி கற்றவன்தான்' — தன்மதிப்புள்ள உண்மைத் தமிழன் எவனையும் கலங்க வைக்கும் நிலைகள் இவை. 'தமிழைப் பற்றியே, தமிழ்ப் பண்பாட்டைப் பற்றியே தமிழில் நூல்கள் இல்லையே! பிறமொழி படித்துத்தானே ஒருவன் தமிழக வரலாற்றைக்கூட அறிய வேண்டும்?' என்று கேட்கும் நல்ல தமிழார்வலர்கள் பலர். இச் சூழல்களை யாம் எம்மால் இயன்றவரை மாற்றி வருகிறோம். இனியும் மாற்ற முயலுவோம். அம் முயற்சிகளில் ஒன்றே இத் தமிழாக்க ஏடு.


கழகவழி வெளிவந்துள்ள

## தமிழக வரலாற்று நூல்கள்

**தமிழக வரலாறு : பேராசிரியர் அறவர்**

இந்நூலின்கண் தமிழகத்தை ஆட்சிசெய்த சங்க காலம், பல்லவர் காலம், சோழர் காலம், பாண்டியர்காலம், நாயக்கர் காலம், ஆங்கிலேயர் காலம் முதலியன இனிது ஆராய்ந்து எழுதப்பட்டுள்ளன. பன்மொழிப்புலவர் திரு. கா. அப்பாத்துரை அவர்களின் விரிந்த முன்னுரையுடன் கூடியது.

கலிக்கா ரூ. 6–00.

**தமிழகம் : திரு. ந. சி. கந்தையா பிள்ளை**

இந்நூலில் தமிழ்நாடு, தமிழ்மொழி முதலியவற்றின் பண்டை நிலையினைப் பல ஆராய்ச்சியாளர் கருத்துக்களுடன் எடுத்துக்காட்டப்பட் டுள்ளன. தமிழ்நாட்டின் தொன்மை நிலை, தமிழ்மொழி, தமிழர் நாகரிகம், ஒழிபியல், அரசமரபுகள் என்னும் ஐம்பெரும் தலைப்புக்களின் கீழ் ஆசிரியர் சிறப்புற ஆராய்ந்துள்ளார்.

கலிக்கா ரூ. 4-50.

**தமிழ் இந்தியா : திரு. ந. சி. கந்தையா பிள்ளை**

'ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர்' காலம் முதல் இன்றுவரையில் தமிழகத்தைப் பற்றிய ஆராய்வுகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. தமிழ் மொழியும், சிவநெறியும் இவ்வுலகம் முழுமையும் ஒருகால் ஓங்கியிருந்தன என்பதை இந்நூல் கற்பார் தெள்ளிதின் உணர்வர்.

கலிக்கா ரூ. 4-50

**குமரிக்கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு : திரு. கா. அப்பாத்துரை**

தென்னிந்தியாவின் பழமைச் சான்றுகளுடன் கடல் கோளுக்கு முற்பட்ட குமரிக்கண்டம் பற்றிய வரலாறும் பழங்கால மக்களது நாகரிகமும் இதில் விளக்கப் பட்டுள்ளன.

கலிக்கா ரூ. 2-00

**பல்லவர் வரலாறு : டாக்டர். மா. இராசமாணிக்கம் பிள்ளை**

*பல்லவர்க்கு முற்பட்ட தமிழகம், பல்லவரைப்பற்றிய சான்றுகள் முதலியனவும் பல்லவராட்சியைப் பற்றிய அரிய குறிப்புக்களும் இதில் அடங்கியுள்ளன.*

*கலிக்கா ரூ. 4-50.*

**சேரர் வரலாறு : துடிசைகிழார், அ. சிதம்பரனார்**

*தமிழகத்தின் ஒரு பகுதியாகிய சேரநாட்டை ஆண்ட சேரமன்னர்களின் வரலாறுகள் இதில் அடங்கியுள்ளன. சேரமன்னர் மரபும், அவரவர் காலக்குறிப்புக்களுடன் இனிது ஆராயப்பட்டுள்ளன.*

*கலிக்கா ரூ. 4-50.*

**பழந்தமிழாட்சி : திரு. ஞா. தேவநேயனார்**

*பழந்தமிழகத்தைப் பற்றிய குறிப்புக்கள் பலவும், அரசியலுறுப்புக்கள், ஆள் நிலப்பிரிவுகள் முதல் தமிழகத்தைப்பற்றிய சிறந்த ஆராய்ச்சிகளும் இதில் இடம்பெற்றுள்ளன.*

*கலிக்கா ரூ. 3-00.*

**மேனாட்டறிஞர் கண்ட தமிழகம் : திரு. வரத வீரப்பன்**

*தமிழகத்தைப்பற்றி மேலைநாட்டு அறிஞர்கள் கூறிய கருத்துரைகள் தொகுக்கப்பெற்றுள்ளன. பல காலத்தும் பலநாட்டுமக்களாலும் பாராட்டப்பெற்ற பெருமைமிக்கது நம் தமிழ்நாடு என்பதை இந்நூல் கற்பார் எளிதில் உணர்வர்.*

*விலை ரூ. 1-25.*

**தமிழ்ச் சங்கங்களின் வரலாறு :**

**துடிசைகிழார். அ. சிதம்பரனார்**

*தென்மதுரைத் தமிழ்ச்சங்கம் முதல், கரந்தைத் தமிழ்ச் சங்கம் வரையில் இடையில் தோன்றிய பல தமிழ்ச் சங்கங்களின் வரலாறுகள் இதில் ஆராயப்பட்டுள்ளன.*

*விலை ரூ. 2-50.*

**மொஹெஞ்சொ-தரோ அல்லது சிந்துவெளி நாகரிகம் :**

**டாக்டர். மா. இராசமாணிக்கம் பிள்ளை**

*5000 ஆண்டுகட்கு முன் வாழ்ந்த திராவிடப்பெருங் குடி மக்களின் நாகரிகத்தைச் சித்திரிக்கும் மொஹெஞ்சொ-தரோ முதலிய பல அழிவுற்ற நகரங்களின் ஆராய்ச்சி நிறைந்தது.*

*விலை ரூ. 4-50.*

# பதிப்புரை

தமிழகத்தின் இன்னொரு குறைபாட்டினை வெளிநாட்டுத் தொடர்புடையோர் அடிக்கடி கண்டும் கேட்டும் வருகின்றனர். 'தமிழ் மொழி, தமிழ் இலக்கியம், தமிழ்ப் பண்பாடு, தமிழக வரலாறு ஆகியவை பற்றி உலகுக்கு எடுத்துரைக்கும் புத்தகங்கள் கிடைக்குமா? எங்கே கிடைக்கும்?" — இக் கேள்விகளைப் பல அயல் நாட்டுப் பேரறிஞர்கள் அந்நாடுகள் செல்லும் வாய்ப்புப் பெற்ற பல பெருமக்களிடமும், இந்நாட்டு ஆட்சியாளர்களிடமும், பல்கலைக் கழகங்கள், கல்லூரிகள், அறிவு நிலையங்கள், பத்திரிகைகள் ஆகியவற்றின் அதிபரிடமும் கேட்டு வருகிறார்கள். அவர்கள் கேள்விகளுக்குத் தக்க விடை கூற முடியாத அவல நிலையிலே நாம் இன்றும் இருக்கிறோம்.

தமிழர் அறிய வேண்டிய நூல்கள், தமிழர் பற்றிய நூல்கள் சில சமயம் ஆங்கிலம் முதலிய மொழிகளில் உள்ளன. தமிழர்கள் அறிய அவை தமிழில் வெளிவந்தாகவேண்டும்! அதே சமயம் தமிழகத்தின் பண்டை இலக்கியச் செல்வங்கள், இன்றைய தமிழர் உயிர்த்துடிப்பையும் வளர்ச்சியையும் காட்டும் அறிவேடுகள் பல தமிழில் உள்ளன. அவை அறிவுலகம் அறிய ஆங்கிலம் முதலிய தக்க பொதுமொழிகளில் வெளிவரல் வேண்டும். இருதிசையிலும் புது நூல்கள், புத்தாராய்ச்சிகள் பெருகுவது விரும்பத் தக்கதாகும்.

மறுமலர்ச்சியியக்கங்கள் தமிழகத்தில் எழுவதற்கு முன்னே, இவ் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், தமிழ் பற்றிய இன்றைய ஆர்வங்களைக் கூடப் பேரளவு வளர்க்கத்தக்க பெரு நூலொன்றை ஈழத்துப்பெருந்தமிழ் மகனாரான திரு. வி. கனகசபை அவர்கள் இயற்றிச்சென்றனர். மறுமலர்ச்சியின் உயிர்த்துடிப்பு தமிழுணர்ச்சியின்

பிறப்பிடமான ஈழத்தில் கூட எழாத அந்நாட்களிலேஅது அப்பேரறிஞர் புகழுடன் நின்றுவிட்டது. அதன் அறிவு மரபு வளங்காணவில்லை. ஆங்கிலேயரும் விரும்பி வாசிக்கத் தக்க சீரிய ஆங்கில நடையிலேயே அந்நூல் அமைந்துள்ளது. ஆயினும் மறுமலர்ச்சிக்குரிய இந்நாளில் உலகு அரங்குக்குப் பெரிதும் பயன்படத்தக்க அவ் ஆங்கில ஏடும் கிடைக்கவில்லை. அதன் கருத்துக்களும் தமிழ்ப்பெரு மக்களை வந்தெட்டவில்லை. ஆங்கில ஏட்டை மறுபதிப்பாக வெளியிடும் முயற்சியில் யாம் ஈடுபட்ட போது, தமிழார்வமுள்ள தமிழரும் அதை வாசித்துப் பயன்பெறல் வேண்டும் என்ற விருப்பம் எமக்கு உண்டாயிற்று.

எம் விருப்பத்துக்கிசைய, பன்மொழிப் புலவர், திருவாளர், கா. அப்பாத்துரை, எம். ஏ., எல். டி., அவர்கள் அதன் தமிழாக்கமாகிய இந்நூலை எளிய திட்பநுட்பம் வாய்ந்த தமிழில் மொழிபெயர்த்தளிக்க இசைந்ததுடன், காலத்துக்கேற்ற அடிக் குறிப்புக்கள், விளக்கங்கள் ஆகியவை இணைத்து அதை இன்றைத் தமிழர் அறிவுச் சூழலுடன் இணக்குவித்துதவியுள்ளார். அவர் அரு முயற்சிக்கு எம் மனமார்ந்த நன்றியும் பாராட்டும் உரித்தாகின்றன. தமிழகம் இதனையும், இது போன்ற தமிழ், ஆங்கில வெளியீடுகளையும் ஆதரித்து எம் முயற்சியில் எம்மை மேன்மேலும் ஊக்க வேண்டுமென்பதே எம் அவா.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

# உள்ளுறை



வி. கனகசபை
1855 – 1906

E. BOOK ..By K.Rajalingam

# ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்



## 1. தோற்றுவாய்

1800 ஆண்டுகளுக்குமுன் உரோமகப் பேரரசே மனித உலகின் வல்லமைமிக்க நாகரிகப் பேரரசாய் அமைந்திருந்தது. பெருமைசான்ற உரோமக வெற்றிவேந்தரில் கடைசியானவர் திராஜன்.[1] அவர் காலத்தில் அப்பேரரசின் ஆற்றல் உச்சநிலை அடைந்திருந்தது. ஐரோப்பாவின் ஒரு பெரும்பகுதியும் நடுநிலக் கடல்[2] சூழ்ந்த ஆசிய, ஆபிரிக்கப் பகுதிகளும் அதன் எல்லைக்கு உட்பட்டிருந்தன. இதற்கெதிராகக் கீழ்த் திசையிலே பாரித்துகன்ற சீனப் பேரரசு வாழ்ந்தது. புகழ்சான்ற ஹான்மரபுப் பேரரசர்[3] ஆட்சியிலே அதன் பரப்பு முழுநிறைவு அடைந்திருந்தது. அது கிழக்கே பசிபிக் மாகடலிலிருந்து[4] மேற்கே காஸ்பியன்கடல்[5] வரையிலும், வடக்கே அட்லாஸ் மலைத்தொடர்களிலிருந்து[6] தெற்கே இமயமலைத் தொடர் வரையிலும் பரந்துகிடந்தது. இவ்விரு பேரரசுகளின் எல்லைகளுக்கும் இடைப்பட்டு இரண்டு அரசுகள் நிலவின. அவையே பார்த்திய அரசும், காந்தார அரசும் ஆகும்.

---

1. Emperor Trajan.
2. Mediterranean sea.
3. Han dynasty.
4. Pacific Ocean.
5. The Caspian Sea. இது உலகின் மிகப்பெரிய உள்நிலக்கடல்.
6. Atlas Mountains.

பார்த்திய அரசன் பகோரஸ்[1] ஆண்ட பகுதி பார்த்தியா கடந்து மீடியா,[2] பாரசிகம், ஸூஸியானா, பாபிலோனியா ஆகியவற்றை அளாவியிருந்தது. காந்தாரத்தின் அரசனாயிருந்தவன் கனிஷ்கன்.[3] அவன் சகர்களின்[4] தலைவன். அவன் நாட்களுக்குள் சகர்கள் ஆசியாவின் நடுமேட்டுநிலத்திலிருந்து குடிபெயர்ந்து பாக்டிரியப் பேரரசை வீழ்த்தியிருந்தனர். இந்நிலையில் கனிஷ்கன் ஆட்சி பாக்டிரியாவிலிருந்து[5] இமயமலையின் இடைப்பகுதிவரையிலும், ஆக்ஸஸ் ஆற்றிலிருந்து[6] யமுனை ஆறுவரையிலும் பரவியிருந்தது.

காந்தாரத்துக்குக் கிழக்கே இமயமலைத்தொடருக்குத் தெற்கே மிகப் பழமைவாய்ந்த மகதப்பேரரசு நிலவிற்று. அதை ஆட்சிசெய்தவர்கள் ஆந்திரப்பெருங்குடிசார்ந்த மகா-கர்ணர் ஆவர். விந்தியமலைக்கு வடபால் மாளவம் என்ற சிறிய அரசு இருந்தது. ஆந்திரருடன் மிக நெருங்கிய உறவுடைய ஒரு குடியே அவ்வரசை நிறுவியிருந்தது. அத்துடன் அது மகதரின் பிடியை உதறி எறிந்திருந்தது. இதற்கு மேற்கே சிந்து ஆற்று வாய்முகத்திலும் குஜராத்திலும் பார்த்தியப் போர்வேட்டையாளர்கள் ஆட்சி செய்திருந்தனர்.

---

1. Pacorus, King of Parthia.

2. Media. இது பாரசீகத்தை அடுத்துள்ள பகுதி.

3. Kanishka, King of Gandhara. சிலப்பதிகாரக் கதையில் கண்ணகிச் சிலையின் கல்லைச் சுமந்தவனைக் குறிக்கப்பட்ட கனகன் இப்பேரரசனே என்று கூறப்படுகிறது. இதற்கேற்ப அயலினத்தானும் புத்த சமயத்தானுமாகிய இவனது பின் மரபினர் வலிகுன்றியவராய் இந்திய சிவ நெறிப்பெயர் தாங்கினர் என்று தெரியவருகிறது.

4. Sakas. இவர்கள் படையெடுப்பிலிருந்தே சக ஆண்டு அல்லது சாலிவாகன ஆண்டு தொடங்கிற்று என்று நம்பப்படுகிறது.

5. Bactria. இன்றைய துருக்கிஸ்தானம் அடுத்த பகுதி.

6. Oxus. காஸ்பியன் கடலில் விழும் துருக்கிஸ்தானப் பகுதியிலுள்ள ஆறு, நடு ஆசியாவுக்கு வடக்கில் உள்ளது.



தக்கணத்தில் மகாநதி, கோதாவரி, கிருஷ்ணை ஆற்றுத்தீரங்கள் இன்னும் மகதப்பேரரசின் பகுதிகளாகவே இருந்தன. இப்பேரரசுப் பகுதியின் தென் எல்லை தமிழகத்தை அண்டிக்கிடந்தது. தமிழர் வாழ்ந்த நிலமாகிய இத்தமிழகமே இந்தியத் தீவக்குறையின்[1] தென்கோடியாய் அமைந்திருந்தது.

அக்காலத்தில் கிட்டத்தட்ட இந்தியாவெங்கும் புத்த சமயமே மேம்பட்ட சமயமாயிருந்தது. ஆரியரல்லாத குடிகளே எங்கும் ஆட்சியுரிமைகொண்டிருந்தன. ஆரிய இனத்தவர்களுக்கு அக்காலம் பெருமைகுன்றிய ஒரு காலம். பார்ப்பன சமயத்துக்கோ[2] அது துயரமிக்க வாழ்வு மாள்வுப் போராட்டக் காலமாய் அமைந்திருந்தது. பின்னாட்களிலே முடியரசர் பார்ப்பன சமயத்துக்கு ஆதரவளிக்க முற்பட்டபோதுகூட, ஆரியர் தம் முழு வலிமையையும் திரட்டியே எதிர் சமயங்களையும், அயலினத்தவர் ஆட்சியையும் ஒருங்கே தடமில்லாமல் ஒழிக்க முடிந்தது.

மேற்குறிப்பிட்ட சூழல்களின்பயனை நாம் சமஸ்கிருத இலக்கிய வகையில் காண்கிறோம். கி.பி. முதல் நூற்றாண்டில் சமஸ்கிருத மொழிக்கு இலக்கியமென்று எதுவும் கிடையாது. அதேசமயம் தமிழின் நிலைமை, வியப்புக்குரிய முறையில் இதற்கு நேர்மாறானது. இக்காலத்துக்குரிய தமிழிலக்கியம் பேரளவிலும், குறைவுபடா நிலையில் கிட்டத்தட்ட முழுவடிவிலேயும் நமக்குவந்து எட்டியுள்ளது. அத் தமிழிலக்கியம் நமக்கு அத்தொல்பழங்காலத்தில் வாழ்ந்த தமிழரின் வாழ்க்கைச் சூழல்களை மட்டுமின்றி, இந்தியாவின் பிற பகுதிகளில் வாழ்ந்த மற்ற மக்களினங்களின் சூழ்நிலைகளையும் விளக்கமாக எடுத்துக்காட்டுகிறது.

---

1. South Indian Peninsula.

2. Brahminism. சைவ வைணவ சமயங்களுடன் சேர்ந்து கலந்து ஒன்றுபட்டபின் ஆரியசமயம் இந்துசமயம் என்று வெளிநாட்டாரால் குறிக்கப்பட்டது. இக் கலப்புக்கு முற்பட்ட புத்தசமணகால ஆரியசமயமே வரலாற்றாசிரியர்களால் பார்ப்பன சமயம் எனக் குறிக்கப்படுகிறது. அதை வேதவேள்விச் சமயம் என்று தமிழில் குறிக்கலாம்.

பண்டைத் தமிழிலக்கியம் அகல்பெரும் பரப்புடையது. அதேசமயம் அது முன்னால் வேறு எவர் காலடியும் படாத ஒரு புதுநிலப்பரப்புப் போன்ற இயல்புடையதாகவும் இலங்குகின்றது. ஆயினும் இப்பழம்பேரிலக்கிய ஏடுகள் அண்மையிலேயே வெளியீட்டொளி கண்டுள்ளன. இதுகாறும் அவை கையெழுத்துப் படிவங்களாகப் பனை ஓலைகளில் எழுதப்பட்டு, அவற்றைக் கைக்கொண்டிருந்த புலவர்பெருமக்களால் வேறு எவர் கண்ணிலும் படாமல் பூட்டிவைக்கப்பட்டே யிருந்துவந்தன.

அவற்றின் மொழிநடை பழமைபடிந்ததா யிருந்தது. அவற்றின் சமயச்சார்போ அயல் சமயச்சார்பாய் அமைந்திருந்தது. இவ்விரண்டு பண்புகள் காரணமாகவும் அவை மாணவருலகின் மதிப்பார்வத்தைப் பெறமுடியாது போயின. உண்மையில் தமிழர் கல்விக்குழாங்கள்[1] பலவற்றில் அவை படிக்கத் தகாதவை என்றே ஒதுக்கிவைக்கப்பட்டிருந்தன. பள்ளி மாணவர்களுக்கு அவற்றைக் கற்பிப்பதென்பது மன்னிக்கமுடியாத ஒரு பழிகேடாகும் என்றுதான் சைவ வைணவப் புலவர்கள் கருதி வந்தார்கள்.

இந்தக் கைப்படி ஏடுகளில் மிகப்பெரும்பாலானவை சைவமடங்களிலோ, சமணமடங்களிலோ தீண்டுவாரற்றுப் புறக்கணிக்கப்பட்ட நிலையிலேயே கிடந்தன. இயல்பாக, அவை அங்ஙனமே கிடந்து நொறுங்கிப் பொடிபட்டு மடிந்தே போயிருக்கக்கூடும். அந்நிலை ஏற்பட்டுவிடாமல் தடுத்தாட்கொண்டவர்கள் முனைத்த விடாமுயற்சியுடைய ஒருசில அறிஞர்களேயாவர். அவர்களின் கடு உழைப்பும் புத்தாராய்ச்சி முறைகளும் இருளின் புதைமறைவிலிருந்து அவற்றின் மிகப்பெரும் பகுதியையும் மீட்டு அச்சொளிக்குக்கொண்டுவந்துள்ளன.[2] ஆயினும் எத்தனையோ அரு

1. Tamil Schools. இங்கே குறிக்கப்படுவது கோட்பாட்டுக் குழுக்கள்.

2. இவ்வறிஞருள் தலைசிறந்தவராக என்னால் குறிக்கப்படக் கூடியவர் இராய்பகதூர் ஸி. டப்ள்யூ. தாமோதரம் பிள்ளை. பி.ஏ., பி.எல்.



மதிப்புவாய்ந்த ஏடுகள் இன்னும் அச்சேறமுடியாமல் கைப்படிவநிலையிலேயே இருந்துவருகின்றன. அந்நிலையில் அவற்றைக் கண்டு பயன்படுத்தக்கூடியவர்கள் ஒருசில தனிமனிதராகவே இருக்கமுடியும்.

கி.பி. 9 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட தமிழ் இலக்கியம் எதுவுமில்லை என்பதே இன்று மேலை அறிஞரின் பொதுக்கருத்தாக இருந்துவருகிறது.[1] ஆனால், உண்மை இதற்கு நேர்மாறானது. தமிழிலக்கியத்தின் தலைசிறந்த, நற்பண்புவாய்ந்த பகுதி முழுவதும் கி.பி. 9ஆம் நூற்றாண்டுக்குமுன் இயற்றப்பட்ட பகுதியே என்னலாம். அதற்குப் பின் வந்தவை மிகப்பெரும்பாலும் சமஸ்கிருத ஏடுகளைப் பின்பற்றி இயற்றப்பட்ட கீழ்த்தரமான போலிப்பகர்ப்புகளாகவோ, மொழிப்பெயர்ப்புகளாகவோ மட்டுமே கொள்ளத்தக்கவையா யுள்ளன.

பண்டைத் தமிழ் இலக்கிய ஏடுகளை யான் கூர்ந்து ஆராய்ந்தபோது, எனக்கு ஏற்பட்ட கருத்து ஒன்றே ஒன்றுதான். அவற்றுள் ஒரு பெரும்பகுதி இரண்டாயிர ஆண்டுகளுக்குமுன் இயற்றப்பட்டது என்பதில் சிறிதும் ஐயம் ஏற்பட வழி இல்லை. ஏனெனில் அவை இயற்றப்பட்டகாலத்தில் தமிழர் அராபியருடனும் கிரேக்கருடனும்,

அவர்களேயாவர். அவர் சேனாவரையர், நச்சினார்க்கினியர் உரைகளுடன், தொல்காப்பிய முழுவதையும் நல்லாதனார் இயற்றிய கலித்தொகையையும் வெளியிட்டுதவியுள்ளார். மேலும் கும்பகோணம் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியரான திரு. சாமிநாதையர் அவர்கள் பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், புறநானூறு ஆகியவற்றை வெளியிட்டுள்ளார். இவர்கள் இருவருடன்கூட, சென்னை திரு. மயிலை சண்முகம்பிள்ளையை நான் குறிப்பிடாமல் இருக்கமுடியாது. அவர் மிகவும் துணிச்சலாகவே மணிமேகலையின் பதிப்பொன்று கொண்டுவந்திருக்கிறார். அவர் பதிப்பில் மூலபாடத்துடன் உரை எதுவும் இல்லையானாலும், அவர் துணிகர முயற்சி பாராட்டுவதற்குரியதேயாகும்.

1. டாக்டர் பர்னல் ‘தென்இந்தியப் பழம்பதிவாராய்ச்சி’ என்ற தம் புத்தகத்திலும், டாக்டர் கால்டுவெல் ‘திராவிட மொழிகளின் ஒப்பியல் இலக்கணம்’ என்ற தம் புத்தகத்தின் நூன்முகத்திலும் இக்கருத்தைக் குறித்துள்ளனர்.

உரோமருடனும் ஜாவனியருடனும் இவர்களை ஒத்த மற்ற அயல்நாட்டவருடனும் வாணிகத் தொடர்புகொண்டு, இவை காரணமாக உயர் நாகரிகமும் பெருஞ்செல்வ வளமும் உடையவர்களாய் இருந்தார்கள். அக்காலப் பொருளியல் வளத்தில் ஏற்பட்ட முன்னேற்றமே இலக்கியத் துறையிலும் தமிழருக்குப் பேரூக்கமும் தூண்டுதலும் தந்திருக்கவேண்டும் என்னலாம்.

உரோமகப்பேரரசின் இலக்கியவரலாற்றில் பேரரசன் அகஸ்டஸ்[1] காலமே பொற்காலம் எனபர். தமிழ் இலக்கிய வரலாற்றிலும் அத்தகு பொற்காலம் அல்லது 'அகஸ்டஸ் காலம்' ஒன்று உண்டு. அது கி. பி. முதல் நூற்றாண்டே யாகும். தமிழ்ப்புலவர் சங்கங்களிலே கடைசியாகக் கூறப் படும் சங்கம் அந்நாளிலேயே உக்கிரபாண்டின் என்ற உருத்தகு பாண்டின் காலத்தில் மதுரையில் நடைபெற்றது. இச் சங்கத்திலிருந்து ஏடுகள் இயற்றிய ஆசிரியப் பெரும் புலவர்களில் ஐம்பதின்மருக்குக் குறையாதவர்களுடைய இலக்கியக் கைவண்ணங்கள் இன்று நம் கைக்கு வந்தெட்டியுள்ளன.

இப்பெரும்புலவர்கள் பல்வேறுபிறப்பினர், பல்வேறு சமயச்சார்பினர், தமிழகத்தின் பல்வேறு பகுதியினர். அவர்களில் நிகண்டவாதிகள் இருந்தனர்; புத்தர் இருந்தனர்; பார்ப்பனர்கூடச் சிலர் இருந்தனர். அரசரும் குருமாரும், வணிகரும் மருத்துவரும், உழவரும் கலைத் தொழிலாளரும் அவர்கள் தொகையில் தொகைப் பட்டனர்.

தேசத்தின் பண்டை வரலாறு பொதுவாக மாய இருளிலும் மயக்கம்தரும் மருட்சியிலுமே மறைவுற்றுக்

1. Augustus. கி.மு. முதல் நூற்றுண்டிறுதியில் ஜூலியஸ் ஸீஸரால் வகுக்கப்பட்ட பேரரசைக் கைப்பற்றி ஆண்ட உரோமகத்தின் முதற் பேரரசரான அகஸ்டஸ் ஸீஸர், ஜூலியஸ் ஸீஸரின் புதல்வர். இலத்தீன இலக்கியம் வளங்கொழித்தது அவர் காலத்திலேயே. ஆகவேதான் மேலை உலக வழக்கில் அகஸ்டஸ் காலம் என்பது 'கலைப் பொற்காலம்' என்ற பொருளில் உவமத்தொகையாக வழங்குகிறது.



கிடக்கின்றது. இத்தகு நிலையில் ஒரு பேரூழியில் தேசமெங்கும் பேரொளி விளக்கங் காட்டும் இத்தனை பேராசிரியப் புலவர்களின் ஏடுகள் நமக்குக் கிடைத்துள்ளன. அவை நம் வரவேற்புக்குப் பெருந் தகுதியுடைய அருமதிப்புவாய்ந்த செல்வங்கள் என்பதில் ஐயமில்லை.

இப்பேரிலக்கியம் கி. பி. முதல் ஒன்றிரண்டு நூற்றாண்டுகளுக்கே உரியது என்று வரையறுக்க நமக்குப் புறச்சான்றுகளின் உதவிகூட எதுவும் தேவையில்லை; அகச்சான்றுகளே அவ்வளவு மிகுதியாய் உள்ளன. ஏனெனில் தமிழ்மக்களின் சமயநிலை, சமுதாயப் பழக்க வழக்கங்கள் ஆகியவைபற்றி அதுதரும் தகவல்களே அதை வரையறை செய்யப் போதியவை ஆகும். அவற்றுட் சிலவற்றை இங்கே தருகிறோம்.

அந்நாளைய இலக்கிய ஏடுகளிலிருந்து, அக்காலத்தில் தமிழகத்தில் புத்தர்கள் இருந்தார்கள் என்று அறிகிறோம். ஆனால் அவர்களிடையே அன்று குருமார் இல்லை. புத்தரின் உருவச்சிலைகளும் அன்று வழிபடுபொருள்கள் ஆய் விடவில்லை. புத்தர்களை நாத்திகர்கள் என்று பழித்த நிகண்டவாதிகள்[1] அன்று இருந்தார்கள். ஆனால், அன்று அவர்கள் தங்கள் திருத்தொண்டர்கள் அல்லது தீர்த்தங்கரர்களை வணங்கத் தொடங்கிவிடவில்லை. சிவனையும் திருமாலையும் முருகனையும் வழிபடும் திருக்கோயில்கள் இருந்தன. ஆனால், அதேசமயம் இந்திரனையும் பலதேவனையும் வழிபடும் பள்ளிகள் வழக்கிறந்து போய் விடவில்லை. பூணூலணிந்து கொண்டு தம்மை இருபிறப்பாளர் என்று கூறிக்கொண்டிருந்த பார்ப்பனர் அன்று இருந்தனர். ஆனால் இச்சிறப்புக்களைத் தமக்கும் உரியன என்று கூறிய அரசரோ, வணிகரோ அன்று இல்லை. நகரங்களிலும் கோட்டை மதில்சூழ்ந்த பேரூர்களிலும் வாழ்ந்த தமிழர் அன்றிருந்தனர். ஆனால் ஒழுங்கான குடியமைதி இல்லாமல் திரிந்த நாடோடிமக்களும் நாட்டின் சிலபல பகுதிகளில் இருந்தார்கள்.

1. Nigranthas மிக முற்பட்ட காலத்திய சமணர்.

இவ்விலக்கிய ஏடுகளின் தொல்பழமையை நிலைநாட்ட மேற்கூறிய அகச்சான்றுகளேயன்றி, அகப்புறச் சான்றுகளும் உண்டு. அவற்றில் விரித்துரைக்கப்பட்ட தமிழகத்தின் தலைமைப் பேரூர்கள், துறைமுக நகரங்கள் பல. வெளிநாட்டு இறக்குமதிப் பொருள்களாகக் குறிக்கப்பட்டவை பல, இவை பண்டைக் கிரேக்க ஆசிரியர்களான பிளினி,[1] டாலமி[2] ஆகியவர்களின் குறிப்புக்களுடனும், பண்டைக் கிரேக்க நூலான 'செங்கடல் பயணவிவரத் தொகுதி' யின்[3] குறிப்புக்களுடனும் முற்றிலும் பொருத்த முடையவையாய் உள்ளன.

இவர்களில் பிளினி என்பார் கி. பி. 79 வரை வாழ்ந்தவர். அவர் மறைவுக்கு இரண்டு ஆண்டுகளுக்குமுன்பே அவர்தம் இயல்வரலாற்றை[4] எழுதி முடித்துவிட்டார். 'செங்கடற் பயண விவரத்'தின் ஆசிரியர் பெயர் அறியப்படவில்லை. ஆனால் அவர் எகிப்து நாட்டவரென்றும். அவர் நூல் அகஸ்டஸ் ஸீஸர்[5] காலத்துக்குப்பின், ஆனால் நபாத்தியர்[6] அரசு உரோமர்களால் முறியடிக்கப்படுமுன் எழுதப்பட்டதென்றும் தெரியவருகிறது. ஆக்ஸுமித்தேப் பகுதியில்[7] அவர்காலத்தில் ஜாஸ்கலிஸ்[8] ஆண்டதாகத் தெரியவருவதிலிருந்து, அவர்

1. Pliny.

2. Ptolemy. எகிப்தில் அலெக்ஸாண்டிரியா நகரிலுள்ள கி. பி. முதல் நூற்றாண்டுக்குரிய பேர்பெற்ற பண்டைக் கிரேக்க நில நூலாசிரியர். ஆரிய புராண ஆசிரியர்களைப்போலவே அவர் உலகம் தட்டையானது—வட்டவளையமான ஏழு கடலும் ஏழு தீவும் அடங்கியது என்று கொண்டார். ஆனால் தெரிந்த உலகத்தைப்பற்றி அவர் தெரிந்த அளவில் விவரங்கள் குறித்துச் சென்றார்.

3. Periplus Maris Erythraei செங்கடற் பயணம். ஆசிரியர் இன்னார் என்றறியப்படாத பண்டைக் கிரேக்க நிலநூல் ஏடு.

4. Natural History.

5. Augustus, son of Caesar.

6. Nabathoeans.

7. Auxumitae.

8. Zoskales அல்லது Za Hakale, King of Abyssenia 77—89 AD.



காலத்தை இன்னும் திட்டமாகக் கூறமுடிகிறது. இவர் உண்மையில் கி. பி. 77 முதல் 89 வரை அபிஸினியாவை ஆண்ட ஜா–ஹக்கேலேயாவர் என்று கருதப்படுகிறது. ஆகவே, 'செங்கடற்பயணம்' பிளினியின் மறைவுக்குச் சற்றுப் பிற்பட்டு, கி. பி. 80–க்கும் 89-க்கும் இடைப்பட்ட காலத்தில் இயற்றப்பட்டிருக்கலாம் என்று நாம் முடிவுசெய்யக்கூடும்.[1] பொதுவாக, டாலமி என்று குறிக்கப்படுபவர் கிளாடியஸ் டாலமியஸ்' என்பவரேயாவர். இவர் அலெக்ஸாண்டிரியா[3] நகரில், பேரரசர் அன்டோனினஸ் பியஸ்[4] ஆட்சியில், கி. பி. 2ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் வாழ்ந்தவர் ஆவர் அவர் மறைவுற்ற ஆண்டு கி. பி. 163[5]

தமிழ் மக்களைக் குறித்தும் அவர்கள் வெளிநாட்டு வாணிகத் தொடர்புகள் குறித்தும் இவ்வாசிரியர்கள் மிகவும் சுவைகரமான தகவல்கள் தருகின்றனர். சிறப்பாக, டாலமி கடலடுத்த நகரங்கள், உள்நாட்டு நகரங்கள் பலவற்றின் பட்டியல்களைக் குறித்துச் சென்றுள்ளார். அவரால் சுட்டப்பட்ட துறைமுக நகரங்களில் பலவற்றைத் தமிழ்ப்பாடல்களின் குறிப்புக்கொண்டு நாம் தெளியலாம். ஆனால் கடற்கரையிலிருந்து விலகிய நகரங்கள் வகையில், அவர் குறிப்பிட்ட இடங்களைக் கண்டுணர்வது மிகவும் அரிதாயிருக்கின்றது இதற்குக்

1. மக் கிரிண்டிலின் (Mc Crindle) மொழிபெயர்ப்பு: செங்கடற்பயண விவரங்கள் Periplus Maris Erythraei) பக்கம் 5 காண்க.

2. Klaudios Ptolemaios.

3. Alexandria. எகிப்தில் நீல ஆற்றுப் பூமுகத்திலுள்ள ஒரு நகரம். கி. மு. 4 ஆம் நூற்றாண்டினிறுதியில் அலெக்ஸாண்டரால் நிறுவப்பட்டது. கிரேக்க கலையும் நாகரிகமும் இங்கே எகிப்திய மண்ணில் புதுமலர்ச்சி பெற்று கி. பி. 3ஆம் நூற்றாண்டுவரை வளர்ந்தது.

4. Antoninus Pius.

5. இந்தியா, தென் ஆசியா நிலநூல்; டாலமி; மக் கிரிண்டில் மொழிபெயர்ப்பு. பக்கம் 1; டாக்டர் பாண்டர்கார்; தக்கணத்தின் முற்கால வரலாறு: பக்கம் 20 காண்க.

காரணம் இந்தியத் தீவக்குறையின் வடிவத்தையே அவர் தவறாகக் குறித்துக் கொண்டதுதான். பம்பாய் நகரிலிருந்து மசூலிப்பட்டினம் கடந்து நீடித்த கடற்கரையை அவர் எப்படியோ வளைந்து வளைந்து மேற்கிருந்து கிழக்கேசெல்லும் ஒரு வரை ஆக்கியிருந்தார். இந்தக் குளறுபடியான கற்பனை வடிவத்தில் தீவக்குறை என்ற ஒன்றுக்கே இடம் இல்லாமல் போய்விட்டது.

இந்தியாவிலிருந்து எகிப்துக்கும், எகிப்திலிருந்து இந்தியாவுக்கும் அந்நாட்களில் பலர் பயணம் செய்து வந்தனர். இருசாராரிடமிருந்தும் மலைகள், ஆறுகள், நகரங்கள் ஆகியவற்றைப் பற்றிய விவரங்களை டாலமி உசாவியறிந்தார். ஆனால், அறிந்த இந்தத் தகவல்களையெல்லாம் அவர் தம் உருப்படாத கற்பனைப்படத்தில் திணித்து இடங்காணத் தகுந்தவகையில் திரித்தார். எனினும், இந்தக் குளறுபடியினிடையிலும் மக்களினத்தவர், அவர்கள் முக்கிய நகரங்கள் ஆகியவைபற்றி அவர் தரும் பெயர்கள் வியக்கத்தக்க முறையில் சரிநுட்பம் உடையவையாகவே இருக்கின்றன. தகவல்களை அவர் எவ்வளவு உழைப்புடனும் விடாமுயற்சியுடனும் சேகரித்துத் தொகுத்திருக்க வேண்டும் என்பதை இது காட்டுகிறது.

உக்கிரபாண்டியனும் கடைச்சங்கப் புலவர்களும் மிக மிக முற்பட்டகாலத்தவர்கள் என்பதில் ஐயமிருக்க வழியில்லை. பிற்காலத் தமிழ்நூல்களின் பல்வேறுபட்ட குறிப்புக்களிலிருந்தே இதை உய்த்துணரமுடியும். அவற்றுள் ஒன்றாக நாம் இங்கே குறிப்பிடத்தக்கது இறையனார் அகப்பொருளின் உரை[1]. ஆகும். அதன் ஆசிரியர்

1. இறையனார் அகபொருள்: தாமோதரம்பிள்ளை பதிப்புக் காண்க. அகப்பொருள் விதிகளுக்கான தம் உரை விளக்கங்கள் மதுரைக் கடைச்சங்கப் புலவருள் ஒருவரான நக்கீரரிடமிருந்து பல தலைமுறைகள் கடந்து தம்மிடம் வந்து சேர்ந்ததாக உரைகாரர் (நீலகண்டர்) குறிப்பிடுகிறார். உரை கடந்துவந்த தலைமுறைகளுக்குரிய ஆசிரியர்களின் பெயர்ப்பட்டியலொன்றும் அவர் தருகிறார். ஆனால் பட்டியல் நிறைவுடைய பட்டியல் என்று தோன்றவில்லை.



முசிறியைச் சார்ந்த நீலகண்டன் ஆவர். அவர் தமிழ் இலக்கியத்தின் சுருக்கமான வரலாறொன்று தருகிறார். அதனிடையே மதுரையில் உக்கிரபாண்டியன் தலைமையில் நடைபெற்ற கடைச்சங்கத்தின் புலவர்களைப்பற்றியும் அவர் குறித்துள்ளார்.

உரையாசிரியர் தம் உரைக்கு விளக்கமாகத் தரும் பாடல்கள் ஒவ்வொன்றும் பாண்டியன் நெடுமாறன் புகழ் பாடுகின்றன. இப்பாண்டியனே நெல்வேலிப்போர் வென்ற அரிகேசரி ஆவன். தம் காலத்தில் அம் மன்னர் உயிருடன் வாழ்ந்திருந்ததாகவும், வடபுலங்களிலிருந்து படையெடுத்துவந்த எதிரிகளை முறியடித்துத் துரத்திய பின் சேரசோழபாண்டிய மண்டலங்களை ஆண்டுவந்ததாகவும் அப்பாடல்கள் குறிக்கின்றன.

பேர்போன இந்த நெல்வேலிப் போரைப்பற்றி நந்திவர்ம பல்லவமல்லன்[1] வெளியிட்ட உதயேந்திரம் பட்டயம் குறிப்பிடுகிறது. இப்பல்லவமல்லன் மேலைச் சாளுக்கிய அரசன் இரண்டாம் விக்கிரமாதித்தனின் சமகாலத்தவன். சாளுக்கிய நாட்டிலுள்ள[2] கல்வெட்டுக்களின் படி, அவன் கி. பி 733 முதல் கி பி. 747 வரை ஆண்டான் என்று தெரிகிறது. எனவே, நெல்வேலிவென்ற நெடுஞ்செழியனைப் புகழ்கின்ற உரையாசிரியர் நீலகண்டனாரும் 8 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் ஆதல் வேண்டும் என்பது தெளிவு

சங்கப்புலவர்களின் பாடல்கள் அகம், நற்றிணை, குறுந்தொகை, பதிற்றுப்பத்து முதலிய தொகைநூல்கள் அல்லது தொகுப்புக்கள் வடிவில், உரையாசிரியர் காலத்திலே நிலவியதாக உரையிலிருந்தே தெரியவருகிறது. தவிர, சிலப்பதிகாரத்திலிருந்தும் அவர் மேற்கோள்கள் காட்டியிருக்கிறார்.

1. சேலம் மாவட்டக் கையேடு, ஏடு II: பக்கம் 356.
2. இந்தியப் பழம்பொருள் சேகரம் (Indian Antiquary) ஏடு 8: பக்கம் 23; டாக்டர் ஹல்ட்ஸின் (Dr, Hultzsch) தென் இந்தியக் கல்வெட்டுக்கள் ஏடு I: பக்கம் 145 ஆகியவை காண்க.

அகம் 401 தனித்தனிப்பாடல்கள் அடங்கியது. அவை 200க்கு மேற்பட்ட புலவர்களால் வெவ்வேறு காலச்சூழல்களில் இயற்றப்பட்டவை. குறுந்தொகை இது போலவே 205 புலவர்களின் பாடல்திரட்டு. நற்றிணை 200க்குக் குறையாத புலவர்கள் பாடிய 401 பாடல்களுடையது. பதிற்றுப்பத்து வெவ்வேறான பத்துப்புலவர்கள் பாடிய பத்துப்பாடல்கள் அடங்கியது. இத்தொகை நூல்கள் எல்லாவற்றையும் சேர்த்துப் புலவர்களை எண்ணியதில், 514 புலவரின் பெயர்கள் கிடைத்தன.

புலவர்களின் இப்பெருந்தொகை நோக்க, அவர்களில் மிகப் பழமையானவர், நீலகண்டன் காலத்துக்குக் குறைந்தது ஆறு அல்லது ஏழு நூற்றாண்டுகளுக்கு முற்பட்டவரா யிருந்திருக்க வேண்டும் என்று இழுக்குறாமல் கூறலாம்.

இக்கணிப்பின்படி நூற்றாண்டுக்கு நூறு புலவர் தேறக்கூடும். இதுவே சிறுதொகை என்று கூற முடியாதது.

அகப்பாட்டுக்களில் பல கரிகால சோழனையும், சேரன் ஆதனையும், சேரன் செங்குட்டுவனையும்[1] குறிப்பிடுகின்றன. பதிற்றுப்பத்தில் கடைச்சங்கப் புலவருள் ஒருவரான பரணர் பாடிய பத்துப்பாட்டுக்கள் செங்குட்டுவன் சேரனைப் பாராட்டுகின்றன.[2] இவற்றால் செங்குட்டுவன் சேரன் 8 ஆம் நூற்றாண்டுக்கு நெடுநாள் முன்னிருந்தான் என்பது ஐயத்துக்கு இடமின்றி உறுதிப்படுகிறது.

கடைச்சங்க காலத்தை இன்னும் திருத்தமாக வரையறுக்கத்தக்க நேரடியான தகவல்கள் உண்டு. அவையே சோழ அரசன் கரிகாலன் காலத்திலும், அவன் மருமகன் சேரன் ஆதன் காலத்திலும், ஆதன் புதல்வன் செங்குட்

1. அகம்: பாட். 55. 124, 306 இந்நூல் இன்னும் அச்சில் வெளிவரவில்லை. (ஆசிரியன் இக்குறிப்பு 1904-ஆம் ஆண்டையது.)

2. பதிற்றுப்பத்து: பாட்டு 51—60. இந்நூலும் அச்சுருவில் வெளிவரவில்லை. (மேலே அடிக்குறிப்புக் காண்க.)



டுவன் சேரன்[1] அல்லது இமயவரம்பன் காலத்திலும் இயற்றப்பட்ட பாடல்களில் வரும் வரலாற்றுப் பெயர்க் குறிப்புக்கள் ஆகும்.[2] கடைசியாகக் கூறப்பட்ட சேர அரசனுக்கு இளங்கோ அடிகள் என்று ஓர் இளவல் உண்டு. அவர் நிகண்ட சமயம் சார்ந்த ஒரு துறவியாயினார். அவர் 'சிலப்பதிகாரம்'[3] என்ற பெயருடைய ஒரு நீண்ட காவியத்தின் ஆசிரியர். அதில் அவர் சேரர் தலைநகரிலே தம் தமயன் இமயவரம்பனால் நடத்தப்படும் ஒரு திருவிழாவைப்பற்றிக் கூறுகிறார். அதில் இலங்கை அரசன் கயவாகு, பெயர் குறிப்பிடப்படாத ஒரு மாளவ அரசனுடன்[4] வந்திருந்ததாக அவர் தெரிவிக்கிறார்.

இலங்கை அரசனொருவனைப்பற்றிய இந்தக் குறிப்பீடு இமயவரம்பன் காலத்தை வரையறுக்க நமக்குப் பெரிதும் உதவுகிறது. சிங்களவரின் காலக் கணிப்பேடுகளில் மரபுரையாகச் சேகரித்துத் தரப்பட்ட இலங்கை மன்னர் பெயர்வரிசைப் பட்டியல்கள் நெடுநீளமானவை. அவற்றிடையே கயவாகு என்ற பெயர் இரண்டே இரண்டு தடவைதான் காணப்படுகிறது. முதலாம் கயவாகு 2ஆம்

1. சிலப்பதிகாரம்: 20: II—15, 29: 1—3.

2. இமயவரம்பன் என்ற தொடர் செங்குட்டுவன் தந்தையாகிய நெடுஞ்சேரல் ஆதனுக்குரியதாகவே பெரும்பாலும் கொள்ளப்பட்டு வருகிறது. இந்நூலாசிரியர் எக்காரணத்தாலோ அதைச் செங்குட்டுவன் சேரனுடன் இணைக்கிறார். இளங்கோவடிகள் செங்குட்டுவன் இளவல் என்ற செய்தியும் இக்காரணத்தால் அடிக்கடி இமயவரம்பன் இளவல் என்று குறிக்கப்பட்டு விடுகிறது.

3. இக்காவியம் நல்லார்க்கினியார் உரையுடன் 1892-இல் திருசாமிநாதையரால் வெளியிடப்பட்டிருந்தது. (அடியார்க்கு நல்லார் என்ற சரியான பெயரை ஆசிரியரே பின்னால் குறிப்பிடுகிறார்) ஆசிரியர் பெயர் தரப்படவில்லை. ஆனால் அரச துறவி என்ற பொருளுடைய இளங்கோவடிகள் என்ற தொடரால் அவர் பொதுவாகக் குறிப்பிடப்படுகிறார் காவியத்தின் பதிகம், அதாவது முன்னுரையில் முதல் அடியில் ஆசிரியர் குணவாயில் கோட்டத்தில் (கீழைவாசல் கோயிலில்) துறவியாக வாழ்ந்தார் என்று குறிப்பிடப்படுகிறது.

4. சிலப்பதிகாரம்: பக்கம் 31; அத்துடன் 30: 160 பார்க்க.

நூற்றூண்டின் தொடக்கத்தில் வாழ்ந்திருந்தான். இரண்டாம் கயவாகுவோ 12ஆம் நூற்றூண்டில் வாழ்ந்தான்.[1]

சிலப்பதிகாரத்தில் குறிக்கப்பட்ட அரசன் இரண்டாம் கயவாகுவாயிருந்திருந்தால், கயவாகுவுடன் சமகாலத்தவனை சேரனுக்குப் பாட்டன் முறையுடைய கரிகாலசோழன் 11 அல்லது 12ஆம் நூற்றூண்டிலேயே வாழ்ந்திருக்க முடியும்.

ஆனல், பல தமிழ்ப் பாடல்களின் குறிப்புக்களும்[2] 10, 11 ஆம் நூற்றூண்டுகளில் வாழ்ந்த சோழ மன்னர்களின் மானியங்களைப் பதிவுசெய்யும் செப்புப்பட்டய வாசகங்களின் குறிப்புக்களும்[3] இதற்கு முரண்பட்டவையாகின்றன. அந்நாளில் ஆண்ட சோழ மன்னர்களின் முன்னோர்களில் மிகவும் முற்பட்ட தொடக்க காலத்துச் சோழனுகை அவை முதலாம் கரிகால சோழனைக்[4] குறிக்கின்றன. ஆகவே, சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்பட்ட கயவாகு இரண்டாம் கயவாகுவாய் இருந்திருக்க முடியாது என்பது தெளிவு. அவன் கி. பி. 113 முதல் கி. பி. 125 வரை ஆண்டதாகத் தெரியவரும் இலங்கை அரசன் முதலாம் கயவாகுவாகவே இருந்திருக்க முடியும்.

சிலப்பதிகாரம் நமக்கு வேறு சில செய்திகளும் தருகிறது. செங்குட்டுவன் சேரன் கங்கைக் கரையிலுள்ள

---

1. மகாவம்சோ, தீபவம்சோ, ராஜாவளி, ராஜரத்னகரீ.

2. கலிங்கத்துப்பரணி, விக்கிரமசோழனுலா, குலோத்துங்க சோழனுலா, இராஜராஜசோழனுலா.

3. தற்போது ஹாலந்தில் லெய்டன் நகரில் பேணிவைக்கப் பட்டுள்ள செப்புப் பட்டயங்கள் : இவை நாகபட்டினத்திலுள்ள சூடாமணி விகாரத்துக்கு (புத்த பள்ளிக்கு) உரியவை. டாக்டர் பர்கெஸ் (Dr. Burges): தென் இந்தியப் பழம்பொருளாராய்ச்சித்துறை அறிவிப்புக்கள் : ஏடு 4 : பக்கம் 204 பார்க்க. இவற்றுடன் வீரநாராயணசோழன் ஆட்சிக்காலத்திய உதயேந்திரமங்கலம் மானியப் பட்டயங்களும் காண்க. சேலம் மாவட்டக் கையேடு : பக்கம் 369 காண்க.

4. இவனுக்குப் பிற்பட்ட கரிகாலசோழரும் இருந்தனர்.



மகதநாட்டின் அரசனை நட்பு முறையில் சென்று பார்வையிட்டான். சிலப்பதிகாரம் அவ்வரசனை 'நூற்றுவர் கன்னர்' அஃதாவது நூறு கர்ணர்கள் என்று சுட்டியுள்ளது. இத்தொடர் எனக்கு நீண்டநாள் மயக்கத்தை உண்டுபண்ணிற்று. இறுதியிலேதான் அது 'சதகர்ணி' என்ற சமஸ்கிருதப் பெயரின் மொழிபெயர்ப்பு என்பது புலப்பட்டது. கர்ண மரபு, அஃதாவது ஆந்திர மரபைச் சேர்ந்த பல அரசர்கள் 'சதகர்ணி' என்ற பட்டந்தாங்கியவர்களாய் இருந்தார்கள். இவ்வரசர்கள் பலரின் நாணயங்களும், கல்வெட்டுக்களும் கிடைத்துள்ளன. அவற்றில் இப்பெயரின் 'பாளி' வடிவமான 'சதகானி' இடம் பெறுகிறது. ஆயினும் சமஸ்கிருதப் புலவர்கள் இப்பெயரைச் சமஸ்கிருதத்தில் 'சாதகர்ணி' என்று தவருகக்கொண்டு மயக்கம் விளைவித்துள்ளனர்.

நூற்றுவர்கன்னர் (நூறு கர்ணர்கள்) என்ற தமிழ் வழிக்குச் சமகாலத்துக்குரிய ஒரு தமிழ்க்காவிய வழக்கு. ஆகவே திருத்தமான பெயர் 'சதகர்ணி'யே என்பதில் தடையில்லை. இப்பெயர், 'சதம்' அஃதாவது நூறு, 'கர்ணம்' அஃதாவது காது என்ற இரு சொற்களடங்கிய இணைச்சொல் ஆகும். தகவல்களைத் தெரிவிக்கும் நூறு வாயில்களை அஃதாவது நூறுஒற்றர்களை உடைய அரசன் என்பதே தொடரின் பொருளாயிருக்கக்கூடும் என்று தெளியலாம்.

மகதப்பேரரசின் ஆட்சி வரலாறுபற்றி வாயுபுராணம், விஷ்ணுபுராணம், மத்ஸ்யபுராணம், பாகவதபுராணம் ஆகியவை நமக்குத் தகவல்கள் தருகின்றன. அவற்றால் மௌரியர்கள் அதை 137 ஆண்டுகளும், அவர்கள்பின் வந்த சுங்கர்கள் 112 ஆண்டுகளும், கண்வாயனர் 45 ஆண்டுகளும் ஆண்டனர் என்று அறிகிறோம். இறுதியில் ஆந்திர மரபைச் சேர்ந்த 30 அரசர்கள் 456 ஆண்டுகள் ஆண்டதாகத் தெரிகிறது. ஆனல், எந்தப் புராணமும் ஆந்திர அரசர் பெயர்களை முழுமையாகத் தரவில்லை.

இப்புராணங்களில் மிகப் பழமை வாய்ந்தது மத்ஸ்ய புராணமே. கூடியமட்டும் பேரளவான பெயர்களைத் தருவதும் அதுவே. அதில் 20 அரசர்களின் பெயர்களும் அவர்களில் ஒவ்வொருவர் ஆண்ட கால அளவும் தரப்பட்டுள்ளன.

மகதத்தை ஆண்டமுற்காலப் பேரரசர்களின் வரலாற்றிலே, ஐயத்துக்கிடமின்றி உறுதியாகக் கொள்ளத் தக்க காலஎல்லை சந்திரகுப்தனுடையதே.[1] அவன் ஸெலியூக்கஸ் நிக்கடோரின்[2] சமகாலத்தவன். ஸெலியூக்கஸ் கி. மு. 310இல் ஆட்சிதொடங்கினான். கி. மு. 305 இல் அவன் சந்திரகுப்தனுடன் உடன்படிக்கை செய்துகொண்டிருந்தான். சந்திரகுப்தன் ஆட்சித்தொடக்கம் ஸெலியூக்கஸ் முடியேற்புக்கு இரண்டாண்டுகட்குமுன், அதாவது கி. மு. 312இல் என்று வரையறுக்கலாம். இதிலிருந்து தொடங்கிக் கணக்கிட்டால், முதல் சதகர்ணியின் ஆட்சி கி.பி. 77 இல் தொடங்கி, கி.பி. 133 இல் முடிவுற்றதென்று கொள்ளவேண்டும். மத்ஸ்யபுராணம் தரும் தகவல்களை அடிப்படையாகக்கொண்டு, இக்கணக்குக் கீழே தரப்படுகிறது.

10 மோரியர்கள் : 137 ஆண்டுகள் : கி.மு. 312—கி.மு. 175.
10 சுங்கர்கள் : 112 ஆண்டுகள் : கி. மு. 175 கி. மு. 63.
4 கண்வாயனர் : 45 ஆண்டுகள் : கி. மு. 63—கி. மு. 18.

ஆந்திரர் முப்பதின்மரில் முதல் அறுவர் கணக்கு வருமாறு :

சிசுகன் : 23 ஆண்டுகள் : கி. மு. 18—கி. பி. 5.

கிருஷ்ணன் : 18 ஆண்டுகள் : கி. பி. 5—கி. பி. 23.

1. சந்திரகுப்த மௌரியன், மௌரிய மரபின் தோற்று முதல்வன், முதலரசன்.

2. Seleucus Nicator: பேரரசன் அலெக்ஸாண்டரின் படைத்தலைவன்; அவருக்குப்பின் ஸிரியாவில் அவர்பின் மரபினனாய், சந்திரகுப்த மௌரியன் காலத்தில் மகதத்தின்மீது படையெடுத்து, தோல்வியின் பின் தன் புதல்வியை அவனுக்கு மணம் செய்வித்து அவனுடன் மணஉறவு கொண்டவன். பண்டை இந்தியாவைப்பற்றி விரித்தெழுதிய மெகஸ்தனிஸ் மகதநாட்டில் வந்து தங்கியிருந்த அவன் தூதனே.



சீமலகர்ணி : 18 ஆண்டுகள் : கி. பி. 23—கி. பி. 41.
பூர்ணோத்சுங்கன் : 18 ஆண்டுகள் : கி. பி. 41—கி. பி. 59.
சிரிவஸ்வாமி : 18 ஆண்டுகள் : கி. பி. 59—கி. பி. 77.
சதகர்ணி : 56 ஆண்டுகள் : கி. பி. 77—கி. பி. 133.

இந்தச் சதகர்ணியின் ஆட்சிக்காலம் இலங்கையரசன் கயவாகுவின் ஆட்சிக்காலத்துடன் முழு அளவிலும் பொருந்துகிறது. மகாவம்சோவின்படி, அவ்விலங்கையரசன் ஆட்சிக்காலம் கி. பி. 113 முதல் 125 வரை ஆகும். ஆகவே மத்ஸ்யபுராணத்தில் கண்ட பெயர்ப்பட்டியலின் படி, கி. பி. 77 முதல் 133 வரை ஆண்டதாகத் தெரிகிற இந்த முதல் சதகர்ணியே, சிலப்பதிகாரத்தில் செங்குட்டுவன் சேரன், கயவாகு ஆகியவர்களுடன் சமகாலத்தவனாகக் குறிக்கப்பட்ட மகதப்பேரரசன் சதகர்ணி என்பதற்கு ஐயமில்லை. குறைந்த அளவு சந்திரகுப்தன் காலமுதல் இந்த முதல் சதகர்ணியின் காலம் வரையிலாவது, புராணங்களுக்கும் மகாவம்சோவுக்கும் உள்ள காலப்பொருத்தம் முழுநிறைவானது என்றே ஒத்துக்கொள்ளத்தக்கதாயுள்ளது. புராண வரலாற்றினும் மகாவம்சோவினும் பேணித்தரப்பட்ட மரபுவழி வரலாறு பொதுவாக நம்பத்தக்கதே என்பதற்கும் இந்தக் காலப்பொருத்தம் ஒரு வலிமைவாய்ந்த சான்று ஆகும்.

மகாவம்சோ கி. பி. 5ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டது. தீபவம்சோ இன்னும்முற்பட்டது. இரண்டு வரலாற்றுத் தொகுப்புகளும் முதலாம் கயவாகுவைப்பற்றிக் குறிப்பிடுகின்றன. முதலாம் கயவாகுவின் தந்தை ‘கழுகுமூக்க’னென்று குறிப்பிடப்படும் திஸ்ஸன் ஆவான். அவன் காலத்தில் ஒரு சோழ அரசன் இலங்கைமீது படையெடுத்துப் பல்லாயிரமக்களைச் சிறைப்படுத்திச் சென்றதாக அறிகிறோம். கயவாகு கி.பி. 113இல் பட்டத்துக்கு வந்தவுடன், இச் செயலுக்கு எதிர்செயலாக, சோழநாட்டின்மீது படையெடுத்தானென்றும் தெரியவருகிறது.

சிறைப்பிடித்துக்கொண்டு செல்லப்பட்ட மக்களைப் பற்றிய மரபுரை ஒன்று உலவுகிறது. அந்நாளில் காவிரிக்குக் கரைகட்டும்வேலை நடைபெற்று வந்தது.[1] சிறைப்பிடிக்கப்பட்டவர்கள் அந்த வேலையில் ஈடுபடுத்தப்படுவதற்காகவே கொண்டுசெல்லப்பட்டதாக அறிகிறோம். பிற்காலத் தமிழ்ப்பாடல்களுடனும், கல்வெட்டுக்களுடனும்[2] இச்செய்தி முற்றிலும் இசைகிறது. காவிரி இருகரைகளையும் மேடாகக் கட்டத்தொடங்கியவன் கரிகாலசோழன் என்று அவை புகழ்கின்றன. காவிரியின் கடல் முகத்திலிருந்து கிட்டத்தட்ட 100 கல் தொலைவுவரை ஆற்றின் இருகரை நெடுகிலும் கரைகள் கட்டமைப்பதென்பது எளிதான ஒரு சிறுசெயலன்று. அது கரிகாலன் ஆட்சிக் காலத்துக்குள் முடிந்திருக்கவும் முடியாது. ஆகவே கரை கட்டுவதற்கு வேலையாட்களைச் சிறைப்பிடித்துக்கொணர்வதற்காக இலங்கைமீது படையெடுத்த சோழன் கரிகாலனாகவும் இருக்கலாம்; அவனுக்கு உடனடுத்த சோழனாகவும் இருக்க இடமுண்டு.

2ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த முதலாம் கயவாகுவுடன் செங்குட்டுவன் சேரன் சமகாலத்தவன் என்பதற்கு இம்மரபுரை மற்றுமொரு சான்றாய் அமைகிறது. செங்குட்டுவனின் பாட்டனான கரிகால்சோழன் ஆட்சிக்காலம் இதன்மூலம் கி. பி. முதல் நூற்றாண்டின்

---

1 திரு. ஹியூ. நெவில் (Mr. Hugh Nevill) இலங்கை உள்ளாட்சி அரங்கப் பொறுப்புடையவர் (Ceylon Civil Service). அவரே 'தாப்ரோபேனியன்' பத்திரிகையின் ஆசிரியரும் ஆவார். (குறிப்பு: இலங்கையின் பழம்பெயர்களில் ஒன்று தாப்ரோபேன் அல்லது தாம்பிரபர்ணி). இம் மரபுரையை விரித்துரைக்கிற் பல கதைகளும் கதைப் பாடல்களும் இலங்கையில் இன்றும் உயிர்ப்புடன் உலவுகின்றன என்று அவர் என்னிடம் கூறியுள்ளார். அத்துடன், இராஜாவளி, அப்ஹாமின் மொழிபெயர்ப்பு (Upham's Translation), இயல் 35, பக்கம் 228; இராஜரத்னகரி பக்கம் 57; டானரின் 'இலங்கை வரலாற்று மணிச்சுருக்கம்' (Turnour's Epitome of the History of Ceylon), பக்கம் 21 ஆகியன காண்க.

2 கலிங்கத்துப் பரணி; லெய்டன் பட்டயம்.



பிற்பகுதிக்குரியது என்றாகிறது. இதையே இன்னொரு வகையாகக் கூறினால், கரிகாலன் 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட அரசன் ஆகிறான்.

கடைச்சங்கப் புலவர்களில் பலர் ஆதன், செங்குட்டுவன் ஆகிய சேர அரசர்களைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்கள். தமிழ் இலக்கியம்பற்றி நான் இனி விரித்துரைக்கப் போகும் செய்திகளின் மூலம், இப்புலவர்களும் இதே காலத்துக்குரியவர்கள் என்பது தெளிவுபடும்.

வரும் இயல்களில், நான் தமிழர் வாழும் நிலத்தின் பண்டை நிலஇயல் கூறுகளை முதலில் விளக்கி, அதன் பின்னர், தமிழரின் வெளிநாட்டு வாணிகத்தொடர்பு, தமிழ் பேசும் மக்களிடையேயுள்ள இனவகை குலவகை வேறுபாடுகள், அவர்கள் அரசியல் வரலாறு ஆகியவற்றை விரித்துரைக்க எண்ணுகிறேன். இறுதியில் தமிழ்மக்கள் குழுவியல்வாழ்வு, போர்முறை, இலக்கியம், மெய்விளக்கக் கோட்பாடுகள், சமயம்ஆகியவைபற்றிய சுருக்கக் குறிப்புகளுடன் நூலை முடிக்கக் கருதியுள்ளேன்.



# 2. தமிழகத்தின் நில இயல் பிரிவுகள்

ஆசியாவின் நடு மேட்டுநிலத்துக்குத் தெற்கிலுள்ள மாநிலமுழுவதும் முன்னாட்களில் சம்புத்தீவு அல்லது நாவலந்தீவு என்று அழைக்கப்பட்டது. நாவல்மரங்கள் அதில் மிகுதியாய் இருந்தன என்பதன் காரணமாகவே இப்பெயர் ஏற்பட்டிருத்தல்கூடும். இந் நாவலந்தீவில் விந்தியமலைக்குத் தெற்கிலுள்ள பகுதி தட்சிணாபதம் அல்லது தென்னாடு [1]. என்றும், அதன் தென்கோடியில் தமிழர் வாழும் இடம் தமிழகம் என்றும் அழைக்கப்பெற்றது.[2] இத் தமிழகத்தின் பழைய எல்லைகள், வடக்கே வேங்கட மலை,[3] தெற்கே குமரிமுனை, கிழக்கே வங்கவிரிகுடா, மேற்கே அரபிக்கடல் ஆகியவை.

மலையாளம் அந்நாட்களில் ஒரு தனி மொழிவகையாக உருவாகவில்லை. கீழ்கடலுக்கும் மேல்கடலுக்கும் இடையே தமிழ் என்ற ஒரு மொழிதான் பேசப்பட்டது.

---

1 செங்கடற் பயணம், மக்கிரிண்டில்: பக்கம், 124; டாக்டர் பாண்டர்காரின் தக்கணத்தின் முற்கால வரலாறு, பக்கம் 1.

2 சிலப்பதிகாரம் III: 37; மணிமேகலை XVII : 62. டாலமியும் 'செங்கடற் பயண' ஆசிரியரும் அதை 'லிமரிகெ' என்று குறிக்கின்றனர். ஆனால் டாக்டர் கால்டுவெல் (திராவிட இலக்கணம், முன்னுரை, பக். 14இல்) கூறுகிறபடி, அதன் சரியான மூலவடிவம் 'தமிரிகெ' ஆகவே இருந்திருக்க வேண்டும், அத்துடன் (செங்கடற் பயணம்–மக்கிரிண்டில், பக்கம் 126-இல் குறிக்கிறபடி.) இயற்றியோன் பெயர் அடிப்படையாக 'பெண்டிங்கர் அட்டவணைகள்' என்று அழைக்கப்படுகிற உரோமக உலகப் படங்களில் இந்தியக் கூற்றின் இப்பகுதி 'தமிரிகெ' என்றே பெயர் பெறுகிறது.

3 சிலப்பதிகாரம் 8: 1, 2. வேங்கட மலை என்பது சென்னையிலிருந்து வடமேற்கில் 100 கல தொலைவிலுள்ள தற்காலத் திருப்பதி.



வேங்கடத்துக்கு வடக்கே வாழ்ந்த மக்கள் வடுகர் என்றழைக்கப்பட்டனர்.[1] தமிழக எல்லையடுத்து வடக்கே மேற்குமலைத் தொடருக்கு அப்பால் இருந்த பகுதி எருமை நாடு[2] அதாவது எருமைகள் நிறைந்த நாடு எனப்பட்டது. இதற்குச் சரியான சமஸ்கிருதப் பெயர் மஹிஷமண்டலம் என்பது. எருமைநாட்டுக்கு மேற்கில் துளுநாடு, குடகம்,[3] கொண்காணம் ஆகியவை கிடந்தன. இந்தியாவில் இவ் வெல்லைகளுக்கப்பால் அந்நாளிலிருந்த மக்களினத்தவர் கலிங்கர், பங்களர், கங்கர், கட்டியர், வட ஆரியர்[4] முதலியவர்கள்.

தமிழகத்துக்கு வெளியில் தமிழ்க்கவிஞர்களால் சுட்டப்படுகிற முக்கியமான நாடு நகரங்கள் வருமாறு: மகதநாடு, புத்தர் பிறப்பிடமான கபிலை[5]; மாளவநாடு, அதன் தலைநகர் அவந்தி; வச்சிரநாடு[6], கங்கை, ஆற்றங்கரையில் கன்னர் ஆட்சிப் பகுதியிலுள்ள கங்கை என்ற கடற்றுறைமுக நகரம்[7]; வாரணவாசி அல்லது தற்காலக் காசிமாநகர்; குஜராத்தில் தெய்வமாகக் கருதப்பட்ட கிருஷ்ணன் தலைநகரமாகிய துவரை அல்லது துவாரகை[8] ஆகியவை.

இலங்கை அன்று இலங்காதீவம் அல்லது இரத்தின தீவம் என்ற பெயரால் இலங்கிற்று. அத்தீவின் உயரமிக்க

---

1. அகம் 294. 2. அகம் 252.

3. Coorg.

4 சிலப்பதிகாரம் XXV: 156—158 பங்களர் என்பவர்கள் தெற்கு வங்காளத்தில் வாழ்ந்த மக்கள் ஆவர். கங்கர், சற்று மேலே சென்று வடபாலுள்ள கங்கைக்கரையில் வாழ்ந்த மக்களாய் இருந்திருக்கக்கூடும். இவர்களையே டாலமி கங்கரிடே (Gangaridae) என்றார். கட்டியர் என்பது பெரிதும் குஜராத்துக்குக் கட்டிவார் என்ற பெயர்வரக் காரணமாய் இருந்த மக்கள் என்பதில் ஐயமில்லை.

5 மணிமேகலை 26: 12—44.

6 சிலப்பதிகாரம் 2: 99—103.

7 சிலப்பதிகாரம் 23 : 138—141.

8 சிலப்பதிகாரம் 27.

மலை 'சமனொளி'[1] என்றழைக்கப்பட்டது (இது இன்று ஆதம் கொடுமுடி என்று வழங்குகிறது). அதன் முகட்டில் புத்தர் அடிச்சுவடுகளின் தடம் இருந்தது. தூர தொலைவுகளிலிருந்துவரும் புத்தசமயத்தவரின் புண்ணிய யாத்திரைக்குரிய இடமாக அது விளங்கிற்று.

இலங்கைக்கும் இந்தியாவுக்கும் இடையே மணிபல்லவம் என்ற தீவு இருந்தது. அதில் விளங்கிய புத்தபீடிகை புத்த உலகத்தின் பூசனைக்குரிய புண்ணியதலங்களுள் ஒன்றாய் இருந்தது. அது காவிரியின் கடல் முகத்திலிருந்த பண்டைத் துறைமுகமாகிய புகாரிலிருந்து முப்பது யோசனைத் தொலைவிலிருந்ததாகக் குறிக்கப்படுகிறது.[2] மதுரைப் பகுதியிலுள்ள கடற்கரையிலிருந்து சாவகம்[3] செல்லும் கப்பல் மணிபல்லவத்தினூடாகவே சென்றது.[4]

இலங்கைக்குக் கிழக்கேயுள்ள தீவுகளில் 'நக்கசாரணர்' அதாவது 'அம்மணமான நாடோடிகள்' என்ற பெயருடன் மனிதரைத் தின்னும் மனித இனத்தவர் வாழ்ந்

---

1 மணிமேகலை 28 : 103.

2 மணிமேகலை 6 : 211—214.

3 Java.

4 மணிமேகலை 14 : 74—81. இந்தப் பீடிகைக்குப் புத்த பிரானின் முதல் முதல் வருகை பற்றி தீபவம்சோவும் மகாவம்சோவும் மிகவும் பகட்டான சொல்லோவியம் தீட்டிக் கற்பனைக் கோட்டை கட்டியுள்ளன. ஆனால், மணிமேகலை இவற்றுக்கு மூன்று நூற்றாண்டுகளுக்கு முற்பட்டது. அது கீழ்வருமாறு பகட்டாரவாரமில்லாத எளிய குறிப்புரையே தருகிறது: ''இந்தப் பீடிகையைக் கைப்பற்ற இரண்டு நாகர்கள் சண்டையிட்டனர். இருவருள் எவரும் அதை நிலத்திலிருந்து அசைக்க முடியவில்லை. ஆயினும் கைப்பற்றும் முயற்சியை விட்டுவிட மனமொப்பாமல், கோபக்கனல் கக்கும் கண்களுடன், அவர்கள் தம் பெரும் படைகளை எதிரெதிர் நடாத்தி வெங்குருதிப் போரிட்டனர். மா முதல்வர் (புத்தர் பிரான்) அவர்களிடையே தோன்றினார். ''இந்தப் பீடிகை எனது; ஆகவே பூசலை நிறுத்துங்கள்'' என்றார். பின் அவர் அதன் மீதமர்ந்து அறநெறி சாற்றினார். மணிமேகலை. 8: 54—63



தனர்.[1] இத்தீவுகளுக்கப்பால் சாவகம் என்ற பெருநிலம் கிடந்தது. அதன் தலைநகரம் நாகபுரம். இந்நாட்டின் அரசன் தன்னை இந்திரன் மரபினன் என்று குறித்துக் கொண்டான். இதில் வியப்புக்குரிய செய்தி என்னவென்றால், இச் சாவகத்தில் அன்று தமிழே பேசப்பட்டதாகத் தெரிகிறது. சாவகம் என்று இங்கே குறிக்கப்பெறுவது பெரும்பாலும் சுமத்ராத் தீவாகவோ, ஜாவாத் தீவாகவோதான் இருக்கவேண்டும்.[2]

தமிழகம் 13 நாடுகள் அல்லது மண்டலங்களாகப் பிரிவுற்றிருந்தது. அவற்றின் பெயர்களாவன; பாண்டி, தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா, வேண், பூழி, பன்றி, அருவா, அருவா வடதலை, சீதம், மலாடு, புனனாடு ஆகியவை[3]. இவற்றுள் பாண்டிநாடு கிட்டத்தட்ட தற்கால மதுரைமாவட்டம் முழுவதும் உள்ளடக்கியிருந்தது. இதுவே தமிழகத்தின் உயிர்நிலையான பகுதியாகக் கருதப்பட்டது. தூய செந்தமிழ் பேசப்பட்ட இடமாக அது மதிக்கப்பட்டது.

இந்நாட்டின் முக்கிய நகரம் பாண்டியர் தலைநகரமாகிய மதுரையே. மகாபாரதக் காவியத் தலைவர்களான பாண்டு மரபினரின் வடபுல நாட்டுத் தலைநகராக யமுனைக்

---

1 மணிமேகலை 16 : 15, மனிதரைத் தின்னும் மனித இனத்தவர் வாழ்விடங்களாக டாலமி மூன்று தீவக் கூட்டங்களைக் குறிப்பிடுகிறார். இவற்றை 'யூல்' (Yule) என்பார் நிக்கோபார், மார்க்கோ போலோ குறித்த நக்கவாரம், ரஷீத் உத்தீன் குறித்த லக்கவாரம் என்பதன் பெயராகக் கருதுகிறார்: மக்கிரிண்டிலின் டாலமி, பக்கம் 236—236 காண்க.

2 மணிமேகலை 24: 164—170. டாலமி இந்தத் தீவை லபதாய்ஸ் (Labadois) அல்லது சபதாய்ஸ் (Sabadois) அதாவது வால் கோதுமை (யவதானிய)த்தீவு என்றும், அதன் தலைநகரை ஆர்கிரே (Argyre) அதாவது வெள்ளி நகர் என்றும் சுட்டுகிறார். மக்கிரிண்டிலின் டாலமி, பக்கம் 249.

3 நச்சினார்க்கினியர் நாடுகளின் சிறிது மாறுபட்ட ஒரு பட்டியல் தருகிறார். வேண், புனனாடு ஆகியவற்றினிடமாக அவர் ஒளி நாடு, பொங்கர் நாடு ஆகியவற்றைக் குறிப்பிடுகிறார். தொல்காப்பியம்: சொல்லதிகாரம், சூத்திரம் 400.

கரையிலிருந்த திருநிலைபெற்ற மதுரையின் பெயரைப்பின்பற்றியே அது அப்பெயரடைந்ததென்று தோற்றுகிறது[1] அந்தக்காலத்துத் தமிழ்க் கவிஞர்களின் வழக்காற்றில் அது தக்கண மதுரை அல்லது தென்மதுரை[2] என்று குறிக்கப்பட்டதே இதற்குச் சான்று பகரும். பாண்டியனுக்கே பஞ்சவன் (ஐவர்மரபினன்,)[3] கௌரியன்[4] (குரு மரபில் வந்தவன்) என்ற பெயர்கள் உண்டு. ஐவர் உடன் பிறந்தாராயிருந்த பாண்டவரின் மூலமரபை இப்பெயர்கள் சுட்டிக்காட்டுகின்றன.

---

1. பாண்டவர், பாண்டியர் பெயர்களும் யமுனைக்கரை மதுரை, வைகைக்கரை மதுரை ஆகியவற்றின் பெயர்களும் தொடர்புடையவை என்பதில் ஐயமில்லை. இத் தொடர்புகளுடன் மகாபாரதக் கதைக்கு இசைவு உண்டு என்பதும் இயல்பான ஒரு கருத்தே. ஆனால், புராண இதிகாசக் கதைகள் சமஸ்கிருதத்துக்கும் வடபுலங்களுக்கும் உயர்வளித்த ஒரு இடைக்காலப் போக்கை மிகைப்படுத்திக் காட்டுவன. அவற்றை அடிப்படை மெய்ம்மைகளாகக் கொண்ட கோட்பாடுகள் வரலாற்று முறையில் வலுவுடையன ஆகமாட்டா. தவிர இதேவகை வடக்கு, தெற்கு இசைவுகள் வேறு பல உண்டு. தமிகத்திலேயே சோணாட்டுக்கும் பாண்டி நாட்டுக்கும் இடையிலும்; சோழ பாண்டி நாடுகளுக்கும் ஈழநாடு அல்லது இலங்கைக்கும், தமிழகத்துக்கும், கடல்கடந்த தென் கிழக் காசியப் பகுதிகளுக்கும் இதுபோன்ற பல இசைவுகள் உண்டு. சிந்து நிலத்திலும் தமிழகத்திலும் 'பாஞ்சாலம் என்ற ஊர்ப்பெயர், நாட்டுப் பெயர்கள், மலயம் என்ற மலைப்பெயர்கள்; வங்கத்திலும் தமிழகத்திலும் பாண்டியர்' தாம்பரபர்ணி என்ற பெயர்கள் ; சோணாட்டிலும், பாண்டி நாட்டிலும் பாவநாசம், குற்றாலம் என்ற பெயர்கள் தமிழகத்திலும் ஈழத்திலும் திருநெல்வேலி போன்ற பெயர்கள்; தமிகத்திலும் கடல் கடந்த தென்கிழக்காசியாவிலும் மதுரை, மாறன் போன்ற பெயர்கள் ஆகியவை இதிகாச புராணங்களாய் விளக்கப்படத்தக்கவையுமல்ல, விளக்கப்படவுமில்லை. இவற்றுட் பல தமிழர் அரசியல், வாணிக, குடியேற்றப் பரப்புகளின் சின்னங்கள் என்பது தெளிவு. வடக்குத் தெற்குத் தொடர்பு வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட பொது இன மரபு, குடிப் பெயர்வு முதலிய தொடர்புகள் குறித்தன ஆகலாம்.

2 மணிமேகலை 13 : 13.

3 புறநானூறு : பாட்டு 58, அடி 6.

4 சிலப்பதிகாரம் 15, 2.



மதுரைமாநகரம் இன்றளவும் தன் பண்டைப்பெயருடனேயே நிலவுகிறது, வடமதுரையில் ஆண்ட பாண்டு மரபினர் மிக முற்பட்ட காலத்திலேயே தீவக்குறையின் தென்கோடி முனையிலும்[1] தங்கள் ஆட்சியை நிறுவியிருந்தனர் என்பதற்கு இஃது ஓர் உயிர்ச்சான்றாகும்.[2]

மதுரை கோட்டை கொத்தளமுடைய ஒரு நகரம். கோட்டைக்கு நான்கு வாயில்களும் உயர்ந்த கோபுர மாடங்களும் இருந்தன. கரடுமுரடாக வெட்டப்பட்ட கற்களால் மதில் புனைந்தியற்றப்பட்டிருந்தது. அதைச் சுற்றிலும் ஆழ்ந்த அகழியும், அகழிக்கப்பால் அடர்ந்த முள்மரக் காடும் இருந்தன. வாயில்களினூடாகச் சென்ற வழி பாதைகள் பல யானைகள் அருகருகாகச் செல்லத்தக்கனவாய் விரிவகலமுடையனவாய் இருந்தன. வாயிலின் இருபுற மதில்களின்மீதும் பல்வகைப்பட்ட படைக்கலங்களும் எறிபடைக் கருவிகளும் எதிரிகள்மீது எளிதில் எடுத்து வீசத்தக்க நிலையில் ஒளித்துவைக்கப்பட்டிருந்தன.

வாளுருவிய யவனவீரர் கோட்டைவாயில்களைக் காத்தனர்.[3] வாயில்கள்மீதும் மதில்கள்மீதும் போரில் கைக்கொள்ளப்பட்ட பல்வகைக் கொடிகள் பறந்தன.

நகரின் மிக முக்கியமான தெருவீதிகள் அரசவீதி, கடைவீதி, கணிகையர்வீதி, பொற்கொல்லர்வீதி, கூலவாணிகர் வீதி, அறுவைவாணிகர் வீதி, மணிவாணிகர் வீதி முதலியவை[4]. நகரின் கட்டடங்களில் மிகச்சிறந்தது 'வெள்ளியம்பலம்' (வெள்ளிபாலான் கோயில்)[5] என்ற பெயருடைய நகரின் சிவன்கோயிலே, இதுதவிர, திருமால், பலதேவன், முருகன், சிந்தாதேவி[6] ஆகிய பிற

---

1 மக்கிரிண்டிலின் டாலமி, பக்கம், 60.
2 முன்பக்க அடிக் குறிப்பு 1 பார்க்க.
3 சிலப்பதிகாரம், 14 : 62—67.
4 சிலப்பதிகாரம், 14 : 143—208.
5 சிலப்பதிகாரம், பதிகம் : 40—41.
6 சிலப்பதிகாரம், 14 : 7—11.

தெய்வங்களுக்குரிய கோயில்களும், புத்த, பார்ப்பன, நிகண்டத் துறவிகளுக்குரிய தனித்தனி மடங்களும்[1] இருந்தன.

அக்காலத் தமிழக நகரங்களில் புகழ்மிக்கதும் முதன்மைவாய்ந்ததும் மதுரையே என்பதில் ஐயமில்லை. தமிழ் மன்னருள் ஆற்றல் மிக்கவர் என்றும், புலவர்களின் ஒப்புயர்வற்ற புரவலரென்றும்பெயரெடுத்த பாண்டியரின் தலைநகர் அது. இது தவிர, தமிழகத்தின் மற்ற நகரங்களிலிருந்து அதை வேறுபடுத்திய மற்றொரு சிறப்பும் அதற்கு இருந்தது. இதுவே, அதன் வாயில்களின்மீது எழுந்த வானளாவிய கோபுரங்களின் சிறப்பு ஆகும். இது காரணமாக அது பொதுவழக்கில் 'நான்மாடக் கூடல்' அதாவது 'நான்கு கோபுரங்களின் இணைப்பு' என்று சுட்டப்பட்டது. இத்தொடர் சிலசமயம் 'மாடக் கூடல்' என்றும் 'கூடல்' என்றும் சுருக்கி வழங்கப்பட்டது.[2]

இந்தப் பண்டை மதுரை அல்லது கூடல் இருந்த இடம் தற்கால மதுரை நகரத்துக்குத் தென்கிழக்கே ஆறு கல் தொலைவில் பாழடைந்து கிடக்கும் பழ மதுரை (பழைய மதுரை) யாகவே இருத்தல் கூடும். இந்தப் பாழ்நகர் வைகையின் வடகரையில் இருக்கிறது. ஆனால் பண்டை மதுரை அதன் தென்கரையில் இருந்ததாகவே அறிகிறோம். ஆயினும் நகரின் அழிவுக்குப் பிற்பட்டு ஆறே போக்குமாறித் திசைமாற்றம் உண்டுபண்ணியிருக்கலாம் என்று எண்ண இடமுண்டு.

சங்ககாலத்திலேயே மதுரைக்கு வைகையால் அழிவு நேரக்கூடும். நிலை இருந்ததென்று அறிகிறோம். பாண்டிய

1 மதுரைக் காஞ்சி, அடிகள் 467—487.

2 நக்கீரரின் திருமுருகாற்றுப்படை அடி 71; கலித்தொகை, பாட்டு 35, அடி 17; பாட்டு 92, அடிகள் 11, 65; நான் மாடக் கூடல் என்ற பெயர் திருஆலவாய், திருநள்ளாறு, திருமுடங்கல், திருநடுவூர் என்ற நான்கு கோயில்கள் காரணமாக ஏற்பட்டதென்ற விளக்கம் புராண காலத்துக்குரிய ஒரு கற்பனை என்றே தோற்றுகிறது.



னைப் பாராட்டியபோது தமிழ்ப் புலவர்கள் கூறிய சொற்களால் இதனை உய்த்துணரலாம். "வெள்ளப் பெருக்குற்ற வைகையாலன்றி வேறெந்த எதிரியின் முற்றுகையையும் அறியாத மதில்சூழ் நகரின் காவலனே!"[1] என்று அவர்கள் பாண்டியனை முன்னிலைப் படுத்தினர். மதுரைக் கோட்டைக்கு வெளியே சமய அறமுறை வாழ்க்கை நடாத்தியவர்களும் பாணர் முதலிய ஊழிய வகுப்பினரும் தங்கிவாழ்ந்தனர்.[2]

மதுரைக்கு மேற்கே முருகக் கடவுளுக்குத்[3] திருவிடமான பரங்குன்று என்ற மலை இருந்ததாக நக்கீரர் குறிப்பிடுகிறார். இம்மலை இன்றைய மதுரையிலிருந்து தென்மேற்கில், ஆனால் பாழ்பட்ட பழைய நகரிலிருந்து மேற்கிலேயே இருக்கிறது. தலைநகருக்குக் கிழக்கே மற்றொரு மலை உண்டு. அதில் திருமால் இடங்கொண்ட கோயில் ஒன்று இருந்தது. இதில் மூன்று நறுஞ்சுனைகள் இருந்தன. திருமாலடியவர்களால்[4] இவை புண்ணிய தீர்த்தங்களாகக் கொள்ளப்பட்டிருந்தன. மதுரையிலிருந்து (தற்போது திருச்சிராப்பள்ளியின் ஒரு பேட்டையாயிருக்கும்) உறையூர் செல்லும் பாதையில் சிறுமலை என்ற குன்றுத்தொகுதி இருந்தது. இங்கே மாவும் பலாவும், கமுகும் தெங்கும் நிறைந்து வளர்ந்தன. உள்ளியும் மஞ்சளும், கம்பும் சாமையும்மலையரிசியும் இனிய கிழங்கு வகைகளும், வாழையும் கரும்பும் வளமாகப் பயிராயின.[5]

பாண்டியநாட்டின் எல்லைகளைப் பற்றியோ தமிழகத்தின் உறுப்புக்களாகிய மற்றப் பன்னிரண்டு நாடுகளின் இடஅமைப்பு, எல்லை ஆகியவற்றைப்பற்றியோ பண்டைத் தமிழ் இலக்கிய ஏடுகளில் எத்தகைய சான்றுகளும் கிட்டவில்லை. உரையாசிரியர்கள் தரும் விவரங்களோ முற்றி

1 கலித்தொகை, பாட்டு 67, அடிகள் 3—5.
2 மதுரைக் காஞ்சி, 340—.342
3 திருமுருகாற்றுப்படை, 71—77.
4 சிலப்பதிகாரம், 11 : 91—103.
5 சிலப்பதிகாரம், 11 : 80-85

லும் ஒன்றற்கொன்று முரண்பட்டவையாயுள்ளன.[1] நாட்டின் பண்டை நிலநூல்பற்றித் தமிழ் ஆசிரியரே எதுவும் தொடர்பாகத் தந்திராதநிலையில், 'செங்கடற் பயணம்' என்ற கிரேக்க நூலிலும் பிளினி, டாலமி ஆகியோர் நூல்களிலும் கிடைத்த தகவல்களை வைத்துக்கொண்டு நாம் புதுவதுபுனைந்து புத்தாராய்ச்சி செய்யவேண்டியதாயுள்ளது.

அரபிக்கடலை ஒட்டி வடக்கிருந்து தெற்காகக் கீழ் வரும் வரிசைமுறையில் நான்கு நாடுகள் அல்லது மண்டலங்கள் இருந்தன. அவையாவன: பூழி, குடம், குட்டம், வேண்[2]. இப்பெயர்கள் 'அவ்வப் பகுதியின் நில இயல்

1 அமிதசாகரரின் யாப்பருங்கலம் மூன்றாவது இயலான ஒழிபியலின் 8ஆவது சூத்திரத்திற்குக் குணசாகரர் தம் உரையில் தூயதமிழ் பேசப்படும் செந்தமிழ் நாட்டின் எல்லைகளாகக் குறிக்கும் விவரங்கள் வருமாறு: ''வைகையாற்றுக்கு வடக்கு, மருத ஆற்றுக்குத் தெற்கு, கருவூருக்குக் கிழக்கு, மருவூருக்கு மேற்கு''. இந்த எல்லை கிட்டத்தட்ட இக்கால மதுரை மாவட்டத்தின் வடபாதியையும் தஞ்சை, திருச்சிராப்பள்ளி மாவட்டங்களையும் உள்ளடக்கும். அத்துடன் பாண்டியர் தலைநகரான மதுரையை அது செந்தமிழ் எல்லைக்குப் புறம்பாக்குகிறது. உரையாசிரியர் சேனாவரையரும் அவரைப் பின்பற்றி நச்சினார்க்கினியரும் செந்தமிழ் நாடு என்பதற்குரிய இந்த எல்லை விளக்கத்தை ஏற்றனர். அத்துடன் இச் செந்தமிழ் நாட்டினைச் சூழ்ந்த நாடுகளாகத் தென்கிழக்கிலிருந்து தொடங்கி வடமேற்கு நோக்கிக் கீழ்வரும் நாடுகளைக் குறிப்பிட்டுள்ளனர். அவையாவன: 'பொங்கர், ஒளி, தென்பாண்டி, குட்டம், குடம், பன்றி, கற்கா, சீதம், பூழி, மலையமானாடு, அருவா, அருவா வடதலை'' குணசாகரரும் இதே பட்டியலைத் தருகிறார். ஆனால் இதில் அவர்கொண்ட வேறுபாடு ஒன்று உண்டு. பொங்கர், ஒளி என்ற நாட்டுப் பெயர்களினிடமாக அவர் வேண், புனல்நாடுகளைத் தருகிறார். பவணந்தியாரின் நன்னூல், சொல்லதிகாரம், பெயரியல், சூத்திரம் 14-16 இல், போதிய நல்ல காரணங்கள் காட்டிச் சங்கரநமச்சிவாயர் செந்தமிழ் நாட்டின் இந்த எல்லை விளக்கத்தை முற்றிலும் மறுத்திருக்கிறார். அது பாண்டி நாட்டைக் கட்டாயம் உள்ளடக்கியிருக்கவேண்டுமென்றும், சோழநாடு அல்லது புனல்நாட்டைக் கட்டாயம் விலக்கியிருக்க வேண்டுமென்றும் அவர் கருதியுள்ளார்.

2 பூழிநாடு, குடநாடு ஆகிய பெயர்கள் 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மலபாரை மைசூர் வென்று கைக்கொண்டநாள்



புக்கு இசைய அமைந்திருந்தன. பூழி அல்லது 'மணற் பாலைப்பரப்பு' பெரும்பாலும் தற்கால அகலப்புழை ஆற்றின் கரையிலிருந்து பொன்னானி ஆற்றின் கடல்முகம் வரை பரந்து கிடந்திருக்கவேண்டும். இப்பகுதியின் நிலம் குறிப்பிடத்தக்க வகையில்மணற்பாங்காகவே இருக்கிறது. குடம் அல்லது மேற்குப்பகுதி பெரிதும் பொன்னானி ஆற்றின் கடல்முகத்திலிதிருந்து ஏரணாகுளத்தருகிலுள்ள பெரியாற்றின் தென்கோடிக் கடல்முகம் வரையும் நீண்டிருக்கவேண்டும். பாலக்காட்டுக் கணவாய் வழியாக முதல் முதல் மலபாருக்குள் நுழைவுற்ற குடியேற்றத்தாருக்கு இதுவே தொலைமேற்கான பகுதியாகத் தோன்றியிருக்கத் தக்கது.

குட்டம் அதாவது 'காயல்களின் நிலம்' தற்காலக் கோட்டயம், கொல்லம் நகரங்களைச் சூழ்ந்த பகுதியாகும். இன்றுவரை இப்பகுதியின் தாய்நில மக்களால் அது இப்பெயருடனேயே வழங்கப்பெறுகிறது. இப்பகுதியினூடாகப் பாலி அல்லது பாலை ஆறு ஓடுகிறது. அது கடல்முகத்தின் அருகே பல சிறு தீவுகளை உருவாக்கிக் காயல்களாகப் பரவிச் செல்கிறது. இக் காரணத்தாலேயே அது குட்டம் அல்லது காயல்களின் நிலம் என்று பெயர்பெற்றுள்ளது. குட்டத்துக்குத் தெற்கிலுள்ளது வேண். இது கிட்டத்தட்டக் குமரிமுனைவரை அளாவிக்கிடந்தது. இப்பகுதியிலுள்ள தாழ்ந்த குன்றுகளும் பள்ளத்தாக்குகளும் வளமான மூங்கில் காடுகளால் மூடப்பெற்றுள்ளன. வேண்நாடு அதாவது மூங்கில்நாடு என்ற இதன் பெயர் இதனால் மிகப் பொருத்தமுடையதேயாகும்.

வரையிலும் முற்றிலும் வழக்கிறந்துபடாமல் நிலவின என்று தோற்றுகிறது. ஆனால் அப்பெயர்கள் பயநாடு பொலநாடு, குட்டநாடு என்று திரிபுற்றிருந்தன. பயநாடு தற்காலக் 'குவிலாண்டி' நகரத்தை அடுத்த 9 அம்சங்களையும், பொலநாடு கோழிக்கோட்டை (Calicut) அடுத்த 22 அம்சங்களையும் உட்கொண்டவையாயிருந்தன குட்டநாடு இன்றைய பொன்னானித் தாலுகாவின் 24 அம்சங்களைக் கொண்டதாயிருந்தது. —மலபார்க்கையேடு (Malabar Manual) ஏடு. 1: பக்கம், 647—666.

குட்டத்துக்குக் கிழக்கே ‘கற்கா’ அதாவது பாறையடர்ந்தபகுதி கிடக்கிறது.

மேற்கூறிய ஐந்து நாடுகளும் சேர்ந்து சேரமண்டலமாயிற்று. இதன் தலைநகர் வஞ்சி அல்லது கரூர் ஆகும்.[1] அது பெரியாற்றின் கரையில், ஆனால் அதன் கடல் முகத்திலிருந்து நெடுந்தொலைவில், மேற்கு மலைத்தொடரின் அடிவாரத்தருகில் அமைந்திருந்தது. நகர் இருந்த இடம் இன்று திருக்கரூர் என்ற பெயருடைய ஒரு பாழ் அடைந்த சிற்றூர். அது கொச்சிக்குக் கிழக்கே வடக்குச் சாய்வாக 28 கல் தொலைவில் உள்ளது. இங்கே ஒரு பழைய கோவில், வேறுசில பாரியகட்டடங்கள் ஆகியவற்றின் அழிதடங்கள் காணப்பெறுகின்றன.[2] நகரம் முன்பு வலிமைவாய்ந்த கோட்டை கொத்தளங்களுடையதாயிருந்ததென்று தெரிகிறது.[3] கோட்டையைத் தாக்குபவர்கள்மீது எறிபடைகள் உமிழும் பல்வேறுவகை இயந்திரங்கள் கோட்டையின் ஞாயில்களில் இருந்தன.

மதில் வாயில்களின்மீது வெண்சுதைபூசிய உயர் கோபுரங்கள் பிறங்கின. அவற்றின்மீது கொடிகள் பறந்தன. மதில்களைச்சுற்றிலும் உள்ள ஆழ்ந்தகன்ற அகழியில் மனிதரைத் தின்னும் பாரிய முதலைகள் நடமாடின. நகரின் முக்கிய கட்டடங்களாக அரசன் அரண்மனை, ஆடகமாடம் அல்லது ‘பொற்கோவில்’[4] என்ற பெயருடைய திருமால் கோயில், ஒரு புத்த சைத்தியம்,[1] கிழக்கு வாயிலடுத்து மதிலகத்தே இருந்த ஒரு நிகண்டத் துறவியர் மடம்[2] ஆகியவை இருந்தன

மதுரையுடன் வஞ்சியை ஒப்பிட்டால், மதுரையின் சிறப்பு அதன் பாரியக் கட்டடங்களும் கோபுரங்களும் ஆகும். ஆனால் வஞ்சியோ, பொழில்வளங்களுடன் தெளிந்த நீரையுடைய வாவிகளையும், இனிய நீரோடைகளையும் சிறு தீவுகளையும், நிழல்தரும் சாலைகளையும், பூங்காக்களையும், செய்குன்றுகளையும், செயற்கை அருவிகளையும் உடையதாய்க் காண்பவர் கண்களைக் கவரும் எழிலுடையதாய் இருந்தது.

கோட்டைக்கு வெளியே சேர அரசனின் படைவீரர்கள் தங்கியிருந்தனர். சந்தடியற்ற நிழலார்ந்த சோலைகளின் நடுவே ஆங்காங்கே அறிவர்களும் துறவிகளும் தலைநகரின் ஆரவாரங்களிலிருந்து ஒதுங்கி வாழ்ந்துவந்தார்கள்.

பெரியாற்றின் கடல்வாய் அருகே முசிறி ஒரு முக்கியமான துறைமுகமாயிருந்தது. அதன் வளங்களைக் கவிஞர் ஒருவர் வருணித்துள்ளார். “திருவோங்கும் முசிறித்துறை முகநோக்கிப் பொன்னின் வளந்தாங்கிய யவனர்களுடைய அழகிய பெரிய மரக்கலங்கள் பெரியாற்றின் நீரை உந்தி வெண்ணுரைகளை வாரி இறைத்த வண்ணம் வருகின்றன.”[3] மற்றும் ஒரு புலவர் பாடுவதாவது: ‘வீடு வீடாகக் கூடைகளில் நெல்கொண்டு வரப்படுகிறது. நெல்லை வாங்கிக்கொண்டு மக்கள் பண்டமாற்றாக மீனைக் கொடுக்கிறார்கள். அத்துடன் வீடுகளிலிருந்து மிளகு சாக்குகளில் சந்தைகளுக்குக் கொண்டுசெல்லப்படுகிறது. கப்பலிலிருதது கொண்டுவரப்படும் தங்கத்துக்கீடாக இச்

1 சிலப்பதிகாரம் 25: 9-12 பெரியாற்றின் கடல்முகத்தருகிலுள்ள பிற்காலச் சேர அரசின் தலைநகரான திருவஞ்சைக் களத்தையே சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் கரூராகக் கொண்டார். ஆனால், டாலமி ஆற்றங்கரையில் ஆற்றருகில் சிறிது உள்நாட்டில் மேற்படச் சென்று அதைக் காண்கிறார். டாலமி கொண்டதே சரி என்று எனக்குத் தோற்றுகிறது.

2 ஆசியக்கழக நாளேடு (Journal of the Asiatic Society) ஏடு II, பக்கம் 336: பழமைக் கூறுகளின் பட்டியல்கள், ஸீவல் (Sewell's Lists of Antiquities) ஏடு I, பக்கம் 161.

3 மணிமேகலை 28 : 2-68.

4 சிலப்பதிகாரம் 16 : 62, 30 : 51. ஆடகமாடம் என்பது தற்காலத் திருவனந்தபுரம் என்ற அரிபுரமே என்று உரையாசிரியர் கருதுகிறார். ஆனால், இம்முடிபுக்கு ஆதாரமாக நூலின் மூல பாடத்தில் எதுவுமில்லை.

1 மணிமேகலை 28 : 127.

2 சிலப்பதிகாரம், பதிகம் அடி 1.

3 எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்: அகம் 148.

சரக்குகள் விற்கப்படுகின்றன, முசிறித்துறையில் கடலலையின் இனிய பண் ஓயாது இசைபாடுகின்றது. தங்கம் படகுகளிலே வந்து கரையில் இறங்கிய வண்ணமாக உள்ளது. குட்டுவேன் (அதாவது சேர அரசன்) மலைதரும் அருந்திருவையும், கடல் தரும் அருந்திருவையும் வருவோர்க்கெல்லாம் வாரிவாரி வழங்கியவண்ணம் இருக்கிறான்"[1]

மேலைத் தீரத்திலுள்ள இன்னொரு செல்வத் துறைமுகம் தொண்டி — அது இன்று அகலப்புழை என்ற பெயருடன் ஓடும் 'மாக்கலி'[2] அல்லது 'பெரிய உப்புமயமான ஆற்றி'ன் கரையில் இருந்தது. அது பற்றி ஒரு புலவர் குறிப்பதாவது: "பளுவேறிய குலைகள் தாங்கிய தெங்குகளால் சூழப்பட்டது அத்துறை. பரந்தகன்ற நெல்வயல்கள், பசுங்குன்றங்கள், பன்னிறமலர் விரித்துப் பளிங்கு நீர் பரப்பிச் செல்லும் உப்பு மணக்கும் பேராறு ஆகியவற்றினிடையே அது அமைந்துள்ளது."[3] தற்காலக் குவிலாண்டி நகரிலிருந்து ஐந்துகல் வடக்கேயுள்ள பள்ளிக்கரை என்ற ஊருக்கு இவ்வருணனை முற்றிலும் பொருத்தமாய் அமைந்துள்ளது.

தொண்டி என்ற பெயர் இவ்வூர் வாழ்நர்களால் இன்று முற்றிலும் மறக்கப்பட்டுவிட்டது. ஆனால் பழைய மரபில் வந்த பெருமகனாகிய ஊரின் செல்வமிக்க நிலக்கிழார் தொண்டிப்புனத்தில் நாயர் அல்லது தொண்டியில் குறுப்பச்சன் என்ற பெயர் தாங்குகிறார். அத்துடன் அகலப் புழையாற்றில் இன்னும் பன்னிரண்டுகல் மேல் சென்றால், குட்டியடியருகே 'தொண்டிப்போயில்' என்ற ஒருசிற்றூர் இன்னும் இருக்கிறது. இப்பெயர் தொண்டிக்குப்போகும் வழி என்ற பொருள் குறிப்பது என்று கருத இடம் தருகிறகிறது.

அகலப்புழையாறு முன் காலங்களில் தொண்டி அல்லது பள்ளிக்கரைவரை நீர்ப் போக்குவரத்துக்கு உகந்ததா

1 பரணர், புறம் 343. 2 பொய்கையார், புறம் 48.
3 குறுங்கோழியூர் கிழார், புறம் 17.



யிருந்திருக்கவேண்டும். ஆனால் அதில் விழுந்து அதை வளப்படுத்திய கொத்தாறு வேறு திசையில் திரும்பிவிட்ட காரணத்தால், அது இப்போது அவ்வளவு தொலை நீர்ப் போக்குவரத்துக்கு உகந்ததாயில்லை.[1]

தமிழகத்தின் மேற்குக்கரை சார்ந்த துறைமுகங்கள், ஆறுகள் ஆகியவற்றின் கீழ்க்கண்ட பட்டியல் டாலமியால் தரப்படுகின்றது:

துண்டிஸ் நகரம், பிரமகரா, கலைக்கரியாஸ், வாணிகக்களத்துறையான முசிரிஸ்[2]; ஸியூடோஸ்டமாஸ் ஆற்றுமுகம், பொடொபெரூரா, செம்னெ, கொரியூரா, பக்கரை, பாரிஸ் ஆற்றுமுகம்.[3]

இவற்றையடுத்து டாலமி அயாய்[4] நாட்டைக் குறிப்பிட்டு, அதிலுள்ள துறைமுகங்களைச் சுட்டிக்காட்டுகிறார்.

மெல்குண்டா, வாணிகக்களமான எலங்கோன் (அல்லது எலங்கோர்), தலைநகர் கொட்டியாரா, பம்மலா, கோடிமுனையும் நகருமான கொமரியா[5] ஆகியவை.[6]

உள்நாட்டு நகரங்களில் அவர் கீழ்வரும் பெயர்ப் பட்டியல் தருகிறார்.

உள்நாட்டு நகரங்களுள் ஸியூடோஸ்டமாஸுக்கு மேற்கே யுள்ளவை: நரூல்லா, கூபா, பாலூரா ஆகியவை.[7]

1. "கொத்தாறு இப்போது செல்லும் நெறியில் நேராகக் கடலுக்குச் செல்லாமல் இந்த (அகலப் புழை) வழியாகக் கடலுக்கு முன்பு சென்றிருந்ததென்று தெரிகிறது", —மலபார்க்கையேடு (Malabar Manual) ஏடு I. பக்கம் 12.

2. Tyndis a city, Bramagara, Kalaikkarias, **Mouziris**,an emporium

3. Mouth of the river Pseudostomos, Podoperoura Semne, Koreoura, Bakarei, mouth of the river Baris.

4. Aioi Country : இது ஆய் நாடு என்று கருதப்படுகிறது.

5. Melkynda, Elangkon (or Elangkor) a mart, Kottiara the Metropolis. Bammala, Komaria a cape & town.

6. மக்கிரிண்டிலின் டாலமி, பக்கம் 48 தொடர்ச்சி.

7. West of Pseudostomos: Naroulla, Kouba, Paloura.

ஸியூடோஸ்டமாஸுக்கும் பரிஸுக்கும் இடையேயுள்ளன: பசகெ, மஸ்தனூர், கூரெல்லூர், புன்னடா. இங்கே கோமேதகம் உண்டு. ஆலோ, கேரொபொத்ராஸின் நலைகரான கரூரா,[1] ஆரெம்பூர் பிடெரிஸ், பந்திபோலிஸ், அடரிமா கொரியூர். உள்நாட்டு நகரமான அயாய் மொருண்டா[2] ஆகியவை.[3]

தமிழகத்தின் வட எல்லையை அறுதியிடுவதில் பிளினியும் டாலமியும் முற்றிலும் ஒன்றுபடுகின்றனர். மேற்குத் தீரத்தில் அதை இருவரும் துண்டிஸுக்கு(தொண்டிக்கு)ச் சற்று வடக்கிலுள்ள இடமாகக் கொள்கின்றனர். செங்கடற்பயணம் இவ்வெல்லையை இன்னும் தெளிவுபட வரையறுக்கிறது. லிமுரிகெ (அல்லது திமிரிகெ) அதாவது தமிழகம் லியுகெத்தீவு அல்லது வெள்ளைத் தீவுக்குச் சற்றுத் தெற்கிலிருந்து தொடங்குகிறது என்று அது கூறுகிறது.

இத்தீவு தற்கால படகரா நகரத்துக்கு வடகிழக்காக, கரையிலிருந்து கிட்டத்தட்ட எட்டுக்கல் தொலைவில் இருக்கிறது. நாட்டுமக்கள் அதை இன்னும் தூவக்கல் அல்லது வெள்ளைக்கல் என்றே வழங்குகின்றனர். ஆனால் ஐரோப்பியர்கள் அதைப் 'பலிப்பாறை' என்றுதான் வழங்குகிறார்கள். ஏனென்றால் போர்ச்சுகீசியர் கோழிக்கோட்டில் வந்திறங்கிய காலத்தில் கோட்டக்கல் கடற்படை வீரர்கள் ஒரு போர்ச்சுகீசியக் கப்பலைத் திடுமெனத் தாக்கிச், சிறைப்பட்டவர்கள் அத்தனை பேரையும் அந்தப் பாறையிலேயே பலியிட்டனராம்![4]

நாரா எது என்று என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. அது அகலப்புழை ஆற்றின் கரையிலுள்ள ஒரு

1. Pasage, Mastanour. Kourellour, Pounnata Where is beryl, Aloe, Karoura the royal seat of the Kerobothras.

2. Arembour Bideris, Pantipolis, Adarima Koreour, Inland town of the Aioi Morunda.

3. மக்கிரிண்டிலின் டாலமி பக்கம் 180 தொடர்ச்சி.

4. மலபார்க் கையேடு (Malabar Manual).



சிற்றூராய் இருந்ததாகத் தோற்றுகிறது. துண்டிஸ் என்பது எப்படியும் குவிலாண்டி நகரிலிருந்து ஏறத்தாழ ஐந்துகல் வடக்கே தற்காலப் பள்ளிக்கரை யிருக்குமிடத்தில் முன்பு அமைந்திருந்த தொண்டிதான் என்பதில் ஐயமில்லை. இன்றளவும் அராபியாவிலிருந்து வருகிற வாணிகக் கப்பல்கள் தொண்டியிலிருந்து மூன்றுகல் தெற்கிலுள்ள பழைய கொல்லம் அல்லது பந்தலாயினி கொல்லம்.[1]

1. போர்ச்சுகீசிய ஆசிரியர்களின் பந்தராணி (Pandarani), திருமடத்துறவி ஒடோரிக்கின் (Friar Odoric) பிளாண்ட்ரினா (Flandrina) ரோலண்ட்ஸனின் 'தகஃவத் உல் முஜஹிதீன்' குறிக்கும் பண்ட்ரீயா (Fandreeah of Roulandson's Tahatat-ul myahidin), இபன் பதூதாவின் பண்டாரினா Fandarina of Ibn Batuta) ஆகியவை இதுவே—மலபார்க் கையேடு ஏடு I பக். 72.

யூல் கூறுவதாவது: தனூரே துண்டிஸாய் இருந்திருக்கக் கூடும். அது ஒரு பழமைவாய்ந்த நகரம். ஒருமண்டலத்தின் தலைநகரம். 16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அதற்கு வாணிகத் தொடர்புகளும் கப்பல் தொடர்புகளும் மிகுதியாய் இருந்தன. ஆயினும் ஒருவேளை இன்னும் சற்று வடக்கேயுள்ள கடலுண்டி அல்லது கடல்துண்டியும் இவ்வகையில் பொருத்தமுடையதாய் இருக்கக்கூடும். அது பெய்ப்பூருக்குத் தெற்கே மூன்று நான்கு கல் தொலைவிலுள்ள கடல் காவின் கரையில் கடலருகே உள்ள மேடான ஒருநிலமாகும். அது இப்போது ஒரு துறையல்ல. ஆனால் முன்காலங்களில் அது ஒரு துறையாய் இருந்திருக்க வேண்டுமென்றும், அச்சமயம் அது காயலுடன் தொடர்புடையதாயிருந்திருக்கக் கூடுமென்றும் அவ்விடத்துள்ள மக்கள் கருதுகிறார்கள்.''

டாக்டர் பர்னலால் இணைத்துதவப்பட்ட ஒரு குறிப்பில் அவர் பின்னும் கூறுவதாவது: கடல். துண்டி ஆகிய சொற்கள் இரண்டும் சேர்ந்து தமிழ் இலக்கண விதிகளின்படி சொல்லாக்க முறையில் 'கடலுண்டி' என்றாகும். ''மக்கிரிண்டிலின் டாலமி பக்: 50''

டாக்டர் பர்னலைப்போன்ற ஒரு பெரிய புலவருக்கு என் வணக்கம் எவ்வளவோ உரித்தாயினும், கடல், துண்டி இரண்டும் சேர்ந்து கடலுண்டியாவதற்குரிய எந்த விதியையும் எந்தத் தமிழ் இலக்கணத்திலும் என்னால் காணமுடியவில்லை என்று நான் ஒத்துக் கொண்டாக வேண்டும்.

துண்டிஸ் என்பது பள்ளிக்கரையருகிலுள்ள தொண்டியே என்ற என் கருத்துக்குரிய தடை ஒன்றே ஒன்றுதான். அது முசிரிஸ் அல்லது

என்ற சிற்றூருக்கு எப்போதும் ஒழுங்காக வந்து செல்லுகின்றன.

துண்டிஸுக்கும் முஸிரிஸுக்கும் இடையே டாலமி கடற்கரையில் இரண்டு நகரங்களையும் உள்நாட்டில் மூன்று நகரங்களையும் குறிப்பிடுகிறார். கடற்கரை நகரங்கள் பிரமகரா, கலைக்காரியாஸ் என்பன. உள்நாட்டு நகரங்கள் நரூல்லா, கூபா, பாலூரா என்பன. பிரமகரா என்பதைப் பிரமகுளமகாவே கொள்ளலாம். கலைக்கரியாஸ் பெரும்பாலும் சாலகூரியாய் இருத்தல் சாலும். பாலூரா பாலையூர் என்பதில் ஐயமில்லை. அது சௌகாட் அருகில் இன்னும் மக்கள் திரள் உடைய இடமகன்ற அம்சமாகவே உள்ளது. முசிரிஸ்[1] தமிழ் முசிறியே என்று தயக்கமின்றிக் கூறலாம்.

தமிழ்க் கவிஞர் கூற்றுப்படி, முசிறி பெரியாற்றின் கடல் முகத்தருகே அமைந்திருந்தது. யவன வணிகர்கள் அங்கே அடிக்கடி வந்தனர். ஸியூடோஸ்டமாஸ் என்ற கிரேக்கப்பெயர் 'பொய்முகம்' என்ற பொருள் உடையது. கொடுங்கோளூருக்கு இப்பாலுள்ள பெரியாற்றின் கடல்

கொடுங்கோளூரிலிருந்து 800 ஸ்டாடியா தொலைவில் உள்ளது. செங்கடற் பயணத்தில் குறிப்பிடப்பட்டது போல 500 ஸ்டாடியாவிலில்லை. ஆனால் கப்பல் வேகத்தைஒழுங்காகப் பதிவு செய்வதற்குரிய இயந்திரக் கருவிகளில்லாத அந்த முற்பட்ட காலங்களில், கடற்பயண வேக மூலம் தொலையளவுகளை மதிப்பிடுவதென்பது அவ்வளவு திட்பமுடையதாய் இருந்திருக்கக் கூடுமென்று எதிப்பார்க்க முடியாது.

1. முசிறி என்பது முயிரிக்கோட்டு முயிரியே. இதுபற்றி யூல் கூறுவதாவது: மலபார்க் கல்வெட்டுக்களில மிகப் பழமையானவற்றிலிருந்து அது கிராங்கனூர் என்ற கொடுங்கோளூர் அரசர் தலைநகரமாய் இருந்ததென்று தோற்றுகிறது. தற்போது தடமற்றுப் போயிருக்கும் அந்நகரம் இதுவே என்று கண்டிப்பாய் ஒத்துக் கொள்ளலாம். மலபாரின் மரபுரைகள் யாவுமே ஒருமிக்க இந்தக் கிராங்கனூரையே மலபாரின் புகழ்மிக்க மிகப்பழமை வாய்ந்த துறைமுகம் என்று கூறுகின்றன. கிறிஸ்தவர் மரபிலும் அதுவே திருமாணவர் தூயதிரு தாம்ஸ் வந்திறங்கிய இடம் ஆகும்—மக்கிரிண்டிலின் டாலமி, பக். 51.



முகத்துக்குத் தமிழிலும் மலையாளத்திலும் இன்னும் 'அலிமுகம்' என்ற பெயர் வழங்குகிறது. கிரேக்கர் வழங்கிய பெயர் இதற்குச் சரியான மொழிப்பெயர்ப்பாய் அமைகிறது. இப்பெயருக்கு ஒரு காரணம் உண்டு பருவமழைக் காலத்தில் ஆறு அடிக்கடி கடலுக்குச் செல்லப் புதுப் பாதை வகுத்துக்கொண்டிருந்தது. கடலிலிருந்து ஆற்றைப் பிரித்து வந்த தாழ்ந்த மணல்கரை அப்போது நீர் பெருகிப் புதுக்கடல் முகமாயிற்று. 'பொய்முகம்' என்ற பெயரின் காரணம் இதுவே.

ஆற்றின் சரியான பெயர் பெரியாறு அல்லது பொருநை என்பது. இந்த ஆற்றுக்கு 500 'ஸ்டேடியா' அதாவது 58 கல் தெற்கே, பரிஸ் என்ற இன்னொரு ஆற்றை டாலமி குறிப்பிடுகிறார். பண்டை இந்தியா பற்றிய டாலமியின் விரிவுரையை ஆராய்ந்த புலவர்கள் எவராலும், பரிஸ் ஆறு எது என்பது பற்றியோ, முஸிரிஸுக்கும் குமரிமுனைக்கும் இடையே அவர் குறிப்பிட்டுள்ள நகர்கள் எவை என்பது பற்றியோ தெளிவான முடிவு இல்லாதிருந்து வந்துள்ளது. எனக்கும் இதே சிக்கல் இருந்து வந்தது. ஆனால் ஒருநாள் ஆலப்புழையிலிருந்து படகு வழியாகக் கோட்டயம் சென்றுகொண்டிருந்தேன். நான் இறங்கவேண்டிய இடம் வைக்கரை என்று படகோட்டி தெரிவித்தான். இது உடனே என் மனத்தில் டாலமியின் பக்கரையை நினைவுக்குக் கொண்டுவந்தது. இது என்னை மீண்டும் ஆரய்ச்சியில் தூண்டிற்று.

மேலும் உசாவியதில், கோட்டயத்தில் படகு இறங்கும் துறையின் பெயர் வைக்கரை என்றும், அதன் அருகே திவான் பேஷ்கார் (உதவி முதன்மந்திரி) மாளிகை இருந்த மேட்டின்பெயர் வைக்கரைக் குன்று (வைக்கரைக்குன்னு) என்றும் அறிந்து மகிழ்ந்தேன். அத்துடன் கோட்டயத்தின் வழியாக ஓடிய ஆற்றின் பெயர் பாலை அல்லது பாலி என்றும் கேள்விப்பட்டேன். பக்கரை அருகே யுள்ளதாக டாலமி கூறும் பரிஸ் ஆற்றுடன் இது இசைவாயமைந்தது. எனவே பக்கரை என்ற பண்டைத் துறைமுகம்

கோட்டயத்தருகிலுள்ள வைக்கரை என்ற இன்றைய சிற்றூரே என்று முடிவாகக் கண்டுணர்ந்தேன்.[1]

முசிறிக்கும் பக்கரைக்கும் இடையே கடற்கரையிலிருந்தவை என்று டாலமி குறிப்பிட்ட நகரங்கள் பொடொ பெரூரா, செம்னெ, கொரியூரா ஆசியவை. இவை உண்மையில் காயல்களின் கீழ்க்கரையிலிருக்கும் உதியம் பேரூர், செம்பை, கொத்தோரா ஆகிய நகரங்களுடன் இசைவது காண நான் வியப்படைந்தேன்.

புத்தம் புதிய ஓர் உண்மையை இவை எனக்கு எடுத்துரைத்தன. டாலமி காலத்தில் கடற்கரையின் போக்கு இன்றைய காயலின் கீழ்வரையாகவே இருந்திருக்கவேண்டும் என்று நான் கருதினேன். எனவே இன்று சங்கனாசேரியிலிருந்து பள்ளிப்புறம்வரை நீண்டுகிடக்கும் காயலோ, அதன் மேல்கரையாக அமைந்துகிடக்கிற நீண்ட கழிநிலமோ அந்நாளில் இருந்ததில்லை என்று கண்டேன். தற்போது வளம் பொங்கும் துறைமுகங்களாயுள்ள கொச்சி, ஆலப்புழை ஆகியவை இக்கழி நிலத்திலேயே அமைந்திருப்பதனால், இவையும் அன்று தோன்றியிருக்கவில்லை.

நெல்குண்டா என்னுமிடத்திலிருந்து மிளகு படகுகளில் பக்கரைக்கு ஏற்றுமதி செய்யப்பட்டதாகக் கேள்விப்படுகிறோம். இந்த நெல்குண்டா நிற்குன்றமே என்று தோன்றுகிறது. இப்பெயரின் பல்வேறுபட்ட திரிபுள்ள வடிவங்களுடன் அதுபல ஆசிரியர்களால் குறிக்கப்படுகின்றது. பிளினி அதை நியாகினிட்[2] என்று கொள்கிறார். செங்கடற் பயணத்தில் அது நெல்குண்டா என்றும், டாலமியால் மெல்குண்டா என்றும் கொள்ளப்படுகிறது. பியூட்டிங்கெரியன் பட்டயத்தில்[3] அது நின்கில்டா[4] என்றும் ராவென்னா[1] என்ற நிலநூலாசிரியர் வழக்காற்றில் நில்கின்னா[2] என்றும் வழங்கப்பெறுகிறது. இந்நகரின் இட அமைப்பு கோட்டயத்திலிருந்து ஆறு கல் கிழக்காகவும், இன்றுவரை மிகச்சிறந்த மிளகு விளையும் மீனச்சிலின் அருகாமையாகவும் அமைந்திருந்தது.

பக்கரைக்குத் தெற்கேயுள்ளதாக டாலமி அயாய் நாட்டைக் குறிப்பிடுகிறார். இதுவே புலவர்களை ஆதரித்த பேர்போன வள்ளலாகிய பொதிகை மலை ஆயின்குடியினர் ஆண்ட பகுதி ஆகும்.[3] இதிலுள்ள நகர்களாகிய எலங்கோன், கோட்டியாரா, பம்மலா ஆகியவற்றைத் தற்கால விளவங்கோடு, கோட்டாறு, பொன்னணை ஆகியவற்றில் காணலாம். ஆகவே பக்கரைக்குத் தெற்கிலும் கடற்கரை டாலமி காலத்துக்குப்பின் ஆறு அல்லது ஏழு கல்தொலை பின்னிடைந்திருக்கிறது என்று காணலாம். டாலமி குறிப்பிட்ட உள்நாட்டு நகர்களில் கீழ்வருபவற்றைக் கீழ்க்கண்டபடி அடையாளங் காணலாம் என்று நான் கருதுகிறேன்.

| | |
|---|---|
| புன்னாடா[4] | மீனச்சிலின் அருகிலுள்ள பூஞ்சற்று. இங்கே நாடு துறந்த மன்னனொருவனின் மரபினர் வாழ்வதாகக் கூறப்படுகிறது. |
| ஆலோ[5] | மருந்து நீருற்றுக்காக நாடப்படும் பேர்போன இடமாகிய அலுவாய். |
| கரூரா, கெரோபொத்ராஸின் மன்னுரிமைத் தலைநகர் | கொச்சிக்கு இரண்டு கல் வடக்கு கிழக்காக 28 கல் தொலைவிலுள்ள திருக்கரூரில் அழிபாடாகக் கிடக்கும் கருவை அல்லது வஞ்சி.[6] |

1. பக்கரை திருவாங்கூரில் கானெட்டிக்கும் கொல்லத்துக்கும் இடையே இருக்கவேண்டுமென்று யூல் ஊகித்துள்ளார்.—மக்கிரிண்டிலின் டாலமி, பக்கம். 134.

2. Neacynid. 3. Peutingerian Table. 4. Nincylda.

1. Ravenna. 2. Nilcinna.

3. புறம், பாட்டுக்கள் 127-136.

4. Pounnata. 5. Aloe.

6. கால்டுவெல் கூறுவதாவது : கரூரா (Karoura) தமிழ் மரபுரைகளில் சேர அல்லது கேரள அரசரின் பண்டைத்

| | |
|---|---|
| விடேரிஸ்[1] | பிதாரா[2] |
| அடரிமா[3] | அதரிமலை[4] |

மிளகு ஏற்றுமதிக்குரிய இடமாகக் குறிக்கப்பட்ட பகுதியான கொட்டனாரா[5] என்பது நான் மேலே வரையறுத்துக் காட்டியுள்ள குட்டநாடு என்பதில் ஐயமில்லை.

குமரிமுனை (தற்கால கன்னியாகுமரி) ஒரு புண்ணிய தீர்த்தமாக இருந்தது. பார்ப்பன யாத்திரிகர் குமரியில் கடலாடித் தங்கள் பழிகளைத் தீர்க்கும்படி வாரணாசி (காசி) நகரிலிருந்து இங்கே வந்தார்கள்.[6] அது போலவே தென் இந்தியாவிலுள்ள பார்ப்பனர்கள் வேதமுனிவரான அகத்தியர் தங்கிய இடமான பொதிய மலையைச் சுற்றி வலம்

---

தலைநகரமாகக் குறிக்கப்பட்டுள்ளது. பொதுவாக அது முன்பு சேர நாட்டுடன் சேர்ந்திருந்த கோயமுத்தூர் மாவட்டத்திலுள்ள கரூர் என்ற முக்கியமான நகரமாகக் கருதப்படுகிறது. அது காவிரியின் கிளை ஆறுகளுள் ஒன்றான அமராவதியின் இடது கரையில் தற்போது அழிந்துபட்டுக் கிடக்கும் கோட்டை அருகே உள்ளது (முன்னுரை பக்கம். 96-97) இக்கருத்துக் 'கருரா', 'கரூர்' என்ற பெயர் ஒற்றுமை ஒன்றையே அடிப்படையாகக் கொண்டு எழுந்தது. நான் இங்கே மேற்கோளாகக் கொண்டுள்ள பண்டைத் தமிழ் நூல்களை டாக்டர் கால்டுவெல் அறிந்திருக்கக் கூடுமானால், இப்பிழைபட்ட கருத்தை மேற் கொண்டிருக்க மாட்டார்.

1. Videris. 2. Pithara.

3. Adarima. 4. Atharimalai.

5. கோழிக்கோட்டுப் பகுதியில் மிளகுக்குப் பேர்போன மாவட்டமாகிய கடத்த நாடு (Kadathanadu) என்பதே கொட்டனாரா என்று டாக்டர் புச்சானன் (Dr. Buchanan) கருதினார். டாக்டர் பர்னல் (Dr Burnel) தலைச்சேரி அடுத்துள்ள கொளத்த நாடே அது என்று எண்ணினார். அதுவே மிளகு வளமுள்ள பகுதியென்றும் அவர் கூறுகிறார் (மக்கிரிண்டிலின் செங்கடற் பயணம் பக்கம். 132). ஆனால் கொட்டனாரா என்ற பெயரைத் தமிழ் நாட்டின் பண்டைப் பிரிவுகளின் பெயர்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், கொட்டனாராவும் குட்டநாடும் ஒன்றே என்பது தெளிவாக விளங்கும்.

6. மணிமேகலை, 13 :3-7.



வந்து குமரியில் கடலாடியபின் வடக்கு நோக்கிக் கங்கைக்குச்சென்று அதன் திருவாய்ந்த நீரில் ஆடினர்.[1] கங்கையிலிருந்து குமரிக்கும் தமிழகத்திலிருந்து காசிக்கும் இவ்வாறு சென்ற யாத்திரிகர்கள் வட ஆரியருக்கும் தென் ஆரியருக்குமிடையே தொடர்ந்து இணைப்பு உண்டுபண்ணி வந்தார்கள்.

நாம் குறிப்பிடும் காலத்திய மக்கள் தம் காலத்துக்கு முன் தமிழகத்தின் நிலப்பரப்பு அன்றிருந்த எல்லைகடந்து தெற்கில் நெடுந்தொலை பரந்திருந்தது என்பதையும், குமரி முனைக்கு அப்பாலிருந்த அந்நிலத்திலே குமரிக்கோடு என்ற மலையையும் பஃறுளி என்ற ஆற்றினால் வளமூட்டப்பட்ட ஓர் அகன்ற பேரெல்லையையும் அது உள்ளடக்கியிருந்ததென்பதையும் நினைவில் கொண்டிருந்தனர். கடலின் ஒரு திடீரெழுச்சியினால் குமரிக்கோடு என்ற மலையும், பஃறுளியாறு ஓடிய பரப்பும் மறைந்துவிட்டன.[2]

இதுபோன்ற கடலெழுச்சிகளும் அதன் பயனான நில அமிழ்வுகளும் இலங்கையின் தென்மேற்குக் கரையில் கி.மு. 2ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்தன என்று அத்தீவின் புத்த ஆண்டுக் கணிப்பேடுகள் கூறுகின்றன.[3]

---

1. சிலப்பதிகாரம், 15 : 14-15, 27 : 68-69, 110.

2. கலித்தொகை பாட்டு 104: அடிகள் 1—4; சிலப்பதிகாரம், 20, அடிகள் 17—22. "பஃறுளியாறும் பல குன்றுகள் சூழ்ந்த (=? பன்மலை யடுக்கத்துக்) குமரிக்கோடும் சினங்கெழு கடலுள் ஆழ்ந்தன." உரையாசிரியர் அடியார்க்குநல்லார் இதனுடன் பஃறுளி ஆற்றுக்கும் குமரியாற்றுக்கும் இடையே 700 காவதப் பரப்புடைய நிலம் இருந்ததென்றும், அப்பரப்பு ஏழு தெங்க நாடுகள், ஏழு மதுரை நாடுகள். ஏழு முன்பாலை நாடுகள், ஏழு பின்பாலை நாடுகள், ஏழு குன்றநாடுகள், ஏழு குணகாரை நாடுகள், ஏழு குறும்பொறை நாடுகள் ஆகிய 49 நாடுகளாகப் பிரிக்கப் பட்டிருந்ததென்றும் குறிக்கிறார். ஆனால், இவ் விவரங்களுக்குரிய மேற்கோள் ஆதாரம் எதனையும் அவர் காட்டவில்லை.

3. கல்யாணியில் ஆண்ட அரசன் திஸ்ஸா ஆட்சியில் மாகாணம் கடற்பெருக்கில் அமிழ்ந்துவிட்டது. இது கிட்டத்தட்ட கி. மு. 200இல் ஆகும். (மகாவம்சம் : எல். ஸி. விஜயஸிம்ஹ முதலியார்

கீழ்க்கரையில் டாலமி கீழ்வரும் மாகாணங்கள், ஆறுகள், நகரங்கள் ஆகியவற்றைப்பற்றிய விவரம் தருகிறார் :

கரியாயின் நாடு[1] : இதன்பின் கொல்கியக்குடாவில்[2] முத்துக்குளிக்கும் தொழில் நடைபெறும் பகுதியில், சோசிகூரை வாணிகக்களமான கொல்காய் சோலன் ஆற்றுமுகம்[3] ஆகியவை. கரியாயின் உள்நாட்டு நகர்கள் : மென்டெலா, சேலூர், திட்டோனா மண்டித்தூர்[4] பாண்டியன் நாடு. ஓர்காலிக் குடாக்கடலருகே, கல்லிகிக்கோன் என்றழைக்கப்படும் கோடி முனை; அர்கைரான் என்ற நகரம். வேலூர் என்ற ஒரு வாணிகக்களம்.[5] பாண்டியனையின்

பதிப்பு, இயல் 22 பக்கம் 84). இராஜாவளியில் இதே செய்தி இவ்வாறு பதிவு செய்யப்பட்டுள்ளது. ''அந்நாட்களில் கடல் கல்யாணியிலிருந்து இருபத்தொருகல் தொலைவிலிருந்தது. (கல்யாணியையாண்ட அரசனால் வதைக்காளாக்கப்பட்ட) சமய குருவின் வெம்பழியால் இலங்கையின் காவல்தெய்வங்கள் சினங்கொண்டு கடலெழுச்சியால் நிலம் அமிழச்செய்தன. திஸ்ஸராஜனுடைய இந்த நாட்களில் 10,0000 பேரூர்களும், 970 மீன்பரவர் சேரிகளும், முத்துக்குளிப்பவர்கள் வாழ்ந்த 400 சிற்றூர்களும் சேர்ந்து கல்யாணிப் பகுதியில் 12இல் 11 பாகம் கடலால் விழுங்கப்பட்டது. (இராஜாவளி: ஏடு II பக்கம் 180, 190). ஸர். ஜே. ஈ. என்னெட் இலங்கையின் முன்னைய பெரும்பரப்பு, அதன் பெரும்பகுதியின் கடலமிழ்வு ஆகிய மரபுரைகளை நம்பகமாகக் கொள்ளவில்லை. அவர் இதுபற்றி மேலும் குறிப்பிடுவதாவது : இந்நிகழ்ச்சி ஏற்பட்டதென்பதை அறுதியிட்டுக் கூறுவதற்குரிய பிற சான்றுகள் வரலாற்றுக்குள்ளாகவேனும் கிட்டியதாகத் தெரியவில்லை. இந்துக்கள், அராபியர்கள், பாரசீகர்கள் ஆகியவர்களின் மிகப் பழமைவாய்ந்த ஏடுகளில் இதுபற்றிய எழுத்து மூலப் பதிவுகள் எதுவும் இல்லை.'' டெனன்ட்: இலங்கை: ஏடு I பக்கம் 6, 7: இதுபோன்ற நிகழ்ச்சி இந்தியாவின் தென்கோடியில் நிகழ்ந்ததென்பது அதற்குரிய வலிமைவாய்ந்த சான்றாக மேற்கொள்ளப்படலாம்.

1. The Kareoi. 2. Kolkhic Gulf.

3. Sosikouri, Kolkhoi an emporium, mouth of the river Solen.

4. Inland cities of the Koreoi: Mendela, Selour, Tittona, Mantittour.

5. In the Orgalic Gulf, Coty, Called also Kalligikon; Argeiron a town Salur, a mart.



உள்நாட்டு நகர்கள்: தைனூர், பெரிங்கரை, கொரிந்தியூர், தங்கலா அல்லது தாகா, பாண்டியன் தலைநகர் மதுரை, ஆக்கூர்[1] பத்தாய் நாடு : பத்தாய் தலைநகர் நிகமா, தெல்கைர், கொரூலா நகர்.[2] பத்தாய் நாட்டின் உள்நாட்டு நகர்கள் : கலிந்தோயா, பத்தா தலாரா.[3] தனிப்படப் பரலியா என்றழைக்கப்படும் பகுதியில் தொரிங்காய் நாடு ; கபேராஸ் ஆற்றுமுகம், வாணிகக்களமான கபேரிஸ் ; வாணிகக்களமான சபுராஸ்.[4] சோரட்டாயில் பரலியாவுக்குரிய உள்நாட்டு நகர்கள் : கலியூர், தென்னகோரா. எய்க்கூர், சோரநாகாஸின் தலைநகரான ஓர்த்தூரா, பெரே, ஆபூர், கர்மரா, மாகூர்.[5]

அருவர்னோரி (அர்வர்னோய்) : வாணிகக்களமான பொதுகெ, வாணிகக்களமான மேலாங்கி, துனா ஆற்றுமுகப்பு, கொத்திஸ், வாணிக இணைப்பான மனர்ஃவா அல்லது மனலியார்ஃவா. அர்வர்னையின் உள்நாட்டு நகரங்களாவன : கெரௌகெ, ஃவ்ரூரியன், காரிகெ, போலூர், பிகெந்தகா, இயாத்தூர், ஸ்கோபொலூரா, இகர்த்தா, பஸர்நாகாஸின் தலைநகரான மாலங்கா, கந்திப்பட்னம்.[6]

1. Inland cities of the Pandionai: Tainour, Peringkarei, Korindiour, Tangala or Taga, Modoura the royal city of Pandian Akour.

2. Batoi, Nikama, the metropolis, Thelkheir, Koroula a town.

3. Kalindoia, Bata, Talara.

4. In Paralia specially so called: the country of the Toringai: mouth of river Khaberos, Khaberis an emporium Salour as an emporium.

5. Inland cities of the Paralia of the Soratai: Kaliour. Tennagora, Eikour, Orthoura the royal city of Sornagas, Bere. Abour, Karmara, Magour.

6. The Arovarnori (Arvarnoi: Poduke an emporium mouth of R. Tyna, Kottis, Manarapha (or Manaliarpha) a mart; inland cities: Kerauge, Phrourion, Karige, Polcour, Pikendaka, Iatour, Skopoloura, Ikarta, Malanga the royal city of Basaranagos, Kandipatne.

அர்வார்னாய் நிலப்பகுதிக்கு வடக்கே, மைசொலாஸ் என்ற கிருஷ்ணா ஆற்றுத்தீரத்திலுள்ள மைசோலியா[1] இருப்பதாக டாலமி குறிப்பிடுகிறார். குமரிமுனைக்கும் தர்ப்ரோபேன் அல்லது இலங்கைக்குமிடையே அவர் மனிகெரிஸ் என்ற தீவும் ஆர்கலிகக் குடாவில் கோரி[2] என்ற மற்றொரு தீவும் இருப்பதாகக் குறித்துள்ளார்.[3]

குமரிமுனையிலிருந்து செல்லும் கீழ் கடற்கரையில் மீன் பிடிப்பதால் வாழ்க்கை நடத்திய பரதவர் என்ற இனத்தவர் வாழ்ந்தார்கள். டாலமி குறிப்பிடும் கரியாய்[4] இவர்களே. இக்குறிப்பின் சரியான தமிழ் வடிவம் 'கரையர்' அதாவது கரையிலுள்ளவர் என்பதே. தமிழரிடையே பரதவர்க்குப் பொதுமுறையில் இன்றும் விளங்கும் பெயர் இதுவே. பரதவர் நாட்டிலுள்ள முக்கிய நகரமான கொற்கை முத்துக்குளிப்புத் தொழிலுக்குரிய ஒரு நடுவிடம். இந்நகரின் மக்களின் பெரும்பாலோர் முத்துக்குளிப்பவராகவும் சங்கறுப்பவராகவுமே இருந்தனர்.[5] முத்துக்குளித்தல் பாண்டிய நாட்டின் அரசியல் வருவாயில் ஒரு பெரும்பகுதியாயிருந்த காரணத்தினாலேயே பட்டத்து இளவரசர் அங்கேயே தங்கியிருப்பது வழக்கமாயிருந்தது.[6]

முன்பு கடற்கரையிலிருந்த இந்நகரம் இப்போது ஐந்துகல் தொலை உள்நாட்டில் உள்ளது. கடல் கொற்கையிலிருந்து பின்வாங்கிய பின் கடற்கரையில் காயல் என்ற ஒரு புதியவாணிகக்களம் உண்டாயிற்று. இதுவே 12 ஆம் நூற்றாண்டில் மார்க்கோ போலோ வருகை தந்த சமயம் வளமான ஒரு கடல் துறைமுகமாயிருந்தது. சில

1. Maisolia, watered by the river Maisolos or the Krishna.
2. Island Manigeris; Island of Kory in the Argalic Gulf.
3. மக்கிரிண்டிலின் டாலமி பக்கம் 67 தொடர்ச்சி.
4. Kareoi.
5. மதுரைக்காஞ்சி, அடிகள் 134, 144.
6. சிலப்பதிகாரம், 27 : 127.



நாட்களுக்குள் காயலும் கடலிலிருந்து மிகுதொலைவாகி விட்டது. அதுவும் கைவிடப்பட்டது.

சோசிகூரெ என்ற துறைமுகப்பட்டினம் எதுவென்று என்றால் அடையாளம் காணக்கூடவில்லை. சோலன் ஆறு பெரும்பாலும் தாம்பிரவருணியாகவே இருக்கவேண்டும் என்று தெளியலாம். இது தமிழில் செம்பில் என்று வழங்கப்பட்டது.

டாலமியால் குறிக்கப்பட்ட உள்நாட்டு நகர்களுக்குள் சேலூர் என்பது செயலூரே என்னலாம்.[1] இது தமிழ் ஏடுகளில் அடிக்கடி குறிக்கப்படுகிறது. இலங்கைக்கும் பாண்டிநாட்டுக் கடற்கரைக்கும் இடையேயுள்ள கடல் ஆர்கலி என்று அழைக்கப்பட்டது. அதனை டாலமி ஆர்கலிக் குடா என்று குறிப்பிடுகிறார். இக்கரையின் முக்கிய நகரம் தொலைப்புகழ் பெற்ற சாலியூர். இது இடர் நிறைந்த ஆழ்கடல் கடந்துவரும் கப்பல்கள் பல வந்து குழுமி விலையேறிய சரக்குகளை இறக்குமிடம் ஆகும். அச்சமயங்களில் அக் கப்பல்களின் பாய்மர உச்சியில் கொடிகள் பறக்கும். சரக்குகள் வந்துள்ளதை வணிகருக்குத் தெரிவிக்கும் முறையில் கரையில் முரசங்கள் முழங்கும்.[2]

உள்நாட்டில் உள்ளதாக டாலமி குறிப்பிடும் நகர்களில் கீழ்வருவனவற்றை உறுதியாக அடையாளமறியலாம்.

> தைனூர்—தேனூர் (மதுரை மாவட்டத்தில் திருச்சுழி வட்டத்தில் உள்ளது.) இது தமிழ்ப்பாடல்களில் தேர்வண்கோமான்[3] என்ற தலைவன் தலைமையிடமாகக் குறிக்கப்படுகிறது.

1 அகம், 90.
2 மதுரைக் காஞ்சி, அடிகள் 75—78.
3 தொல்காப்பியம், நச்சினார்க்கினியர் உரை, பொருளதிகாரம், சூத். 150 மேற்கோளாகக் காட்டப்பட்ட பழைய பாடல்.

தங்கலா அல்லது தாகா—திருத்தங்கல் (திருநெல்வேலி மாவட்டத்தில் சாத்தூர்த் தாலுக்காவில்[1] உள்ளது). தங்கல், வியலூர் ஆகிய நகரங்களின் வரி வருவாய் மதுரையிலுள்ள அம்மன் கோயிலுக்குமானியமாக்கப்பட்டிருந்தது என்று சிலப்பதிகார ஆசிரியர் குறிப்பிடுகிறார்.[2]

மோதூரா—பாண்டியன் தலைநகர். இது தற்கால மதுரையிலிருந்து தென்கிழக்காக ஆறுகல் தொலைவில் உள்ளது.

பாண்டிய நாட்டின் வடக்கே வேட்டுவர் அல்லது வேடர்நாடு இருந்தது.[3] இது பன்றிநாடு அதாவது பன்றிகள் நிறைந்த நாடு என்றும் குறிக்கப்பட்டது. இதன் தலைநகரம் நாகை அல்லது நாகப்பட்டினம். அக்காலத்திலுள்ள தமிழ்ப் பாடல்களிலிருந்து இந்நகரத்தைப்பற்றி எதுவும் தெரியவில்லை. இதிலிருந்து வேடருக்கும் மற்றத் தமிழ்மக்களுக்குமிடையே மிகுதி தொடர்பு இருந்ததில்லை என்றும் தோற்றுகிறது.

பன்றிநாட்டுக்கப்பால் புனல்நாடு அல்லது சோழநாடு கிடந்தது. காவிரியின் கடல்முகத்தைச் சூழ்ந்த பகுதியை உட்கொண்ட இப்பிரிவு காவிரியின் புதுவெள்ளத்தால் அடிக்கடி வெள்ளப்பெருக்குக்கு உட்பட்டதனாலேயே இப்பெயர் பெற்றது. நாம் குறிப்பிடும் காலத்தில் ஆற்றுக்குக் குறுக்கே எத்தகைய அணையும் கட்டப்படவில்லை. கொள்ளிடம் என்ற கிளையைப்பற்றியும் நாம்

1 முதனூலாசிரியர் எழுதும் காலத்தில் சாத்தூர் வட்டம் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்ததாயிருந்தது. தற்போது அது புதிதாக அமைக்கப்பட்ட இராமநாதபுரம் மாவட்டத்தைச் சார்ந்துள்ளது.

2 ஐங்குறு நூறு, பாட்டு 54, 57.

3 சிலப்பதிகாரம், 23 : 75, 118, 119: தங்கல் என்பது மதுரையிலிருந்து வடக்கு மேற்காக 32 கல் தொலைவில் வளமிக்க முக்கிய நகரமாக இன்று விளங்கும் திண்டுக்கல்லைக் குறிக்கும் என்று மக்கிரிண்டில் கூறுகிறார்: மக்கிரிண்டிலின் டாலமி, பக்கம் 184.



கேள்விப்பட முடியவில்லை. உண்மையில் பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர் திருச்சிராப்பள்ளி அருகில் ஓர் அணை கட்டப்பட்ட பின்பே இது புதிதாகக் கிளைத்ததாகத் தோற்றுகிறது.

சோழர் தலைநகரான உறையூர் காவிரியின் தென் கரையிலிருந்தது. இவ்விடம் இன்னும் உறையூர் என்றே அழைக்கப்படுகிறது. ஆனால், அது தற்காலத் திருச்சிராப்பள்ளி நகரின் ஒரு பேட்டையாகியுள்ளது. அது அன்று ஒரு வலிமைவாய்ந்த மதிலாலும் அகழியாலும் சூழப்பட்டிருந்தது[1] அகழியைச் சூழ்ந்து முள்மரக்காடு ஒன்றும் இருந்தது. இங்கே நிகண்டரின் ஒரு பழைய பள்ளி இடம்பெற்றிருந்தது. அதிலுள்ள அருகர் உருவம் முக்குடையின்கீழ் அசோக மரநீழலில் அமர்ந்திருந்தது.

உறையூரைவிட முக்கியத்துவம் வாய்ந்த ஒரு நகரம் காவிரிப்பூம்பட்டினம். அது காவிரியாற்றின் கடல்முகத்திலிருந்தது. அது ஒரு பெரிய வாணிகக்களம். சிலப்பதிகாரம், பட்டினப்பாலை ஆகிய பாடல்களில் இந்நகரின் முழு வருணனைகள் நமக்குக் கிட்டுகின்றன.[2] இது புகார் என்றும் காகந்தி என்றும் பெயர்பெற்றிருந்தது. ககந்தன் என்ற ஒரு தலைவன் ஆண்டதனாலேயே அது காகந்தி என்று பெயர்பெற்றதாகத் தோற்றுகிறது. கி. மு. 1 அல்லது 2ஆம் நூற்றாண்டில் நிறுவப்பட்ட பரோத் கல்வெட்டுக்களில்[3] அப்பெயர் குறிக்கப்பட்டுள்ளது. ஒரு கல்வெட்டுக் காகண்டியிலுள்ள சொர்ணம் என்ற பெண் துறவியின் மானியத்தைப் பதிவுசெய்கிறது.[4]

1. சிலப்பதிகாரம், 10 : 242, 11 : அடிகள் 1—4, அகம், 121.

2. சிலப்பதிகாரம், 5: 7—63.

3. Bharaut.

4. கரதரகச்சாவைக் சேர்ந்த (Kharataragacha) பட்டாவளியிலும் (Pattavali) அது குறிக்கப்பட்டுள்ளது. இந்தியப் பழங் குறிப்பேடு (Indian Antiquary) ஏடு XI, பக்கம் 247, ஏடு XXI பக்கம் 235.

காவிரி ஆறு அன்று அகலமும் ஆழமும் மிக்கதாய் இருந்தது. அதனுள் பளுவேறிய சரக்குகளைச் சுமந்த கப்பல்கள் பாய்மடக்காமலே தொகுதி தொகுதியாகவந்து புகுந்தன. காவிரிப்பூம்பட்டினம் இருபாகங்களாகப் பிரிவுற்றிருந்தது. ஒன்று மருவூர்ப்பாக்கம் என்பது. இது கடற்கரை யடுத்திருந்தது. மற்றது பட்டினப்பாக்கம் என்பது. இது அதன் மேல்கரையி லிருந்தது. இந்த இரு பகுதிகளுக்குமிடையே ஒரு திறந்த பெருவெளி இருந்தது. இதில் ஒழுங்கான இடையீட்டு மரங்கள் வைக்கப்பட்டிருந்தன. இவ்விடத்திலேயே நகரின் பெருஞ் சந்தை நடைபெற்றது,

பட்டினப்பாக்கத்தின் முக்கிய தெருக்கள் அரசவீதி தேர்வீதி, கடைத்தெரு ஆகியவை. வணிகர், பார்ப்பனர், வேளாளர், மருத்துவர். கணியர் ஆகியோர் தனித்தனி தெருவில் வாழ்ந்தனர். அரண்மனையைச் சுற்றிலும் தேர்ப்பாகர், குதிரைப்பாகர், ஆனைப்பாகர், மன்னன் மெய்க்காவல் படைவீரர் ஆகியோர் இல்லங்கள் இருந்தன. பாணர், விறலியர், மாகதர், நடிகர், பாடகர், கோமாளிகள், சங்கறுப்பவர், பூமாலை தொடுப்பதில் வல்லுநர், முத்துக் கோப்பவர், கழியும் ஒவ்வொரு நாழிகையையும் விநாடியையும் கணித்தறிந்து கூறும் காலக்கணிகள் ஆகியோரும் அரண்மனைப் பணிமக்களும் பட்டினப்பாக்கத்தில் வாழ்ந்தார்கள்.

கடற்கரையருகே மருவூர்ப் பாக்கத்தில் விற்பனை மேடைகள், கிடங்குகள்; மானின் கண்போன்றபலகணிகளையுடைய பண்டசாலைகள் ஆகியவை இருந்தன. கப்பலிலிருந்து இறக்கிய சரக்குகள் அந்தப் பண்டசாலைகளில் சேமிக்கப்பட்டிருந்தன,* இங்கே சரக்குகள் மீதெல்லாம் (சோழர் சின்னமாகிய) புலிப்பொறி பதிக்கப்பட்டு, சுங்க வரிகள் செலுத்தப்பட்டபின் வணிகரின் கிடங்குகளுக்கு அனுப்பப்பட்டன.[1] இதனருகே யவன வணிகரின் குடியிருப்புக்கள் இருந்தன. இங்கே பல கவர்ச்சிகரமான

* சிலப்பதிகாரம்.
1 பட்டினப்பாலை, அடிகள் 134-136.




[பக்கம்: 46

பொருள்கள் மக்கள் கண்ணில் படும்படியாக விலைக்கு வைக்கப்பட்டிருந்தன. மற்றும் இங்கேயே பலமொழிகள் பேசும் கடல்கடந்த நாடுகளிலிருந்து வந்த வெளிநாட்டு வணிகர்களுக்குரிய தங்கிடங்கள் இருந்தன. நறுமணச் சாந்து, நறுமணப்பொடி, மலர்கள், நறும்புகை ஆகியவை விற்பவர், பட்டிலும் பஞ்சிலும் கம்பளியிலும் தையல் வேலை செய்பவர்கள், சந்தனம், அகில், பவளம், முத்து, பொன், மணிக்கற்கள் ஆகியவற்றின் விற்பனையாளர்கள், கூலவணிகர், சலவையாளர், மீன் விற்பவர், உமணர், ஊன் வினைஞர், கருமார், பித்தளை வேலையாட்கள், தச்சர், கன்னார், ஓவியர், சிற்பிகள், தோல்வினைஞர், விளையாட்டுக் கருவிகள் செய்வோர் ஆகியோர் மருவூர்ப் பாக்கத்தில் தங்கியிருந்தார்கள்.[1]

காவிரிப் பட்டினத்தில் சோழ அரசன் அரண்மனை ஒரு பாரிய வனப்பமைந்த கட்டடமாயிருந்தது. "மகதத்திலிருந்து கைதேர்ந்த கலைத் தொழிலாளர்களும் மராடத்திலிருந்துவந்த கைவினைஞர்களும் அவந்தியிலிருந்து வந்த கொல்லர்களும் யவனத் தச்சர்களும் தமிழகத்திலுள்ள தலைசிறந்த வேலையாட்களும் சேர்ந்து அதனை அத்தனை வீறு மிக்கதாகவும் வனப்பு மிக்கதாகவும் ஆக்கியிருந்ததனால், பின் தலைமுறையினர் தெய்வத்தச்சனாகிய மயனே அதை இயற்றினான் என்று மரபுரையாகக் கூறினர்.

அரசிருக்கை மண்டபம் கண்ணைப் பறிக்கும் கவினையுடையதாயிருந்தது. அதன் சுவர்கள் பொன் தகடுகள் பதித்து மெருகிடப்பட்டிருந்தன. மேன்முகட்டைத் தாங்கிய தூண்களின் உள்ளீடு பவளத்தாலானதாகவும், மேற்கட்டு பல்வண்ண ஒளியுடைய மணிக்கற்கள் பதித்தாகவும் இருந்தன. மேல் தளம் நுணுக்க விரிவுடைய சிற்பவேலைகளும் வண்ண ஓவிய வேலைப்பாடுகளும் உடையதாயிருந்தது. மேன் முகட்டின் அருகெங்கும் ஒளி மணி முத்துக் கோவைகளின் தொங்கல்களால் புனையப்பட்டிருந்தன.[2]

1 சிலப்பதிகாரம்.     2 சிலப்பதிகாரம்.



அரசிருக்கை மண்டப மல்லாமல், வேறும் பலவகை வனப்புமிக்க கூறுகள் அவ்வரண்மனையில் இருந்தன. எடுத்துக்காட்டாகக் கீழ்வருவனவற்றைக் கூறலாம். வச்சிர நாட்டரசனால் அனுப்பப்பட்டிருந்த முத்துப்பந்தல், மகத அரசனால் புனைந்தியற்றி அனுப்பப்பட்ட கொலு மன்றம், அவந்தி அரசனால் பரிசாக அளிக்கப்பட்ட அணி மணி வாயில் முகப்பு ஆகியவை அவற்றுள் சில.[1]

அரண்மனையைச் சூழ்ந்த பூங்காவிலே பொறிகள் மூலம் நீர் இறைக்கும் கேணிகள், செய்குன்றுகள், செயற்கை அருவிகள், பூம்பந்தர்கள், அகன்ற ஏரி, குளங்கள், மீளாப்பொறி வழிகள், படிகக் கற்கள் பாவப்பெற்ற நிழல் தரும் சாலைப்பாதைகள் ஆகியவை அமைக்கப்பட்டிருந்தன.[2]

பூங்காவில் சிறு வேட்டை விலங்குகளாகிய குறுங் கால்களையுடைய காடைகளும், நீண்ட செவிகளையுடைய முயல்களும், துள்ளும் இளமான்மறிகளும், மலையாடுகளும் சேகரித்துப் பேணப்பட்டிருந்தன.[3]

நகரில் கவின்மிக்க கோயில்கள் பல இருந்தன. தெய்விகத் தருவாக வணங்கப்படும் கற்பகம், தெய்வயானையாகிய அயிராவதம், வானவர்வேந்தன் இந்திரனுக்குரிய இடிப்படையான வச்சிரப்பொறி, பலதேவன், வெங்கதிர்ச் செல்வன், தண்கதிர்ச்செல்வன், சிவன், முருகன், சாதவாகனன், நிகண்டன், காதற் கடவுளாகிய காமன், சாக் கடவுளாகிய கூற்றுவன் ஆகியோர்களுக்குரிய கோயில்கள் அமைந்திருந்தன. இவை தவிர வானவர்வேந்தன் இந்திரனால் கட்டப்பட்டதாகக் கருதப்பட்ட ஏழு புத்த விகாரங்களில் 300 புத்தத்துறவிகள் வாழ்ந்து வந்தனர். கூற்றுவன் கோயில் நகருக்கு வெளியே இடுகாட்டில் இருந்தது.[4]

1 மணிமேகலை, 19 : 107-109.
2 மணிமேகலை, 19 : 102-105.
3 மணிமேகலை, 19 : 96-97.
4 சிலப்பதிகாரம்.

நகருக்கு வெளியே சூரியகுண்டம், சந்திர குண்டம் என வெங்கதிர்ச்செல்வனுக்கும் தண்கதிர்ச்செல்வனுக்கும் திருவுரிமைப் படுத்தப்பட்ட இரண்டு ஏரிகள் இருந்தன.[1]

கோட்டையைச் சூழ்ந்திருந்த அகன்ற அகழியில் அழகிய மலர்கள் நிறைந்திருந்தன. அவற்றின் அருகிலே பறவைகளின் கலகலப்பு இடைவிடாது கேட்கப்பட்டது.[2]

கோட்டைவாயில்களில் சோழர் கொடிச் சின்னமான புலியின் உருவம் ஓவியமாகத் தீட்டப்பட்டிருந்தது.[3]

தமிழகத்துக்கென்று ஏகிப்திய வாணிகக் களங்களில் கொண்டு குவிக்கப்பட்ட எல்லாப் பொருள்களும், தமிழகத்தின் விளைபொருள்களும், செய்பொருள்களும் யாவும் முடிவில் சோழர் கடற்கரைக்கே வந்து சேர்ந்தன.

"கடல் கடந்த நாடுகளிலிருந்து கலங்களில் குதிரைகள் வந்திறங்கின. மிளகும் கப்பல்களில் கொண்டுவரப்பட்டன. வட மலைகளிலிருந்து தங்கமும் பன்மணிக்கற்களும் வந்தன. மேற்கு மலைகளிலிருந்து சந்தனமும் அகிலும் கொண்டு குவிக்கப்பட்டன. தென்கடல் முத்தும் கீழ்க்கடல் பவளமும் இங்கே குழுமிக்கிடந்தன. கங்கைத் தீரத்தின் விளைபொருள்கள், காவிரிக்கரையின் வளங்கள் காழகத்தின் (பர்மாவின்) செய்பொருள்கள் யாவும் காவிரிப் பட்டினத்தின் வாணிகக் களத்துக்கு வந்து இறங்கின.[4]

காவிரித் தீரத்தில் வாழ்ந்ததாக டாலமி குறிக்கும் தோரிங்காய் அல்லது சோரெத்தாய் சோழியரே என்பதில் ஐயமில்லை. இப் பகுதியிலுள்ளனவாக அவரால் குறிக்கப்பட்ட பிற நகரங்களில் 'சோர நாகரின் மன்னுரிமையிடமான ஓர்த்தோரா' என்பது உறையூர் அல்லது தமிழில் அதன் இலக்கிய வடிவமான உறந்தை என்பது உறுதி.

1 பட்டினப்பாலை, அடி 39.
2 மணிமேகலை, 5 : 110-112.
3 பட்டினப்பாலை, அடி 40.
4 பட்டினப்பாலை அடிகள் 185-191.



கர்மாரா என்பது தற்காலத்துத் தஞ்சை மாவட்டத்தின் வட்டத் தலைநகரான சீர்காழியின் பழம்பெயரான கழுமலமாகவோ, தற்காலத் திருவாரூரின் பழம்பெயரான கமலையாகவோ இருக்கக் கூடும்.[1]

புனல் நாட்டுக்கு வடக்கிலுள்ளது அருவா நாடு. அதற்கப்பாலிருந்தது அருவா வடதலை அல்லது வட அருவா ஆகும். அருவா, வடஅருவா என்ற இந்த இரண்டு மண்டலங்களும் சேர்ந்த பகுதி மாவிலங்கை அல்லது பெரிய இலங்கையென்று அழைக்கப்பட்டது. அதன் இயற்கை விளைவுகள் இலங்கை அல்லது ஈழநாட்டின் விளைவுகளை ஒத்திருந்ததே இப்பெயரிசைவின் காரணம் என்று தெரிகிறது.[2] இம்மண்டலத்தின் தலைநகரம் கச்சி என்ற தற்காலக் காஞ்சிபுரம் ஆகும். தமிழகத்தின் மற்ற எல்லா நகரங்களையும் போலவே அதுவும் கோட்டை கொத்தளங்களுடையதாயிருந்தது. அங்கே அணிமையிலேயே சோழனால் கட்டப்பட்டிருந்த ஒரு புத்தப் பள்ளி இருந்தது.[3] திருமால் கோயிலொன்றும் குறிப்பிடப்படுகிறது.[4]

1 பிங்கலந்தை, திவாகரம்.

2 சிறுபாணாற்றுப்படை, அடிகள் 119-120. யூல் (Yule) தரும் உலகப் படத்தில் 'மெலங்கெ (Melange); வடபெண்ணையாற்றுக்குச் சற்றுத் தெற்கே கிருஷ்ண பட்டினத்தில் அருகாமையாகக் காட்டப்படுகிறது டாலமியின் துனு (Tuna) அதுவே என்று அவர் கொள்கிறார் (மக்கிரிண்டிலின் டாலமி. பக்கம் 67); கன்னிங்ஹாம் (Cunningham) கோதாவரியையே மைசலாஸ் என்று கொள்வதுடன், மலங்கா'வை (Malanga) ஏலூர் அருகிலுள்ளதாகக் கருதுகிறார். (கன்னிங்ஹாம் : பண்டை இந்தியாவின் நிலப்பரப்பு, பக்கம். 539-40.)

3 மணிமேகலை 28 175-176.

4 பெரும்பாணாற்றுப்படை அடி 373 ஐந்து நூற்றாண்டுகளுக்குப் பின்னர் ஹியூன்சாங் காஞ்சிபுரத்தை வந்து கண்ணுற்ற போது அது 30 'லி' அதாவது 5 கல் சுற்றளவுடையதாயிருந்தது. அந் நகரில் அப்போது கிட்டத்தட்ட 100 புத்த மடங்களும் அவற்றில் வாழ்பவராகக் கிட்டத்தட்ட 10,000 புத்தத் துறவிகளும் இருந்தனர். அத்துடன் அம்மணமாகத் திரிந்த துறவிகளால் (அதாவது நிகண்டரால்) அடிக்கடி சென்று இறைஞ்சப்பட்ட 80 தெய்வப்பள்ளிகளும் இருந்தன. (ஸி-யூ-கி. ஏடு : 10.)

இம்மண்டல முழுவதிலும் நாடோடிமக்களான அருவாளர் அல்லது குறும்பர் வாழ்ந்து வந்தனர். இந்த நாடோடி மக்களை முதன்முதல் குடிவாழ்வு வாழவைத்துச் சீரமைத்தவன் பெருமைமிக்க முதலாம் கரிகாலனே யாவன். இவ்வரசனைப்பற்றிப் பின்வரும் பகுதிகளில் விரிவாகக் கூற இருக்கிறோம். குடி வாழ்வு சீரமைத்தபின் அவன் இந் நாட்டை 24 கோட்டங்களாகப் பிரித்து அவற்றை வேளாண்குடி சார்ந்த குடும்பங்களுக்குப் பங்கீடுசெய்து கொடுத்தான்.

24 கோட்டங்களும் அவற்றின் உட்பிரிவுகளான 79 நாடுகளும் அடங்கிய பெயர்ப்பட்டி வருமாறு :[1]

| கோட்டம் | | நாடு |
|---|---|---|
| ௧. | புழல் | 1. ஞாயிறு, 2. அடுகி, 3. ஆத்தூர், 4. எழுமூர். |
| ௨. | புலியூர் | 5. குன்னத்தூர், 6. போரூர், 7. மாங்காடு, 8. அமரூர், 9. கோட்டூர். |
| ௩. | ஈக்காடு | 10. காக்கலூர், 11. கச்சி. |
| ௪. | மணவூர் | 12. பசலை, 13. இல்லத்தூர், 14. கொன்னூர், 15. புரிசை. 16. பெருமூர். |
| ௫. | செங்காடு | 17. பொன்னலூர், 18. அத்திக்காத்தூர். |
| ௬. | பையூர் | 19. விற்பதி, 20. சேவூர், 21. வெங்கல். |

1 தொண்டைமண்டலப் பட்டயம் எனப்படும் மூலத்திலிருந்தே இப்பட்டியலை நான் எடுத்துக் காட்டியுள்ளேன். இம் மூலத்திலேயே மொத்த நாடுகள் எண்ணிக்கை 79 என்று கூறப்பட்டிருந்தும் 24 கோட்டங்களின் பெயர்களும் 77 நாடுகளின் பெயர்களுமே தரப்பட்டுள்ளன. கி. பி. 11 ஆம் நூற்றாண்டுக்குரிய சோழர் கல்வெட்டுக்களில் இந்தக் கோட்டங்களின் பெயர்களும் நாடுகளின் பெயர்களும் குறிப்பிடப்படுகின்றன.



| | | |
|---|---|---|
| ௭. | எயில் | 22. தண்டகம், 23. மாகறல், 24. கோனேரி. |
| ௮. | தாமல் | 25. கருவீடு, 26. வாகரை வள்ளை. |
| ௯. | ஊத்துக்காடு | 27. பாளையூர், 28. தாமலூர், 29. குன்னம், 30. நீவலூர். |
| ௧௦. | களத்தூர் | 31. குறும்பறம், 32. வள்ளிப்புரம் 33. பாத்தூர், 34. நடுநாடு. |
| ௧௧. | செம்பூர் | 35. போரையூர், 36. பட்டணம், 37. முடங்தூர். |
| ௧௨. | ஆமூர் | 38. குமுழி, 39. பழூவூர். |
| ௧௩. | ஈத்தூர் | 40. அிறம் உறங்காநாடு. |
| ௧௪. | வெங்குன்றம் | 41. பெருநகர், 42. அரசூர், 43. மருதநாடு, 44. நெல்லூர் 45. தெள்ளாறு. |
| ௧௫. | பல்குன்றம் | 46. பாசூர், 47. தாச்சூர், 48. மேயூர், 49. சிங்கம் பொருத வளநாடு. |
| ௧௬. | இளங்காடு | 50. பொன்னூர், 51. தென்னத்தூர், 52 மாகுணம். |
| ௧௭. | கலியூர் | 53. கலியூர், 54. திருப்புலிவனம், 55. விற்பேடு, 56. எரிகீழ் நாடு, 57. பாவூர். |
| ௧௮. | சிறுகரை | 58. அயிந்த நாடு. |
| ௧௯. | படுவூர் | 59. பெருந்திமிரி, 60. ஆர்க்காடு, 61. செங்குன்றம். |
| ௨௦. | கடிகை | 62. பெருங்கஞ்சி. 63. பரஞ்சி, 64. மேல்களத்தூர். |
| ௨௧. | செந்திருகை | 65. போலியூர், 66. வலக்குளம், 67. ஆலத்தூர், 68. அருங்குளம். |

| | | |
|---|---|---|
| உஉ. | குன்றபட்டிரம் | 69. மங்கலம், 70. வெங்களூர், 71. நின்னயம். |
| உங. | வேங்கடம் | 72. குடகாரை, 73. பொத்தப்பி, 74 தொண்டைமான். |
| உச. | வேலூர் | 75. ஒழுகறை, 76. நென்மிலி, 77. மாத்தூர். |

டாலமியால் அருவர்ணி (Aru-varni) சார்ந்தனவாகக் குறிக்கப்பட்ட உள்நாட்டு நகர்களில் பலவற்றை இக்கோட்டங்களின் தலைமை யிடப்பெயர்களிலே காணலாம். இவற்றுட் சிலவற்றைக் கீழே காண்க.

| | |
|---|---|
| கரிகெ[1] | கடிகை |
| போலியூர் | புலியூர் |
| பிகெண்டகா | பல்குன்றம் |
| இயாத்தூர் | ஈத்தூர் |
| இகர்த்தா | ஈக்காடு |
| கந்திப்பட்டணம் | குன்றப்பட்டிரம் |

பஸர் நாகாஸின் மன்னுரிமைத் தலைநகரென்று குறிக்கப்பட்ட மிலங்கா, மாவிலங்கையின் தலைநகரான காஞ்சிபுரமேயாகும். அவெர்னுயின் மற்றொரு நகரமான ஃவ்ரூரியன் பெரும்பாலும் செங்கடற்பயணம் குறிக்கும் சோபட்மாவாகவே இருக்கவேண்டும். கிரேக்க மொழியில் ஃவ்ரூரியன் என்ற சொல் ‘படைகாப்புடைய கோட்டை’ என்ற பொருள் உடையது. இது ஒரு கடற்றுறை நகராயிருந்ததனால் தமிழரால் பொதுவாக ‘எயில் பட்டினம்’ என்று குறிக்கப்பட்டது.[2] இப்பெயரின் பொருளும் சோப்பட்டினம் என்ற பெயரின் பொருள்போன்றதே — இரண்டும் அரண் செய்யப்பட்ட பட்டினம் என்ற கருத்தே தருகின்றன.

1 கரிகெ என்பது தற்காலக் கடப்பை மாவட்டத்தின் தலைநகரமான கடப்பையே என்று மக்கிரிண்டில் கருதினர். பிகண்டகா என்பதை அவர் பெல்லாரி மாவட்டத்திலுள்ள பென்னகொண்டாவாகக் கொண்டார்.

2 சிறுபாணாற்றுப்படை, அடிகள் 152-153.



இத் துறைமுகங்களில் செங்கலாலும் காரையாலும் கட்டி எழுப்பப்பட்ட உயரிய கலங்கரை விளக்கங்கள் இருந்தன. கப்பல்களைத் துறைமுகங்களின் திசைநோக்கி அழைக்கும் முறையில் இங்கே இராக்காலங்களில் பேரொளி விளக்கமுடைய விளக்குகள் எரிந்தன.[1]

கீழ்கரையில் தமிழகத்தின் வடக்கெல்லை தற்போது பழவேர்க்காடு (அல்லது புலிக்காடு) என்று அழைக்கப்படும் வேர்க்காடாயிருந்தது.[2] இதற்கப்பால் வடுகர் நாடு இருந்தது. இங்கே வடுகமொழி பேசப்பட்டது. தற்கால எருமை நாடு அல்லது மைசூரை ஆண்டவன் ‘வடுகர் கோமான்’ என்று அழைக்கப்பட்டான். இதிலிருந்து, அப் பழங்காலத்தில் திருப்பதிக்கு வடக்கே இருந்த மக்களும் மைசூரில் வாழ்ந்த மக்களும் வேற்றுமையின்றி ஒருங்கே வடுகு என்ற ஒரே மொழியையே பேசினர்களென்பதும், தெலுங்கும் கன்னடமும் அப்போது இருவேறு மொழிகள் ஆகவில்லையென்பதும் விளக்கமுறுகின்றன.

கிழக்கு மேற்கு மலைத்தொடர்கள் கடந்த உள்நாட்டுப் பகுதியில் தற்காலத் திருப்பதி அல்லது வேங்கடமே தமிழகத்தின் வடஎல்லையாய் இருந்தது. இப்போதும் 1800 ஆண்டுகள் கழிந்து, தமிழர், தெலுங்கர், முசல்மான்கள், பிரன்சுக்காரர், ஆங்கிலேயர் ஆகிய எத்தனையோ இனத்தவர் அரசியலில் ஆதிக்கத்துக்கு வந்து வந்து சென்று பல அரசுகள் வளர்ந்து தளர்ந்த பின்னும், கீழ்கரையில் இம் மொழியெல்லை மாறாமலிருப்பது மிகவும் வியப்புக்குரியதே யாகும். ஏனெனில் மேல்கரையில் தமிழக எல்லையின் நிலை இது அல்ல. அது படகராவிலிருந்து காசர்க்கோட்டுக்கு 60 கல்வரை பின்னிடைந்து வந்துள்ளது.

புனல்நாட்டின் வடமேற்காகவும் அருவா நாட்டுக்கு மேற்காகவும் மலாடு அல்லது மலயமானாடு கிடந்தது. இதுவே மலையமான் அல்லது மலைக்கோமான் என்று வழங்

1 பெரும்பாணாற்றுப்படை, அடிகள் 346-350.

2 தொல்காப்பியம், பொருளதிகாரம், சூத். 113, நச்சினார்க்கினியர் உரை மேற்கோட் பழம்பாடல்; நக்கீரர், அகம் 252.

கப்பட்ட ஒரு வேளிர்கோவின் நாடாய் இருந்தது. அவன் சோழ அரசரின் கீழுள்ள வேளிர்கோ. இம்மண்டலத்தின் தலைநகர் பெண்ணையாற்றின் கரையிலுள்ள கோவல் என்பது.[1] இந்நகர் இப்போது திருக்கோயிலூர் என்ற பெயருடன் தற்காலத் தென்னார்க்காடு மாவட்டத்தில் திருக்கோயிலூர் வட்டத்திலுள்ளது.

மலாட்டிலுள்ள இன்னொரு பெரிய நகர் முள்ளூர் அல்லது முட்களின் ஊர் என்பது.

மலாட்டுக்கு மேற்கேயுள்ளது சீதநாடு அல்லது குளிர் நாடு. இது பெரும்பாலும் தற்காலக் கோயமுத்தூர் மாவட்டத்தின் வடபாதியுடன் நீலகிரி மாவட்டத்தின் தென்பாதியையும் உள்ளடக்கியதாயிருந்தது, இங்கே தட்ப வெப்பநிலை தமிழகத்தின் ஏனைய பகுதிகளைவிட மிகவும் குளிர்ச்சி வாய்ந்தது.

சீதநாட்டுக்கும் ஏற்கெனவே குறித்துரைக்கப்பட்டுள்ள குடநாட்டுக்கும் இடையேயுள்ள மேல்கரைப்பகுதி கற்கா நாடு அல்லது பாறை நிறைந்த நாடு என வழங்கிற்று. இப்பகுதி பாறைகள், குன்றுகள் நிறைந்தது. இதில் திருவாங்கூரின் வடமேற்குப் பகுதி உள்ளடங்கியிருந்தது. இன்றளவும் அது நாட்டக மக்களால் கக்கா நாடு என்றே வழங்கப்படுகிறது.

இப் பல்வேறு நாடுகளின் உட்பிரிவுகள் பற்றிய முழு விவரங்கள் எழுத்து மூலங்களில் கிட்டவில்லை. மேலே குறிப்பிட்டபடி மாவிலங்கையின் ஒருபகுதிக்குரிய விவரங்களே கிடைத்துள்ளன. ஆயினும் சேர அரசின் குண்டூர்க் கூற்றம் பற்றியும் சோழநாட்டின் மிழலைக் கூற்றம் பற்றியும் தமிழ்க் கவிஞர் குறிப்பிட்டுள்ளனர். இதிலிருந்து சேர சோழ பாண்டிய நாடுகள் முழுவதுமே கூற்றங்கள் அல்லது மாவட்டங்களாகப் பிரிவுற்றிருந்தன என்று அறிகிறோம்.[2]

———

1 அம்மூவனார், அகம் 35.
2 புறநானூறு, 24.

# 3. வெளிநாட்டு வாணிகம்

மிகத் தொடக்கக் காலத்திலிருந்தே தமிழகத்தின் பொருள்வளங்கள் தொலை நாடுகளின் வணிகர் கவனத்தைக் கவர்ந்துவந்தன. சாலமன் ஆட்சியின்போது (கிட்டத்தட்ட கி.மு. 1000இல்) 'மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை தார்ஷிஷின் கப்பல்கள் தங்கம், வெள்ளி, தந்தம், குரங்குகள், மயில்கள் ஆகியவற்றை ஏற்றிக் கொண்டு சென்றன' என்று கேள்விப்படுகிறோம். இவை தமிழகத்திலிருந்தே சென்றனவாகல் வேண்டும். ஏனெனில் இறுதிப்பொருள்கள் இரண்டையும் குறிக்க எபிரேய மொழியின் திருநூலில் (விவிலிய நூலில்) வழங்கிய பெயர்கள் 'கபிம்,' 'துகிம்' என்பன. இவை அன்றுமுதல் இன்றுவரை தமிழில் வழங்கும் 'கவி' 'தோகை' ஆகிய தமிழ்ச்சொற்களே.

பின்னாட்களில் அராபியர்களும் கிரேக்கர்களும் இத் தமிழக வாணிகத்தைத் தொடர்ந்து நடத்தினர். அரிசி, இஞ்சி அல்லது இஞ்சிவேர், கருவாப்பட்டை ஆகியவற்றுக்குக் கிரேக்க மொழியில் வழங்கிய பெயர்கள் (ஒருசா, ஜிஞ்ஜிபேர், கர்ப்பியன் ஆகியவை) கிட்டத்தட்ட அவற்றின் தமிழ்ப்பெயர்களே. கிரேக்க வணிகர்கள் இப்பொருள்களுடன் அவற்றின் தமிழ்ப்பெயர்களையும் தமிழகத்திலிருந்து கொண்டுசென்று ஐரோப்பாவில் பரப்பினர்கள் என்பதை இது தெளிவாகக் காட்டுகிறது.

டாலமி மன்னர்களின் ஆட்சியில் எகிப்திய கிரேக்கரும் இந்தியச் சரக்குகளில் பேரளவாக வாணிகம் செய்து வந்தனர். இதன் பயனாக அலக்ஸாண்டிரியா மிகப் பழமையான நாட்களிலிருந்தே ஆதாயமிக்க இவ்வாணிகத்

துக்குரிய ஓர் உலக வாணிகக்களமாய்விட்டது. கடல் நடுவே செல்லாத சிறு கப்பல்கள் சரக்குகளைச் செங்கடலிலுள்ள துறைமுகங்களுக்கு முதலில் கொண்டுசென்றன. அங்கிருந்து வணிகக் குழாங்கள் அல்லது சாத்துக்கள் அவற்றை ஒட்டகங்களின்மீது ஏற்றி நீல ஆற்றங்கரை வரை கொண்டுசென்றன. படகுகள் இவ்விடத்திலிருந்து சரக்குகளை அலெக்சாண்டிரியாவுக்கு இட்டுச்சென்றன.

'செங்கடலிலுள்ள மயாஸ் ஹெர்மாஸ்[1] துறைமுகத்திலிருந்து கிட்டத்தட்ட 120 கப்பல்கள் இந்தியாவுக்குச் செல்வதை நான் கண்டேன்' என்று கி. பி. 19ஆம் ஆண்டுக்குரிய தம் குறிப்பில் ஸ்டிராபோ[2] கூறுகின்றார்.

கிட்டத்தட்ட இக்காலத்திலே ஹிப்பலாஸ்[3] என்ற பெயருடைய ஒரு துணிகரக் கிரேக்கக் கடலோடி இருந்தான். அவன் அராபிய, இந்திய வணிகரிடம் பேசிப் பல செய்திகளைப் புரிந்துகொண்டிருந்தவனாகலாம். ஆகவே, அவன் அராபியாவிலுள்ள ஃவர்த்க்[4] முனையிலிருந்து துணிச்சலுடன் இந்தியா நாடி விரிகடலின் கலஞ்செலுத்தினான். தென்மேற்குப் பருவக்காற்று அவனை நேரே தமிழகத்திலுள்ள மிளகு விளையும் நிலப்பகுதிக்குக் கொண்டு வந்துவிட்டது. இதுமுதல் தமிழகத்துடனுள்ள வாணிகத் தொடர்பு முன்னிலும் மிகுதியாகப் பெருகிற்று.

இச்சமயம் எகிப்தை வென்ற உரோமர்கள் பெருத்த ஆதாயந் தந்துகொண்டிருந்த இந்த வாணிகத்தைக் கைக்கொள்ளத் தயங்கவில்லை.

'அணிமையிலே புதுவதாகக் கண்டுபிடிக்கப்பட்டு, மும்முரமாக நடந்துவருகிற பயணம்' என்று குறிப்பிட்டு, பிளினி இந்தியக்கடல் வாணிகப் பயணம்பற்றிக் குறிப்பிடுகிறார். தம்காலப் பயண விவரம்பற்றி அவர் கூறுவதாவது :

1. Myos – Hermos.
2. Strabo.
3. Hippalos.
4. Fartak.



" இதன்பின் அராபியாவிலுள்ள ஸியாக்ரஸ் முனைக்கூம்பிலிருந்து (ஃவர்தக் முனையிலிருந்து) பாதலெ[1] என்ற இடத்துக்கு மேல்காற்றேடு[2] செல்வதே மிகப் பாதுகாப்பான பயணமாகக் கருதப்பட்டு வந்தது. இக் காற்றை மக்கள் இங்கே ஹிப்பலாஸ் என்று குறிக்கிறார்கள். இந்தப் பயணத்தின் மொத்தத்தொலை 1,435 கல் ஆகும், அடுத்த தலைமுறையில் மேற்கூறிய முனைக்கூம்பிலிருந்து இந்தியாவிலுள்ள ஸிகெரஸுக்கு[3] நேரே செல்வதே இடையூறு குறைந்த தொலைக்குறைவான வழி என்று கருதப்பட்டது.

" இம்மாதிரி பயணம் சிலகாலமாகத் தொடர்ந்து நீடித்து நடந்துவந்தது. ஆனால் விரைவில் வணிகர் இன்னும் சுருக்கத் தொலைவான ஒரு வழி கண்டுபிடித்தனர். இந்திய வாணிகத்தின் ஆதாயமும் இன்னும் விரைந்து கைவரலாயிற்று. இப்போது ஆண்டுதோறும் இப்பயணம் நடந்துவருகிறது. அக்கடல்களில் கடல்கொள்ளைக்காரர்கள் மிகுதியாதலால், கப்பலில் வில்லாளர் படைவகுப்பு ஒன்று காவலாகச் செல்கிறது.

" முதன்முதலாக இப்போதுதான் இப்பயணங்களைப் பற்றிய சரிநுட்பமான முழுவிவரங்கள் கிடைத்துள்ளன. ஆகவே எகிப்திலிருந்து பயணத்தின் போக்கு முழுவதையும் விரித்துரைப்பது கவர்ச்சி தரக்கூடிய ஒன்றாகும். ஏனெனில் இப்பயணங்களால் ஆண்டு தவறாமல் இந்தியா நம் பேரரசிலிருந்து குறைந்த அளவில் ஐந்தரைக் கோடி செஸ்டர்ஸ்கள்[4] (4,86,979 ஆங்கிலப் பொன்கள்) கவர்ந்து செல்கிறது. இப்பெரும் பொருளினிடமாக அது தரும் சரக்குகளோ அவற்றின் மூலமதிப்பைவிட நூறுமடங்கு விலைக்கு இங்கே விற்கப்படுகிறது "

1. சிந்து ஆற்று முகப்பு. நிலத்தின் தலைப்பிலுள்ள பாதலா; மக்சிரிண்டிலின் டாலமி : பக்கம் 146.
2. Favonius.
3. Sigerus.
4. Sesterces பண்டை கிரேக்க ரோம நாணயம்.

பயண விவரம் வருமாறு :

"கடற்பயணம் வேனிற்கால நடுவில் அதாவது எரிமீன்[1] எழுவதற்குச் சற்றுமுன் அல்லது எழுந்தவுடன் தொடங்குகிறது. 30 நாட்களில் வணிகர் அராபியாவிலுள்ள ஓகெலிஸ்[2] என்ற இடத்துக்கோ, அல்லது குங்குலியம் விளையும் பகுதியிலுள்ள கானே[3] என்னும் இடத்துக்கோ சென்று சேர்கிறார்கள். இங்கே மூன்றாவதாக ஒரு துறைமுகமும் உண்டு. இதுவே மூஸா[4] என்பது. இந்தியாவுக்குச் செல்ல விரும்புகிறவர்கள் இங்கே அடிக்கடி செல்வதில்லை. குங்குலிய முதலிய அராபிய மணப் பொருள்களில் வாணிகம் செய்பவர்கள் அடிக்கடி இங்கே வருகிறார்கள். உள்நாட்டுப் பகுதியில் சப்பர்[5] என்ற நகரம் இருக்கிறது. அது ஒரு நாட்டின் தலைநகரம். இதுவன்றி சனே[6] என்ற மற்றொரு நகரமும் உண்டு. ஆனால் இந்தியாவை நாடிச் செல்ல விரும்புபவர்களுக்கு எளிதாகப் புறப்படத்தக்க இடம் ஓகெலிஸ் என்பதே.

"இங்கிருந்து ஹிப்பலாஸ் என்று அழைக்கப்பெறும் காற்றுடன் கடலோடிகள் சென்று நாற்பது நாட்களில் இந்தியாவின் முதல் வாணிகக் களமான முசிரிஸை அடைகிறார்கள். இந்தத் துறைமுகத்தில் இறங்குவது நல்ல

1 Dog-star.

2 தற்கால கல்லா (Ghalla) அல்லது செல்லா (Cella) : மக்கிரிண்டிலின் டாலமி, பக்கம் 146.

3 தற்போது ஹிஸ்ன் கொராப் (Hisn Ghorab) என்று வழங்கும் துறைமுகமே இது என்று அறுதி செய்யப்படுகிறது : மக்கிரிண்டிலின் செங்கடற் பயணம், பக்கம் 84.

4 Muza. யெமென் (Yemen) அரசின் புகழ்மிக்க, வாணிகப் போக்குவரத்து மிகுந்த துறைமுகமாக இது ஒரு காலத்தில் இருந்தது. இன்று, இது மோகா (Mokha) விலிருந்து 25 கல் வடக்கே மூசா (Musa) என்ற சிற்றூராய் உள்ளது. மக்கிரிண்டிலின் செங்கடற் பயணம், பக்கம் 78.

5 Sapphar. யெமென் அராபியர்களின் தலைநகரம். இப்போது அது தஃபர், (Dhafar), த்ஸஃபர் (Dsoffer) அல்லது ஜபர் (Zaphar) என்று வழங்குகிறது.

6 Sane.



தன்று. ஏனென்றால், இதனருகேயுள்ள நிட்ரியாஸ் என்ற இடத்திலேயே கடற்கொள்ளைக்காரர்கள் தாவளமிட்டிருக்கிறார்கள். இங்கே வாணிகச் சரக்குகளும் மிகுதியில்லை. இவை தவிர, கப்பல்கள் நிற்குமிடம் கரையிலிருந்து நெடுந் தொலைவில் இருக்கிறது. படகுகளில் சரக்குகளை ஏற்றி இறக்கிக்கொண்டு செல்லவேண்டும்.

"நான் எழுதும் சமயத்தில் இப்பகுதியை ஆள்பவர் கேலபொத்ராஸ்[1] ஆவர்.

"இதனருகே இதைவிட இன்னும் வாய்ப்பான மற்றொரு துறைமுகம் உண்டு. 'நியாகுந்தி' என்ற நாட்டின் பகுதியில் அது அமைந்துள்ளது. அதுவே பராகே[2] என்பது. இந்நாட்டின் அரசன் பெயர் பாண்டியன். அவன் இத் துறைமுகத்திலிருந்து நெடுந்தொலைவில் உள்நாட்டில் உள்ள மதுரை என்னும் நகரத்தில் தங்கியுள்ளான். ஆனால் பராகே அருகில் உள்ள பகுதியின் பெயர் கொட்டநாரா[3] அல்லது குட்டநாடு என்பது. இங்கிருந்து ஒற்றை மரத்தில் குடைந்த படகுகளில் மிளகு பராகேக்குக் கொண்டுவரப்படுகிறது.

"இந்த நாடுகள், துறைமுகங்கள், நகரங்களின் பெயர்கள் இதற்குமுன் எந்த ஆசிரியர் குறிப்புக்களிலும் காணப்படமாட்டா. இதிலிருந்து இந்த நாடுகளில் நடைபெற்று வரும் மாறுதல் நிலைகளை உய்த்துணரலாம்.

"கடலோடிகள் இந்தியாவிலிருந்து திரும்பவும் தம் பயணத்தை எகிப்திய மாதமுறைப்படி துபிஸில்[4] அதாவது டிஸம்பரில் தொடங்குகிறார்கள். மிகப் பிந்தி போனாலும் எகிப்திய மாதம் மெகிர்[5] ஆறும் நாள் அதாவது ஜனவரி நடுப்பகுதிக்குப்பின் அவர்கள் பயண காலத்தை நீட்டிப்பதில்லை. இவ்வாறு அவர்கள் ஓர் ஆண்டுக்குள் போய்த் திரும்பிவிடுகிறார்கள். திரும்பும் பயணத்தில்

1. Coelobothras. கேரள புத்திரர் என்பதன் கிரேக்க மரூஉ.
2. Barace in the territory called Neacyndi.
3. Cottonara. 4. Tybis. 5. Mechir.

அவர்கள் (வல்ட்டர்னஸ்[1] என்ற) தென்கிழக்குக் காற்றோடு வந்து செங்கடலில் புகுந்தபின் தென்மேற்கு அல்லது தெற்கு வீசும் காற்றினுடன் வருகிறார்கள்."[2]

செங்கடல் வாணிகப்பயண விவரங்களைக் கூறும் போது, செங்கடற் பயண ஆசிரியர் முதலில் செங்கடற் கரையிலுள்ள கப்பல் தங்கல் துறைகளையும், அவற்றின் ஏற்றுமதி இறக்குமதிகளையும் விரித்துரைக்கிறார். அதன் பின் அவர் ஆபிரிக்கக் கரையின் துறைமுகங்களையும் வகுத்துணர்த்துகிறார். சிந்து ஆற்றுமுகம் கடந்தபின், அவர் பராகா குடாக்கடலையும்(அதாவது கச் குடாவையும்) பருகஸாக் குடாக்கடலையும் (அதாவது காம்பேக் குடாவையும்) அதன் பின் நம்மடியோஸ் (நருமதையாற்றுக் கடல்முகத் தருகிலுள்ள பருகாஸாவையும் (புரோச்சையும்) அவர் குறிப்பிடுகிறார்.

பருகஸாவுக்குத் தெற்கேயுள்ள நாடு தக்கிணாபதேஸ் (அதாவது தட்சிணாபதம்) என்று வழங்கப்பட்டது. இங்குள்ள வாணிகக்களங்களாக அவர் கல்லியேனா (பம்பாய் அருகிலுள்ள தற்கால கல்யாண்) என்ற இடத்தைக் குறிப்பிடுகிறார். கல்லியேனாவுக்குப்பின் அவர் ஏழு துறைமுகங்களைப்பற்றிக் கூறுகிறார். இவற்றின்பின் ஸெஸெக்ரீனோ என்ற தீவுகளையும், ஐகிடியாஸ் என்ற தீவையும் கெர்ஸானிஸஸ் என்ற இடத்தருகிலுள்ள கைனிதாய் என்ற தீவையும்பற்றி விரித்துரைக்கிறார்.[3] இத்தீவுகளிலே கடற்கொள்ளைக்காரர்கள் வாழ்ந்ததாகத் தெரிகிறது. இறுதியாக அவர் கூறும் தீவு லியூகெ (வெள்ளைத் தீவு) ஆகும்.

1. Vulturnus.

2. மலபார்க் கையேடு (Malabar Manual) ஏடு I, பக்கம் 250-251; இ. எச். பன்பரியின் பண்டைநில நூலின வரலாறு (E. H. Bunbury's History of Ancient Geography) ஏடு II, பக்கம் 418-419.

3. Sesekreinai, Aigidioi, Kaineitai near what is called the Khersonesos.



இவற்றின்பின் அவர் விரிவுரை வருமாறு :

"வெள்ளைத் தீவுக்கு (தூவக்கல்) இப்பால் கெப்ரோதெபாதாஸ் (சேரபுத்திரர்) நாடு இருக்கிறது. இது லிமுரிகெ (தமிழகம்)என்றும் அழைக்கப்பெறும். இதன் முதற்பகுதி நவுரா[1]. அதன்பின் கரையருகே துண்டிஸ் (தொண்டி) என்ற பேரூர் உள்ளது. இதனையடுத்து முசிறி என்ற வளமான துறைமுகம் இருக்கிறது. இங்கே நாட்டுக்கப்பல்கள் மட்டுமன்றி அரியகேயிலிருந்து (ஆரியகத்திலிருந்து) வரும் கப்பல்களும் எகிப்திலிருந்து வரும் கிரேக்க கப்பல்களும் வாணிக முறையில் சந்திக்கின்றன. அது ஓர் ஆற்றின் கரையில் ஆனால் 20 ஸ்டேடியாத்[2] தொலைவில் இருக்கிறது. துண்டிஸ் (தொண்டி) என்ற இடத்திலிருந்து அது 500 ஸ்டேடியாத் தொலைவு உடையது. இந்த இடைவழித்தொலை ஆற்றுக்கு ஆறாகக் கரை வழியாக அளந்தாலும், கரைநெடுகிலும் கடல்வழி அளந்தாலும் ஒரே தொலைவுதான். (நவுரா, துண்டிஸ், முசிரிஸ் என்ற) இந்த மூன்றுக்கும் பின்னால் நெல்குந்தா செல்லலாம். இது இன்னொரு மண்டலத்தைச் சேர்ந்தது. பாண்டியனால் ஆளப்பட்டது. இந்த வாணிகக்களமும் முசிரிஸிலிருந்து ஆற்று வழியாய் அளந்தாலும், கடல் வழியே கப்பல் வேகத்தால் அளந்தாலும் ஒன்றுபோலவே 500 ஸ்டேடியாக்கள் தொலைவே உடையது.

1 Naoora.

2 கிரீசு தேசமெங்கும் பொது வழக்காயுள்ள ஒலிம்பிக் முறை சார்ந்த 'ஸ்டேடியம்' 600 கிரேக்க அடிகொண்டது. இது 625 உரோம அடிக்கும் $606\frac{3}{4}$ தற்கால ஆங்கில அடிகளுக்கும் ஒப்பானது. ஒரு ஆங்கிலக் கல் தொலைவு (மைல்) $8\frac{2}{3}$ ஸ்டேடியாக்களுக்கு ஒப்பு ஆகும் : மக்கிரிண்டிலின் டாலமி, பக்கம் 4.

(ஒலிம்பிக் அல்லது ஒலிம்பிய ஆட்டம் என்பது ஒலிம்பியாவில் நடைபெற்ற கேளிக்கை, உடற்பயிற்சிப் பந்தயத்தைக் குறிக்கிறது. கிரேக்கர் பல அரசுகளாகப் பிரிந்தியங்கினாலும், அவர்கள் பண்பாட்டு ஒற்றுமையை வளர்க்க உதவியது இந்த ஒலிம்பிய விழாக்களே : தமிழ் ஆக்கக் குறிப்பு)

"நெல்குந்தா (நிர்க்குன்றம்) ஓர் ஆற்றங்கரையில் கடலிலிருந்து 120 ஸ்டேடியாத் தொலைவில் இருக்கிறது. ஆனால், ஆற்றின் கடல்முகத்தில் பக்காரா (கோட்டயம் அருகிலுள்ள வைக்கரை) என்றொரு சிற்றூர் உண்டு. நெல்குந்தாவிலிருந்து வரும் கப்பல்கள் இங்கே நடுவழியில் நின்று சரக்குகளை ஏற்றிக்கொள்கின்றன. ஏனென்றால் ஆறு இங்கே ஆழம் குறைந்திருக்கிறது. அத்துடன் சகதி மேடுகளும் ஆழமற்ற திட்டுகளும் அதில் மிகுதி.

"நெல்குந்தாவும் பக்காராவும் இரண்டுமே உள்நாட்டில் வாழ்கிற ஓர் அரசன் ஆட்சிக்கு உட்பட்டவை."

"மிளகு, வெற்றிலை ஆகிய இரு சரக்குகளும் நாடி இத் துறைமுகத்துக்குக் கப்பல்கள் மிகுதியாக வருகின்றன. பேரளவான மணப்பொருள்களை வணிகர் இங்கே கொண்டுவருகிறார்கள். இங்கே வரும் பிற இறக்குமதிப் பொருள்கள் புட்பராகக்கல், பொதுவகைத் துணிவகைகள் ஒரு சில, மைக்கல்,[1] பவளம், சக்கிமுக்கிக்கல். கண்ணாடி, பித்தளை, ஈயம் சிறிதளவு, ஆனால், பருகஸாவில் உள்ளதுபோல ஆதாயகரமான இன்தேறல், பவளமனோசிலை,[2] நேரியல் துணி, சவ்வீரம்,[3] கோதுமை ஆகியவை கோதுமை விற்பனைக்காகக் கொண்டுவரப்படவில்லை. கப்பலோட்டிகளின் செலவுக்காகவே கொண்டுவரப்பட்டது.

"இங்கே கிடைக்கும் பொருள்களுள் முக்கியமானது உள்நாட்டின் முக்கிய விளைவான மிளகு. மற்றெல்லாப் பொருள்களையும் பார்க்க மிகுதியாக அது இத் துறைமுகத்துக்குக் கொண்டுவரப்படுகிறது. இம் மிளகு கொட்டனாரிகன் (அதாவது குட்டநாடன்) என்ற பெயருடைய வகையைச் சார்ந்தது. தலைசிறந்த முத்துக்களின் பெருங் குவியலும் இங்கே வாங்கப்பெறுகிறது. மற்றும் தந்தம், பட்டுநாலிழை, கங்கைக்கரையிலிருந்து வரும் வெட்டிவேர், கிழக்குப் பகுதிகளிலிருந்து வரும் வெற்றிலை, பல்வேறு வகைப்பட்ட ஒளிக்கற்கள், வைரங்கள், மாணிக்கங்கள்,

1. Stibium. 2. Cinnabar. 3. Arsenic.



பொன்னாட்டிலிருந்து[1] அல்லது லிமுரிகேக்கு அப்பாலுள்ள தீவுகளிலிருந்து வரும் ஆமையோடு முதலியவையும் இத்துறைமுகத்தில் வந்து வாங்கப்படுகின்றன.

எகிப்திலிருந்து புறப்படுவதற்கேற்ற தலைசிறந்த பயணப்பருவம் எகிப்திய மாதம் எபிஃபி அல்லது ஜூலை. முதலில் அது சிறு கப்பல்களில் அரேபியாவிலுள்ள கனே, எண்டைமோன் துறைமுகங்களிலிருந்து கரைவழியாகவே நடைபெற்றது. ஆனால் கடலின் பொது அமைதிகளையும் துறைமிகங்களின் அமைப்பையும் மனத்திற்கொண்டு, ஆழ்கடலகத்தில் நேரடியாகச் செல்ல வழிவகுத்த முதல் கப்பலோட்டி ஹிப்பலாஸ் என்பவரேயாவர். எப்படியெனில், வடக்கே கிரேக்க உலகுக்குத் தனிச்சிறப்பான முறையிலுள்ள பருவக்காற்று அமைந்தடங்கியபின், அதன் தொடர்ச்சியாக இந்துமாகடலில் காற்று தென்மேற்கிலிருந்து தொடர்ச்சியாக வீசுகிறது. இக்கடல்களில் இந்தப் பருவக்காற்றைப் பயன்படுத்திப் புதுவழி கண்ட முதற் கடலோடியின் பெயரால் அது ஹிப்பொலாஸ் என்றே அழைக்கப்படுகிறது.

"புதுவழி கண்ட நாள்முதல் தற்சமயம்வரை இந்தியா நாடிச் செல்லும் கப்பல்கள் அராபியாவிலுள்ள கனேத் துறைமுகத்திலிருந்தோ, ஆபிரிக்கக் கரையிலுள்ள ஆரோமெட்டாத் துறைமுகத்திலிருந்தோ புறப்படுகின்றன. முன்போலக் குடா வளைகுடா ஆகியவற்றின் போக்கிலெல்லாம் வளைந்து வளைந்து செல்லாமல், அவற்றையெல்லாம் மிகத் தொலைவிலேயே தாண்டிக் கப்பல்கள் இந்தியக் கரையிலுள்ள பல்வேறு துறைமுகங்களுக்கு நேராகவே செல்கின்றன. ஆனால் லிமுரிகாவுக்குச் செல்பவர்கள் பாய்விரிக்கச் சிலநாள் காத்திருக்கின்றனர். பருகஸாவுக்கோ ஸ்கிதியாவுக்கோ செல்பவர்கள் மூன்று நாட்களுக்குமேல் நேரம் தாழ்த்துவதில்லை.

"ஏலா-பக்கரா அல்லது செம்மலை கடந்தபின் நாம் செல்லும் நாடு பாண்டியன் ஆட்சிக்கு உட்பட்டது. அது

1. Golden Chersonese.

பரலியா (புரளி) என்று பெயர் உடையது. அது கிட்டத் தட்டத் தென்வடலாகவே கிடக்கிறது முத்துக்குளிக்கும் பகுதி அருகேயுள்ள கோல்காய் (கொற்கை) வரை அது பரவியுள்ளது. அது முழுவதும் பண்டியன் ஆட்சிக்குட் பட்டதே.

"செம்மலையைக் கடந்தபின் முதல் துறைமுகம் பலிதா. அடுத்தது கொமார் (குமரி.) இதில் ஒரு கோட்டையும் ஒரு துறைமுகமும் உண்டு. சமயவாழ்வில் ஈடுபட்டவர்க்கும் துறவுவாழ்வில் ஈடுபட்டவர்களுக்கும் இது திருமுழுக்காட்டிடமாதலால், அத்தகையவர் இங்கே பேரளவில் வந்து குழுமுகின்றனர். இங்குள்ள நிறுவனத்தில் ஆடவரேபோலப் பெண்களும் நுழைவு பெறுகின்றனர். முன்காலங்களில் ஒரு பெண் தெய்வம் மாதந்தோறும் இதே இடத்தில் இம்மாதிரி திருமுழுக்காடிற்று என்று இவ்விடம்பற்றிய பழங்கதை கூறுகின்றது.

"கொமாரிலிருந்து தொடங்கும் பகுதி கொல்கி. (கொற்கை) வரை நீண்டு கிடக்கிறது. முத்துக்குளிக்குமிடம் இதுவே. அடிமைகளும் தண்டனைபெற்ற குற்றவாளிகளும் இத்தொழிலைச் செய்கிறார்கள். இக்கண்டத்தின் தென்பகுதியாகிய இம்மாநிலம் முழுவதும் பாண்டியன் ஆட்சியில் ஒரு கூறு ஆகும்.

"கொல்கி தாண்டியபின் முதல் முதல் கடக்குமிடம் உள்நாட்டுப் பகுதியாகிய அர்கலஸ் அடுத்துக் கிடக்கும் அர்கலஸ் விரிகுடாவேயாகும். எபிடோரஸ் தீவில் முத்துத் தொழிலில் முத்துக்கள் கிடைக்கின்றன. இம்முத்துக்கள் துளையிடப்பட்டு வாணிகக்களத்துக்கு உரியதாக உருவாக்கப்படும் இடம் உலகில் இது ஒன்றுதான். இதே தீவிலிருந்துதான் முத்துக்கள் கோத்த நேர்ந்தியான மஸ்லின் ஆடைகள் உண்டுபண்ணப்படுகின்றன.

"அர்கலஸிலிருந்து மேற்செல்பவர்களுக்குக் கரையிலுள்ள துறைகள், வாணிகக்களங்கள் ஆகியவற்றில் முக்கியமானவை கமரா, பாதுகா, சோபட்மா ஆகியவை



லிமுரிகாவின் வணிகரும் மற்ற மண்டலங்களின் வணிகரும் இவற்றில் வந்து திரள்கின்றனர். தவிர வாணிகக் களங்களில் லிமுரிகெயின் கரையோரமாகச்சுற்றி வாணிகம் செய்யும் கப்பல்கள் இங்கே காணப்படுகின்றன. சங்கரா என்று அழைக்கப்படும் இக்கப்பல்களில் மிகப் பெரியவை மோணேக்ஸலா என்றும், மற்றவை கொலாண்டியோ பாண்டா என்றும் அழைக்கப்படுகின்றன. இவை மிகப் பாரியவை. கங்கைப் பகுதிக்கும் பொன்னாட்டுக்கும்[1] செல்ல இவை தகுதிவாய்ந்தவை.

"லிமுரிகெ வாணிகக்களங்களுக்கென்று எகிப்தில் உண்டுபண்ணப்படும் பொருள்கள் யாவும் இந்த இடங்களுக்குக் கொண்டுவரப்படுகின்றன. இந்த வாணிகத்தால் உறிஞ்சப்படும் எகிப்தின் வளமுழுவதும் இந்தக் கரையில் தான் வந்துசேருகின்றன. அதுமட்டுமன்று. லிமுரிகெயின் விளைவுவளங்களும் வந்திறங்கும் துறை இதுவே.

"லிமுரிகெயையும் அதனை அடுத்த மண்டலங்களையும் தாண்டியபின் கடற்கரை கிழக்கு முகமாகத் திரும்புகிறது. கப்பல் தன் போக்கை இத்திசையில் திருப்பும் இடத்தில் தற்போது பலைசிமுண்டஸ் என்றும், முன்பு தப்ரோபேன் என்றும் அழைக்கப்பட்ட தீவு மேற்காகக் கடல் நடுவில் கிடக்கின்றது. தீவின் வட பகுதி நாகரிகமடைந்துள்ளது. ஆனால் தலைநிலத்திலிருந்து அதை அடைய எப்போதும் 20 நாட்களுக்குக் குறையாமல் வேண்டி வருகிறது. அதன் முழுப்பரப்பு மிகமிகப்பெரியது. ஏனெனில் அது அசைனியாவின் (அதாவது ஆபிரிக்காவின்) எதிர் கரைவரை பரந்து கிடக்கிறது[2]. முத்துக்கள், மெல்லாடைகள், ஆமை ஓடுகள் இங்கே கிடைக்கின்றன.

---

1. இந்நூல் பக்கம் 5 அடிக்குறிப்பு 4 பார்க்க.

2. இங்கே குறிப்பிட்ட தீவு இலங்கையே. திசையும் தொலையும் மிகவும் குளறுபடியாகவே கூறப்படுகிறது. பரப்புப் பற்றிய செய்தியோ முற்றிலும் மிகைப்படுத்தப்பட்டதாகத் தோற்றுகிறது. டாலமி தொலைக் கேள்வியாலேயே இவ்விவரங்களைக் குறிப்பிடுகிறார் என்பது இங்கே கவனிக்கத்தக்கது.

"(கொமாரா, பாதுகா, சோபட்மா ஆகியவற்றின் கரையில்) உள்நாட்டில் நெடுந்தொலை தள்ளிக்கிடக்கும் மண்டலம் மசாலியா. மிக உயர்தர மெல்லாடைகளில் மிகப் பேரளவான தொகுதி இங்கே செய்யப்படுவதுதான். மசாலியாவிலிருந்து கடற்கரை கிழக்காக தேசரேனெ என்ற விரிகுடா கடந்து செல்கிறது. இங்கே பொசார்க்[1] என்ற பெயருடன் வழங்கும் தந்தவகை கிட்டுகிறது."

தமிழகத்தை வந்து கண்ட இந்த மேலை வாணிகர் யவனர் எனப்பட்டனர். கிரேக்க நாட்டவர் தம்மொழியை 'அயவானேஸ்' (Iaones) என்றுதான் குறித்தனர். யவன என்ற பெயர் இதன் திரிபே. பழைய சமஸ்கிருத காவியங்களிலும் யவன என்ற சொல் எப்போதும் கிரேக்கரையே குறிக்க வழங்கப்படுகிறது[2]. இதுபோலவே பண்டைத் தமிழ் நூல்களில் யவனர் என்ற பெயர் முற்றிலும் கிரேக்கர், உரோமர்களையே குறிக்க வழங்கப்பட்டது.

கவிஞர் நக்கீரர் பாண்டிய அரசன் நன்மாறனைக் கீழ் வருமாறு பாடுகிறார்:

"வெற்றிவாள் ஏந்திய மாறனே! யவனர்கள் தங்கள் நன்கலங்களில் கொண்டுவந்த குளிர் நறுமதுவைப் பணிப்பெண்டிர் பொற்கலங்களில் ஏந்த, அவ்வினிய நறுமாந்திக் களிப்புடனும் அமைதியுடனும் உன் நாட்கள் கழிவன ஆக!"[3]

---

1 டி. டி. வில்லியம் வின்சென்ட் மொழிபெயர்த்த செங்கடற் பயணம், நியார்க்கஸ் கடற்பயணம் ஆகியவை, பக்கம் 105 தொடர்ச்சி.

2 இந்திய இலக்கிய வரலாறு வெபர் பக்கம் 220.

3 புறம் 56. புறநானூற்றின் பழைய உரைகாரர் 'யவனர் நன்கலந்தந்த' என்பதை 'யவனர்களால் புட்டிகளில் அடைத்துக் கொணரப்பட்ட' என்று உரை தருகிறார். கொளும்பைச் சார்ந்த மதிமிகு பி. குமாரசாமி அவர்கள் கலம் என்ற சொல் புட்டி, கப்பல் ஆகிய இரு பொருளுக்கும் உரியது என்று சுட்டிக் காட்டியுள்ளார் மன்னுரிமை ஆசியக்கழக இலங்கைக்கிளை, நாளேடு. (Journal of the Royal Asiatic Society, Ceylon Branch) ஏடு XIII எண் 45.



இக்கவிஞர்களால் குறிப்பிடப்பட்ட யவனர்கள் எகிப்திய கிரேக்கர் என்பதில் ஐயமில்லை. ஏனெனில், செங்கடற் பயணத்தில் குறிப்பிட்டபடி, எகிப்திலிருந்து வந்த கிரேக்க வணிகர்களே மது, பித்தளை, ஈயம், கண்ணாடி ஆகிய பொருள்களை முசிறிக்கும் வைக்கரைக்கும் கொண்டு வந்து, அவற்றுக்கு மாற்றாக அத்துறைமுகங்களிலிருந்து மிளகு, வெற்றிலை, தந்தம், முத்து, மெல்லாடை ஆகியவற்றை வாங்கிச் சென்றனர் என்று அறிகிறோம்.

கிரேக்கர்கள் எகிப்திலிருந்து ஜூலை மாதத்தில் புறப்பட்டு, 40 நாட்களில் முசிறிக்கு வந்து சேர்ந்தனர். மலபார்க் கரையில் அவர்கள் கிட்டத்தட்ட மூன்று மாதங்கள் கழித்துவிட்டு, டிசம்பர் அல்லது ஜனவரி மாதத்தில் முசிறியிலிருந்து மீண்டும் புறப்பட்டனர். மலபாரில் அவர்கள் தங்கிய காலத்தில் அவர்கள் தங்கள் நாகரிகத்தை இயல்பாகவே தமிழரிடம் படியவிட்டிருப்பர்.

இந்தியக் கடல்களில் கடல்கொள்ளைக்காரர் தொல்லைகள் இருந்துவந்ததால், கிரேக்க வணிகர் தம் கப்பல்களிலேயே ஒரு கிரேக்க வில்வீரர் படைப்பிரிவை உடன் கொண்டுவந்தனர். எகிப்து இச்சமயம் உரோமர் ஆட்சியில் இருந்தது. ஆகவே, கிரேக்க வணிகருடன் வந்த வில்வீரர் உரோமப் படைவீரராகவே இருந்திருக்க வேண்டும். இந்த உரோம வீரர்களின் மேம்பட்ட படைக்கலங்களும் மேம்பட்ட படைக்கட்டுப்பாடும் தமிழர் மதிப்பைப் பெற்றதுடன், உரோமர்களுடன் இன்னும் நன்கு பழகி அவர்கள் நாகரிகத்தை மேற்கொள்ள வேண்டுமென்ற அவாவையும் தூண்டாதிருந்திருக்க முடியாது.

இந்நிலையில் உரோமருடன் அரசியல் தொடர்புகொள்வதிலுள்ள நலங்களை முதல் முதல் கண்டுணர்ந்தவன் ஒரு பாண்டிய அரசனேயாவான். உரோமர் நேசநாட்டினருகும் எண்ணத்துடன் அவன் அகஸ்டஸ் ஸீஸரிடம் இரண்டு தூதுக்குழுக்கள் அனுப்பினான். இவற்றுள் ஒன்று ஜூலியஸ் ஸீஸர் மாண்ட 18 ஆம் ஆண்டில்

(கி.மு 26 இல்) அகஸ்டஸ் டெராகோனாவில்[1] தங்கியிருக்கும் சமயம் அவனைச்சென்று கண்டது. மற்றது ஆறு ஆண்டுகளுக்குப்பின் (கி மு. 20 இல்) அவர் சாமாஸ்[2] தீவிலிருக்கும்போது அவரைச் சந்தித்தது.

உரோமப் படைவீரர்கள் பாண்டிய அரசர் பணியிலும் மற்றத் தமிழரசர் பணியிலும் அமர்ந்திருந்தார்கள். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் ஆட்சியில் மதுரைக் கோட்டைவாயில் காப்பாளராக உரோமப் படைவீராகள் அமர்வுபெற்றிருந்தனர்.[3]

இக்காலப் புலவர் ஒருவர் ஒரு தமிழரசன் போர்க்களத்திலுள்ள படைவீட்டைப்பற்றிக் கீழ்வருமாறு குறிப்பிடுகிறார் :

"படை வீட்டின் மதில்கள் இரும்புச் சங்கிலிகளால் இறுகப் பிணிக்கப்பட்ட ஈரடுக்கான பாய்த்துணிகளால் அமைக்கப்பெற்றிருந்தன. அதனைக் காவல்காத்து நின்ற வலிமைவாய்ந்த யவனரின் கடுநோக்குக் காண்பவருக்கு அச்சந்தருவதாயிருந்தது. இந்த யவனவீரரின் நீண்ட தளர் சட்டைகள் இடுப்புடன் அரைக்கச்சைகளால் இறுகக் கட்டப்பட்டிருந்தன. சைகைகளால் மட்டுமே கருத்தறிவிக்கவல்ல ஊமர்களான சில மிலேச்சர்கள் வெளிக்கூடத்தில் இரவு முழுவதும் காவல் காத்தனர். அழகிய விளக்கால் ஒளிதரப்பெற்ற உட்கூடங்களைச்சுற்றி அவர்கள் ஓயாது திரிந்தவண்ணம் இருந்தனர்.[4]

இவ்வருணனையிலிருந்து, பண்டைத் தமிழரசர்களால் யவனரும் மற்ற மிலேச்சர் அல்லது வெளிநாட்டாரும் மெய் காவலர்களாக அமர்த்தப்பட்டிருந்தனர் என்பதை உணர்கிறோம்.

---

1 Terracona. 2 Island of Samos.

3 சிலப்பதிகாரம் 14 அடிகள், 66-67.

4 முல்லைப்பாட்டு அடிகள், 59-66.



அன்னத்தின் உருவைத் தலைப்பில்கொண்ட யவனப் பூங்குடில்கள்,[1] விளக்குகள்,[2] நிற்கும் பெண்சிலை யுருவம் இரு கைகளாலும் நெய், திரியிடும் குடுவையை ஏந்துவதாக அமைந்த அகல் விளக்குகள் ஆகியவை தமிழகத்தில் அன்று பொதுவழக்காய் இருந்தன.[3]

கீழ்கடற்கரையில் ஒரு பெரிய வாணிகக்களமா யமைந்திருந்த காவிரிப்பட்டணத்தில் யவனவணிகர் குடியிருப்பொன்று இருந்தது.[4]

தமிழகத்துடனும் இந்தியாவின் மற்றப் பகுதிகளுடனும் உள்ள உரோமக வாணிகத்தின் அளவு மிகப் பெரியதாகவே இருந்தது என்று பிளினியின் கூற்றால் அறிகிறோம். உரோமப் பேரரசின் செல்வத்தை இந்தியா 55 இலக்கம் செஸ்டர்ஸ்கள் (9,86,976 ஆங்கிலப் பொன்கள்) அளவில் குறையாமல் ஆண்டுதோறும் இறைத்துவந்தது என்று அவர் கூறுகிறார். இச்செல்வத்துக்கீடாக இந்தியா அனுப்பிய சரக்குகள் தம் மூல விலைக்கு நூறுமடங்காக விற்கப்பட்டன என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.[5]

இக்காலத்தில் உரோமகத் தங்கம் பேரளவில் தமிழகத்தில் வந்து குவிந்ததற்கான சான்றாக, அகஸ்டஸ் ஆட்சிக் காலத்திலிருந்து ஜீனோ ஆட்சிக்காலம் வரையுள்ள (கி. மு. 27 முதல் கி. பி. 491 வரையுள்ள) உரோம நாணயங்கள் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் புதையுண்டு கண்டெடுக்கப்பட்டுள்ளன.

கி.பி. 226 இல் நிறுவப்பெற்றதாக நம்பப்படும் பியூட்டிங் செரியன் பட்டயங்களின்படி,[6] அக்காலத்திலகூட உரோமர்கள் தங்கள் வாணிக நலங்களைக் காப்பதற்காக

---

1 Vases.

2 பெரும்பாணாற்றுப்படை அடிகள், 316-317.

3 நெடுநல்வாடை அடி, 101.

4 சிலப்பதிகாரம் 5 அடி, 10.

5 மேலே பக்கம் 32 காண்க.

6 Peutingcrian.

முசிறியில் இரண்டு படைப்பிரிவுகளை (800 முதல் 1200 வீரர்வரை) வைத்திருந்தனர் என்றும், அதே காலத்தில் அங்கே அகஸ்டஸுக்கு ஒரு கோயிலெடுத்திருந்தனர் என்றும் அறிகிறோம்.[1]

கீழைநாடுகளுடன் தமிழகம் நடத்திய வாணிகம்பற்றி நமக்கு இத்தகைய விளக்கமான விவரங்கள் எதுவும் கிடைக்கவில்லை. ஆனால் தமிழ் நூல்களுள் பல குறிப்புக்கள் வணிகரும் பிறரும் சாவகத்தில் (சுமாத்ரா அல்லது ஜாவாவில்) உள்ள நாகபுரத்துக்கும், பர்மாவிலுள்ள கழககத்துக்கும், இலங்கையிலும் வங்காளத்திலுமுள்ள கடல் துறைமுகங்களுக்கும் கடல்வழியாகச் சென்றனர் என்பதைச் சுட்டுகின்றன.

1 மலபார்க் கையேடு ஏடு I பக்கம் 199.

# 4. தமிழ்க் கிளை இனங்களும் கிளைகளும்

தமிழகத்தில் வாழ்ந்த மிகப் பழைய குடியினர் வில்லவர், மீனவர் என்பவர்களே. வில்லவர் அல்லது வில்லாளிகள் மலைப்பகுதிகளிலும் காடுகளிலும் வாழ்ந்து வேட்டையால் வாழ்க்கை நடத்தினார்கள் (திராவிடச்சொல் வில் என்பதன் பொருள் விற்படை). மீனவர் அல்லது செம்படவர் ஆற்றுத்தீரங்கள், தாழ்வெளிகள், கடற்கரை ஆகிய பகுதிகளில் வாழ்ந்தார்கள் (திராவிடச்சொல் மீன் என்பது மீனினத்தைக் குறிக்கும்). அவர்கள் மீன்பிடித்து வாழ்க்கை நடாத்தினார்கள். இவ்விரு கிளையினத்தவர்களும் இந்தியா முழுவதும் பரவியிருந்த ஒரு முற்பட்ட கால மனித இனத்தவர் என்பது தெளிவு. ஏனெனில் அவர்கள் இன்றும் இரஜபுதனத்திலும் கூர்ச்சரத்திலும் தங்கியுள்ளார்கள். அங்கே அவர்கள் பீலர்கள் என்றும் மீனர்களென்றும், கன்னட நாட்டில் பில்லவர் என்றும் அழைக்கப்படுகிறார்கள்.

அரைநாகரிகமுடைய இக்கிளையினங்களை மக்கட் பெருக்கமும் நாகரிக வளர்ச்சியுமுடைய நாகர் என்ற வகுப்பினர் வென்றார்கள். இவர்கள் ஒருகாலத்தில் இந்தியா, இலங்கை, பர்மா ஆகிய பரப்பின் பெரும் பகுதியையும் ஆண்டார்கள். அவர்கள் இராமாயணத்தில் குறிக்கப்பட்டுள்ளார்கள். பெரிதும் தெக்கணத்திலேயே இருந்திருக்கக்கூடிய ஒருநாகர்தலைநகரம் இராமாயணத்தில் கீழ்வருமாறு வருணிக்கப்பட்டுள்ளது.

[1]"நஞ்சுறை வன்பற்கள்கொடு நாகரிள மைந்தர்
பொன்செய் கொடுந்தாழ் இரும்புரிசை மதில்காக்க
எஞ்சுதலில் வீதிபல எங்கணும் நிறைந்து
மிஞ்சவரு போகவதி மேவு நகரத்தே

மின்செய்பொலங் கோயிலிடை வியன்தவசின் மீதே
அஞ்சவரு வாசுகி அமர்ந்தபதி காண்நீ!
மஞ்சுதவழ் மாடமொடு கூடம் மிடைகாடு
விஞ்சவரு பைங்கழனி யாவும்விழி கொள்வாய்"[2]

கி.மு.13-ஆம் நூற்றாண்டினருகாமையில் கங்கைக்கும் யமுனைக்குமிடையேயுள்ள பகுதியில் நாக அரசுகள் இருந்ததாக மகாபாரதத்திலிருந்து கேள்விப்படுகிறோம். திங்கள் மரபைச் சேர்ந்த ஆரியர்கள் தற்போது தில்லி இருக்குமிடத்தில் புதியதொரு துணைத்தலைநகரை அமைக்க விரும்பியபோது, அவ்விடத்தில் தங்கி வாழ்ந்த நாகர்களை அப்புறப்படுத்தவேண்டியிருந்தது.

காவியத் தலைவனாகிய அருச்சுனன் தன் நாடுகடந்த வாழ்வில் முதலில் உலிபி என்ற நாக இளவரசியையும், அதன்பின் மணிபுரத்தை ஆண்ட நாக அரசன் சித்திரவாகனன் புதல்வியாகிய சித்திராங்கதையையும் மணம் புரிந்துகொண்டதாகக் கூறப்படுகிறது. அருச்சுனன்

---

1 Near Bhogavati stands the place
Where dwell the hosts of the serpent race,
A broad-wayed city walled and barred
Which watchful legions keep and guard.
The fiercest of the serpent youth
Each awful for his venomed tooth;
And throned in his imperial hall
Is Vasuki who rules them all;
Explore the Serpent city well,
Search town and tower and citadel,
Scan each field and wood that lies
Around it with your watchful eyes!

2 இராமாயணம், கிரிஃவித் (Griffith's Ramayana) ஏடு IV 205, இந்தியப் பழமைப் பதிவு ஏடு (Indian Antiquary) ஏடு VIII பக்கம் 5



பேரனாகிய பரிட்சித்து நாக அரசன் தட்சகனால் கொல்லப்பட்டான். இது காரணமாகப் பரிட்சித்தின் புதல்வன் சனமேசயன் நீண்டகாலம் நாகருடன் வெங்குருதிப்போர் நடாத்தி அவர்களில் ஆயிரக்கணக்கானவர்களை அழித்தான்.

மீண்டும் நாகர்களை நாம் வரலாற்றில் கி. மு. 6ஆம் நூற்றாண்டில் காண்கிறோம். அப்போது ஒரு நாகமரபினர் மகதத்தை ஆண்டனர். இம்மரபைச் சார்ந்த ஆளும் மன்னனாகிய அஜாத சத்துருவின் ஆட்சியிலேயே கௌதம புத்தர் தம் புதிய கோட்பாட்டை வகுத்துரைத்தார். அது நாகர்களின் பேராதரவைப் பெற்றது.[1]

இலங்கை வரலாற்று நூல்கள் யாவுமே நாகர்களைப் பற்றிய செய்திகளுடன் தொடங்குகின்றன. இவற்றிலிருந்து கி. மு. 6ஆம் நூற்றாண்டில் தீவின் மேற்குக் கரையில் வல்லமைவாய்ந்த நாக அரசுகள் நிலவினவென்றும், அக்காரணத்தால் தீவு நாகத்தீவு என்று அழைக்கப்பட்டதென்றும் அறிகிறோம். நாகர் தலைநகர் கல்யாணி என்பது. கல்யாணியை ஆண்ட அரசன் மருகி கணவத்த மானை மலையை ஆண்ட ஒரு நாக அரசனுக்கு மணம் செய்து கொடுக்கப்பட்டாள். இது கல்யாணிக்கு நேர் எதிராக இந்தியக் கடற்கரையில் தற்கால இராமேச்சுவரத்தின் அருகிலுள்ள கந்தமாதனம் என்ற ஒரு குன்றே என்று தோற்றுகிறது.

1800 ஆண்டுகளுக்குமுன் வரையப்பட்ட பண்டை அமராவதிச் சிற்பங்களிலும் அதுபோன்ற பிற இடங்களிலும் தலைக்குமேல் பின்புறமாக விரிந்த படங்களுடன் நாகங்கள் தீட்டப்பட்ட மனித உருவங்கள் உள்ளன. இவை நாகர் உருவங்களே.[2] அமராவதியின் அழிபாடு

---

1 ஃவெர்குஸன்: மரநாக வணக்கம் (Fergusson's Tree and Serpent Worship) பக்கம், 60.

2 தென்னிந்தியப் பழம்பொருள் பரப்பாராய்ச்சி (Archaeological Survey of India) ஏடு I. அமராவதி, ஜக்கயபேடா Jaggaya peta)வின் புத்த தூபிகள்.



நாகர்கள்



களிலிருந்து அகற்றப்பட்டுள்ள சில துண்டங்கள் சென்னை அரசியல் கண்காட்சிச் சாலையில் காணப்படுகின்றன. இச் சிற்பங்களில் நாகஅரசருக்குத் தனிச் சிறப்புச்சின்னமாகப் பின்புறம் ஐந்தலை அல்லது ஏழுதலை நாகம் உள்ளது. நாக இளவரசியருக்கு இதுபோல முத்தலை நாகங்களும் பொதுநிலை நாகர்களுக்கு ஒருதலை நாகங்களும் உள்ளன.

இச்சிற்பங்களை அரிது முயன்று செதுக்கிய செதுக்குக் கலைஞர் நாகர்கள் நாக இயல்புடையவர் என்றும், அவர்கள் உடல்பாதி மனித உருவாகவும், பாதி பாம்புருவாகவும் அமைந்திருந்தன என்றும் கருதியதாகத் தோற்றுகிறது. இந்நம்பிக்கையைப் பண்டைத் தமிழ்க்கவிஞர்கள் அரைகுறையாகவே கொண்டிருந்ததாகத் தெரிகிறது. ஏனெனில், அவர்கள் தம்முடன் சமகாலத்தவரான நாகர்களை மனிதராகவே கருதிக் குறிப்பிடுகின்றனர் ஆனால், அதே சமயம் பண்டை நாகர்கள் பாதலத்தில் பாம்புகளாக வாழ்ந்ததாகக் குறிக்கின்றனர்.

சோழர் தலைநகராகிய காவிரிப்பட்டினத்தின் பழமையையும் செல்வவளத்தையும் குறிப்பிடும்போது, நாகர் தலைநகர் அதாவது நாகர் நாட்டின் தலைநகரைப்போலப் பழமையும் புகழும் உடையதாயிருந்தது என்று கூறுகிறார்.[1] இதிலிருந்து 1800 ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்திருந்த தமிழ்மக்கள் நிலவெல்லைக்குள்ளாக, நாகர் அரசுகளைவிடப் பழமைவாய்ந்த அரசுகள் எதுவும் இருந்ததில்லை என்று தோற்றுகிறது. காவிரிப்பட்டினமே நாகர்களின் ஒரு பழைய வாழ்விடமாயிருந்ததென்று கூறப்படுகிறது.

---

1 சிலப்பதிகாரம் I 19—20. சிலப்பதிகாரத்தின் உரையாசிரியர்களாகிய அரும்பதவுரையாசிரியர், அடியார்க்குநல்லார் ஆகிய இருவரும் அப் பழங்காலத்தில் நாகர்கள் ஆண்ட நாடுகள் இருந்தன என்பதை அறியாதவர்களாயிருந்தனர் என்பதில் ஐயமில்லை. ஆகவே அவர்கள் மூலபாடத்திலுள்ள நாகநகர், நாகநாடு ஆகிய இரு தொடர்களையும் ஒன்று வானகத்தைக் குறிப்பதாகவும், மற்றொன்று நாகர் வாழும் பாதலத்தைக் குறிப்பதாகவும் கொண்டுவிட்டனர்!

இந் நாகர்கள் 'வளைந்த செவ்விதழ்க'ளும் திட்பம் வாய்ந்த ஒள்ளிய பற்களும், இடி முழக்கம்போன்ற குரலும் உடையவர்கள். அவர்கள் எப்போதும் பாசப்படையுடைய வர்களாகத் தீம்பு செய்வதிலே மகிழ்ந்திருந்தனர்.[1]

இரண்டு நாகர்களிடையே நடைபெற்ற பூசலை மற்றொரு தமிழ்க் கவிஞர் இவ்வாறு வருணித்துள்ளார்:

"கீழுலகத்திலே, நாகநாட்டை ஆண்ட இரு அரசர்கள் புத்தபீடிகையைப்பெறப் போட்டியிட்டனர். இருவருள் எவரும் அதை நிலத்திலிருந்து பெயர்க்கமுடியவில்லை. ஆயினும் முயற்சியைக் கைவிட இருவரும் விரும்பவில்லை. கனல் தெரிக்கும் கண்களுடனும், சீறி எழும் மூச்சுடனும் இருவரும் தத்தம் பெரும்படைகளை நடாத்தி வெங்குருதிப் போராற்றினர். அறிவு முதல்வர் (புத்தர்) இருவர் முன்னிலையிலும் தோன்றினார். 'உங்கள் சச்சரவை நிறுத்துங்கள்; பீடிகை எனது' என்று கூறி அவர் அதில் அமர்ந்து, அறமுரைத்தார்."[2]

இதே கவிஞர் இப் பீடிகை இருந்த மணிபல்லவம் என்ற தீவு காவிரிப்பூம்பட்டினத்துக்குத் தெற்கே 30 யோசனை தொலைவில் இருந்தது என்றும் குறிக்கிறார்.[3] அத்துடன், வடஇந்தியாவில் காந்தார நாட்டில் ஒரு நகரம் நில அதிர்ச்சி காரணமாக நிலத்தில் 400 யோசனை தொலை ஆழ்ந்துசென்று நாகநாட்டை அடைந்ததாகவும் குறிப்பிடுகிறார்.[4]

இக் கூற்றுக்களால் பண்டைய நாகர்களைப்பற்றியும் அவர்கள் நாட்டைப்பற்றியும் அக்காலத் தமிழ்க் கவிஞர்களுக்குத் தெளிவற்ற குளறுபடியான பல கருத்துக்கள் இருந்து வந்தன என்பது தெளிவு. உண்மையிலேயே நாகர்கள் நிலப்பரப்புக்கு நெடுந்தொலை கீழேயுள்ள பாதலத்தில் வாழ்ந்திருந்தனர் என்று அவர்கள் நம்பினார்கள். ஆனால், தம் காலத்திலிருந்த நாக குலத்தவர்களைப்

1 மணிமேகலை I, 21—23. 2 மணிமேகலை VIII, 54—61.
3 மணிமேகலை VII, 213 4 மணிமேகலை IX, 12—22



பற்றியும் நாககுல அரசுகளைப்பற்றியும் அவர்கள் கிட்டத்தட்ட நம்பகம் வாய்ந்த விவரங்களே தந்துள்ளனர்.

சோழ அரசன் கிள்ளிவளவன் நாக இளவரசியை முதன்முதலில் காணும் காட்சி கீழ்வருமாறு விரித்துரைக்கப்படுகிறது.[1]

"இன்பகரமான இளவேனிற் பருவத்தில் ஒருநாள் ஒளிவிடும் மணிகள் பதித்த நீண்ட முடியணிந்த கிள்ளி ஒரு பசுமரக்காவின் நிழலில் தங்கியிருந்தான். அங்கே மணங்கமழும் பூங்கொடிகளிடையே ஒரு பூங்கொடியாகத் தனித்துலவிய ஓர் அழகிய நங்கையைக் கண்டான். அவள் யாராயிருப்பாளோ என்ற வியப்பார்வத்துடன் மன்னன் சிறிது நேரம் தன்னை மறந்திருந்தான். அச்சமயம் வெற்றிகரமான வில் ஏந்திய காதலங் கடவுள் தன் மலர்க் கணைகளை மன்னன் நெஞ்சத்தினுள் ஆழக் குறிபார்த்துச் செலுத்தினான். அவள் மேனியின் எழில் மன்னனைத் தன் வயப்படுத்திற்று. அவள் இசையினும் இனிய குரலில் அவன் செவிகள் தன்னிலையழிந்தன. மறவர் பெரும்படைகளை நடத்திச்சென்ற அவன் அப்போது அக்காதல் நங்கையின் மீளா அடிமையானான்.

"அந்தச் சோலையின் கண்ணே அவளுடன் குறைவிலா நிறை இன்பம் நுகர்ந்து அவன் ஒரு மாதகாலம் கழித்தான். ஆனால் ஒருமாத முடிவில் அவள் முதலில் தோன்றியபடியே திடுமென மறைந்தாள்.

மாற்றரசர் பலர் முடிகளை மண்ணில் மடியச்செய்த அம்மன்னவன் அவளை மீண்டும் சந்திக்கும் ஒரே எண்ணத்துடன் சுற்றியலைந்தான். பாதலவழியிலும், சேண்வழியிலும், கடலகத்தும் ஒருங்கே தங்குதடையின்றிச் செல்லத்தக்க பெரியார் ஒருவரை அவன் கண்ணுற்றான். அவருக்கு அவன் வணக்க வழிபாடாற்றினான். உயிருக்கு உயிராய் விட்ட அந்த நங்கை மறைந்துசென்ற இடத்தைத் தனக்கு அறிவிக்குமாறு வேண்டினான்.

1. மணிமேகலை XXIV, 30—61.

"மன்னனே! நான் அவளைப் பார்த்தது கிடையாது. ஆயினும் அவளைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவள் செய்திகள் யாவும் அறிவேன்: ஆகவே, இதைக் கவனித்துக் கேள். அரசே! போரில் இடைவிடா வெற்றி காணும் மன்னன் ஒருவன் நாகநாட்டில் ஆள்கிறான். வளைவணன் என்பது அவன் பெயர். அவன் மனைவி வாசமயிலை என்பாள். அவர்கள் பெற்ற அருமகவே இவ் விளநங்கை பீலிவளை. அவள் பிறந்தபோது ஓர் அறிவர் அவள் வருங்காலம் அறிந்து கூறினார். கதிரவன் குலத்து மன்னனொருவன் அவளை மணப்பானென்று அவர் உணர்ந்து தெரிவித்தார்.

"இனி, அவள் புதல்வன்தான் உன்னைக் காண வருவான். நீ அவளை இனி காண முடியாது," என்றார் பெரியவர்.

சோழ அரசன் கிள்ளிவளவன் சிறிதளவு காலத்துக்காவது அயல் அரசனாகிய ஒரு நாகன் மகளை மணந்திருந்தான் என்பது ஒரு வரலாற்றுச் செய்தியாகவே காணப்படுகிறது. ஆனால், கிள்ளிவளவன் காலத்திலேயே இருந்தவரான மணிமேகலை ஆசிரியர் சீத்தலைச் சாத்தனார் ஒரு கவிஞனின் கற்பனை உரிமையுடன் அத்திருமணம் பற்றி ஆர்வப்புனைவியலான ஒரு சித்திரம் தீட்டியிருக்கவேண்டும். தமிழ் மன்னனொருவன் ஒரு நாகநங்கையை மணந்தானென்பது தகாச்செயலென்று அவர் கருதியிருக்க வேண்டும்.

நாகர்களில் எயினர், ஒளியர், அருவாளர், பரதவர் ஆகிய பல கிளையினர் இருந்தனர். இவர்களில் மறவரே மிக வல்லமை வாய்ந்தவராகவும் போர்த்திறமிக்கவராகவும் இருந்தனர். தமிழருக்குப் பெரும் பகைவராய் விளங்கியவர்களும் இவர்களே. இவர்களைப்பற்றி ஒரு கவிஞர் கூறுவதாவது:

"அவர்கள் திண்ணிய உடலும் ஆற்றல்மிக்க உறுப்பமைதிகளும் உடையவர்கள். புலிபோன்ற அச்சந்தரும் காட்சியுடையவர்கள். அவர்கள் தலைமயிர் நீண்டு சுருண்டு அடர்த்தியாயிருந்தது. தோல் பொதிந் தியற்றப்பட்ட விற்கள் தாங்கிக் குருதிவெறி கொண்டவர்களாய், எந்தச் சமயத்திலும் பிறரைத் தாக்கத் தயங்காதவர்கள் அவர்கள். துணையற்ற ஏழை வழிப்போக்கர்மீது அவர்கள் தம் அம்புகளைச் செலுத்துவர். அவர்களைக் கொள்ளையிடுவதால், கிடைக்கப்போவது ஒன்றுமிருக்கமுடியாது என்று தெரிந்த சமயத்திலும், அம்புத் தாக்குண்டவர்களின் உடல் துடிப்பதைக் காணும் கொடிய அவாவால் அவர்களைத் தாக்கும் பண்புடையவர்கள் அவர்கள்.[1]



அவர்கள் தொகை மிகப்பெரிதாயிருந்தது. சிறப்பாக, கீழ்கடற்கரையில், காவிரி வைகையாறுகளுக்கிடையே, இன்றிருப்பதுபோலவே அன்றும் அவர்கள் பெருந்திரளாயிருந்தனர். ஆகவே தமிழரசர்களின் படைகளை அவர்கள் வெற்றிகரமாக எதிர்த்து நின்றனர்.

மேற்குறிப்பிட்ட கவிஞர் மேலும் கூறுவதாவது:

"அவர்கள் கனன்றெழும் வெஞ்சினத் தோற்றம் உடையவர்கள். திருகிச் சுருண்ட அவர்கள் தாடிகள் கலைமான் கொம்புகள் போன்றவை. அவர்கள் வில்லின் நாணொலியும் அவர்கள் இருதலை முரசின் முழக்கமும் பெரும் படைகளின் துணையுடைய மன்னரையும் மருண்டோடச் செய்யும்."[2]

போரில் அவர்கள் அஞ்சாத் தீரத்தைத் தமிழரசர் மிக உயர்வாக மதித்து, தமிழ்ப்படைகளில் அவர்களையே பெருந்தொகையினராகச் சேர்த்துக்கொண்டனர். நாலை கிழவன் நாகன் என்ற மறவர்கோமான் பண்டிய அரசனிடம் அமைச்சனாகவும், அவன் படைகளின் தலைவனாகவும் பணியாற்றினான்.[3] குதிரைமலையை யாண்ட பிட்டங்

1 கலித்தொகை, IV 1—5.
2 கலித்தொகை, XV 1-7.
3 வடநெடுந்தத்தனார்: புறம், பாட்டு 179

கொற்றன் என்ற மற்றொரு தலைவன் சேர அரசனிடம் பணிசெய்தான்.[1]

நாக மரபினரிடையே முற்றிலும் அடங்காப் பண்புடையவர்கள் எயினர் அல்லது வேடரே. நிரைகோடலும் கொள்ளையும் கொலையுமே அவர்கள் வாழ்க்கையில் மேற்கொண்ட ஒரே தொழிலாயிருந்தது. அவர்கள் அச்சந் தரும் காளியை வணங்கினர். தம் கொள்ளையில் அத்தெய் வத்தின் துணையைப்பெற அவர்கள் அத்தெய்வத்தின் கோயில்களில் எருமைகளைப் பலியிட்டனர்[2] சூறையாட் டுக்குப் புறப்படுமுன், அவர்கள் புட்குறிகளும் பறவை ஒலிக்குறிகளும் எதிர்ப்புகளும் பற்றிய அறிவுரை கேட்டனர்.[3]

அவர்கள் மரபினர் இன்றும் அவர்கள் பண்புக்கேற்ற படி கள்ளர் அல்லது 'கள்வர் என்ற பெயருடன் குறிக்கப் படுகின்றனர். 12 ஆம் நூற்றூண்டில் பாண்டிய அரசன் சடிலவர்மனுக்குரிய செப்புப் பட்டயங்களில் குறிக்கப் பட்ட தீரதரன்-மூர்த்தி எயினர் இம்மரபினர் என்று தெரிகிறது.[4]

நாகரின் இன்னொரு மரபினர் ஒளியர். இவர்கள் கரிகால் சோழனால் வென்றடக்கப்பட்டனர் என்று தெரிகிறது.[5] மாமல்லபுரத்திலுள்ள ஒரு கல்வெட்டின் மூலம் அவர்கள் கி. பி. 11 ஆம் நூற்றூண்டுவரைகூட வலிமையுடனிருந்தனர் என்று அறிகிறோம்.[6] 1040 முதல் 1069 வரை ஆண்ட மேலைச்சாளுக்கிய அரசன் ஆகவ மல்லனை (கொப்பத்தில் நடைபெற்ற போரில்) முறி

1 கருவூர் கந்தப்பிள்ளை சாத்தனார் : புறம், பாட்டு 168.
2 சிலப்பதிகாரம், XII. 3 சிலப்பதிகாரம், XII 120-128
4 இந்தியப் பழமை ஏடு (Indian Antiquary) ஏடு XXII பக்கம 57.
5 பட்டினப்பாலை, அடி 274.
6 இலக்கியம், இயல்நூல் சார்ந்த சென்னை நாளேடு (Madras Journal of Literature & Science) ஏடு XIII, பகுதி II கட்டுரை 4.



யடித்த சோழ அரசன் கோப்பரகேசரிவர்மன் என்ற உடையார் ஸ்ரீ இராசேந்திர தேவரின் ஆட்சியாண்டு 9 இல் இது வெளியிடப்பட்டது. மாமல்லபுரத்திலுள்ள வராக சுவாமி கோயிலுக்கு அளிக்கப்பட்ட ஒரு மனையின் மானியப் பத்திரமாக அது அமைந்துள்ளது. அதில் கையொப்ப மிட்ட சோழ அரசனின் உயர்பணி முதல்வரிடையே கீழ் வரும் நாகர்களின் பெயர்கள் இடம்பெற்றுள்ளன.

ஒளிநாகன் மாடையன் அழகியசோழ
அமர்நாட்டு மூவேந்த வேளான் ;
ஒளிநாகன் சந்திரசேகரன்;
ஒளிநாகன் நாராயணன்;
இந்துபுரவான் சங்கநாகன்;
உச்சன்கிழவன் முகுளிநாகன்.

இப்பதிகத்திலிருந்து ஒளிநாகரல்லாமலும், நாக ரினத்திலேயே சங்கநாகர், முகுளிநாகர் ஆகிய பிரிவினர் 11ஆம் நூற்றூண்டில் இருந்தனர் என்று தெரிய வருகிறது.

அருவாளர் என்பவர்கள் அருவாநாடு, அருவாவட தலை ஆகிய பகுதிகளில் வாழ்ந்த நாகரின் இடச்சார்பான பெயர். கி. பி. இரண்டாம் நூற்றூண்டின் நடுப்பகுதியில் சோழர் வலிமையும் ஏனைத் தமிழரசர் வலிமையும் தற்காலிகமாகச் சிலகாலம் தளர்வுற்றிருந்தது. அச்சமயம் அருவாளர் மரபினரின் கிளையினரான ஓவியர் எயிற்பட்டினத்தில் ஆண்டதுடன் மாவிலங்கையின் மன்னர்களாகவும் விளங்கினர். தமிழ்க் கவிஞருள் ஒருவர் அவர்களைப் 'பெருந்தன்மையும் துணிச்சலும் உடையவர்க' ளென்றும், 'போரில் புலியேறு போன்ற கொடுந்திறலாளர்' என்றும் குறித்துள்ளார்.[1]

மேலங்கேயின் அரசா என்று டாலமியால் குறிப் பிடப்பட்ட பஸர்நாகர் பெரும்பாலும் இந்த ஓவியராகவே இருக்கவேண்டும்.[2] டாலமி கூற்றிலிருந்து சோழர் தலை

1 சிறுபாணாற்றுப்படை அடிகள், 121-122.
2 மக்கிரிண்டிலின் டாலமி, பக்கம் 185.

நகராகிய உறையூரிலும், சோழர் குடிக்கும் நாகர் குடிக்கும் ஏற்பட்ட இனக்கலப்பின் மரபில்வந்த சோரநாகரே சோழர்களை அகற்றி ஆட்சியைக் கைப்பற்றியிருக்கவேண்டுமென்று கருத இடமேற்படுகிறது.[1] இதேகாலத்தில் இலங்கையிலும் நாகர்கள் ஆட்சியுரிமையைக் கைப்பற்றியிருந்தனர் என்று கருதவேண்டியிருக்கிறது. மகாவம்சோவினல் தரப்பட்ட கீழ்வரும் இலங்கை அரசர் பெயர்கள் இதைக் காட்டுகின்றன.[2]

| | கி. பி. |
|---|---|
| மகாலமனு அல்லது மல்லகநாகர் | 125 |
| குகனு அல்லது சந்தநாகன் | 173 |
| குடனுமா அல்லது குடநாகர் | 183 |
| குடசிரீனு அல்லது சிரீநாகர் | 184 |

பரதவர் கடற்கரையில் வாழ்ந்து மீன்பிடிப்பதாலோ, கடல்வாணிகத்தாலோ வாழ்க்கை நடத்திய நாகவகுப்பினர் ஆவர். அவர்கள் முத்தும் சங்கும் எடுக்கக் கடலில் மூழ்கினர். அத்துடன் மூழ்குமிடத்தில் சுறுக்கள் வராமல் தடுப்பதற்குரிய மந்திரமும் அவர்கள் அறிந்திருந்தனர். அவர்கள் தென்பாண்டி நாட்டில் கொற்கையைச் சூழ்ந்த இடத்திலேயே மிகவும் வலிமைமிக்கவர்களாய் இருந்தார்கள். மீனும் ஊனும் உண்டு அவர்கள் வலிமைவாய்ந்தவர்களாயிருந்தனர். விற்படை ஏந்தி அஞ்சாத் திரங்காட்டிப் போரிட்டதனுல், எதிரிகளுக்கு அவர்கள் அச்சமூட்டினர்.[3]

நாகர்கள் பல கலைகளில் திறமையுடையவர்கள். சிறப்பாக நெசவு அவர்கள் தனித்திறமாய் இருந்தது. இக்கலையில் கலிங்கநாட்டு நாகர் மிகப் புகழ்பெற்றவர்களாயிருந்ததனுலேயே, தமிழில் கலிங்கம் என்ற சொல்

1 மக்கிரிண்டிலின் டாலமி, பக்கம் 84.

2 மகாவம்சோ, மன்னர் பட்டியல்கள்.

3 மதுரைக்காஞ்சி : அடிகள், 140-144.



ஆடையைக் குறிக்க வழங்கிற்று. நம் ஆராய்ச்சிக்கு உட்பட்ட காலத்தில் பாண்டிநாட்டின் கீழ்கரையிலுள்ள நாகர்கள் மிகச் சிறந்த நெசவாளராய் இருந்தனர். ஆடைகளையும் மல்மல்போன்ற மெல்லாடைகளையும் அவர்கள் பேரளவில் ஏற்றுமதி செய்தனர். நாகர்களால் நெய்யப்பட்ட இந்த உயர்தர மல்மல் ஆடைகள் தமிழரால் மிகவும் பாராட்டப்பட்டிருந்தது. அயல்நாடுகளில் அது வியக்கத்தக்க மிகப் பெருவிலை அளித்தது.[1] நீலநாகர்களால் தனக்குப் பரிசாக அளிக்கப்பட்ட இத்தகைய விலையேறிய மல்மல் ஆடைகளுள் ஒன்றை ஆய் என்றபேர்போன வள்ளல் சிவபெருமான் சிலைக்கு அளித்ததாகத் தமிழ்க் கவிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.[2]

ஆரியர்கள் எழுத்துக்கலையை முதல் முதல் கற்றது நாகர்களிடமிருந்தேயாகும். சமஸ்கிருத எழுத்துக்கள்[3] இன்றளவும் இக்காரணத்தினுலேயே தேவநாகரி என்று அழைக்கப்படுகின்றன.

1 '''கொல்காய்' கடந்து குடாவருகிலுள்ள மற்றெரு கடற்கரை இருக்கிறது. இதிலிருந்து ஆர்கலான் என்ற பெயருடைய உள்நாட்டுப் பகுதி தொடங்குகிறது. எப்பிடோரஸ் தீவில் திரட்டப்பட்ட முத்துக்கள் இந்த ஒரு இடத்திலிருந்தே கிடைக்கின்றன. இதிலிருந்தே 'எபர்காரேடிடிஸ்' (Ebargareitidies) என்ற பெயருடைய ஒருவகை மல்மல் துணி ஏற்றுமதி செய்யப்படுகிறது'' —மக்கிரிண்டிலின் செங்கடற் பயணவிவரம், பக்கம் 140.

2 சிறுபாணுற்றுப்படை : அடிகள், 96-99.

3. இது சமஸ்கிருதத்தின் வடபுல எழுத்து முறையின் பெயர் மட்டுமே. தென்னுட்டிலும் தமிழகத்திலும் பெருவழக்காக முன்னுள் வழங்கிய எழுத்துமுறை கிரந்த எழுத்தேயாகும். 12ஆம் நூற்றுண்டில் தெலுங்கெழுத்தும், 16ஆம் நூற்றுண்டில் மலையாள எழுத்தும் சமஸ்கிருத ஒலிக்குறியீடுகளைப் புதுவதாக வகுத்துக் கொண்டபின், கிரந்த எழுத்தினிடமாகத் தெலுங்கு நாட்டில் தெலுங்கெழுத்தும், மலையாள நாட்டில் மலையாள எழுத்தும் வழங்கப்பட்டன. பிரிட்டிஷ் ஆட்சியிலேயே வடபுலங்களின் தாய்மொழிகளும் தேவநாகரியை மேற்கொண்டதால் தேவநாகரியின் செல்வாக்குப் பெருகி, அதுவே சமஸ்கிருதத்தின் எழுத்துமுறை என்ற எண்ணம் பரந்துவிட்டது. கிரந்த எழுத்துமுறை தென்னுட்டிலும் தமிழகத்திலும் மறக்கப்பட்டு விரைந்து வழக்கிறந்து வருகிறது. ஒருசில தென்னகக் கோயில் குருக்கள் தவிர அதை வழங்குபவர் இன்று அருகியுள்ளனர்.

வெண்பொன்மேனியராகிய ஆரியர்கள் காபூல் வழியாகப் பஞ்சாபில் வந்து குடியேறிய காலத்தில், ஆசிய நடுமேட்டு நிலங்களில் வாழ்ந்த மஞ்சள்நிறப் பசும்பொன் மேனியர் குழு ஒன்று திபெத்திலும் நேபாளத்திலுமுள்ள மிகப் பல கணவாய்களின் வழியாகத் தெற்கு நோக்கி வந்து கங்கைத் தாழ்நிலங்களில் குடியேறியதாகத் தெரிகிறது. இந்த மஞ்சளினத்தவரைச் சமஸ்கிருத எழுத்தாளர் இயக்கர்கள்[1] என்று குறித்தனர். பாளிமொழியில் காலக் கணிப்புக்கள் இயற்றியவர்கள் அவர்களை யக்கோக்கள்[2] என்றனர். சீன வரலாற்றாசிரியர் இவர்களையே யூக்சி[3] என்று அழைத்தனர்.[4]

இந்த மஞ்சளினத்தவர் நிலவுலகின் மேட்டு நிலங்களுக்குரியவராயிருந்ததனால், தாழ்நிலங்களில் வாழ்ந்தவர்களைவிடத் தம்மை மேம்பட்டவர்களென்று கருதினர்.

---

1. யக்ஷர்கள் (Yakshas). 2. Yakkos. 3. Yuhchi.

4. யூக்சிகள் அல்லது இயக்கர்களின் படையெடுப்பு ஆரியர் படையெடுப்புக்குச் சமகாலத்தது என்றும, தமிழக நாகர்கள் அவர்களே என்றும் மூல ஆசிரியர் கருதுவது வரலாற்றுக்கால அமைதிக்குப் பொருந்துவதாகத் தெரியவில்லை. ஏனெனில் அவர்கள் புடையெழுச்சி கி. மு. 3ஆம் நூற்றாண்டிலிருந்து கி. பி. 3ஆம் நூற்றாண்டுவரை நிகழ்ந்து வந்ததாகத் தெரிகிறது. இப்புடையெழுச்சி ஆரியர் புடையெழுச்சிக்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகள் பிற்பட்டது. ஆரியருக்கு முற்பட்டே தமிழகமட்டுமன்றி இந்தியாவெங்கும் இலங்கையிலும் பர்மிய எல்லைவரைப் பரந்திருந்ததாகத் தெரிகிற நாகர்களின் நாகரிகப் பரப்பை இது விளக்கமாட்டாது. நேர்மாறாக, கி. பி. 1 ஆம் நூற்றாண்டில் எழுந்த சகர் ஆட்சியையும், 3ஆம் நூற்றாண்டில் வடக்கே எழுந்த பார்த்திய பஃலவர் படையெடுப்பையும், அதேசமயம் அதன் தெற்கு நோக்கிய தாக்குதலால் ஏற்பட்ட தமிழகத்தின் களப்பிரர் எழுச்சியையுமே அது உண்மையில் விளக்குவதாகும்.

நாகர்கள் தமிழராகவே தமிழகத்தில் வாழ்ந்தனர். எங்கும் வேறு இனமொழிக்குரியரென்ற பேச்சும் ஏற்படவில்லை. தனியினமாகவே வாழ்ந்தனர். ஆகவே, அவர்கள் கடல்கொண்ட தமிழகத்திலோ, தமிழகம் சூழ்ந்த நிலத்திலோ இருந்த தமிழினப் பிரிவினர் என்றும், கடல்கோளின் பயனாகவோ வேறு காரணங்களாலோ எங்கும் பரந்தவர் என்றும் கருத இடமுண்டு. இது இன்னும் ஆராயத்தக்கது.



ஆகவே, 'தெய்வ புத்திரர்கள்' அல்லது வானவர் சேய்கள் என்ற பெயரை அவர்கள் புனைந்துகொண்டனர். அறிவுப்பண்பிலும் ஒழுக்கப் பண்பிலும் மேம்பட்ட ஒரு இனத்தினராகவே அவர்கள் விளங்கினார்கள். நாளடைவில் அவர்கள் வங்காள முழுவதும் பரவி, அங்கிருந்து கடல்வழியாகத் தென் இந்தியாவுக்கும் இலங்கைக்கும் வந்திருக்கவேண்டும்.

இராமாயணம் இயற்றப்பட்ட காலத்தில் இயக்கர்கள் இந்தியாவின் தென்கோடிவரை பரவிவிட்டனர். அவ்விதிகாசத்தில் அவர்கள் இலங்கைக்கெதிரேயிருந்த கடற்கரையில் வாழ்ந்ததாகக் குறிப்பிடப்படுகிறார்கள்.[1]

"பின்னர்த் தண்புனற் காவிரியின் தடம்
மின்னும் வானவர் நங்கையர் ஆடிடத்
தன்னின் ஈர்க்கும் தனிநலம் வாய்ந்திடு
நன்னர் மாநிலம் நண்ணுதிர் ஆங்கணே!

..................................................

"ஆங்கு நின்றும் அகன்றதன் பின்னரே
பாங்கிற் பாண்டியர் முத்துப்பொன் பாவிய
ஓங்கு வாயில் கடத்திர்! பின் ஆர்கலி
தீங்கில் நோக்கம் திறம்படச் சேறிரே!

"கடலின் ஆங்கண் அகத்தியன் ஆணையால்
திடங்கொள் தாளில் திரைகளை எற்றியே
அடங்கொண் டேமுகில் வண்ண மளாவிவான்
இடங்கொள் வில்லென நிற்கும் மகேந்திரம்!

"வியன்கொள் பூங்கொடி மேவிடப் பன்மரம்
மயங்க ஓங்கிடும் அம்மலைச் சாரலின்
வயங்கு நீழலில் வானவர் மாதரார்
இயங்கக் காண்பிர், இயக்கர்தம் சூழலே!"

---

1 வால்மீகி இராமாயணம் கிரிஃவித்ஸ் (Griffths) மொழிபெயர்ப்பு : காண்டம், IV படலம் XII.

1. "Then will you see Kaveri's stream
Whose pleasant waters glance and gleam

கி. மு. 5 ஆம் நூற்றாண்டில் வங்கத்திலிருந்து ஆரியரின் முதல் குடியேற்றம் விஜயன் தலைமையில் இலங்கையில் இறங்கியபோது, அவன் அத்தீவு இயக்கர்களின் கைவசம் இருப்பது கண்டான். அவன் முதல் முதல் மணந்து கொண்டதும் குவேணி[1] என்ற இயக்க இளவரசியையே.

இந்த மங்கோலிய இனத்தவரின் மிகப் பெரும்பாலானவர் கங்கைக் கடல் முகத்தினருகிலிருந்த பெரிய வாணிகக் களமான தாமலித்தியிலிருந்தே[2] தென் இந்தியாவுக்குக் குடிகிளம்பி வந்தனர்.[3] தமிழரைவிட மிகப் பழமைவாய்ந்த தெக்கண் வாழ்நரிடையே 'தமிழர்' குழுவின் மொத்தப் பெயராக வழங்கப்பட்ட ''தமிழர்' என்ற சொல்லின் விளக்கம் இதுவே. 'தமிழ்' என்றபெயர் இங்ஙனமாகத்

And to the lovely banks entice
The sportive maids of paradise
...... ......... ......................................
Thence hasting on your way behold
The Pandyas' gates of pearl and gold;
Then with your task maturely planned,
On ocean's shore your feet will stand.
Where, by Agastya's high decree
Mahendra, planted in the sea
With tinted peaks against the tide
Rises in solitary pride,
And glorious in his golden glow,
Spurns back the waves that beat below!
Fair mountain, bright with creepers' bloom
And every tint that trees assume
Where Yaksha, God and heavenly maid
Meet wandering in the lovely shade."

1. Kuveni. 2. Tamalitti.

3 இது தாம்ரலிப்தி (Tamralipti) என்ற சமஸ்கிருதச் சொல்லின் பாளிவடிவமேயாகும். அது இன்று தம்ளக் (Tamluk) என்று வழங்கப்படுகிறது கங்கையின் கடல்முகக் கிளையான ஹூக்ளி ஆற்றுடன் ரூப்நாராயண் ஆறு சென்று கலக்குமிடத்திலிருந்து ஆற்றின் முகடுநோக்கி 12 கல் தொலைவில் அவ்வாற்றின் ஒர் அகல்வளைவின் அருகே அது அமைந்துள்ளது. மக்கிரிண்டிலின் டாலமி, 170.



'தாமலித்திஸ்' என்ற பெயரின் ஒரு மரூஉவாகவே காணப்படுகிறது. வாயு புராணத்திலும் விஷ்ணு புராணத்திலும் கோசலர், ஒட்ரர் ஆகியவருடன் வங்கத்திலும் அதனையடுத்த கடற்பகுதியிலும் புதிதாகவந்து குடியேறியவர்களாகவே தாம்ரலிப்தர்கள் குறிக்கப் பெறுகிறார்கள்.[1]

தென் இந்தியாவின்மீது படையெடுத்து வென்ற மங்கோலிய மரபினரில் மிகப் பழமையானவர் மாறர் என்று தோற்றுகிறது. இம்மரபின் தலைவன் இதுமுதல் தென் இந்தியாவில் குடியேறிய மிகப் பழமையானவர்களின் தலைவன் என்ற முறையில் 'பழையன்' அதாவது மிகப் பழமை வாய்ந்தவன் என்று அழைக்கப்பட்டான்.[2] இப் பழையன் மாறனின் தலைநகரம் மோகூர். இதன் திட்டமான இட அமைப்பை என்னால் வரையறுத்துக்கூற முடியவில்லை. அது குமரிமுனைக்கு அருகாமையில் குமரிமுனையின் பக்கத்தில் ஏதோ ஓரிடத்தில் இருந்ததாகத் தெரிகிறது.[3] பாண்டிய அரசன் தன்னை ஒரு மாறன் என்றும் மீனவர் கோன் அல்லது மீனவரின் அரசன் என்றும் குறித்துக் கொண்டான். மாறன் என்ற இப்பெயர் கி. பி. முதல் நூற்றாண்டுக்குமுன் பர்மாவைவென்ற 'ம்ரான்மர்'[4] என்ற மரபே என்று கூறத்தகும். பாளியில் எழுதப்பட்ட பர்மிய வரலாறுகளில் அந்நாடு மாரம்மதேசம்[5] என்றே அழைக்கப்படுகிறது.

1 விஷ்ணு புராணம், ஏடு 4, இயல் XXIV.

2 மதுரைக் காஞ்சி அடி 508.

3 மாமூலனார் : அகம் பாட்டு, 250.

4 Mranmar.

5 ''ஸர் ஆர்தர் ஃவேயர் (Sir Arthur Phayre) ம்ரான்ம என்ற சொல்லை ப்ரஹ்மா என்ற சொல்லிலிருந்து தருவிக்கிறார் (அவரது பர்மா வரலாறு : பக்கம் 2 பார்க்க). பர்மியர்களைக் குறிக்கும் பெயரின் சரியான சொல் மூலமும் பொருளும் இன்னும் முடிவாக வரையறுக்கப்படவில்லை. ம்ரான்மர் என்ற சொல் பர்மிய வரலாற்றில் கி. பி. முதல் நூற்றாண்டு வரை கேட்கப் படாத ஒன்று. மார்க்கோ போலோவின் விரிவுரையில்'' மியன் அரசு (Kingdom of Mien) என்றே பர்மா சுட்டப்

*தமிழினப் படையெடுப்பாளரின் அடுத்த மரபு திரையர் அல்லது கடலரசர் ஆகும். அவர்கள் ஒரு பெருங் கடலோடி இனம். அவர்கள் தாயகம் வங்கத் தாழ்நிலம் என்று தோன்றுகிறது. அவர்கள் கடல் வழியாகப் பர்மா, கொச்சின்சீனா, இலங்கை, தென் இந்தியா ஆகிய இடங் களில் பரவினர். இம்மரபின் அரசருள் ஒருவன் கரிகால சோழன் சமகாலத்தவனாக, காஞ்சி அல்லது தற்காலக் காஞ்சிபுரத்தில் திரையன் என்ற பெயருடன் ஆண்டான். இந்துபுராணக் கதையின்படி ஆழியில் பள்ளிகொண்ட திரு மாலின் வழிவந்தவனென்று அவன் உரிமை கொண்டாடி னான்*[1]

*சோழ அரசர்களும் இதே மரபுக்குரியவர்களே. தாம் கதிரவன் மரபினர் என்று அவர்கள் பெருமை கூறிக் கொண்டது இந்த அடிப்படையிலேயே. கி. பி. முதல் நூற்றாண்டுக்குரிய தமிழ்நூல்களில் குறிப்பிடப்பட்ட சோழ அரசர்களில் மிகப் பழமையானவன் முசுகுந்தன். இந்திரன் தலைநகரமான அமராவதியை அசுரர்கள் முற் றுகையிட்டபோது, அவன் அதைக் காத்ததாகவும், அந் நன்றிக்குக் கைம்மாறாக இந்திரன் அவனுடன் அனுப்பி வைத்த ஐந்து பூதங்களின் உதவியால், அவன் காவிரிப் பூம்பட்டினத்திலுள்ள நாகர்களைக் கொன்று அந்நகரைக் கைப்பற்றினானென்று அறிகிறோம்.*[1]

படுகிறது. சீனர்களிடையே பர்மியர்கள் மியனியர் (the Miens) என்றே வழங்கப் பெறுகின்றனர். மற்றும் 'ஷான்' மரபினர்களால் அவர்கள் மான்கள் (the Man) என்று சுட்டப்படுகின்றனர். மங்கோ லியர்களைச் சுட்டியழைக்கச் சீனர்கள் வழங்கிய பெயரே இது. பாளியில் எழுதப்பட்ட பர்மிய வரலாறுகளில் அந்நாடு மாரம்ம தேசம் என்று குறிக்கப்பட்டது. ஸர் ஆர்தர் ஃவேயரின் விளக்கம் சரிஎன்று கொண்டால், 14, 15ஆம் நூற்றாண்டுகளில் புலமை வாய்ந்த குருமார் தம் நாட்டினத்தைக் குறிக்கக் கல்வெட்டுக்களில் மட்டுமேயன்றி, இலக்கிய ஏடுகளில்கூட பொதுவழக்கான பிரஹ்ம என்ற பெயரை விடுத்து மாரம்மா என்ற அயலினப் பெயரை ஏன் சூட்டிக் கொண் டார்கள் என்று அறிவது அரிதாகியுள்ளது.'' தாஸியூகோ, இந்தியப் பழமை ஏடு, (Taw Seia ko : Indian Antiquary) ஏடு XXII, பக்கம் 8.

1 பெரும்பாணாற்றுப்படை : அடிகள் 29—37.



*வெற்றிபெற்ற தமிழர் அந்நகருக்குச் சம்பாபதி என்று பெயரிட்டனர். இது பெரும்பாலும் அவர்கள் முதலில் தங்கியிருந்து வெளியேறிய இடமான (தற்கால பகல்பூர் நகருக்கு அருகாமையில் அமைந்திருந்த, வங்கத்தின் பண் டைத் தலைநகரான) சம்பா நகரின் பெயரைப் பின்பற்றி எழுந்த வழக்காகவே இருக்கக்கூடும்.*

*நாகர்களை வென்ற முதற்சோழ அரசன் முசுகுந்தனே என்பது பற்றி ஐயம் எழுதற்கும் இடம் இல்லை. திரையரின் சமஸ்கிருதப் பெயர் சாகரகுலர் என்பதே. தொண்டை நாட்டின் பண்டை அரசர் சாகர குலத்தினரே. ஆனால் பிற்காலப் பல்லவர் தம்மைப் பாரத்துவாஜ கோத்திரத் தினர் என்று குறித்துக் கொண்டனர்.*[2] *கி. பி. 16ஆம் நூற்றாண்டு வரையில்கூட, (தற்காலச் செங்கற்பட்டு, வட ஆற்காடு மாவட்டங்களைச் சார்ந்த தொண்டை மண்டலப் பகுதியில் வாழ்ந்த திரையர் குடியினர் கீழ்வரும் பெயர் களுடன் விளங்கினர்.*[3]

*பங்கள திரையர்—வங்கத்துக்குரிய திரையர்.*

*சீன திரையர்—சீனாவுக்குரிய திரையர்— இங்கே சீனா என் பது பெரும்பாலும் கொச்சின் சீனாவாகவே இருக்கக் கூடும்.*

*கடார திரையர்—கடாரம், அதாவது பர்மாவுக்குரிய திரையர்.*

*சிங்கள திரையர்—இலங்கைக்குரிய திரையர்.*

*பல்லவ திரையர்—பல்லவத்துக்குரிய திரையர்.*

1 சிலப்பதிகாரம், V, அடிகள், 95—97, VI, 14—17; மணி மேகலை, I, 19—24.

2 Epigraphia Indica, (இந்திய எழுத்து மூலகங்கள்) பகுதி I, பக்கம் 2.

3 தொண்டை மண்டலப் பட்டயம்.

தமிழரின் இன்னொரு மரபினர் வானவர் அல்லது வானகத்துக்குரியவர். இவர்கள் பெரும்பாலும் வங்கத்துக்கு வடக்கிலுள்ள ஒரு மலை நாட்டுப் பகுதிக்குரியவராயிருக்கவேண்டும். ஆகவே தென் இந்தியாவில் தங்கிய போதும் அவர்கள் கொல்லிமலை (சேலம் மாவட்டம்), மேற்குத் தொடர், நீலகிரி போன்ற மலைப் பகுதிகளில் தங்கள் வாழ்வகத்தை வகுத்துக் கொண்டனர். அவர்கள் இமய மலையில் வாழ்ந்த வானவருடன் உறவு கொண்டாடினர்.[1] இந்தப் பிறப்புத் தொடர்பைக் குறிக்கும் முறையில் அவர்கள் வானவரம்பன் அல்லது இமயவரம்பன் என்ற பட்டத்தை மேற்கொண்டனர்.[2]

சேர அரசர்களேயன்றி முதிரமலைக் கோமான் நன்னன்,[3] அழும்பில்வேள்[4] ஆகிய பிற மலைப்பகுதித் தலைவர்களும் தங்களை வானவிறல்வேள் அல்லது வானவர் கோமான்கள் என்று குறித்துக் கொண்டனர்

சேர அரசர்களில் ஒருவனான செங்குட்டுவன் மகதப் பேரரசராகிய கர்ணர்களுடன் மிக நெருங்கிய நட்புத் தொடர்பு கொண்டவனாய் அவர்கள் உதவியுடன் இமய மலையருகிலுள்ள ஆரியர்களை எதிர்த்துத் தாக்கினான்.[5] மாட்சிமிக்க ஆந்திரர் குடியைச் சேர்ந்த கர்ணர்கள் கிறிஸ்தவ ஊழியின் முதல் இரண்டு நூற்றாண்டுகளில் மகதத்தை ஆண்டார்கள். அவர்கள் மூன்று கலிங்கங்களின் கோமான்களாயிருந்தனர். அவை இப்பால் தெலுங்கு நாட்டையும் வங்க விரிகுடாவுக்கு அப்பால் வங்கம் கடந்து அரக்கானையும் உட்கொண்டவையாயிருந்தன.[1]

கட்டடக்கலை ஆராய்ச்சிப் பேரறிஞரான திரு. ஃவெர்குஸன்[2] தென் கன்னடத்திலும் மலபாரிலும் உள்ள சிற்பத்

1 சிலப்பதிகாரம் XXV, அடிகள் 1—3

2 பதிற்றுப் பத்து : பாட்டுக்கள், 11—20: முதலாம் இமயவரம்பன் என்ற நெடுஞ்சேரலாதனைப் பாடுபவை. பாட்டுக்கள் 31—40: முதலாம் வானவரம்பன் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலைப் பாடியவை. பாட்டுகள் 48-50: இரண்டாம் இமயவரம்பன் செங்குட்டுவனைப் பற்றியவை. பாட்டுக்கள் 51—60 இரண்டாம் வானவரம்பன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் குறிப்பிடுகின்றன.

3 மலைபடுகடாம் அடி 164. உரையாசிரியர் நச்சினார்க்கினியர் வானவிறல் வேள் என்ற தொடருக்கு மானவிறல்வேள் என்று மாறுபடு பாடம் கொள்கிறார்.

4 மதுரைக் காஞ்சி அடிகள், 344—345.

5 சிலப்பதிகாரம் XXVI, அடிகள் 148—149, 176—178.



1. தாயக வரலாற்றேடுகளில் சூத்திரகன் கர்ணதேவன் அல்லது மகாகர்ணன் எனப்படுகிறான். இவ்வரசனால் அளிக்கப்பட்ட பட்டயம் ஒன்று அண்மையில் காசியில் அகழ்ந்து காணப்பட்டுள்ளது. இதில் அவன் முக்கலிங்கங்களின் கோமான் என்று குறிக்கப்படுகிறான். இது வழக்கமான கீழ் திசையாளரின் மிகையுரையாய் இல்லையென்று கொள்வதனால், அதன்படி மகதப் பேரரசனாகிய கர்ணன ஆட்சி தெலுங்குக் கரையை ஒருபுறமும், வங்கக் கடலின் மறுகரையில் அரக்கானை மற்றொரு புறமும் அளாவி, இடையே வங்கக் கரையையும் உள்ளடக்கியதாய் இருந்திருக்க வேண்டும். ஏனெனில் வரலாற்றாசிரியர் விளக்கப்படி முக்கலிங்கப் பரப்பு இதுவே.

18 ஆண்டு ஆட்சியின்பின் அவன் உடன்பிறந்தான் அவனிட்மாகப் பட்டத்துக்கு வந்தான் மரபு முதல்வருக்குப் பின் அடுத்தடுத்து அறுவர் ஆட்சி செய்தனர். அவர்கள் அனைவரும் ஒரே மரபுப் பட்டப்பெயர் கொண்டிருந்ததனால், ஏழு கர்ணர் எனக் கேள்வி மரபில் குறிக்கப் ட்டனர். உரு விளக்கமற்ற இம்மரபு பற்றி அறிய நமக்கு எந்தத் தகவலும் கிட்டவில்லை. ஆயினும் இந்தியாவில் மட்டுமின்றிக் கிழக்கிந்தியத் தீவுகளிலும் கர்ணனின் பெயருக்கிருக்கும் ஆர்வ மதிப்பு மிகப் பெரியது. இதைப் பார்க்க இக் கர்ணர்கள் கடற்கரையின் மூன்று பக்கங்களுக்கும் மேலுரிமையாளராய் இருந்ததனால் ஒரு கடற்படையை உருவாக்கி, அதன் மூலம் தொலை கிழக்கில் தங்கள் ஆற்றலை நிலைநிறுத்தியிருந்தனர் என்று கருத இடமுண்டு.

பொது வழக்கிலே, கொடையில் தாராள மனப்பான்மையுடைய எவரையேனும் குறிக்கும்போது, மக்கள் அவரைக் கர்ணனுக்கு ஒப்பிடுகின்றனர். இத்தகைய தறுவாய்களில், அவர்கள் மகாபாரதத்திலுள்ள பழைய கர்ணனைக் குறிக்கிறார்களென்று கருதுவதைவிட, மகதத்தின் அண்மை வரலாற்றில் காணும் கர்ணனைக் குறிக்கிறார்களென்று கருதுவதே இயல்பானதென்று நான் எண்ணுகிறேன்.

2. Mr. Fergusson : ஆந்திரப் பேரரசின் இறுதி நாட்களில் அவர்கள் சீனத்துடன் தொடர்ச்சியான உறவு கொண்டிருந்ததாகத் தெரிகிறது. ஒரு தடவை சீன அரசியலார் இந்தியாவில் எழுந்த ஒரு கிளர்ச்சியை அடக்க அவர்களுக்குப் படையுதவி அனுப்பித் தந்தனர்

துக்கும் நேபாளத்திலுள்ள சிற்பத்துக்கு மிடையேயுள்ள வியத்தகு பொருத்தத்தைக் கூர்ந்து நோக்கிக் கீழ்வருமாறு எழுதினர்:

"வடக்கிலுள்ள முறைகளுடன் மிக நெருக்கமான தொடர்புடைய கூறு இங்கே தாழ்வாரங்களுக்குமேலுள்ள மோட்டின் இறைவாரங்களே யாகும். நேபாளத்துக்குத் தெற்கே வேறெங்கும் இவ்வொற்றுமை இருப்பதாக எனக்குத் தெரியவரவில்லை. அது மிகத் தனிப்பட்ட முறையாயிருப்பதால், அது பார்த்துப் பின்பற்றத் தகுவதேயன்றி மறுமுறை மீண்டும் புதுவதாகக் கண்டு புகுந்தது என்று கூற இயலாதது. ஆனால் நேபாளத்துக்கும் திபெத்துக்கும் கன்னடத்துக்கும் இடையே எப்போது, எவ்வாறு, எத்தகைய தொடர்பு ஏற்பட்டிருந்தது என்பது பற்றித் தொலை நேர்வான எத்தகைய ஊகத்தையுங்கூட என்னால் குறிக்க முடியவில்லை, ஆனால் அத்தகைய தொடர்பு இருந்திருக்க வேண்டுமென்பதில் ஐயமில்லை."

அவர் மேலும் குறிப்பிடுவதாவது:

"உண்மையில் (மலபாரைச் சார்ந்த)நாயர்கள், (நேபாளத்தைச் சார்ந்த) நேவர்கள்[1] ஆகிய இந்த இரு மரபினர்களையும் போல, புத்தார்வமூட்டும் சுவைகரமான பொது இனக் கூறுகளையுடைய வேறு இரண்டு இந்திய இனங்களைக் குறிக்க முடியாது. ஏனெனில் பெண்கள் கற்பு நெறி பற்றிய ஒரு விசித்திரக் கோட்பாடு இருவருக்கும் பொதுவாக உள்ளது. சிற்ப முதலிய பிற தனிப்பட்ட பண்பாடுகளின் ஒற்றுமையுடன் இதனை இணைத்தால், இருவரின் பொது இனத் தொடர்பு மிகவும் வலியுறவு பெறுகிறது.

"பெயர் ஒற்றுமை ஒன்றில் மட்டும் எதுவுமில்லை என்றே நானும் எண்ணுகிறேன். ஆனால் சிற்ப ஒற்றுமை

என்றும் அறிகிறோம். மார்ஷல்: இந்திய வரலாறு: பக்கம் 63; டாக்டர் பாண்டர்கார்: முற்காலத் தெக்காண வரலாறு: பக்கம் 25.

1. Newars.



யுடன் பழக்க வழக்க ஒற்றுமைகளையும் சேர்த்தால் தொடர்பில் எனக்கு உறுதியான நம்பிக்கை ஏற்படுகிறது."[1]

திரு. ஃவெர்குஸனின் கலைத்துறை இயற்கை யுணர்வு சுட்டிக் காட்டிய இன ஒற்றுமை பண்டைத் தமிழ்க் கவிஞர்களின் சான்றினால் உறுதி பெறுகிறது. நேபாளத்துக்கும் மலபாருக்கும் இடையேயுள்ள தொடர்பு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இணைப்பறுபட்டுப்போன ஒன்றாகும். இங்கிலையில் அதன் சின்னங்கள் பின் கூறப்பட்ட நாட்டின் மொழியிலும் பழக்க வழக்கங்களிலும் சிற்ப முறைகளிலும் இருபது நூற்றாண்டுகள் கழிந்து இன்றும் நிலவுவது வியப்புக்குரிய செய்தியேயாகும்!

மரான்மர், திரையர், வானவர் ஆகிய மூன்று தமிழ் மரபினரும் பாண்டிய, சோழ, சேர அரசுகளென்றுபின்னாட்களில் வழங்கிய அரசுகளை நிறுவினர்.[2] கி. மு. 3ஆம் நூற்றாண்டில் வரையப்பட்ட மகதப் பேரரசன் அசோகன் கல்வெட்டுக்களிலிருந்து மூன்று தமிழரசுகளும் அவன்

1. இந்தியக் கீழ்த்திசை நாட்டுச் சிற்ப வரலாறு: திரு. ஃவெர்குஸன்: பக்கம் 270, 375.

2. புராண ஆசிரியர்கள் இவ்வுண்மையை எப்படியும் மறைக்க முயன்று, பாண்டிய சேர சோழரை ஆரிய அரச மரபினர் என்று குறிப்பிட்டுள்ளனர். "ஹரிவம்சமும் அக்னி புராணமும் பாண்டியர், சோளர், கேரளர், கோலர் ஆகியவர்களைப் புரு மரபினனான துஷ்யந்தனின் கொள்ளுப் பேரராக்கியுள்ளன. ஆயினும் விஷ்ணு புராணத்தில் விவரமாகக் குறிக்கப்பட்ட துஷ்யந்தனின் மரபினரில் இவர்கள் இடம் பெறவில்லை. இப்பெயர்களைப் பிற்காலத்தவர்களே இடைப் புகுத்தியிருக்க வேண்டும் என்று தோற்றுகிறது. மற்றும் ஹரிவம்சம் தன் குறிப்புடன் தானே முரண்பட்டுப் பாண்டியரையும் சோழரையும் சகரனால் வருணப்படியில் தாழ்த்தி விடப்பட்ட க்ஷத்திரிய மரபினருள் சேர்க்கிறது. பத்ம புராணமும் இராமாயணத்தில் தரப்பட்ட அம் மரபினரின் பட்டியலுடன் இது போன்ற ஓர் இணைப்பைச் சேர்ந்துள்ளது: பேராசிரியர் எச். எச். வில்ஸன்: பாண்டிய அரசு பற்றிய வரலாற்று விளக்கம் (Prof. H. H. Wilson's Historical Sketch of the Pandyan Kingdom.) மன்னுரிமை ஆசியக் கழக காளேடு (Journal of the Royal Asiatic Society) ஏடு III, கட்டுரை IX, பக். 199.

காலத்திலிருந்தன என்றும், அவன் ஆட்சியுரிமைக்கு அவை உட்பட்டிருக்கவில்லை யென்றும் அறிகிறோம்.[1]

தமிழகத்தில் குடி புகுந்தவருள் கடைசியானவர் கோசர்கள். அவர்கள் பழையன் மாறன் தலைநகரான மோகூரைத் தாக்கினர்களென்றும், அதில் முறிவுற்றதன் காரணமாக, வம்பமோரியர் அதாவது முறைகெட்ட மோரியர் அவர்கள் உதவிக்கு வந்து பொதிய மலைமீது தங்கள் அணிநெடுந்தேரை ஓட்டினர் என்றும் கூறப்படுகிறது.[2] இதிலிருந்து கோசரின் குடியேற்றம் கி. மு. 3 அல்லது 2ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்ததென்று தோற்றுகிறது. ஏனெனில் அப்போதுதான் முறைகேடான மோரியர் மகதத் தவிசேறினர். கோசர் நான்கு வெவ்வேறு நகர்களிலிருந்து வந்ததனால் நாலு வெவ்வேறு மொழிகளைப் பேசினர் என்று கூறப்படுகிறது.[3] அவர்கள் வீரமிக்கவர்கள். வாய்மையின் மதிப்பில் அவர்கள் பேர்போனவர்கள்.[4] முதல் நூற்றாண்டில் அவர்கள் கொங்கு நாட்டையே (தற்காலக் கோயமுத்தூரையே) ஆண்டார்கள்.[5] பாண்டியர் ஆட்சியில் அவர்கள் பழையன்மாறன் ஒருவனுக்கே அடுத்தவரான தலைசிறந்த குடியுரிமையுடையவராக மதிக்கப்பட்டிருந்தனர்.[6] அவர்கள் தென்பாண்டி நாட்டையும் சோழநாட்டையும் தாக்கிப் படையெடுத்தார்கள். ஆனால் மன்னர் திதியனும்[7] கிள்ளியும்[8] அவர்களை முறியடித்துத் துரத்தினர்.

---

1 இந்தியப் பழைமை ஏடு (Indian Antiquary) ஏடு XX, பக் 242

2 மாமூலனார் : அகம் 250.

3 மதுரைக் காஞ்சி, அடிகள் 508—509.

4 தொல்காப்பியம், தாமோதரம் பிள்ளை பதிப்பு, நச்சினார்க்கினியர் உரையின் மேற்கோள் பழம்பாடல் பக். 329.

5 சிலப்பதிகாரம், உரைபெறு கட்டுரை.

6 மதுரைக் காஞ்சி அடிகள், 772—774.

7 பரணர் : அகம் 195.

8 நக்கீரர் : அகம் 204.



கனிஷ்கன்
குஷானியர் மன்னன்
(கி. பி. 78—106)

கோசர் என்பவர் குஷான்களேயன்றி வேறல்லர். இவர்களில் ஒரு கிளை கி. மு. 2ஆம் நூற்றாண்டில் பாக்டிரியாவையும், கி. மு. 1ஆம் நூற்றாண்டில் இந்தியாவின் வடமேற்குப் பகுதியையும் வென்று கைக்கொண்டார்கள். அவர்கள் யூச்சி மரபின் நான்கு கிளைகள். அதாவது ஆசியாய், பசியனாய், தாக்கராய், சகரௌலாய்[1] ஆகியவற்றின் தலைவர்கள் ஆவர்.[2] அவர்கள் பெருந்தெய்வம் சிவபெருமான். கனிஷ்கனின் நாணயங்களிலிருந்து[3] இதைக் கண்டுணரலாம்.[4]

தென் இந்தியாவினுள் தமிழகக் குடியேற்றத்தார் தனித்தனி மரபினராக, வெவ்வேறு நீண்ட இடையீடுடைய காலங்களில் வந்ததனாலும், தொகையில் பழங்குடியினரான நாகர்களையும் திராவிடர்களையும் விட மிகக் குறைந்தவர்களாயிருந்ததனாலும்,[5] அவர்கள் பழைமை வாய்ந்த திராவிட மொழியையே மேற்கொள்ள நேர்ந்தது. நாளடைவில் அவர்கள் அதை மாற்றித் திருத்தம் செய்து இப்போது தமிழ் என்று அழைக்கப்படும் மொழியாகச்

---

1. Four tribes of the Yuh-chi i. e. the Asioi, the Pasianoi, the Tocharoi and the Sakarauloi.

2 ஸ்ட்ராபோ, XI, viii, 2.

3. ஆசிரியர் வாதத்தின் முரண்பாடு இங்கே பெரிது. கனிஷ்கனும் அவன் பின்னோரும் சைவர்களானது சேரன் செங்குட்டுவன் படையெடுப்பின் பின்னரே. கனிஷ்கன் புத்த நெறியினன். அவன் முன்னோர்கள் இதற்கு முற்றிலும் அயலான நெறியினர்கள்.

4 ஆர். எஸ். பூல் (R. S. Poole) : பாக்டிரியா, இந்தியா முதலிய ஆசிய நாடுகளின் கிரேக்க, சித்திய அரசர்கள் நாணயங்களின் பட்டியல் பக். XI.

5. மூல நூலாசிரியர் இங்கே தமிழைத் திராவிட மொழிகளுள் ஒன்று என ஏற்றுக்கொண்டு, அது நாகர் முதலிய பழங்குடி மக்கள் பேசிய தமிழ் என்றும், தமிழர் என்ற பெயருடைய குடியினர் வந்தேறிக் கலந்து மொழிக்கு அப்பெயர் தந்தனர் என்றும் ஒரு புதிய கோட்பாட்டை உருவாக்கியுள்ளார் இது ஆதாரமற்றது என்று இப்போது தெளிவுபட்டு விட்டாலும், இக்கோட்பாட்டுக்கு ஆதாரமாக ஆசிரியர் கூறும் தொடர்புக் கூறுகள் பின்னும் சிந்திப்பதற்குரியனவே என்னலாம்.



செப்பம் செய்தார்கள். ஏனைத் திராவிட மொழிகளிலோ[1] சமஸ்கிருதத்திலோ இல்லாத சிறப்பொலியான ‘ழகரம்’ இத்தமிழ்க் குடியேற்றத்தாரால் கொண்டுவரப்பட்டதேயென்பதில் ஐயமில்லை. இவ்வெழுத்துத் திபெத்திய மொழிகள் சிலவற்றிலேயே இடம்பெற்றுள்ளன என்று அறிகின்றோம். தமிழ்க் குடியேற்றத்தாரின் மூலத்தாயகம் திபெத்திய மேட்டு நிலத்திலேயே இருந்திருக்க வேண்டும் என்பதை இது காட்டுகிறது.

அவர்கள் ஆரிய மரபுத் தொடர்புடையவர்களல்லர் என்பதில் ஐயமில்லை. இதற்கு ஆரியர் வகையில் அவர்கள் தொடர்ந்து காட்டி வந்த எதிர்ப்புணர்ச்சியே யன்றிப் பிறசான்றுகளும் உண்டு. பண்டைய சமஸ்கிருத நூல்

---

1. ழகரம் ஏனைத் திராவிடமொழிகளில் இல்லை என்று ஆசிரியர் கூறுவது சரியன்று. மலையாளத்தில் இன்றளவும் உள்ளது. மலையாளிகள் அதைத் தமிழரைவிடத் திருத்தமாகவும் இட வேறுபாடின்றியும் ஒலிக்கின்றனர். மலையாள நாட்டைப் பண்டைத் தமிழகத்தில் சேர்த்தாலும்கூட, தெலுங்கு கன்னடம் பிரியுமுன் கி. பி. 7-8ஆம் நூற்றாண்டுகளிலுள்ள தெலுங்கு - கன்னடக் கல் வெட்டுக்களால் ழகரவொலிக்குத் தமிழைப் போலவே தனிக் குறியீடு (ೞ) இருந்ததாக அறிகிறோம்.

திராவிட மொழிகளில் மட்டுமன்றி வட இந்திய இனமொழிகளிலும் இவ்வொலி இருந்திருக்க வழியுண்டு. இந்துஸ்தானியில் சமஸ்கிருதத்திலில்லா இரு டகரங்கள் இன்னும் பல மாகாணங்களில் அகோரமாக ஒலிக்கப்படுகின்றன. இவை இந்தியில் புள்ளியிட்டே எழுதப்படுவன ड़, ढ़; உருதுவிலும் அரபு - பாரசிகத்திலில்லா எழுத்துக்களே. அவை வழக்கம் போலப் புள்ளிகளைக் கூட்டி, : : என்றும் அதனுடன் மெல்லாய்த அல்லது ‘ஹ’ ஒலி சேர்த்தும் எழுதப்படுகின்றன. அவற்றின் மூல ஒலிக் குறிப்பு ழகரமே என்று கருத இடமுண்டு. தெலுங்கில் பிற்காலங்களில் டகரமாக மாறிய இந்தப் பண்டைய திராவிட ழகரம், வடஇந்தியாவில் இன்னும் முற்பட்டே இந்த டகரமாகச் சில மாகாணங்களில் மாறி இருக்கலாம். ஒலி மாறுபடாத மாகாணங்களிலேயே அது மூல ஒலிப்புடன் ஒலிக்கப்படுவதாகலாம்.

திராவிட மொழிகள் பற்றிய மட்டில் ஆசிரியர் வாதம் தவறானாலும், தமிழ், திபெத்து மொழி ஒற்றுமை இன்னும் சிந்தித்தற்குரியதே யாகும்.

களில் திராவிடர் ஓர் அயலின மக்களாகவே குறிக்கப்படுகின்றனர்.[1]

ஆரியர் வருமுன்பே தமிழினத்தவர் உயர்படி நாகரிகம் அடைந்திருந்தனர். இதைத் தமிழ்மொழியே உறுதியாக நிலைநாட்டப் போதியது. தூய தனித்தமிழ்மொழி சமஸ்கிருதச் சொற்களைக் கடன்பெறாமலே நன்கு வளரத்தக்க சொல்வளமும் சொல்திட்பமும் உடையதாயிருக்கிறது. உண்மையில் பண்டை இலக்கிய ஏடுகளிலே, இசை, இலக்கணம், வானூல் ஆகியவை மட்டுமன்றி, உயர் கருத்தியல் விளக்கத் துறைகள் சார்ந்த சொற்கள்கூடத் தூய தனித் தமிழ்ச் சொற்களாய் இயல்கின்றன. பார்ப்பனரோ மற்ற ஆரியக் குடியேற்றத்தாரோ வருவதற்கு நெடுநாள் முன்னரே இந்த நூல்துறைகள் தமிழரால் பேணி வளர்க்கப்பட்டன என்பதை இது காட்டுகிறது. இந்த உயர் துறையறிவுகளைத் தமிழர் பெரும்பாலும் வங்காள மூலமோ பர்மா மூலமோ சீனாவிலிருந்து பெற்றிருக்கக் கூடும். ஏனெனில் வங்கம், பர்மா ஆகிய இருநாடுகளுடனும் தமிழர் நேரடியான தொடர்பு கொண்டிருந்தனர்.

மற்றத் திராவிட மொழிகளைப் போலன்றித் தமிழ்மொழி ங, ஞ, ண ஆகிய மெல்லொலிகள் அல்லது மூக்கியல் ஒலிகளை மிகுதியும் பயன்படுத்துகிறது. இச் சிறப்புப் பண்டைத் தமிழ் நூல்களுக்கும் உண்டு; இன்றைய மலையாளத்துக்கும் உண்டு. பர்மியருடனும் சீனருடனும் தமிழர் உறவுடையவர் என்பதற்கு இதுவும் ஒரு சான்று. பண்டைச் சேரரைப் போலவே சீனரும் தங்களை வானவர் அல்லது வானகத்துக் குரியவர் என்று பெருமையாகக் கூறிக் கொண்டது குறிப்பிடத் தக்கது.

1 மானவ தர்ம சாஸ்திரம், ஹாட்டனின் மொழி பெயர்ப்பு (Haughton's Translation) இயல் X: V, 43,44: திருவினைகளைச், செய்யாது விட்டதாலும், பார்ப்பனர்களையே பார்க்காது காலம் கழித்ததாலும் மனிதரிடையே நால்வகைப்பட்ட வகுப்புக்களிலும் கடைப்பட்ட வகுப்பாகக் கீழ்வரும் க்ஷத்திரிய மரபினத்தவர்கள் இழிவடைந்து விட்டனர்: பௌண்டிரகர், ஒட்ரர், திராவிடர், காம்போசர், யவனர், சகர், பாரதர், பஹ்லவர், சீனர், கிராதர், தோராதர், சாஸர்.



தமிழ்க் குடியேற்றத்தார் தென் இந்தியாவில் குடியேறிச் சிலகாலம் வரை பேசிவந்த மொழியையே தற்கால மலையாளம் குறிக்கிறது என்று எண்ணுகிறேன். அவர்கள் அச்சமயம் திராவிடச் சொற்களையே கற்றுக் கொண்டிருந்தார்கள். திணைபாலிடம் குறித்த வினைவிகுதிகளைப் பழகிக் கொள்ளவில்லை. இந்த வடிவில் இன்றைய மலையாளம் மங்கோலிய, மஞ்சு மொழிகளையும் ஆசிய மேட்டு நிலத்தின் பிறமொழிகளையும் ஒத்துள்ளது.

குமரிமுனை யருகிலுள்ள பொதிய மலைக்கு ஆரியரின் முதல் குடியினரை அகத்தியரே தலைவராக நடத்தி வந்தார் என்ற மரபை முற்காலத் தமிழ்க் கவிஞர் நம்பி ஏற்றனர். இம்மரபில் எந்த அளவு வரலாற்றுத்தொடர்பு இருக்கிறது என்று துணிவது முடியாது. அம் மரபுக்கு இராமாயணம் ஒன்றே ஆதாரம் என்று தோன்றுகிறது. அதில் இலங்கை இராவணனை வெல்லும்படி அகத்தியரே இராமனை வரவழைத்ததாகக் குறிப்பிடப்படுகிறது. அதே நூலில் அகத்தியரின் திருமனை பஞ்சவடியிலிருந்து இரண்டு யோசனை தொலைவில் இருந்ததாகவும் அறிகிறோம்.[1] பஞ்சவடி என்பது கோதாவரிக்கரையிலுள்ள தற்கால நாசிக் ஆகும். இதிலிருந்தே வால்மீகியின் காலத்தில் அகத்தியரின் திருமனை தற்கால நாசிக்குக்கு அருகே இருந்ததாக நம்பப்பட்டதென்று தோற்றுகிறது.

தண்டகாரணியமென்பது தற்கால மராட்டிய நாடு. பார்ப்பனர்களின் சமய வினைகளுக்குத் தொல்லை கொடுத்த காட்டுக் குடிமக்கள் நிரம்பிய இடமென்று அது வருணிக்கப்பட்டுள்ளது. ஆனால் காவிரிக்குத் தெற்கிலுள்ள பகுதி ஜனஸ்தானம் அதாவது நாகரிக மக்கள் வாழ்ந்த நாடு என்று குறிக்கப்பட்டுள்ளது.

சீதையைத் தேடிக் குரங்கு வீரர்கள் அனுப்பப்பட்டனர். இதை, வருணிக்கும் பகுதியில், அவர்கள் ஆந்திர

1 இராமாயணம் (பம்பாய்ப் பதிப்பு) III, 13 13.

நாட்டுக்கும் தெற்கே பாண்டியர், சோழர், கேரளர் நாடுகளுக்கும் செல்லும்படி ஏவப்படுகின்றனர். இவை கடந்தால் பொன்மணிகளால் அணி செயயப்பட்ட பாண்டியரின் நகர் வாயிலை அணுகலாம் என்றும் கூறப்படுகிறது.[1] இராமாயணத்திலுள்ள இந்த வருணனைகளிலிருந்து வால்மீகி காலத்தில், ஆரியர்கள் தமிழ் மக்களை ஓரளவு அறிந்திருந்தனரென்றும், அவர்களை ஒரு நாகரிகம் வாய்ந்த இனத்தவராகவே கொண்டிருந்தனர் என்றும், பாண்டியர் தலைநகர் செல்வ மோங்கிய நகரம் என்று அவர்கள் பாராட்டியிருந்தனர் என்றும் நமக்குத் தெரிய வருகிறது.

காத்யாயனர் என்ற மற்றோர் ஆசிரியர் பாணினி இயற்றிய இலக்கணச்சூத்திரங்களுக்கு விளக்கமாக உரைச் சூத்திரங்கள் இயற்றினார். பொதுவாக அவர் நந்தர்கள் காலத்தில், அஃதாவது கி.மு.நான்காம் நூற்றாண்டின் முற்பாதியில் இருந்ததாகக் கருதப்பெறுகிறார். அவர் பாண்டியரையும் சோழரையும் குறிப்பிடுகிறார். அத்துடன் பாண்டு மரபினரில் ஒருவரிடமிருந்து தோன்றிய கிளை மரபினர் அல்லது அம்மரபினர்களின் நாட்டார் பாண்டியர்எனப்படுவர் என விதி வகுத்தார்.[2]

இக் காரணங்களால் இந்தியாவின் தெற்கில் கி. மு. நான்காம் நூற்றாண்டுக்கு நெடுநாள் முன்னரே பாண்டியர் ஆட்சி நிறுவப்பட்டு விட்டது என்பதில் ஐயமில்லை. ஆனால் இத் தென்பாண்டி மரபில் முதல்வர் யார் என்பது பற்றித் திட்டவட்டமாக எதுவும் தெரியவரவில்லை. தென் இந்தியாவில் வழங்கும் மகாபாரதக் கதையின்படி, அருச்சுனன் பாண்டிய அரசன் மலயத்துவசனின் புதல்வி சித்திராங்கதையை மணந்தான் என்று தெரிய வருகிறது. ஆனால் வட இந்தியாவில் வழங்கும் மகாபாரதப் படிகளில் இவ்வரலாறு தரும் பகுதி காணப்படவில்லை. ஆகவே இது ஓர் இடைச் செருகல் என்பதில் ஐயமில்லை.[3]

---

1 இராமாயணம். 2 பாணினி, வார்த்திகா: IV, 1—168.
3 தென்புல மரபு எப்படியும் மலயத்துவசனுக்கு மிக முக்கியத்துவம் தருகிறது. அவனையே அருச்சுனன் மனைவி சித்திராங்கதையின்



தென்பாண்டி நாட்டைத் தோற்றுவித்த முதல்வர் ஓர் அரசியே என்பதை நிலைநாட்ட எப்படியும் தனிப்பட்ட வேறு சான்றுகள் உண்டு. பாடலிபுத்திர நகரில் சந்திர குப்தனின் அவையில் செலியூக்கஸின் தூதுவராக இருந்த மெகாஸ்தெனிஸ் பாண்டிய மரபின் பிறப்புப்பற்றிக் கீழ் வருமாறு கூறுகிறார்:

---

தந்தை எனக் கொள்கிறது. இக்கருத்து மகாபாரதம் சபாபருவத்தின் ஒரு பகுதியை ஆதாரமாகக் கொண்டது. இதில் சகாதேவன் தெக்கணத்தில் தன் படைத்துறை நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கும் போது, சித்திராங்கதையின் தந்தையான பாண்டியன் மலயத்துவசனைக் கண்டு நட்பாடுகிறான். ஆயினும் என்னிடம் உள்ள தேவநாகரி எழுத்து முறையிலமைந்த மிகச் செப்பம் வாய்ந்த மகாபாரதப் படியில் அது காணப்படவில்லையாதலால், இது தீவக் குறையின் எல்லையிலுள்ள படிகளின் தனிக்கூறாகவே இருக்கவேண்டும். மேலும் முதல் இயலில் கூறியபடி சித்திராங்கதையின் தந்தை மணிப்பூர் மன்னனான சித்திரவாகனன் ஆவன். கலிங்கங் கடந்தபின் அருச்சுனன் மணிப்பூருக்கு வருகிறான். ஆதிபர்வத்தின் தெலுங்கு மொழி பெயர்ப்புகள் உறுப்பினர் பெயர்கள் வகையில் ஒத்திருக்கின்றன. ஆனால் மணிப்பூரை அது காவிரிக்குத் தெற்கிலுள்ளதாகக் குறிக்கிறது. தெற்கில் எவ்வளவு தொலைவு என்பதை அது காட்டவில்லை. அத்துடன் மலயத்துவசனும் சித்திரவாகனனும் ஒருவரே என்றோ, மணிப்பூரும் மதுரையும் ஒன்றே யென்றோ எந்த அளவுக்கு எண்ண இடமுண்டு என்பது மகாபாரதப் படிகளின் வாய்மை தேர்ந்தாராய்ந்து கூற வேண்டிய ஒரு செய்தி ஆகும். காசியில் என் வேண்டுகோளின் பேரில் காப்டன் ஃவெல் (Captain Fell) ஏழு படிகளைத் தேர்ந்தாராய்ந்தார். அதன் முடிவு ஆள் இட ஒற்றுமைக்கு முற்றிலும் இடந்தராததாகவே இருந்தது. ஏனெனில் அவற்றில் ஒன்றில்கூட குறிப்பிட்ட பிரிவோ மலையத்துவசன் என்ற பெயரோ இல்லை. பாகவதம் அருச்சுனனின் காதல் மனைவியை மணிபுரத்து நாக அரசன் மகள் உலிபி என்று குறிக்கிறது: பேராசிரியர் எச். எச். வில்சன்: மன்னுரிமை ஆசியக் கழகம் ஏடு III, கட்டுரை IX பக்கம் 199.

“ஹெராக்ளிஸ்[1] இந்தியாவுக்கு வந்து இங்கே ஒரு புதல்வியைப் பெற்றான். அவளுக்குப் ‘பாண்டியா’[2] என்று

1. கிரேக்க இதிகாச புராணக் கதைகளில் கிருஷ்ணனுக்கு இணையானவனாக கருதப்படத் தக்க வீரன் ஹெராக்ளிஸ். ஹெர்க்குலிஸ், யுலிஸிஸ் இவன் மாறு பெயர்கள். பாரதத்தில் கிருஷ்ணனைப்போலப் போரில் சிறந்த சூழ்ச்சியாளனாகவும் சூழ்ச்சி முறை சார்ந்த அறிவுரையாளனாகவும் இருந்தவன் அவன். ஆனால் அதேசமயம் அருச்சுனனைப் போலவே நாடு வலம் வந்து வெற்றிச் செயல்கள் பல செய்தவன். ஆகவேதான் அருச்சுனன், கிருஷ்ணன் கதைகளுடன் அவன் கதையையும் ஒன்றுபடுத்தி, மெகாஸ்தெனிஸ் இந்தியக் கதை குளறுபடியுடன் கிரேக்கக் கதை குளறுபடியையும் இணைக்க முடிந்துள்ளது. தெய்வங்களுடன் தெய்வங்களையும் வீரர்களுடன் வீரர்களையும், கதையுடன் கதையையும் இங்ஙனம் ஒட்ட வைக்கும் பண்பு முற்கால நாகரிகங்களில் மிகப் பொதுப்படையானதே. வள்ளி கணவனாகிய தமிழக முருகன், தெய்வயானை கணவனான ஆரிய சுப்பிரமணியன், மணமாகா இளங் தெய்வமான, மராட்டிய குமரன் ஆகிய மூவரும் ஒரு தெய்வமாக்கப்பட்டது போன்றவை இதற்குச் சான்று.

2. Pandaea: மகாபாரதக் கதை மரபுப்படி ‘அல்லி’ அரசியாகவோ திருவிளையாடல் மரபுப்படி ‘தடாதகைப் பிராட்டி’யாகவோ இந்தப் பாண்டியாவைக் கொள்ளல் வேண்டும். இருவகையிலும அவள் கண்ணன் மகளுமல்லள்; அருச்சுனன் மனைவியேயன்றி அருச்சுனன் மகளுமல்லள். ஆகவே ஹெராக்ளிஸைக் கண்ணனாகக் கொண்டாலும் அருச்சுனனாகக் கொண்டாலும் கதை முற்றிலும் பொருந்தவில்லை. ஆயினும் மெகாஸ்தெனிஸ் காலத்து மகாபாரதக் கதை எப்படியிருந்தது என்பதை இன்றைய மகாபாரதம் குறிக்க முடியாது. திருவிளையாடல் கதை மரபு மெகாஸ்தெனிஸ் காலத்தில் உலவிற்றா, இல்லையா; எந்த உருவில் உலவிற்று என்றும் உய்த்துணர வழியில்லை. மொத்தத்தில் இப் பழங்கதை மரபுரைகளின் மூலம் பாண்டி நாட்டில் ஒரு பெண்ணாட்சி சீரிய வகையில் (அணிமைக் காலத்து மங்கம்மை அரசிபோல) ஏற்பட்டிருக்கலாம் என்று கொள்ளலாமே தவிர, ஒரு பெண்ணரசியைப் பாண்டிய முதல்வியாகக் கொள்வதற்கோ, வேறு தொடர்புகளை வலியுறுத்துவதற்கோ இம் மரபுரைகள் பயன்படுவன அல்ல என்னலாம்.

பாண்டவர் — பாண்டியர் சொல் தொடர்புகூட இம் மரபுரையால் விளக்கம் பெறத் தக்கதல்ல. அத் தொடர்பை விளக்க எழுந்த போலி மரபுகள் அல்லது மரபுக் குளறுபடிகளே இவை என்று எண்ண இடமுண்டு.



பெயரிட்டான். இந்தியாவில் தென் திசையில் கடல்வரை கிடந்த பகுதியை அவளுக்குத் தந்து, அவள் ஆட்சியின் கீழ் உள்ள நாட்டையும் 365 ஊர்களாக வகுத்தான். அவளுக்குரிய அரசிறையை ஒவ்வொரு ஊரும் ஒவ்வொரு நாள் அவள் தலைமைக் கருவூலத்துக்குக் கொண்டு செலுத்த வேண்டுமென்றும் கட்டளை அமைத்தான். இவ்வரிய முறையால், என்றேனும் வரிமுறைமையில் தவறுபவர்களைக் கடிந்து ஒறுப்பதில் அரசிக்குத் திறை செலுத்தியவர், செலுத்த வேண்டியவர் ஆகியோர் துணையும் கூட்டுவலுவும் எப்போதும் இருக்க வழி கோலப்பட்டது”[1]

பிளினி கூறும் செய்தியும் இதனுடன் ஒத்ததே; அவர் கூறுவது வருமாறு:

“அடுத்தபடியாகக் குறிக்கத் தக்கவர்கள் பாண்டேக்கள்.[2] இந்தியாவில் பெண்களால் ஆளப்பட்ட இனம் இது ஒன்றே. நம் கேள்வியின்படி, ஹெர்க்குலிஸுக்கு[3] ஒரே மகள் இருந்தாள். ஒரே மகளாயிருந்த காரணத்தால் தந்தை அவள்மீது தன் அன்பை எல்லாம் சொரிந்தான். அவளுக்கு அவன் ஒரு வீறுமிக்க ஆட்சிப் பகுதியையும் அளித்தான். அவள் மரபினர் இன்று 300 நகரங்களின் மீது ஆட்சி செலுத்துகிறார்கள். அவர்கள் படையில் 1,50,000 (ஒரு இலக்கத்து ஐம்பதாயிரம் அதாவது ஒன்றரை இலக்கம்) காலாள் வீரரும், 500 யானைகளும் உள்ளன.”[4]

பண்டைத் தமிழ் நூல்களும் இம் மரபை ஆதரிப்பனவாகவே தோற்றுகின்றன. ஏனெனில் பாண்டிய மரபைத் தோற்றுவித்தது ஒரு பெண்ணே என அவை குறிப்பிடுகின்றன.[5] பின்னாட்களில் அவள் மதுரையில் ஒரு பெண்

1. மக்கிரிண்டில்: பண்டை இந்தியா பக்கம் 158.

2. Pandae. 3. மேலே பக். 106, அடிக்குறிப்பு 1,2 பார்க்க.

4. பிளினி: இயல் வரலாறு: VI 21: மக்கிரிண்டிலின் பண்டை இந்தியா, பக்கம் 147.

5. சிலப்பதிகாரம் XXIII, அடிகள் 11-13.

பெரிய நகரங்களில் தனித் தெருக்களிலோதான் அவர்கள் குடியிருந்தார்கள். பாண்டி நாட்டில் மதுரை, தங்கள்,[1] வயணங்கோடு[2] ஆகிய இடங்களிலும், சேர நாட்டில் வஞ்சி, பொறையூர்,[3] ஏரகம்,[4] மாங்காடு[5] ஆகிய இடங்களிலும், சோழ நாட்டில் காவிரிப்பட்டினம், முள்ளூர்,[6] ஆவிநன்குடி,[7] செங்களம்,[8] ஆகிய இடங்களிலும் அவர்கள் பெருந்தொகையினராக வாழ்ந்தார்கள்.

அவர்கள் பல கோத்திரங்கள் அல்லது கால்வழிக் குழுக்களைச் சார்ந்தவர்களெனக் கூறிக் கொண்டார்கள். எல்லாக் கோத்திரங்களுமே தம்மை இரண்டு புகழ் மிக்க முதல்வர்களின் வழி வந்தவர்களாகப் பெருமைப்படுத்திக் கொண்டனர். ஏனெனில் அவ்விரு முதல்வர்களும் உலகைப் படைத்த நான்முகனையே தந்தையாகக் கொண்டவர்கள்.[9] மிகப் பழைமை வாய்ந்த காப்பியக்குடிப் பார்ப்பனர் சேர மண்டலப் பகுதிகளில் இருந்ததாகச் சிறப்பிக்கப் பட்டனர்.[10]

வழக்கமாகப் பார்ப்பனர் தம் வீடுகளுக்குள் நாய்களோ கோழிகளோ வரவிடுவதில்லை. பாலுக்காக ஆவினத்தையும் தங்கள் பெண்டு பிள்ளைகளுக்குப் பொழுது போக்குக்காகக் கிளிகளையும், வீடுகளிலோ தோட்டங்களிலோ வந்து தொல்லைதரும் பாம்புகளைக் கொல்வதற்

1. சிலப்பதிகாரம் XXIII, அடிகள்-74-75.
2. மணிமேகலை XIII, அடி 15.
3. சிலப்பதிகாரம்.
4. திருமுருகாற்றுப்படை, அடிகள் 177-189.
5. சிலப்பதிகாரம் XI, அடி 53.
6. சிறுபாணாற்றுப்படை, அடிகள் 187-188.
7 திருமுருகாற்றுப்படை அடி 176.
8. சிலப்பதிகாரம் XI, அடி 2.
9. திருமுருகாற்றுப்படை, அடி 178. இதன் பொருள் தெளிவாயினும் உரையாசிரியர் நச்சினார்க்கினியர் மயங்கப் பொருள் கொண்டார்: மணிமேகலை XIII, அடிகள் 93-97 பார்க்க.
10 சிலப்பதிகாரம் XXX, அடி 83.



காகக் கீரிகளையும் அவர்கள் வளர்த்து வந்தார்கள்.[1] அவர்கள் முக்கிய தொழிலீடுபாடு தம் இல்லங்களில் திருமுத்தீப் பேணுதல், யாகங்கள் அல்லது வேள்விகள் செய்தல், வேத மந்திரங்களை ஓதுதல் ஆகியவை சார்ந்ததே.

மற்ற வகுப்பினரிடையே அவர்கள் தாம் தேவர்களை அடக்கி யாளுபவர்கள் என்று உரிமை கொண்டாடினர்கள். சில சில சமயம் அவர்கள் கல்வியாசிரியர்களாகவும் இருந்ததுண்டு. அவர்களில் சிலர் தமிழ்க் கவிஞர்களானார்கள். அடிக்கடி அவர்கள் புண்ணியயாத்திரை புறப்பட்டுப் பொதியமலையை வலம் வந்து குமரிமுனையிலும் காவிரி முகத்திலும் கடலில் குளித்துக் கங்கைக்கரைக்குச் சென்று வந்தனர். இத்தறுவாய்களில் அவர்கள் காலுக்குப் பாதுகாப்பாகத் தோல் மிதியடிகள் அணிந்தார்கள். மழை வெயிலிலிருந்து தம்மைப் பேணிக்கொள்ளக் குடை தாங்கிச் சென்றார்கள். கயிற்றுறியில் கட்டித் தொங்கவிட்ட ஒரு நீர்க்கரகத்தையும் ஒரு முக்கோலையும் ஒருங்கே பிணைத்துக் கொண்டு சென்றனர்.

யானைப்பாகர் யானைகளிடம் ஆரியத்தில்தான் பேசினார்கள் என்ற செய்தி மிகவும் சுவைகரமானது. திராவிடர் காட்டில் குழிகள் வெட்டி யானைகளைப்பிடித்து வந்தார்கள். ஆனால் ஆரியர் பழக்கப்பட்ட பெண் யானைகளைக் கொண்டு காட்டு யானைகளை வசப்படுத்திப் பிடிக்கும் சூழ்ச்சி நயமிக்க முறையைப் புதுவது புகுத்தினார்கள்.

குறிகாரர் என்ற முறையில் ஆரியருக்குத் திராவிடரிடையே போட்டியாளர் இருந்தனர். பார்ப்பனர் தமிழில் பார்ப்பார் அல்லது 'காண்பவர்கள்' என்று அழைக்கப் பட்டார்கள். திராவிடக் குறிகாரரோ 'அறிவர்' அதாவது 'அறிவுடையவர்' என்று சுட்டப்பட்டனர். இந்த 'அறிவர்'களும் பார்ப்பனர்களைப்போலவே விண்ணில் இயங்கும் கோளங்களின் நிலைகளைக் கண்டு வருங்கால முரைத்தும், திருமண முதலிய முக்கியமான குடும்ப வினைமுறைகளுக்

1. பெரும்பாணாற்றுப்படை, அடிகள் 294-300.

கும் சமூக வினைமுறைகளுக்கும் உரிய நல்லோரைகளைத் திட்டப்படுத்தியும் வந்தனர்.

ஆயர் அல்லது மேய்ச்சல் நில இனத்தவர் மேற் கூறிய இனங்கள் எல்லாவற்றிலிருந்தும் வேறு பட்டவர்கள். ஆயர் என்னும் பெயர் ஆவினம் என்று பொருள்படும் ஆ என்ற திராவிடச் சொல்லிலிருந்து தோன்றியதே. புராண வரலாற்றில் அவர்கள் ஆபிரர் என்று வழங்குகின்றனர். வட இந்தியாவில் அவர்கள் இன்னும் ஆஹிர்கள் என்றே அழைக்கப்படுகின்றனர். தமிழகத்தில் அவர்கள் பொதுவர் அல்லது பொதுநில மக்கள் எனப்பட்டனர். பொது என்ற திராவிடச் சொல் நடுநிலையைக் குறிக்கும். தமிழர், நாகர் இருவருடனும் நட்புடையவராயிருந்ததனாலேயே அவர்களுக்கு இப்பெயர் வந்திருக்கக் கூடும். தொடக்கத்தில் சோழநாட்டில் அவர்கள் தமக்கெனச் சிறு சிறு குடிமன்னர்களை உடையவர்களாயிருந்ததாகத் தெரிகிறது. ஆனால், கரிகாலன் அக்குடிமன்னர் மரபையே வேரோடு அழித்துவிட்டதாகக் கூறப்படுகிறது.[1]

பாண்டி நாட்டிலுள்ள ஆயர்கள் பாண்டிய மரபின் முதல்வர்களுடன் தமிழகத்துக்கு வந்ததாக அவர்கள் மரபுரை கூறுகிறது.[2] பொதுவாக அவர்கள் இயக்கர்களை வழிபட்டார்கள்.[3] ஆயினும் அவர்கள் பெறும் பற்றுதலுக்குரிய தெய்வம் அவர்கள் குலமரபின்வீரனான கண்ணனே. மகாபாரதத்தில்விரித்துரைக்கப்பட்டபடி ஆய்க்குலநங்கையர்களுடன் அவன் கொண்ட திருவிளையாடல் தொடர்புகள் அவர்கள் விழாவின் ஆடல்பாடல்களுக்குரிய பொருளாயிருந்தன. மதுரையில் வாழ்ந்த ஆய்க்குலச் சிறுவரும் சிறுமியரும் கண்ணனாகவும், அவன் தமையனாகிய பலராமனாகவும், அவன் தாய் யசோதையாகவும், மனைவி பின்னையாகவும் நடித்து நடனமாடியதாகத் தீட்டப்பட்டுள்ளார்.

1. பட்டினப்பாலை அடி 281.
2. கலித்தொகை பாட்டு 104, அடிகள் 4–6.
3. சிலப்பதிகாரம் XV, அடி 116.



கள்[1] ஆய்மகளிர் கடைந்தெடுத்த வெண்ணெயைக் கண்ணன் திருடியது, அவர்கள் யமுனையில் குளித்து விளையாடிய போது அவன் அவர்கள் ஆடையை ஒளித்து வைத்தது முதலிய கண்ணன் பிள்ளை விளையாட்டுக்கள் பற்றிய பழங்கதைகளெல்லாம் அவர்களுக்கு நன்கு பழக்கப்பட்ட செய்திகளாயிருந்தன.

எருதுப் பந்தயம் ஒன்று நடத்தி அதில் வெற்றி பெறும் வீரர்களிடையிலிருந்தே தங்கள் பெண்களின் கணவன்மாரைத் தேர்ந்தெடுக்கும் புதுமையான வழக்கத்தை அவர்கள் கைக்கொண்டிருந்தார்கள்.[2] இப்பந்தயத்திற்கு அளிகளாலும் வேலிகளாலும் வளைக்கப்பட்ட ஓர் அகன்ற புறவெளி தேர்ந்தெடுக்கப்பட்டது. இதற்குள் கூராக்கப்பட்ட கொம்புகளையுடைய எருதுகள் கொண்டு வரப்பட்டன. உள்ளே வளைவை நோக்கிய அகன்ற கொட்டகைகளில் மணவினைக்குரிய பெண்கள் நின்றார்கள். சண்டைக்கு முன்னேற்பாடாக இளைஞர்கள் தண்ணீர்க் கரைகளிலோ, ஆல் அரசு மரத்தடிகளிலோ இருக்கும் தெய்வ உருவங்களைச் சென்று வணங்கினார்கள். அதன்பின் செங்காந்தள் மலர்களுடனும், செந்நீலக் காயாமலர்களுடனும் தம்மை அவர்கள் ஒப்பனை செய்து கொண்டார்கள். போர்த் தொடக்க அறிகுறியாக முரசறைந்தவுடன், இளைஞர் வளைவுக்குள் புகுந்து எருதுகளைக் கைப்பற்ற முனைந்தார்கள்.

முரசங்களின் முழக்கத்தால் கலவரமடைந்து எருதுகள் தம்மை நோக்கி வருபவர்களைத் தாக்கத் தொடங்கின. ஒவ்வோர் இளைஞனும் தான் தான் கைப்பற்ற விரும்பும் எருதை அணுகினான். வால்களை உயர்த்திய வண்ணம் எருதுகள் மூர்க்கமாக ஓடின. எதிரிகளுக்கு நேராகக் கொம்புகளை நீட்டியபடி தலையைத் தாழ்த்திக் கொண்டு எருதுகள் பாய்ந்தன. இளைஞர்களில் சிலர் எருதுகளைத் துணிச்சலுடன் எதிர்த்து நின்றனர். கொம்பு

1. சிலப்பதிகாரம் XVII.
2. கலித்தொகை, பாட்டு 101, 11.

களைப் பற்றிக் கழுத்தைக் கட்டிக் கொண்டு விடாப் பிடியாக அவற்றை நிலத்தில் வீழ்த்தும்வரை போராடினர்.

வாய்ப்புக் கேடாகப் பல இளைஞர்கள் சண்டையில் வீழ்வதுண்டு. சிலர் காயமில்லாமல் தப்பிப் பிழைத்தனர். வேறு சிலர் எருதுகளால் மிதித்துத் துவைக்கப்பட்டும் கிழிக்கப்பட்டும் போயினர். ஆனால் வெற்றி பெற்ற சிலர் அன்றைய சண்டையின் வீரராகப் பாராட்டப்பட்டார்கள். எருதுச் சண்டை இதனுடன் முடிந்ததென்று பெரியோர் அறிவித்தனர். காயம்பட்டவர்கள் வளைவுக்கு வெளியே கொண்டு செல்லப்பட்டு உடனடியாகக் கவனிக்கப்பட்டனர். வெற்றி வீரரும் மணவினைக்குரிய பெண்டிரும் அருகிலுள்ள ஒரு சோலைக்குச் சென்று அங்கே ஒன்றுகூடித் தம் திருமண வினைக்கு முன்னெருங்கி ஆடல் பாடல்களில் முனைந்தனர்.

கிறித்துவ ஊழியின் முதல் நூற்றாண்டுகளிலேயே யூதர்கள் மேல்கடற்கரைக்கு வந்ததாகத் தெரிகிறது. கி. பி. 68இல் நிகழ்ந்த ஜெருசலம் கோயிலின் அழிவின் பின், அவர்களில் பலர் மலபாருக்கு வந்து குடியேறியதாக அவர்கள் மரபுரை கூறுகிறது. ஆனால் தமிழ் இலக்கியத்திலே அவர்களைப் பற்றிய குறிப்பு எதுவும் காணப்படவில்லை. ஆயினும் இரண்டாம் நூற்றாண்டில் அவர்கள் மேல் கடற்கரைப் பகுதியில் தங்கி வாழ்ந்திருந்தனர் என்பதில் ஐயத்துக்கு இடமில்லை. ஏனெனில் இதை நிலைநாட்டுவதற்குரிய முறையில் பண்டைநாட் செப்புப் பட்டயப் பத்திரங்கள் மலபாரிலுள்ள யூதர்களிடமும் சிரியக் கிறித்துவர்களிடமும் இன்றும் உள்ளன.[1]

இப்பத்திரங்கள் பண்டைத் தமிழிலே, வட்டெழுத்து அதாவது உருண்ட வடிவமுடைய எழுத்து என்று அழைக்கப்படும் முற்கால வரிவடிவத்திலே எழுதப்பட்டுள்

1. பத்திரங்கள் எண் 1, 2, 3; இவற்றின் மொழி பெயர்ப்பு லோகனின் மலபார்க் கையேடு (Logan's Malabar Manual) ஏடு II, பக். 115—122.



ளன. ஆராய்ச்சித் துறையில் அவை மிகுந்த விருவிருப்பை ஊட்டியுள்ளன. இதற்கு அவற்றின் பெரும் பழமையன்றி வேறு காரணமும் உண்டு. சேர அரசர்களால் அவர்கள்மீது சில உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன என்ற புதுமை வாய்ந்த செய்தியே அது. இவற்றை இக் குடியேற்றத்தாரின் மரபினர் ஓரளவு இன்னும் நடைமுறையில் கொண்டுள்ளனர்.

இவை ஒரு தடவையல்ல, பல தடவை மொழிபெயர்ப்புக்கு இலக்காகியுள்ளன. அவற்றுக்குக் குறிக்கப்படும் கால வரையறையிலும் மிகவும் வேறுபாடுகள் ஏற்பட்டுள்ளன. பத்திரங்களுள் மிக முற்பட்டது ஸ்ரீ பாஸ்கர இரவி வர்மன் ஆட்சியில் 36ஆவது ஆண்டுக்கு நேரான 2ஆவது ஆண்டு என்று காலம் குறிக்கப்பட்டுள்ளது. '36ஆவது ஆண்டுக்கு நேரான 2ஆவது ஆண்டு' என்ற தொடருக்குப் பலவேறு வகைப்பட்ட விளக்கங்கள் தரப்படுகின்றன. ஓரறிஞர் 2ஆவது ஆண்டு என்பதைப் பரசுராமர் ஆண்டு வட்டத்துக்குரிய தென்றும், மற்றொருவர் 36ஆவது என்பது வியாழ வட்டமாகிய அறுபதாண்டுத் தொகுதியைக் குறிப்பதென்றும் கொண்டுள்ளனர்.[1] ஆனால், ஆண்டுக் கணிப்பு

1. "இரண்டாம் ஆண்டைக்கெதிர் முப்பத்தாறும் ஆண்டு" என்ற தொடரைத் திரு. விஷ் (Mr. Whish) (பரசுராமர்) வட்டத்தின் இரண்டாவதில்" என்று மொழிபெயர்த்துக் கி. மு. 139 என்று கொண்டார். ஆனால் ஸர் வால்ட்டர் எலியட் (Sir Walter Elliot) "இரண்டாவதற்கு எதிரான அதாவது நேர்மாறான 36ஆம் ஆண்டு அதாவது (பரசுராமரின்) மூன்றாவது வட்டம் என்று பொருள் கொண்டு அதை, கி. பி 861 என்று கொண்டார். டாக்டர் பர்னல் (Dr. Burnell) முதல் ஆண்டு எண் ஆட்சியாண்டையும் இரண்டாவது ஆண்டு எண் மன்னன் வயதாண்டையும் குறிக்குமென்று கருதினார். டாக்டர் கால்டுவெல் (Dr. Caldwell) இரண்டாம் ஆண்டு எண் மன்னன் ஆட்சி ஆண்டையும், முதலாவது ஆண்டு எண் வியாழ வட்டம் அறுபதில் வரும் எண்ணையும் குறிக்குமென்று எண்ணினார். டாக்டர் ஹல்ட்ஸ் (Dr. Hultzsch), இந்தியப் பழமை ஏடு (Indian Antiquary), ஏடு XX, பக். 288 காண்க. டாக்டர் ஹல்ட்ஸ் கருதுகிறபடி, முதல் ஆண்டு மன்னன் அரசுரிமையாளனாக உரிமை பெற்று இளவரசுப்பட்டமேற்ற ஆண்டைக் குறிக்குமென்றும், இரண்டாவது அவன் ஆட்சி ஆண்டைக் குறிக்குமென்றும் கொண்டார்.

இரட்டை ஆண்டு எண்களில் தரப்படும் எல்லாப் பத்திரங்களுக்கும் இந்த இரண்டு ஆண்டு வட்டங்களுமே பொருந்தாதவையாய் உள்ளன.

நாற்பது ஆண்டு மதுரையில் வாழ்ந்தவரான போர்ச்சுகீசிய சமய குருவாகிய பெஸ்கியின் ஆராய்ச்சிகளால் அக்காலத்தில் தென் இந்தியாவில் வழக்கிலிருந்த ஆண்டு வட்டம் 90 ஆண்டுகளடங்கிய கிரகப் பரிவிருத்தி வட்டமே[1] என்று தோற்றுகிறது. இந்த வட்டத்தின்

1. 90 ஆண்டுகளடங்கிய கிரகப் பரிவிருத்தி வட்டம் : தீவக் குறையின் தெற்கிலுள்ள மக்கள் வழங்கும் 90 ஆண்டு வட்டம் பெரிதும் அறியப்படாத ஒன்று என்று கர்நாடகத்திலுள்ள வாரன் (Warren) கருதுகிறார். மதுரையில் நாற்பது ஆண்டு வாழ்ந்த காலத்தில் போர்ச்சுகீசிய சமய குருவாகிய பெஸ்கி (Beschi) இதைப் பகுத்தாராய்ந்தார். அங்குள்ள தாயக வானூலார் கருத்துப்படி அது செவ்வாயின் 15 வலஞ்சுற்று மண்டலங்கள், புதனின் 22, வியாழனின் 11, வெள்ளியின் 5 சனியின் 29, ஞாயிற்றின் 1 வலஞ்சுற்று வட்டங்கள் ஆகியவற்றின் நாள் எண்ணிக்கையின் பெருக்கமாக அமைந்தது என்று தெரிய வருகிறது. இதன் தொடங்குகட்டம் கலியூழி 3078ஆம் ஆண்டு முடிவில் அதாவது கி. மு. 24 இல் நிகழ்ந்தது. ஆண்டுக்கணிப்பு ஞாயிற்று முறை அல்லது வான்மீன் முறைப்படி யமைந்தது. எந்த மேலையாண்டுக்கும் எதிரான இவ்வாண்டு எளிதிலே 24ஐக் கூட்டி 90ஆல் வகுத்துக் கிட்ட முடியும். எடுத்துக் காட்டாக, கி. பி. 1830க்கு, 1830-உடன் 24 கூட்ட, 20 வட்டங்கள் 54 ஆண்டுகள் கிடைக்கும் : பிரின்ஸெப்பின் இந்தியப் பழமைகள் : தாமஸ் (Prinsep's Indian Antiquities by Thomas) ஏடு II, பக்கம் 158.

கிரகப்பரிவிருத்தி வட்டம் தமிழகத்தில் ஆண்டு இரட்டை எண்களாகத் தரப்பட்ட எல்லாக் கல்வெட்டுக்களுக்கும் பத்திரங்களுக்கும் பொருந்துவதாகும். எடுத்துக் காட்டாக (மலபார் கையேடு, ஏடு II, பக். 122இல்) கள்ளிக்கோட்டை அருகிலுள்ள திருவண்ணூரில் காணப்பட்ட கேரள அரசன் இராமனுடைய கல்வெட்டின் ஆண்டு 4ஆம் ஆண்டுக்கு எதிரான 4ஆம் ஆண்டுக்கும். இதற்குச் சரியான கிறிஸ்துவ ஆண்டு $4 \times 90 + 4 - 24 =$ கி. பி. 340. குலசேகர தேவனின் திருப்புவனம் பட்டயம் 13-ஆம் ஆண்டுக்கு எதிரான 12-ஆம் ஆண்டு ஆகும். அது $13 \times 90 + 12 - 24 =$ கி. பி. 1158. குலசேகரதேவன் இலங்கையரசன் முதலாம் பராக்கிரம பாகு (1146—1179) காலத்தவன் (மகாவம்சோ— இயல் 76- 77.)



தொடக்கக் கட்டம் கலியூழி 3078ஆம் ஆண்டு முடிவில் அதாவது கி. மு. 24 இல் நிகழ்ந்தது. ஆண்டுகள் பொதுவே ஞாயிற்று முறை அல்லது வான்மீன் முறைக் கணிப்பையே பின்பற்றுகின்றன. ஆகவே அதற்கு இணையான கிறிஸ்தவ ஆண்டைக் காண, வட்டங் குறித்த எண்ணை 90 கொண்டுபெருக்கி ஆண்டு எண்ணைக் கூட்டி 24 குறைத்தால் போதும்.

இவ்வகையில் மேற்குறிப்பிட்ட 'இரண்டாம் ஆண்டுக்கெதிரான முப்பத்தாறும் ஆண்டு' என்பது $2 \times 90 + 36 - 24 =$ கி. பி. 192 ஆகிறது.

கி. பி. 192க்குரிய சேர அரசன் பாஸ்கர இரவி வர்மனின் இந்தப் பத்திரம் தென் இந்தியாவில் ஒழுங்காகப் பேணப்பட்டு நமக்கு வந்து சேர்ந்துள்ள செப்புப் பட்டயங்களில் மிக மிகப் பழமை வாய்ந்ததாகும். இக்காரணத்தால் அது ஆராய்ச்சிக்கு மிகவும் முக்கியமானதாகும். பண்டை இலக்கியங்களைவிட எழுத்து மூலங்களிலேயே மிகுதி நம்பிக்கை கொள்ளும் வரலாற்றாராய்ச்சியாளர்களுக்கு, இரண்டாம் நூற்றாண்டுக்குரிய தமிழ் நாகரிகத்தின் வகையில் இந்த எழுத்துமூலம் மிகவும் ஏற்புடைய சான்றுகள் தருகிறது.

பத்திரத்தின்மொழி மிகப் பழங்காலத்துக்குரிய நாட்கடந்த தமிழாயிருப்பதனாலும், அதில் வழங்கப்பட்ட சில தொடர்கள் வழக்கிறந்த தொடர்களாயிருப்பதாலும், அதைத் திருத்தமாக மொழி பெயர்ப்பது அரு முயற்சியாகும். ஆயினும் கூடுமான மட்டும் மூலத்திலிருந்து மாறுபடாத நிலையில் அதன் பொருளைக் கீழே தருகிறோம் :[1]

1. பட்டயத்தின் மூலமொழி தமிழானாலும் ஆங்கில முதனூல் ஆசிரியரின் ஆங்கில மொழிபெயர்ப்பின் மறுதமிழ் மொழிபெயர்ப்பே இங்கே கீழே தரப்படுகிறது. மூலப்பட்டயத்தின் வாசகம் தமிழாக ஆசிரியர் கைக்குக் கிட்டவில்லை. அதுகிட்டினால், மூலத்தமிழே இவ்விடத்தில் சிறப்பும் பயனும் தருவதாக அமையும் என்பதில் ஐயமில்லை. ஏனெனில் 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட, சங்ககாலத்துக்குரிய, பேச்சுவழக்குத் தமிழுக்கு அது ஒரு சிறந்த சான்று ஆகும்.

*" வாழி நனி வாழி!*

*" மன்னர் மன்னன் அரசர் தம்பிரான் ஸ்ரீபாஸ்கர இரவி வர்மன் ஆட்சி — அது பல நூறாயிர ஆண்டு நீடுக[1]—அவ் ஆட்சி நடவா நின்ற ஆண்டு 36க்கு எதிரான 2ஆவது ஆண்டில் அவர் முயிறிக்கோட்டில் தங்கியிருந்த காலையில் அருளிச் செய்த கொடைப் பத்திரமாவது :*

*"யாம் ஜோசப் ரப்பனுக்கு அஞ்சுவனம் நாடு, பணமாகவும் பொருளாகவும் திறை (பெறும் உரிமை),[2] அஞ்சுவனத்தின் வரிவருமானம், பகல் விளக்கு, தெரு விரிப்பு, பல்லக்கு, குடை, வடுகமுரசு, எக்காளம், கால்மிதியடி, அணிதோரண வளைவுகள், மேற்கட்டிகள், தோளில் தண்டயங்களின் மீது சுமக்கப்படும் பரிசுகள் ஆகியவற்றுடன் பெருமகனுக்குரிய 72 சிறப்புரிமைகளையும் கொடுத்துள்ளோம்,*

*"நிலவரியும் நீர்வரியும் கொடுக்கும் கடமையிலிருந்து அவருக்கு விலக்குரிமை அளித்திருக்கிறோம், அரண்மனை வகைக்கு மற்ற நாடுவாழிகள் வரி செலுத்தும் சமயம் அவர் செலுத்தவேண்டியதில்லையென்றும், அவர்கள் (பரிசுகள்) பெறும் சமயம் அவரும் பெறுவாரென்றும் இந்தச் செப்புப் பட்டய மூலம் நாம் கட்டளை செய்கிறோம்.*

1 'பல நூறாயிரத்தாண்டு செங்கோல் நடத்தி ஆளநின்ற' என்பதன் குறிப்பு இப்பத்திரத்தில் ஒரு வாழ்த்தாகத் தெரிகிறது.

2 'பிடியலும் பயந்தலும்' என்ற தொடருக்கு டாக்டர் குண்டெர்ட்டினால் (Dr. Gundert) 'யானை முதலிய ஊர்திகளில் செல்லுதல்' என்று பொருள் கொள்ளப்பட்டுள்ளதும் சென்னை இலக்கிய இயல் நூல் நாளேடு (Madras Journal of Literature & Science) XIII பகுதி I பக்கம் 137; ஆனால் சரியான பொருள் " பணமாலைகளும் பொருளாகவும் " என்றே தோற்றுகிறது. பிடி என்பது உடனடிக்காசு என்றும், பெண்யானை என்றும் இரு பொருள்படும். பயனம் அல்லது பசனம் 'பங்கு' என்று பொருள் தருகிறது. 'இடுவடி' என்ற சொல் டாக்டர் குண்டெர்ட்டால் ' வளைவுகளுடன்கூடிய வாயில் ' என்று மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. ஆனால் எந்தப் பண்டை நூலிலும் அது இந்தப் பொருளில் வழங்கவில்லை. சரியான பொருள் பாதுகைகள் அல்லது மிதியடிகள் என்பதே என்று தோற்றுகிறது.



*" அஞ்சுவனம் கோமான் ஜோசப் ரப்பனுக்கும் அவனது வழி வழி மரபினருக்கும் புதல்வருக்கும் புதல்வியருக்கும் மருமக்களுக்கும் மாப்பிள்ளைகளுக்கும் மரபுரிமைக்கொடை பத்திரமாக எழுதிக்கொடுத்தது. வாழ்க.*

**இது கண்டுணர்ந்த கோவர்த்தன மார்த்
தாண்டன், வேணாட்டுக் கோமான்**

**இது கண்டுணர்ந்த கோதை ஸ்ரீ கண்டன்
வேணாவளிக் கோமான்**

**இது கண்டுணர்ந்த மானவேபால மான
விஜன் ஏரள நாட்டுக் கோமான்**

**இது கண்டுணர்ந்த ராயரன் சாத்தன்
வள்ளுவ நாட்டுக் கோமான்**

**இது கண்டுணர்ந்த கோதைரவி
நெடும்புரையூர்க் கோமான்**

**இது கண்டுணர்ந்த முருகன் சாத்தன்
கீழ்த்திசைப் படைத் தலைவன்**

**பெரிய தலைச்சேரிக் கீழ்வாய், மலை
பிளந்தான் கேளப்பன் எழுதியது.**

இப்பத்திரத்திலிருந்து நாம் அறியவரும் செய்திகள் பல. அவையாவன : கி. பி. 2ஆம் நூற்றாண்டின் முடிவில் மலபார்க் கரையிலுள்ள தமிழ்க்குடியிருப்புக்கள் வடக்கே தலைச்சேரிக்கு[1] அப்பாலும் கிழக்கே மலைத்தொடர் அடிவாரம் வரையிலும் பரவியிருந்தது, சேர அரசு ஆறு அல்லது ஆறுக்கு மேற்பட்ட மாகாணங்களாகப் பிரிவுற்றிருந்தது. அதன் ஆட்சியாளர்கள் மன்னர்கள் மதிப்பை அடைந்திருந்தனர், ஆகவே சேர அரசர் மன்னர் மன்னர் அல்லது பேரரசர் என்ற பட்டம் ஏற்றனர். மாகாணத் தலைவர்கள் மன்னனின் ஒரு மன்றமாக இயங்கினர். எந்தக் கொடைப்பத்திரமும் அவர்களுடைய இணக்கம் பெற்றே செய்யப்பட்து. அவர்கள் இணக்கத்துடனேயே எந்தச் சிறப்புரிமைகளுக்கும் மன்னன் இசைவளித்தான்.

1 Tellicherry

நிலக்கிழாருக்கு விலக்குரிமை அளிக்கப்பட்டிருந்த இடங்கள் நீங்கலாக, ஆட்சிப்பகுதியின் எல்லா இடங்களிலும் மன்னனால் நிலவரியும் நீர்வரியும்பிரிக்கப்பட்டன என்றுதோற்றுகிறது, சிறுநிலத்தலைவர்களிடமிருந்துமாகாணத்தலைவனுக்குத்திறை பணமாகவும் பொருளாகவும் அளிக்கப்பட்டது.

மன்னன் இசைவு பெற்றே அயல்நாட்டார் மிதியடி அணியவோ, குடைபிடிக்கவோ, பல்லக்கில் செல்லவோ முடியுமென்ற செய்தி மிகப் புதுமை வாய்ந்ததாக நமக்குத் தோற்றுகிறது. நடப்பதற்கு வீதிகளில் துணிவிரித்தல் செல்லும் வழியில் அணிமணி வளைவுகள், மேற்கட்டிகள் அமைக்கப் பெறுதல், தம் வரவு செலவு அறிவிக்க முரசம் எக்காளம் முழக்கப் பெறுதல் ஆகிய சிறப்புரிமைகளைப் பெருமக்கள் தம் தனிப் பெருமைகளாகக் கொண்டு மகிழ்ந்தனர். பெரிய நிலக்கிழார்களால் 72க்குக் குறையாத இத்தகைய உரிமைகள் சிறப்புரிமைகளாகக் கொள்ளப் பட்டிருந்தன. அவை யாவை, எத்தகையவை என்பது பத்திரத்திலிருந்து விளங்கவில்லை.

இதே அரசன் பாஸ்கர–இரவி வர்மன் ஆட்சிக்காலத்துக்குரிய மற்றொரு பத்திரம் பொறையர் நாட்டுத் தலைவனாகிய பொறைகிழானால் (வை நாட்டிலுள்ள) திருநெல்வேலித் திருமால் கோயிலுக்கு அளிக்கப்பட்ட மானியத்தைப் பதிவு செய்கிறது.[1] இம்மானியம் பொறையூரிலுள்ள ஐந்நூற்றுவர் கட்டுக்காப்பில் விடப்பட்டது. இந்த ஐந்நூற்றுவர் அந்நாட்டின் ஐந்நூறு குடும்பத் தலைவர்களடங்கிய ஒரு பேரவை என்பதில் ஐயமில்லை, இதிலிருந்து இந்தப் பழங்காலத்தில், மேலீடாகக் குடிமக்கள் வாழ்வு உடைமைகள்மீது மன்னனுக்கு வரையறையற்ற உரிமை

1 இப்பத்திரத்தின் நேர்படம் ஒன்றும் மொழிபெயர்ப்பும் டாக்டர் ஹல்ட்ஸினால் (Dr. Hultzsch) வெளியிடப்பட்டுள்ளது. இந்தியப் பழைமை ஏடு (Indian Antiquary) ஏடு XX, பக்கம் 285.



இருந்தாலும், சிறு நிலச் செயலாட்சியின் பெரும்பகுதியும் மக்கள் கையிலேயே இருந்தது என்று தெரிகிறது.[1]

1 "இவ்வறு நூற்றுவர் நாட்டின் மேற்பார்வையாளரும் காப்பாளரும் ஆவர்" மலபார்க் கையேடு, (Malabar Manual) ஏடு I, பக்கம் 267. இன்னொரு பத்திரம் இராமவள நாட்டின் 600 பற்றிக் குறிப்பிடுகிறது. ஆங்கிலேயர் மலபாரை வென்று கொள்ளும் வரை இந்த ஊர்க் குடியரசுகள் தொடர்ந்து நிலவி வந்தன. "நாடு அல்லது மண்டலம் பல ஊர்க் குடியரசுகள் அலலது தரைகளின் தொகுதியாயிருந்தது. நாட்டின் குட்டம் அல்லது பேரவை மிக்க பேராற்றலுடைய பேராண்மை வாய்ந்த ஓர் அவையாயிருந்தது. தேவை ஏற்பட்ட காலங்களில் அது அரசன் ஆற்றலை ஒதுக்கிவைத்து விட்டு அவர்களின் அமைச்சர்களை அவர்களது 'வரம்புமீறிய செயல்களுக்குத் தண்டிக்க முடியும்!" இவ்வாசகங்கள் உண்மையில் 1746இல் கோழிக்கோட்டில் நடைபெற்ற உள்நாட்டுக் கலவர நிலையை விளக்கி எழுதும்படி கேட்டுக் கொள்ளப்பட்ட போது, அவ்விடத்தில் ஆங்கிலக் கிழக்கிந்திய வணிகக் குழாத்தினரின் பேராளாயிருந்தவர் குழாத்தினருக்கு அனுப்பிய விளக்கத்தின் வாசகங்களே யாகும். இந்த அறிவிப்பு முழுவதும் எடுத்துக்காட்டுதற்குரிய தனி முக்கியத்துவம் உடையது. ஏனெனில் அன்று நடைமுறையிலிருந்த செய்திகளை அது திறம்பட விளக்குகிறது. அவர் எழுதியதாவது : "இந்த நாயர்கள் கோழிக்கோட்டு மக்களின் தலைவர்களாதலால், ஆங்கிலச் சட்ட மன்றத்தைப் போன்ற நிலையிலுள்ளவர்கள். அவர்கள் எல்லாச் செய்திகளிலுமே அரசன் கட்டளைகளை ஏற்றுப் பணிபவர்களல்லர். அரசனின் அமைச்சர்கள் தகாச் செயல்கள் புரியும்போது அவர்கள் கண்டித்து ஒறுக்கிறார்கள்." மலபார்க் கையேடு (Malabar Manual) ஏடு I, பக்கம் 89.

## சோழர் மரபுக்கொடி

(பெயர் குறிக்கப்படாத ஒரு) சோழ மன்னன்




# 5. சோழர்

சேர, சோழ, பாண்டிய மண்டலங்களை ஆண்ட அரசரின் தனிப்பட்ட வாழ்க்கை வரலாறுகளிலே, ஆங்காங்கே துண்டுத் துணுக்கான குறிப்புக்களே இன்று நமக்கு வந்து எட்டியுள்ள பண்டை இலக்கிய ஏடுகளில் காணப்படுகின்றன. இவற்றிலும் சில சமயம் ஒரே அரசன் பல விடங்களில் பல பட்டப்பெயர்களால் குறிக்கப்பெறுகிறான். ஒரே மரபின் பல அரசர்கள் அடிக்கடி ஒரே பெயரால் சுட்டப்படவும் நேர்கிறது. இந்தத் துண்டுத் துணுக்கான குறிப்புக்களையெல்லாம் தொகுத்துக்கோத்து, அவற்றிலிருந்து தொடர்பான வரலாறு காண்பதென்பது எளிதான செய்தியன்று. அதிலும் இதில் நான் முதல் தடவையாக முனையவேண்டியிருப்பதால், புதிய ஆராய்ச்சிகள்மூலம் நான் கூறிய தகவல்கள் பிழைபட்டவையாக நேரினும் நேரலாம். இந்நிலையில் நான் பின்வரும் தமிழரசர் ஆட்சி வரலாற்றுக் கோவையை கி. பி. 50க்கும் 150க்கும் இடைப்பட்ட காலத்துக்குள்ளாக வரையறுத்துக்கொள்ள விரும்புகிறேன்.

இத் தறுவாயைப் பயன்படுத்தி, பண்டைத் தமிழ்க் கவிதையின் பகுதிகள் பலவற்றை மொழிபெயர்த்துத் தந்துள்ளேன். ஏனெனில், தமிழ் மக்களின் பழக்க வழக்கக் கோட்பாடுகள் பற்றி நான் என் சொற்களால் எவ்வளவு வருணித்தாலும், அவ் வருணனையைக் காட்டிலும் பன்மடங்கு தெளிவான, விளக்கமான கருத்தோவியத்தை இந்நூற்பகுதிகள் தரமுடியும்.

நான் ஏற்கனவே குறித்துள்ளபடி, செங்குட்டுவன் என்ற இமயவரம்பன் இலங்கைக் கயவாகுவுடனும் மகத நாட்டுக் கர்ணருடனும் சமகாலத்தவன் என்ற சிலப்பதிகாரக் குறிப்பு, தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரு முக்கியமான வரலாற்று விளக்கக் கல் ஆகும். அதே நூலில்

செங்குட்டுவன் தன் தலைநகரான வஞ்சியில் கண்ணகிக்குக் கோயிலெடுக்கும் விழாவுக்குக் கயவாகுவை அழைத்த போது அவன் 50 ஆண்டுகளுக்கு மேற்பட்டவனாயிருந்தானென்றும் கூறப்படுள்ளது.[1] கயவாகு சேரர் தலைநகருக்கு அவன் ஆட்சியின் கடைசி ஆண்டிலேயே சென்றான். அச் சமயம் செங்குட்டுவன் 50 ஆண்டுடையவனாயிருந்தமையால், அவன் கி. பி. 75இல் பிறந்தவனாக வேண்டும் என்னலாம்.

செங்குட்டுவன் தாய் கரிகாலசோழன் மகள். எனவே கரிகாலன் பிறந்த ஆண்டு அவன் பெயரனான செங்குட்டுவன் பிறந்த ஆண்டைவிட 40 ஆண்டுகளுக்காவது முற்பட்டதாயிருக்கவேண்டும். அவன் கிட்டத்தட்ட கி. பி. 35-இல் பிறந்தவன் என்று கொள்ளலாம். அவன் மிகவும் சிறு வயதிலேயே அரசிருக்கை ஏறி, வழக்கமீறிய நீண்ட காலம் சோழநாட்டை ஆண்டதாகக் கூறப்படுகிறது. எனவே அவன் ஆட்சிக்காலம் ஏறத்தாழ கி. பி. 50 முதல் 95 வரை நீடித்திருக்க இடமுண்டு.

கரிகாலன் உருவப்பஃறேர் இளையோன் அல்லது இளஞ்சேட்சென்னி என்ற இளவரசன் புதல்வன்.[2] அவன் பிறப்பதற்கு முன்பே அவன் தந்தை இறந்துவிட்டான். பல உரிமையாளர் போட்டியிட்டுச் சோழ அரசிருக்கையைக் கைப்பற்றியதுடன், தீயால் அவனை அழித்துவிடவும் சதி செய்தனர். அவன் இவற்றிலிருந்து தப்பினாலும், அவன் கால்கள் தீப்புண் பட்டுக் கருகிவிட்டன. இதனாலேயே அவன் கரிகாலன் அதாவது கரிய காலையுடையவன் என்று அழைக்கப்பட்டான்.[3] தன் முன்னோர்களுக்குரிய அரச பீடத்தை மீட்பதில் அவன் மாமன் பிடர்த்தலையன் அவனுக்குப் பேருதவியாயிருந்தான்.[4]

1 சிலப்பதிகாரம், XXVII அடிகள், 129—130.
2 பெரும்பாணாற்றுப்படை, அடி 130.
3 பொருநராற்றுப்படை இறுதியிலுள்ள பாடல்களில் மூன்றாவது.
4 பழமொழி.



இடர்களிடையே வளர்ந்து அவன் வாழ்வின் படிப்பினைகளால் மெய்யறிவு வாய்க்கப்பெற்றவனாயிருந்தான். அவன் கால அரசர்களிடையே அவனே அறிவிற் சிறந்தவனாகவும், ஆற்றலில் மிக்கவனாகவும் விளங்கினான். அவன் இளமைக்காலம் பற்றிய ஒரு நிகழ்ச்சி அவன் சமய வாய்ப்பான கூரறிவையும், மன உரத்தையும் காட்டுகின்றது.

அந் நாட்களில் எல்லாக் குற்ற வழக்குகளிலும் உரிமை வழக்குகளிலும் மன்னனே முதன்மை முறையாளனாயிருந்தான், இம் முறையில் கரிகாலனிடம் ஒரு சிக்கல் வாய்ந்த வழக்குத் தீர்ப்புக்கு வந்திருந்தது.[1] அதன் முடிவு பற்றி முதியோராகிய அவன் அமைச்சர்கள் கவலைப்பட்டனர். இளவேந்தன் அவர்கள் முகத்தோற்றத்தில் கரந்த எண்ணங்களை உணர்ந்துகொண்டான். அவன் உடன்தானே தன் தனியறைக்குச் சென்று, போலி நரை மயிர்க் கோலம்பூண்டு, கிழவனுருவிலே மீண்டும் வந்தான். அரசிருக்கையில் மீண்டும் அமர்ந்து இருதிறத்தாரையும் மிகத் திறமையுடன் குறுக்கு வினா உசாவி, அவர்கள் வாய்மொழியிலிருந்தே மெய்நிலை காட்டிச் சரியான தீர்ப்பு வருவித்தான். மெய்யாகவே நரைத்தலையுடைய அவன் முதுமை வாய்ந்த அமைச்சர்களின் ஆர்வப் பாராட்டுக்கு இது உரித்தாயிற்று.

கரிகாலன் ஒரு பெரிய வீரன். வெண்ணிப் பெருவெளியில் நடைபெற்ற முதல் போரில், அவன் பாண்டியன் சேரன் ஆகிய இரு மன்னர்களின் இணைப்படைகளையும் வென்றான். தன் படைகளைத் தானே நடத்திய சேரன் முதலாம் ஆதன் இப் போரில் முதுகில் புண்பட்டான். இது அந் நாட்களில் கோழைமையின் மாறாச் சின்னமாகக் கருதப்பட்டதனால், இந்த அவமதிப்பைப் பொறாத தூய வீரனான சேரன் தானாக மாள்வை எதிரேற்கத் துணிந்தான். போர்நிகழ்ச்சியின்போது அவனுடனிருந்த கழாத்தலையார் என்னும் புலவர் தம் மன்னன் தோல்விக்கு மனம் நைவுற்று, அதனால் அவன் குடிகளுக்கு நேர்ந்த

1 பழமொழி 21, மணிமேகலை IV, அடிகள் 106—107.

மனமறுக்கத்தையும் சூழ்துயர் இருட்சியையும் கீழ்வரும் பாக்களில் தீட்டியுள்ளார்.[1]

"முரசு முழங்கவில்லை. யாழ் இசையை மறந்தது. அகன்ற பால்வட்டில்கள் பாலின்றி வரண்டு கிடந்தன. சுறுசுறுப்பு வாய்ந்த தேனீக்கள் திரட்டிய தேனைத் தீண்டுவாரில்லை. உழவர் கழனிகளில் உழுதலைத் தவிர்ந்தனர். ஊர்ப்புற வெளிகளில் விழா பயில் கூட்டங்கள் எதுவுமில்லை. முழு நிலாக் கலை நிறைவுடன் எழும் சமயத்தில் ஞாயிறு மலைகளின் பின் மறைவதுபோல, எம் வீர மன்னன் முதுகில் புண்பட்டதனுல் மானம் பொறுமல் வாளைப் புறத்தெறிந்து (பட்டினி கிடந்து இறந்து) விடத் துணிந்தான். அந்தோ, இந் நாட்கள் எவ்வளவு களிப்பிறந்த துயரம் கப்பிய நாட்கள்!"

இன்னொரு கவிஞர் வெண்ணில் குயத்தியார் சோழ அரசனுடன் போரில் இருந்தார். சேரனின் நலங்கெட்ட நிலை அவர் உள்ளத்தையும் தைத்ததாகத் தோற்றுகிறது. கரிகாலனை விளித்து அவர் பின்வருமாறு கூறுகிறுர்.[2]

"பரந்த கடலில் செல்லும்போது கப்பலின் பாய்களை ஓட்டும்படி காற்றையே ஏவும் திறம் வாய்ந்த வீரனின் வழித்தோன்றலே! கரிகால்வளவ! இப் போரில் வீரம் பிறங்கப் போராற்றிய வலிமைவாய்ந்தயானைப்படைகளின் கோவே! உன்னை எதிர்த்து நின்று போராடி முதுகில் புண் உற்ற மானக்கேடு தாங்காமல் புகழ் மாள்வு பெறும்படி உணவு மறுத்துப் பட்டினிகிடக்கும் அவ்வரசன் உன்னினும் மேம்பட்டவன் அல்லனே?"

மற்றெரு போரில் கரிகாலன் ஒன்பது மன்னர்கள் சேர்ந்த கூட்டுப்படையை எதிர்த்து முறியடித்தான்.[3] ஆயரின மன்னர் மரபை வேரோடழித்து, ஒளிநாகர், அருவாளர் ஆகிய மரபினரைத் தன் ஆட்சிக்கு உட்படுத்தி

1 புறம் 65. 2 புறம் 66.
3 அகம் 124 : பரணர்.



ஞன்.[1] நாடோடி மரபினரான குறும்பரை அவன் கீழடக்கினுன்.[2] அவந்தி வேந்தர், வச்சிர மன்னர், மகதப் பேரரசர் ஆகியவர்களுடன் அவன் நட்புடையவனுய் இருந்தான்.[3] பிற்காலப் புலவர்கள் அவனை வானளாவப் புகழ்ந்து புனைந்துரைத்துள்ளார்கள். அவன் தன் படையாற்றலை இந்தியப் புராணங்களில் உலகின் நடுவிடமாகக் கூறப்பட்ட பொன்மலை அல்லது மேருவரையில் கொண்டு சென்றதாகவும், அதன் உச்சியில் தன் புலிச்சின்னம் பொறித்ததாகவும் அவர்கள் கூறியுள்ளனர்.[4]

காவிரியில் ஆண்டுதோறும் வரும் பருவ மழை வெள்ளம் சோழநாட்டின் பெரும்பகுதியை வெள்ளக் காடாக்கி வந்தது. இது மிக அடிக்கடி நிகழ்ந்து வந்ததனுலேயே அந்நாட்டுக்குப் புனல் நாடு அல்லது வெள்ளம் பெருகிய நாடு என்ற பெயர் ஏற்பட்டது. தன் எதிரிகளை எல்லாம் வீழ்த்தித் தன் பேரரசில் அமைதி நாட்டிய கரிகாலன் இப்போது ஆட்சிப் பகுதியிலுள்ள நாடுகளைச் சீரமைப்பதில் கருத்துச் செலுத்தினுன். நாட்டில் அழிவு பரப்பி அடிக்கடி தொல்லை தரும் இவ்வெள்ளத்தின் அழிவைத் தடுத்து நிறுத்தும் மாபெருந் திட்டமொன்றை மேற்கொண்டான்.

அவன் காவிரி இருகரைகளிலும் நெடுக உயர் கரை எழுப்ப முனைந்ததுடன், அதன் நீர்வளத்தைப் பரப்பி ஒழுங்குபடுத்தும்படி அணைகளும் கால்வாய்களும் கட்டமுற்பட்டான்.[5] இதனுல் காவிரியின் நீர் பரவிய இடங்களிலெல்லாம் இக் கால்வாய்களால் ஏற்பட்ட வளம் மிகப் பெரிது. அதன் பயனுக, விதைமணி ஒவ்வொன்றும் அந் நிலத்தில் ஓராயிரமாக விளையும் என்ற பழமொழி ஏற்படலாயிற்று.

1 பட்டினப்பாலை, அடிகள் 274—275.
2 அகம் 140 : நக்கீரர்.
3 சிலப்பதிகாரம் V, அடிகள், 99—104.
4 கலிங்கத்துப்பரணி.
5 சிலப்பதிகாரம் X, அடிகள், 108—111.

சோணாட்டின் தலைநகரம் கடற்கரையிலிருந்து மிகு தொலை விலகி உறையூரிலிருப்பது நாட்டின் வாணிக வளத்துக்கு ஏற்றதன்று என்று மதியார்ந்த இவ்வரசன் கண்டான். ஆகவே அவன் காவிரியின் கடல் முகத்திலிருந்த புகழ்வாய்ந்த வாணிகக்களத்தை அரண்செய்து அதைத் தன் தலைநகரம் ஆக்கினான்.[1]

வாணிகத்துக்கும் உழவுக்கும் அவன் இவ்வாறு தன் அறிவார்ந்த திட்டங்களால் தந்த ஊக்கம் விரைந்து வியத்தகு பயன் தந்தது. அவன் நாட்டின் செல்வமும் வளமும் பன்மடங்கு பெருக்கமுற்றது. நன்றிமிக்க அவன் குடிகள் இக் காரணத்தால் அவனை என்றும் கரிகாற் பெருவளத்தான் அல்லது பெருஞ்சோழன் கரிகாலன் என்றழைத்தனர்.

கரிகாலனுக்குப் பெருந்திருமாவளவன் என்றும் பெயர் வழங்கிற்று.[2] அவன் ஆட்சியின் மாலைப்போதில், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி நட்புமுறையில் கரிகாலனைக் காணச்சென்றிருந்ததாகத் தெரிகிறது. இருமன்னர்களும் ஒருங்கிருந்த சமயம், காவிரிப்பட்டினத்துப் புலவர் காரிக்கண்ணனார் இருவரையும் நோக்கிப் பாடியது வருமாறு.[3]

"(பலநாடுகளுக்கும்) வளம் கொழிக்கும் புனலையுடை காவிரியின் கோமான் நீ!

"இவ்வரசனே, வீரம் செறிந்த இனத்தவரான பஞ்சவர்களிடையே ஒரு சிங்க ஏறு. மூத்தோர் களம்படினும் தளராமல் களம்வென்று குடிபுரந்தாட்சி செய்யும் குரிசில். தாய்மரம் பட்டாலும் அதன் கிளையினின்று விழுதாக நிலத்திலூன்றி வேர்க்கொண்டு அதனை வாழ்விக்கும் கிளைமரம் போன்றவன் அவன். இளையோனாயினும்

1 பட்டினப்பாலை அடிகள், 285—288.

2 பட்டினப்பாலை, அடிகள் 299; பொருநராற்றுப்படை இறுதிப் பாடல்களில் இரண்டாவது.

3 புறம் 58.



நாகக் கூட்டத்திடையே விழும் இடியேறுபோல எதிரிகளிடையே சென்று தாக்கிச் சிதறடித்துள்ளான்.

"நீ அறம் தங்கும் உறந்தை வீரன். இவ்வரசனே, ஏனைய அரசர்களைப்போல நீர்வளம் வாய்ந்த கழனிகளையும் பயிர்வளங்களையும் மட்டும் உடையவனல்லன். அவற்றுடன் மலைதரு வளமாகச் சந்தன மரங்களையும் கடல்தரு வளமாக முத்துக்களையும் உடையவன். இடிமுழக்கமிடும் முரசமூன்றுடன் தமிழ்க் கல்விக்கிருப்பிடமாகிய கூடல் நகரை அளிசெய்து ஆளுபவன்.

பனைக்கொடி ஏந்திய வெள்ளியோனும் (பலதேவனும்) ஆழி ஏந்திய கரியோனும் (திருமாலும்) ஆகிய இரு தேவர்களைப்போல வீறுடையவர்களாய் நீங்கள் இருவரும் எதிரிகளுக்கு நடுக்கந்தரத்தக்கவர்கள். உங்களையொத்த இத்தகைய இரு பெரு வேந்தர்களின் நட்பைப்போல இனிதாவது ஏதேனும் உண்டா?

"என் உரைகளை இருவீரும் செவிகொடுத்துக் கேளுங்கள்! நீங்கள் நீடு வாழ்க. உங்களுள் ஒவ்வொருவரும் மற்றவருடன் எதிர்த்து நிற்கும் வல்லமையுடையவர்கள். ஆனால் உங்கள் நட்பறாவிட்டால், நீங்கள் இந்தக் கடல் சூழ்ந்த வையம் முழுவதும் வென்றுக்கொள்ளத் தடையிராது. ஆகவே ஒருவருடன் ஒருவர் நல்லவராய், நேர்மையுடையவராய் இருங்கள். உங்கள் முன்னோர்கள் வழி நின்று உங்களைப் பிரிக்கும் தீயோர் உரைகளுக்குச் செவி சாய்க்காதிருப்பீர்களாக.

"இன்றிருக்கும் ஆர்வம் குன்றாமல், உங்கள் நட்பு என்றும் நீடிப்பதாக. போர்தொறும் போர்தொறும் உங்கள் வேல்கள் வெற்றி காண்பதாக. வரிப்புலியின் கொடியும், மீன் கொடியும் உங்கள் எதிரிகள் நிலத்திலுள்ள மலைதோறும் அலையாடுவதாக."

அவன் ஈகைப்பண்பும், அவன் அவையை அணுகிய கவிஞர்களிடம் அவன் காட்டிய வள்ளன்மையும் அவனது ஆட்சியின் கடைப்பகுதியில் முடத்தாமக்கண்ணியாரால்

இயற்றப்பட்ட பொருநராற்றுப்படையில் நன்கு விரித்துரைக்கப்படுகின்றன.[1] ஆசிரியரைக் கரிகாலன் நல்லன்புடன் வரவேற்ற செய்தியை விரித்து அவர் மற்றொரு கவிஞரிடம் அக் கரிகாலனைச் சென்று காணும்படி கூறுவதுபோலப் பாடல் திட்டப்பட்டுள்ளது. இப் பண்டைக் காலத்தில் தமிழரசர்கள் கவிஞர்களிடம் கொண்டிருந்த நட்பிணக்கத்தைக் காட்டுகிறது என்ற முறையில் இது நமக்கு இறும்பூது தருவதாகும். பொது வாசகர்களுக்குச் சுவைபடாத பகுதிகளை மட்டும் விட்டுவிட்டு, பாட்டின் மொழிபெயர்ப்பைக் கீழே தருகிறேன்.[2]

" விழாவயரும் நகரந்தொறும் சென்று, நகரில் விழா முடிந்ததும் அதை விட்டுச்செல்லும் பாணனே !

" உன் மனைவி பெடைமயில்போலும் சாயலினள். அவள் குழல் நெய்தோய்ந்து கருமையுடையவை. அவள் நுதல் பிறைமதி ஒத்தது. கூற்றுவன் சிலைபோல் வளைந்த புருவத்தினடியிலே மென்மை வாய்ந்த கண்களை உடையவள் அவள். அவள் இதழ்கள் இலவின் பூவிதழ்கள் ஒத்தவை. அவள் குரல் இசைபோன்றினியது. அவள் பற்கள் முத்துவரிசைபோன்றவை. மயிர் கத்திரிக்கும் கத்திரியின் பிடிபோன்று தொங்கும் காதணிகளை அணிந்தவள். நாணத்தினால் சற்றே வளைந்த கழுத்தினள். உயர் மலைகளின் உச்சியில் மலரும் செங்காந்தள் போன்ற மெல் விரல்களை உடையவள் அவள்.........

" இத்தகைய உன் மனைவி யாழின் நரம்புகளை மென்மையாகத் தொட்டும் தைவந்தும் விரைந்து பயின்றும் இன்னிசை பாட. நீ திருநீர் தெளித்து வழிபட்டு வன தெய்வங்களைப் பூசித்தாய். நொந்து களைத்த காலுடன் நடக்கும்

1 பொருநராற்றுப்படை.

2 (ஆங்கில மூல ஆசிரியர் குறிப்பு:) மாண் திரு. பி. குமாரசாமி அவர்கள் மொழிபெயர்ப்பையே நான் இங்கே பின்பற்றுகிறேன். ஜே. ஆர். ஏ. எஸ். (Journal of the Royal Asiatic Society—ஆசிய மன்னுரிமைக் கழக நாளோடு) இலங்கைக் கிளை, ஏடு XIII, எண் 45.



வழிப்போக்கருக்கு நிழலின்றி இலைதளையற்ற மரங்களை உடையதாய், காட்டுயானைகள் திரியும் காடுகள் வழியாகச் செல்லும் நீ இடையூறின்றிச் சென்று மீளவேண்டுமென்று வேண்டுதல் செய்தாய்.

" வாழி, பாணர்களில் சிறந்த பாணனே, வாழி! உன் நற்பேறு உன்னை இங்கே கொண்டுவந்து விட்டது. இனி இத்தகைய ஈயாக் கடுவழிகளில் நீ செல்லவேண்டுவதில்லை. இனி நீ வாழ்வில் வளப்படுவாய்! ஏழு நரம்புகளை இயக்கும் திறலுடையவனே! உன்னையும் உன் குடும்பத்தையும் வாட்டி வதக்கிய வறுமையை நீ ஓட்டி ஒழிக்க விரும்புவாயானால், இன்னே எழுக !

"பழுத்த கனி நிறைந்த மரங்களைப் பசியுடன் தேடும் பறவையைப்போல, நான் ஒருநாள் விடியற்காலையில் ஓர் அரசன் அரண்மனை வாயிலுக்குச் சென்றேன். வாயில் காப்போரின் இணக்கம்பெற்றுச் சுணங்காமல் நேரடியாகவே உள்ளே நுழைந்தேன். நடந்து களைத்து அலுத்துச் சென்றபோதிலும், உடனே என் களை தீர்ந்தது. மகிழ்ச்சி நிரம்பிற்று. மன்னனை நான் உடனே அணுகினேன். கையிற் கொண்டுசென்ற சிறு முரசை இயக்கிய வண்ணம் பாடினேன்.

" என்னை நீண்ட நாள் தெரிந்து பழக்கப்பட்டவன் போல அவ்வரசன் கனிவுடன் பேசினான். அத்தகைய அரசன் வாயிலில் சென்று இரப்பதுகூட ஒரு மானக் கேடான செயலல்ல என்று நான் உணர்ந்தேன். அவன் என்னைத் தன் முன்னே அமரும்படி கூறினான். அவ்வளவு கருணையுடன் நோக்கினான். என் ஆகம் முழுதும்சொல்ல முடியாத களிப்பினால் புல்லரித்தது.

" வியர்வையில் நனைந்து புழுங்கி, ஈரும் பேனும் ஆட்சி செய்த என் ஆடைகளை அகற்றி, உயரிய பூவேலையிட்ட மல் மல் ஆடையால் என்னைப் போர்த்தும்படி அவன் உத்தரவிட்டான். பூணணிந்த புன்முறுவல் பூத்த முகத்தினரான அவன் பணிப்பெண்டிர் பொற்கலங்களில் வெறி

யூட்டும் மதுவை ஊற்றி ஊற்றித் தர, நான் குடித்துக் குடித்து என் களை அயர்ச்சிகளையும் துயர்களையும் முற்றிலும் மறந்தேன். படுக்கையில் சாய்ந்து ஓய்வுகொண்டேன்.

“விழித்து எழுந்தவுடன் மட்டற்ற குடியால் ஏற்பட்ட வெறிமயக்க மன்றி வேறு எந்தக் குறையும் எனக்கு இல்லை என்று கண்டேன். என் இன்பம் எல்லையற்றதாயிருந்தது. ஆனால் அது உண்மையென்று நம்ப முடியவில்லை. கனவோ என்று தயங்கினேன். ஆனால் விரைவில் அது முற்றிலும் நனவுதான் என்பது எனக்கு விளங்கிற்று.

“என் மாணவர்கள் அவன் புகழ் பாடிக்கொண்டிருந்தனர். அதுகேட்டு அவன் எங்களை வரவழைத்தான். நாங்கள் சென்று அத்தகைய தறுவாய்களுக்கேற்ற வழக்கப்படி வணக்கம் தெரிவித்தோம். அவன் கம்பியிலிட்டு வாட்டப்பெற்ற வெள்ளாட்டிறைச்சியை எங்கள்முன் வைத்தான். இனி வயிறு கொள்ள முடியாது என்று கூறும்வரை எங்களை அவன் உண்பித்தான். இவ் விருந்தயரும் சமயத்திலேயே அழகிய ஆடல் நங்கையர்கள் யாழ் கையில் ஏந்தி எங்கள்முன் ஆடல்கள் நிகழ்த்தினர்.

“பலநாட்கள் விருந்தயர்ந்து குடித்த பின்னும், இனிய சோற்றுணவு அருந்தும்படி அவன் எங்களை வேண்டினான். பாலில் சமைத்த சோறுடன் இனிய பல பண்டங்களும் எங்கள் முன் வைக்கப்பட்டன. தொண்டை நிரம்பும்படி நாங்கள் உண்டோம்.

“இம்மாதிரிப் பல நாட்கள் கழித்தபின், நீண்டநாள் கடுநிலம் பெயர்த்த கொழுமேழிபோல, எங்கள் பற்கள் தின்று தின்று மழுங்கின. உணவும் குடியும் எங்களுக்கு வெறுத்துப்போயிற்று. அதன்பின் ஒரு நாள் நான் அரசனிடம் மெல்லப் பேச்செடுத்தேன்.

“எதிரிகளிடமிருந்து திறைபெறும் இறைவனே! என் ஊருக்குச் செல்ல எனக்கு விடைதர வேண்டுகிறேன்” என்றேன். என்னிடம் வெறுப்புற்றவன் போன்ற பார்வையுடன் என்னைப் பார்த்து, ‘இவ்வளவு



விரைவிலா எம்மை விட்டுப் போகிறீர்கள்?” என்று அவன் கேட்டான். அதே சமயம் எனக்கு அவன் களிறுகளும் பிடிகளும் மடநடைப் போதகங்களும் அடங்கிய யானைத் திரள்களை வழங்கினான். தகுதிவாய்ந்த பரிசென அவற்றை நான் பெற்று, வறுமைக்கு மீளா விடைதந்தனுப்பிவிட்டு விடைபெற்றுக் கொண்டேன்.

“வரையா வள்ளலாகிய இவன் போர்த்தெய்வமான முருகன் போன்ற வெங்கடுஞ்சீற்றமுடைய வெற்றிவேலேந்திய உருவப்பஃறேர் இளையோனின் மைந்தனாவான். தாயின் கருவிலிருந்தே அவன் அரசிருக்கைக்குரியவனாகப் பிறந்தான். எதிரிகளையெல்லாம் அவன் தன்னடி பணிந்து ஊழியம் செய்யப் பணித்தவன். அவனுடன் நட்புக்கொள்ளாத வேந்தர் நாடுகளிலெல்லாம் அவன் துன்பம் படர்வித்தான்.

“கடலகத்திலிருந்தெழும் கதிரவன் உயர உயர ஒளிமிக்குப் பிறங்குவதுபோல; இளமையிலிருந்தே வீரத்திலும் வலிமையிலும் வீறுமிக்குயர்ந்து, இப்போது கூற்றுவனைப் போல வலிமையுடையவனாய், ஈடெடுப்பற்ற ஒரு பேரரசைத் தோள்களில் தாங்கியுள்ளான். முதல் வேட்டையிலேயே வலம் பொருந்திய யானையைக் கொல்லும் இளஞ்சிங்க ஏறுபோல, வெண்ணில் களத்தில் ஆற்றப்பட்ட அவன் கன்னிப்போரிலே, அவன் பாண்டிய சேர அரசர்களை வீழ்த்தினான்.

“ஆத்தியின் ஒண்பூமாலைகளை அணிந்த பேரரசன் கரிகால்வளவன் இவனே.

“பெருமை மிக்க இவ்வரசனை அணுகி நீ அவன் அடிவணங்கினையானால், அவன் புதிது பிறந்த கன்றை நோக்கும் ஆவென உன்னை நோக்குவான். உன் பாட்டுக்களைக் கேட்பதற்கு முன்னால், அவன் உனக்குப் பட்டாடை அணிவித்துப் பொற்கலங்களில் மது அளிப்பான். நீ தங்கு நாளளவும் அவன் உன்னை விருந்தயர்வித்து, விடைகொள்

ளும் சமயம் உன் மயிர்முடிமீது பொற்றாமரைகளைச் சூட்டுவதுடன், உன் மனைவிக்குப் பொன் மாலைகளும் முத்து மாலைகளும் பரிசளிப்பான், செம்பிடரி மயிர் வாய்ந்த பால்வெள்ளைக் குதிரைகள் நான்கு இழுத்துச் செல்லும் தந்தத்தாலான முகடுகளையுடைய தேர்களையும் பல யானைகளையும் நீர்வளமுடைய ஊர்களையும் உனக்குப் பரிசளிப்பான்.

"பெற்ற பரிசில்களை உன் உழையர்களுக்குப் பகிர்ந்தளித்துவிட்டு நீ வீடு செல்ல விரைவாயானால், அப்போதும், இவ்வுலகில் நிலவும் எதுவும் நில்லா என்பதுணர்ந்தும் உன்னை விட்டுப்பிரிய 'மனமில்லாதவனாய், கனிவுடன் உன்னைத் தொடர்ந்து ஏழடி நடந்து, பின் உன்னைத் தேரேற்றி உனக்கு விடைகொடுத்தனுப்புவான்.

"சோழ நாட்டில் நீண்ட நாள் ஆட்சி செய்துவரும் மன்னன் இத்தகையவன். இளையோனா யிருக்கும்போதே முதியோர் மனம் நிறைவுற நீதி வழங்கியவன் அவன். குடிகளிடம் அன்பும் அருளும் நிறைந்த குற்றமற்ற அவன் நீண்ட ஆட்சி உலகெங்கும் புகழ் பரப்பிய ஒன்று. அவன் நீடு வாழ்க!

"நெற்போரிடையே தேனீக்கள் கூடு கட்டி வாழும் வளமுடைய புனல் நாட்டு வேந்தன் கரிகாலன் காலடிகள் மூவுலகும் வெல்ல உயர்ந்தவை. ஆனால் அந்தோ, அது இந்த ஒரு உலகத்தைத்தான் தாண்ட முடிந்தது; அதற்குள் தீப் பட்டுவிட்டது."

உறையூர் மருத்துவன் தாமோதரனார், சோணாட்டு எரிச்சலூர் மாடலன், மதுரைக்குமரன் ஆகிய கவிஞர்கள் இம் மன்னனைப் பாடிய பாடல்களும் 'புறநானூறு' என்ற பெயரிய பண்டைக் கவிதை நூலில் உள்ளன.[1]

கரிகால சோழன் மகள் நற்சோணை சேர அரசன் இரண்டாம் ஆதனுக்கு மணம் செய்விக்கப்பட்டாள்.

1 புறம் 60,197.



அவள் இவ்வாறு செங்குட்டுவன் சேரனுக்கும் சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோ அடிகளுக்கும் தாய் ஆனாள்.[1]

கரிகாலன் மறைவின்போது உடனிருந்த கருங்குழலாதனார் தம் துயரத்தைக் கீழ்வரும் பாடல்களில் குறிக்கின்றார் :

"எதிரிகள் கோட்டைகளை அஞ்சாது முற்றுகை செய்தவன்; பாணர்களுக்கும் அவர்கள் குடிகளுக்கும் விருந்தளித்து, எல்லையற்ற மது ஆறு பெருக்கி அவர்களை ஊட்டியவன்; கடமை தெரிந்த குருக்கள் வழி நின்று, பெருந்தன்மை மிக்க நற்குண அரசியல் துணைதர, திருமறை வினைமுறை வழாது மதில் சூழ்ந்த வேள்விச் சாலைகளிலே வேள்விகள் ஆற்றி, அவ் வேள்விக்களத்தின் நெடிய தூண்கள் மீது கழுகுகள் குழுமும்படி செய்தவன்.

"இத்தகைய அறிவும் திறனும் வாய்ந்த பேரரசன், அந்தோ, அகன்றான். அவனை இழந்து உலகம் வெறிதாகியுள்ளது. வேனிலின் கோடையிலே, கால் நடைகளை அருத்துவதற்காக ஆயர்களால் தழை குறைக்கப்பட்ட வேங்கை மரக் கிளைகளைப்போல, அணியிழந்து அவன் அழகிய மாதரசியர் நிற்கின்றனர்."[2]

கரிகாலனை அடுத்து ஏறத்தாழக் கி. பி. 95 இல் நலங்கிள்ளி அரசனானான். அவன் கலைத்திறம் செறிந்த நல்விணக்கமுடைய அரசன். அதனாலேயே 'நலங்கிள்ளி' அல்லது நல்ல கிள்ளி என்றழைக்கப்பட்டான். அவன் முன்னோன் நாட்டைச் செல்வ வளமோங்கிய நிலையிலே விட்டுச் சென்றதனால், அமைதியும் ஒழுங்கும் காப்பது தவிர அவனுக்கு வேறு தேவையில்லாதிருந்தது. ஆயினும் அவன் அயலரசுகளைத் தாக்கவும் தன் ஆட்சியை விரிவுபடுத்தவும் ஆவலுடையவனாய் இருந்தான்.

அவனுடைய போர்ப் படை எழுச்சிகளுள் ஒன்றில் அவன் படையுடன் பாளையமிட்டிருக்கும் சமயத்தில்

1 சிலப்பதிகாரம் XXX, அடிகள்: 173—183.

2 புறம் 224.

கோவூர்கிழார் என்ற புலவர் அவனிடம் சென்று இவ்வாறு பாடினார்.[1]

"அறத்தின் பின்னே பொருளும் இன்பமும் செல்வது போல, உன் மாற்றார் இருவர் (பாண்டியன், சேரன்) குடைகளும் முழுநிலாவெனத் துளங்கும் உன் குடையின் பின் வருகின்றன. புகழுவாவுடைய நீ உன் படைவீட்டில் தங்குவது தவிர வேறு எங்கே செல்லமுடியும்?

"எதிரிகளின் கோட்டைமதில்களைத் தாக்கி முனை மழுங்கிய தந்தங்களையுடைய உன் யானைகள் வெறிதே சோம்பியிருக்க முடியாமல் படபடக்கின்றன. காலில் வீரக்கழல்களணிந்த உன் படைவீரர்கள் அகன்றடர்ந்த காடுகளைக் கடந்தேனும் எதிரிகள் நாட்டில் நுழைய இருக்கின்றனர். உன் போர்க்குதிரைகள் கீழ்கடலிலிருந்து புறப்பட்டு மேல் கடலில் தங்கள் குளம்புகளை அலம்பும் வரை நிற்பதில்லை. இதனால் துணுக்குற்று நடுங்கி நீ தம் பக்கம் படை நடத்திவிடக் கூடுமென்று அஞ்சி, வடபுல அரசர்கள் கண்ணிமையாது விழித்திருந்து தம் எல்லைகளைக் காக்கின்றனர்."

அவன் தலைநகரிலிருந்து அடிக்கடி வெளியே சென்று தங்கியிருந்ததனால், மன்னர் குடியின் இளையோர்மீது அவன் ஆற்றல் தளர்ந்திருந்ததாகத் தோற்றுகிறது. நெடுங்கிள்ளி என்ற சோழ இளவரசன் அவனுக்கெதிராகக் கிளர்ந்தெழும்படி தூண்டப்பட்டான். தலைநகரமாகிய உறையூரை அவன் கைப்பற்றிக்கொண்டான்.

இக் கிளர்ச்சி பற்றிக் கேள்வியுற்ற அரசன் உறையூருக்கு விரைந்து சென்று அதை முற்றுகையிட்டான். முற்றுகையின்போது, இளந்தத்தன் என்ற ஒரு பாடற் புலவன் உறையூர் சென்றான். அவனை ஓர் ஒற்றன் என்று ஐயுற்று, நெடுங்கிள்ளி அவனைக் கைப்பற்றிக் கொலை செய்ய முனைந்திருந்தான். அச்சமயம் கோவூர் கிழார் என்ற புலவர் அவனிடம் சென்று இளந்தத்தன் உயிருக்கு மன்றாடி அவனைக் காத்தார்.

1 புறம் 31.



இத்தறுவாயில் கோவூர்கிழார் நெடுங்கிள்ளியை நோக்கிப் பாடிய பாடல் வருமாறு:[1]

"புலவர்கள் பறவைகளைப்போல எங்கும் பறப்பவர்கள். புரவலர்களை நாடிக் காடுகளைக் கடப்பவர்கள். நாவறிந்த அளவு அவர்களைப் புகழ்பவர்கள். பெற்ற பரிசில் கொண்டு மகிழ்ந்து, தம் உழையர்களுடன் விருந்து அயர்பவர்கள். மீத்துவைத்தலறியாது உண்பவர்கள். கொடுத்தலன்றிப் பேணல் அறியாதவர்கள். அவர்கள் அவாவுவது புகழன்றி வேறில்லை.

"பிறர் விரும்பி அளிப்பதன்றி வாழ்வுக்கு வேறு வகையற்ற இனம் பாணர் இனமே. இத்தகையோர் எப்போதாவது பிறருக்குத் தீங்கு செய்ய எண்ணுவார்களா? ஒருபோதும் மாட்டார்கள். தம்போன்ற பெரு மன்னர்களைப் புரவலனாகப்பெற்ற காரணத்தால் மற்றப்பாடகர்களுடன் போட்டியிட்டு அவர்கள் தலையிறங்கக் கண்டு தருக்குடன் நடப்பவர்கள் அவர்கள்."

உறையூரிலிருந்து கிளர்ச்சி செய்த இளவரசன் சோழ நாட்டின் மற்றோர் அரண்வாய்ந்த நகரான ஆவூருக்கு ஓடினான். நலங்கிள்ளி அவனை அங்கும் பின்தொடர்ந்து ஆவூரையும் முற்றுகையிட்டான். முற்றுகை எல்லைகடந்து மிகவும் நீடித்ததனால், நகரில் வாழ்வோர் உணவின்றிப் பட்டினிக்குள்ளானார்கள். ஆவூர் மக்களும் படை வீரரும் அடைந்த இன்னல்கள் கீழ்வரும் பாடலில் விரித்துரைக்கப்படுகின்றன.[2]

'களிறுகள் தத்தம் பிடிகளுடனே கோட்டைக்கு வெளியேயுள்ள ஏரிகளில் நீராடுவதற்கு நெடுநாள் இட்டுச் செல்லப்படாதிருக்கின்றன. வழக்கமாக அவற்றிற்கு ஊட்டப்படும் வெண்ணெய் கலந்த சோற்றுக்கவளமும் ஊட்டப்படாதிருக்கின்றன. இந் நிலையில் அவை தாம் சங்கிலியால் பிணிப்புண்ட கட்டுத்தறிகளின்மீது சீறுகின்றன. குழந்தைகள் பாலில்லாமல் அழுகின்றன. பெண்கள் மலரின்றிக்

1 கோவூர்கிழார், புறம் 47. 2 கோவூர்கிழார், புறம் 44.

கூந்தல் முடிக்கின்றனர். மக்கள் குடிக்க நீரின்றி அலமருகின்றனர்.

"இப்படியே இன்னும் இங்கே நீடித்திருப்பது பேரிடர் தருவது. விரைநடைக் குதிரைகளையுடைய வேந்தனே! நீ தக்கபடி நடப்பதானால், வாயில்களைத் திறந்து உம் மன்னனிடம் கோட்டையை ஒப்படைக்க! அல்லது போர் செய்யவே கருதினையானால், போர்வீரர்களை நடாத்திச் சென்று எதிரியுடன் போரிடுக! இரண்டும் செய்யாமல் கோட்டையின் வலிமை வாய்ந்த கதவுகளை அடைத்துக் கொண்டு, உயர் மதில்களுக்குப்பின் பதுங்கியிருப்பது மானக் கேடான செயலேயாகும்."

மன்னனுக்குக் கீழ்ப்படியாமலிருப்பதுபற்றிக் கவிஞர் நெடுங்கிள்ளியை இடித்துரைத்ததன் பயனாக, கிளர்ச்சி செய்த இளவரசனையும் மன்னனையும் இணக்குவிப்பதில் வெற்றி கண்டார். இம் முயற்சியில் அவர் கூறிய பாடல் ஒன்று வருமாறு.[1]

"அவன் பனையின் வெண்பூ அணிந்தவனல்லன். கரிய வேம்பின் பூவும் அணிந்தவனல்லன். நீ ஆத்திமாலை சூடியுள்ளாய். அவனும் ஆத்திமாலையே சூடி வருகிறான். உங்களில் எவர் தோற்றாலும், தோற்பது உங்கள் சோழர் குடியே. நீங்கள் இருவரும் வெற்றிபெறுவீர் என்பதும் முடியாத ஒன்று. உங்களிருவரிடையே போர் நிகழ்வது உங்கள் பழங்குடிக்கு அழிவு தருவது. அந்தோ, உங்கள் பகைவர் மகிழும்படி நடைபெறும் இவ் வுள்வீட்டுக் கலகம் எவ்வளவு கொடியது!"

அந்நாட்களில் ஒவ்வொரு அரசனும் படைத் தலைவனும் போர்க்களத்தில் வழக்கமாக ஒவ்வொருவகை மாலையைச் சூடினர். இதன்மூலம் எதிரிகளிடமிருந்து அவர்கள் தம்மை வேறு பிரித்துக் காட்டிக்கொண்டனர். பாண்டியன் வேம்பின் மலர்களை வேய்ந்துகொண்டான். சேரன் பனை மலரையும் சோழன் ஆத்திமலரையும் அணிந்தான். மேலே

1 கோவூர்கிழார், புறம் 45.



தரப்பட்ட பாட்டில், சோழனுடன் போரிடுவது பாண்டியனுமல்ல, சேரனுமல்ல என்பதைக் கவிஞர் இவ்வாறு விளக்கியிருக்கிறார். இருவரும் ஆத்தி மாலையே அணிந்திருப்பதனால், இருவரும் சோழரே யாயினர்.

உள்நாட்டுப் போர்களால் அலைப்புண்டு, நலங்கிள்ளி ஆட்சியில் சோழ அரசு செல்வ வளமிக்கதாய் அமையவில்லை. வெற்றிகரமான ஆட்சியாளனாக விளங்குவதற்குரிய தகுதிகளில் சில அவனிடம் இல்லாதிருந்தன. அவன் நற்குணமுடையவனேயானாலும், தன் ஆட்சி வளம்பற்றித் தற்பெருமை கொண்டிருந்தான். அவனே பாடிய கீழ்வரும் இப்பாடல் இதைக்காட்டுகிறது.[1]

"மெல்லவந்து என்னடி தழுவி ஒருவன் குறையிரந்து கேட்பதானால், நான் இப் பழம் பேரரசைக்கூடக் கொடுப்பேன். அதுமட்டுமோ? என் உயிரைக்கூட அவனுக்காக இடர்ப்படுத்துவேன். ஆனால், என் வல்லமையைக் குறைவாக மதித்து, அறிவிழந்து என் தன்னுண்மையை எதிர்த்தாலோ, தூங்கும் புலிமீது இடறிவிழுந்த மூர்க்கன்போல, அவன் உயிரிழந்துபோவான். பாரிய யானை இளமூங்கில் தளிரைக் காலடியிலிட்டுத் துவைத்தல்போல, அத்தகையோரைத் தாக்கி அழிக்காவிட்டால், நான் நல்லோர் நாடாது நீண்ட கூந்தலை உடைய பொதுமகளிரை அணைந்தேனாகுக."

அவன் பாண்டி நாட்டில் அரணமைந்த ஏழு நகரங்களைக் கைப்பற்றியதாகக் கூறப்படுகிறது. அரசின் எல்லையை விரிவுபடுத்த வேறெச்செயலும் அவன் செய்ததாகக் குறிப்பிடப்படவில்லை. தொல்லை நிரம்பிய குறுகிய கால ஆட்சிக்குப்பின் அவன் இறந்ததாகத் தோற்றுகிறது. அரசவைக்கு வருவோரிடம் அன்பிணக்கம் காட்டும்படி அவனுக்கு முதுகண்ணன் சாத்தன் அறிவுறுத்திய கீழ்வரும் பாட்டுச் சுவைகரமானது[2].

"நூறிதழ்களையுடைய கறையற்ற தாமரை மலரைப் போல, இவ்வுலகையாண்ட பெருங்குடியில் பிறந்தவர்

1 புறம் 73. 2 புறம் 27.

களைக் கூர்ந்து கவனித்துப்பார். அவர்களில் மிகச் சிலரே பாட்டிலும் கதையிலும் புகழ்பரப்பியுள்ளார்கள். தாமரையின் உலர்ந்த இலைச்சருகுகள்போல அவர்கள் புகழின்றி வீழ்ந்துள்ளார்கள். ஆனால் கவிஞர் பாடல்களுக்கு இலக்கான செயல்கள் செய்த பெரியோர்களோ, மேலுலகங்களில் வான வூர்திகளில் செல்லுகின்றனர் என்று கேள்விப்படுகிறோம்.

"அண்ணல் சேட்சென்னி நலங்கிள்ளியே! எதுவும் மாறி மாறி வாழ்ந்தும் மடிந்துமே வருவதைக் காண்பாய். எல்லாம் அழிந்து மீண்டும் பிறக்கின்றன. கல்லாதவர்கள் கூடத் தண்மதியத்தைப் பார்த்து இதை அறிந்துகொள்ளலாம். அது யாவரும் காண (வளர்ந்து தேய்ந்து) மாறி வருகிறது.

"ஆகவே, உன் தயவை நாடி வருவோர் எவராயினும் அவர் வலிந்தோராயினும்சரி, மெலிந்தோராயினும்சரி, எல்லாரிடமும் அன்பிணக்கமுள்ளவனாயிரு. பிறருக்கு என்றும் உதவாமல் தனக்கென வாழும் கயவர்கள் உனக்கு எதிரிகளாயிருக்கட்டும்."

நலங்கிள்ளி மறைவுற்றபின் கிள்ளி வளவன் சோழ அரசிருக்கை ஏறினான். ஆயினும் அவன் உரிமை சோழர் குடிக்குரிய மற்ற இளவரசர்களின் எதிர்ப்புக்காளாயிற்று. அவர்களில் ஒன்பதின்மருக்குக் குறையாதவர்கள் கிளர்ந்தெழுந்து நாட்டைத் துண்டாடவிருந்தனர். ஆனால் கிள்ளி வளவனின் மைத்துனனான செங்குட்டுவன்சேரன் ஒன்பதின்மரையும் ஒருசேர நேரிவாயிலில் முறியடித்துக் கிள்ளிவளவன் ஆட்சியுரிமையை நிலைநாட்டினான்.[1]

கிள்ளிவளவன் இதன்பின் மலாட்டுத் தலைவன் மலையமானைத் தாக்கினான். இம்மன்னனை எதிர்த்த ஒன்பது இளவரசர்களுக்கு அவன் ஆதரவு தந்திருந்ததாகத் தோற்றுகிறது. இக்காரணத்தால் கிள்ளிவளவன் அவன் ஆற்றலை அடக்க முடிவு செய்தான் அவன் மலையமானை

1 சிலப்பதிகாரம் XXVII, அடிகள்: 118—123.



முறியடித்துக்கொன்று, இளவயதினரான அவன் சிறுவர்களைக் கைப்பற்றி அவர்களை யானைக் காலடியிலிட்டுத் துவைத்து அழிக்கமுற்பட்டான்.

அச் சிறுவர் சார்பில் கோவூர் கிழார் தலையிட்டு அரசனுடன் இவ்வாறு வாதாடினார்.

"இடுக்கட்பட்டோரைக் காத்துப் புறவுக்குத் தண்ணளி செய்தவன் மரபில் வந்தவன் நீ! இந்தச் சிறுவர் புலவர்களை ஆதரித்துப் புகழ்பெற்ற குடியில் வந்தவர்கள். சீறிய யானையைக் கண்டு அஞ்சிய அவர்கள், இப்போது மன்னவையைக்கண்டு மருளுகின்றனர். என் சொற்களுக்குச் செவி சாய்த்தபின், உனக்கு எது விருப்பமோ அது செய்க!"[1]

கிள்ளி வளவன் பாண்டியநாட்டின்மீது படையெடுத்து மதுரைவரை சென்றான். ஆனால், பாண்டிப் படையின் தலைவனான பழையன் மாறனால் அந்நகர் மதில் புறத்தே முறியடிக்கப்பட்டான்.[2]

தன் மைத்துனனான சேரன்செங்குட்டுவன் மறைவுற்றபின், சேர நாட்டின் ஒரு பகுதியாயிருந்த கோங்கு நாட்டுக்குள் அவன் படையெடுத்தான். சேரர் படைகளின் எதிர்ப்பு மிகவும் வலிமையற்றதாயிருந்ததனால், சோழ அரசன் தன் படைகளைச் சேரர் தலைநகரான வஞ்சிமாநகரின் வாயிலுக்கே கொண்டு சென்றான். சேர அரசன் கோட்டைக்கு வெளியில்வரவே துணியவில்லை. இதனால் நகர்மதிலுக்கு வெளியிலிருந்த கட்டடங்கள், வயல்கள், தோட்டங்களைக் கிள்ளிவளவன் அழித்தான்.

சோழன் படையுடன் சென்றிருந்த சில கவிஞர்கள் அரசனை நோக்கிப் பாடிய சில பாடல்கள் வருமாறு :

"வெற்றியுடைய வேலையும் வீரமிக்க படையையும் உடைய அரசே! பெருந்தன்மையுடன் புறவைக் காத்த செம்பியன் மரபினனே!

1 புறம் 46. 2 அகம்: 345, நக்கீரர்.

"மலைமேலுள்ள மரங்களெல்லாம் சுட்டெரித்துச் சாம்பலாகும்படி விழும் இடியேறுபோல, நீ இக் கோட்டைக்கு வெளியே நல்லன யாவற்றையும் அழிக்கிறாய்.

"மலையினடியில் குகையினுள்ளே ஒளிந்து ஐந்தலையுடைய நச்சுப் பாம்பு உறைவதுபோல, பித்தளை வேய்ந்த வெல்ல முடியாத கோட்டைக்குள் பல யானைகளையுடைய வேந்தன் பதுங்கியிருக்கிறான்."[1]

மற்றொரு பாட்டு வருமாறு :

"ஒரு புறாவைக் காப்பாற்ற எண்ணித் தன்னையே நிறைகோலின் தட்டுகளில் ஏற்றி எடையிட்டவன் மரபில் வந்தவனே ! எத்தகைய அன்பறச் செயல்களை நீ செய்தாலும் அவற்றால் உன் புகழ்மரபை நீ மிகுதிப்படுத்த முடியாது.

"உன் புகழ்மிக்க முன்னோர்களை எண்ணும்போது, அவர்களுள் ஒருவன் வானகத்தில் இலங்கிய வியத்தகு மாயக் கோட்டைகளையே எதிர்த்தழித்தான் ! நீ என்ன வெற்றிபெற்றாலும் உன் வெற்றி மரபுக்கு என்ன முன்னேற்றமும் ஏற்படாது.

"வேகமிக்க போர்க்குதிரைகளையுடைய வளவனே ! ஆத்தி மாலை அணிந்தவனே ! எதிரிகளைத் தாக்குவதில் இரும்பு போன்ற கரம் உடையவனே ! பொன் அளிக்கும் உயர் இமய மலைமீது தன் விற்கொடி பொறித்த பெரிய அழகிய தேரையுடைய வானவனை வெல்ல வஞ்சி முற்றுகையில் நீ முனைந்துள்ளாய். உன் வல்லமையை நான் எவ்வாறு பாடுவேன் ?"[2]

மற்றும் ஒரு புலவரது பாடல் வருமாறு :

"நீ கொன்றழிப்பாயோ ! காப்பாற்றுவாயோ ! எது நல்லதென்பதை நீயே அறிவாய்.

"பொன்னிறக் கழற்காய்களுடன் வளையும் சிலம்பு மணிந்த இள மகளிர் விளையாடும் மணல் மிகுந்த

1 புறம் 37. 2 புறம் 39.



பொருநைக் கரையிலே, கொல்லன் வாளரத்தால் அராவிக் கூராக்கப்பட்ட நீண்ட பிடியுடைய கோடலிகள் மதிற் புறத்தே மரங்களை வெட்டிச் சாய்க்கும் ஓசை கோட்டைக்குள் அரண்மனையிலேயே எதிரொலித்துக்கொண்டிருந்தும் (கோழையைப்போலத்)தன் தலைநகரத்துக்குள் அடைபட்டுக் கிடக்கும் ஓர் அரசனுடன் போர்புரிவதற்கு, (உன் படைசூழ) மாலையணிந்த முரசு முழங்க நீ செல்வது என்பது மானக்கேடான செயலேயாகும்."[1]

கிள்ளிவளவன் முதலில் இலங்கையின் மேல்கரைப் பகுதியில் ஆட்சி செய்த நாக அரசன் வாலைவனன் மகளாகிய பீலிவளையை மணந்துகொண்டான்.[2] இதனை யடுத்து அவன் தன் மனைவியாக, திருமாலே வாமனனாகப் பிறந்து வெல்ல முனைந்த புராண அரசனான மாவலியின் மரபில் பிறந்தவனாக உரிமை கோரிய (பெரும்பாலும் மஹிஷமண்டலம் அல்லது மைசூருக்கு உரியவனாய் இருக்கக்கூடிய) ஓர் அரசன் மகளான சீதத்தக்கையை ஏற்றான்.[3] சீதத்தக்கை மூலம் அவனுக்கு உதயகுமாரன் என்று ஒரு மகன் இருந்தான். அவன் அழகும் புகழும் வாய்ந்த இளைஞனாயிருந்தான். ஆனால், ஓரிரவு தற்செயலாக அவன் கொலைக்காளானான்.[4]

இதன்பின் அரசன் நாக இளவரசிமூலம் பிறந்த தன் மற்ற மகனுக்குச் சொல்லியனுப்பியதாகத் தெரிகிறது. அவள் தன் மகனை மணிபல்லவத்திலிருந்து காவிரிப்பட்டினம் வந்த ஒரு வணிகக் கப்பலில் அனுப்பிவைத்தாள். வழியில், இருண்டு புயலார்ந்த ஓர் இரவில், கப்பல் செல்வோர் ஒரு தீவில் இறங்கினார்கள். இளவரசனை அங்கேயே விட்டுவிட்டு, புயலமைந்ததும் கப்பலில் சென்றுவிட்டார்கள். இளவரசன் இல்லாதது கண்டதும், அவர்கள் திரும்பிச்சென்று, அத் தீவையும் அணிமைக் கடற்கரையையும் துருவி எங்கும் தேடினார்கள். எதுவும் பயனில்லாது போயிற்று.

1 புறம், 36. 2 மணிமேகலை, XXIV அடிகள் 54—57.
3 மணிமேகலை, XIX அடிகள் 51—55.
4 மணிமேகலை, XX அடி 107.

இளவரசன் காணமற்போன துயரமிக்க செய்தி இந்திர விழா தொடங்கப்படும் சமயத்திலேயே கிள்ளி வளவனுக்கு எட்டிற்று. அரசன் விழாவைக் கவனிக்காது விட்டு விட்டு, மகனைத் தேடப் புறப்பட்டான்.

கடலின் ஒரு பேரலை இச்சமயம் காவிரிபட்டினத்தின் மீது பரவி அந் நகரை அழித்தது.

அந்நாளைய மத நம்பிக்கையுடைய மக்களால், வானவர் வேந்தனை இந்திரனுடைய விழாவை நடத்தாத குற்றத்திற்காக மக்களைத் தண்டிக்கவே, கடல் தெய்வமாகிய மணிமேகலை அந்த அலையை அனுப்பினாள் என்று நம்பப் பட்டது.[1]

இதனையடுத்துச் சில நாட்களுக்குள், கிள்ளிவளவன் குளமுற்றம் என்னும் இடத்தில் உயிர் நீத்தான். அவன் உயிர் நீப்பின்போது உடனிருந்த கவிஞர்களுள் ஒருவர் அப்போது தமக்கு ஏற்பட்ட உணர்ச்சிகளைக் கீழ்வரும் பாடலில் தந்துள்ளார்.[2]

"வலிமை வாய்ந்த தேர்களையும் வெற்றிப் படைகளையும் உடைய வளவன் உயிரைக் கவரவந்த கூற்றுவன் மன்னனைக் கைப்பற்றும் தோற்றத்துடனே ஆட்கொண்டு செல்லும் பாவனையுடனே வந்திருந்தால், அம் மன்னன் சீற்றத்துக்குத் தப்பியிருக்கமாட்டான். ஒருபோதும் அவ்வாறிராது. அவன் புகழ்பாடும் பாணன்போல ஏந்திய கையுடன் அவன் உயிரை இரந்து வேண்டியே வந்திருக்க வேண்டும்."

கிள்ளிவளவனுக்குப்பின் ஆண்டவன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்று வழங்கப்பட்ட மற்றொரு கிள்ளி ஆவான். அவன் பாரிய வேள்வி நடத்தினான். அப் பெருவிழாவிற்கு அவன் அண்டையயல் அரசர்களான உக்கிரப்பெருவழுதியையும் சேர அரசன் மாவெண்கோ அல்லது வனப்பு வய்ந்த அரசனையும் அழைத்தான். அவ் விழாவில் கலந்துகொண்ட அவ்வையார் ஒருங்கே

1 மணிமேகலை. XXV அடி 196. 3 புறம் 226.



வீற்றிருந்த மூவரசர்களையும் நோக்கிக் கீழ்வருமாறு பாடினாள் :[1]

"வேந்தர்களே ! கொடியமைந்த தேரும் வெண்கொற்றக்குடையும் வாய்க்கப்பெற்ற கோமான்களே ! நீங்கள் இன்றுபோல் என்றும் ஏந்திய கையரான பார்ப்பனருக்கு அக் கைகளில் பொற்பூக்களை நீருடன் அளித்து, பூணணிந்து, பொலிவுற்ற உங்கள் பணிப்பெண்டிர் பொற் கலத்தில் ஏந்தியளித்த இனிய மதுவுண்டு உங்களைப் புகழும் பாவலருக்கு விலையேறிய பரிசில்கள் வழங்குவீர்களாக !

"இவ்வுலக வாழ்வை விட்டகலும்போது நீங்கள் இப்போது செய்யும் அறவினை மட்டுமே உங்களுக்குத் துணை நிற்கும்.

"மண்ணுரிமையுடன் நீங்கள் மூவரும் இங்கே ஒருங்கிருக்கும் காட்சி இருபிறப்பாளர் ஓயாவிழிப்புடன் பகலுமிரவும் பேணும் திருவார்ந்த முத்தீயின் காட்சி போன்றது.

"நீங்கள் நலமுடன் வாழ்வீராக ! வானத்து மீன்கள் போலவும் மழை நீர்த்துளிகள் போலவும் எண்ணற்ற பல வான நாட்கள் நீங்கள் வாழ்வீராக !"

1 புறம் 367.

## பாண்டியர்குல மரபுக்கொடி




# 6. பாண்டியர்

மாண்புகழ்க் கரிகால சோழனுடன் சமகாலத்தவனான பாண்டிய அரசன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன். அதாவது ஆரியரின் படைகளை வென்ற நெடுஞ்செழியன் ஆவான்.[1]

தெக்கணத்திலுள்ள ஆரிய அரசர்களுள் எவனோ ஒருவன் அவன் ஆட்சியின்போது தமிழ் நாட்டின்மீது படையெடுத்ததாகத் தெரிகிறது. பாண்டிய அரசன் அவர்கள்மீது குறிப்பிடத்தக்கதொரு பெருவெற்றிபெற்று அவர்களைத் திருப்பித் துரத்தினான். இதனால் அவனுக்கு ஆரியப்படை கடந்தவன் என்ற புகழ்ப்பெயர் கிட்டிற்று.

இப் பெருவெற்றி பற்றிய வேறு விவரம் எதுவும் இப்போது நமக்குக் கிட்டியுள்ள தமிழ் நூல்களில் காணப்படவில்லை. ஆயினும் சிலப்பதிகாரம் என்ற பெருங்காப்பியத்தில் கூறப்பட்டுள்ள புதுமை வாய்ந்த அவன் முடிவு மூலம் அவன் நினைவு பின் மரபினரிடைய நீடித்துள்ளது.[2]

அரசியின் சிலம்புகளில் ஒன்றைத் திருடியவன் என்ற ஐயுறவின்மீது, காவிரிப்பட்டினத்திலுள்ள வணிகனை கோவலனைக் கொலை செய்யும்படி அவன் அரண்மனைக் காவலர்களுக்கு உத்தரவிட்டதாகத் தெரிகிறது. ஆனால் அவ் வணிமணி அரசியினுடையதன்று என்பதை அவ் வணிகன் மனைவி கண்ணகி மன்னன் உளங்கொள்ள மெய்ப்பித்துவிட்டாள்.

கண்ணகி தன் தாயகத்துச் சோழ மன்னர் மரபைக் குறிப்பிட்டு, அவர்களில் ஒருவன் ஒரு கழுகின் அவா நிறை

1. சிலப்பதிகாரம், மதுரைக்காண்டம், 1 : 14.
2. சிலப்பதிகாரம், காதை XX.

வேற்றி ஒரு புறுவைக் காப்பாற்றத் தன் தசையையே அறுத்துத் தந்ததையும், தேரை ஓர் ஆன் கன்றின்மீது செலுத்தி அதன் உயிரை மாய்த்த குற்றத்துக்காக மற்றொருவன் தன் மகனையே கொன்றதையும் எடுத்து இடித்துரைத்திருந்தாள். மானமும் வெட்கமும் மீக்கூர மன்னன் உணர்விழந்து தவிசிலிருந்து கீழே விழுந்தான். விழுந்தவன் மீண்டும் எழவேயில்லை. அவன் அரசியும் அவன் சிதையேறி உயிர் நீத்தாள்.

இவ் வரசன் பாடிய பாடல்களில் ஒன்று கல்வியின் நலங்களைப் புகழ்ந்து, தம்பிள்ளைகளைக் கல்வி பயிற்றுவிக்குமாறு குடிகளை வலியுறுத்தி வேண்டுகின்றது. புறநானூற்றில் இடம்பெற்று நமக்குவந்தெட்டியுள்ள அப் பாடல் வருமாறு :[1]

"வேண்டுதல் அறிந்து ஆசிரியருக்கு உதவுக, அவருக்கு நிறையப்பொருள் தருக, அவரை வாய்மையுடன் பின்பற்றிக் கல்விபெறுக. தன் பிள்ளைகளுக்குள்ளேயே கல்லாதவனைத் தாய் விரும்பமாட்டாள். குடும்பத்தில் பிறந்தவருள் முதன்மை மூத்தவனுக்கல்ல. அறிவின் மிக்கவனை அரசனும் விரும்பி அழைத்து அறிவுரை கோருவான். நாலாய வகுப்புக்களுள், இழிநிலைப்பட்ட ஒருவன் கற்றவனானால், உயர்வுடையவன்கூட அவனிடம் சென்று அவன்வழி நிற்பான்."

நெடுஞ்செழியனின் திடீர் முடிவுகேட்டு, கொற்கையில் மண்டலத்தலைவனாய் அமர்ந்திருந்து ஆண்ட பாண்டிய இளவரசன் வெற்றிவேற் செழியன் மதுரைக்கு விரைந்து வந்து அரசிருக்கை ஏறினான்.[2]

மிகச் சுருங்கியகால ஆட்சிக்குப்பின் அவன் இறந்து, அவன் மகன் இரண்டாம் நெடுஞ்செழியன் சிறுவனாயிருக்கும்போதே அரசனானதாகத் தெரிகிறது.

அவன் பட்டத்துக்கு வந்தவுடனே, நாடு சோழர்களால் படையெடுக்கப்பட்டது. சோழர் படை மதுரைவரை

1. புறம், 183. 2. சிலப்பதிகாரம், XXVII அடிகள் 127—135



முன்னேறிற்று. ஆயினும் பாண்டியப் படைத்தலைவனான பழையன்மாறன் ஒரு முதல் தரமான வெற்றியை அடைந்து, படையெடுத்தவர்களைத் தங்கள் நாட்டுக்கே ஓட்டினான்.

இளையோனான பாண்டியன் இப் போர்நிகழ்ச்சியில் உடனிருந்ததாகத் தெரிகிறது. படையெடுப்பைப் பற்றிக் கேள்விப்பட்டபோது, தன் நாட்டின்மீது படையெடுத்தவர்களைத் துரத்துவதாகச் சூள் எடுத்துக்கொண்டான் என்று கூறப்படுகிறது. அக்காலத் தமிழரசர் பலரைப் போலவே, செய்யுளியற்றுவதைப் பொழுதுபோக்காகக் கொண்டிருந்தவன் இவ் விளமன்னன். இச் சமயம் அவன் செய்யுளிற் கூறிய சூளுரை கீழ்வருமாறு :[1]

"என் மாற்றாராகிய அரசர்கள் தம்மிடம் படைக்கலமேந்திய வீரர்களும் தேர்களும் போர்க்குதிரைகளும் தூண்களை ஒத்த கால்களோடு ஒலி எதிரொலியுடைய பெரிய மணிகள் தூங்கும் கழுத்தையுடைய பாரிய யானைகளும் உள்ளன என்று தருக்கி, இளையோன் என்று என்னை எளிமைப்பட்டவனாகக் கருதி, அச்சுறுத்தலும் அவமதிப்பும் கலந்த சொற்கள் வீசி, என்னை எதிர்த்துப் படையெடுக்கத் துணிந்துள்ளனர்.

"களத்தில் மோதுகிற போரில் நான் அவர்களை முறியடித்து, அவர்கள் போர்முரசங்களுடனே அவர்களைச் சிறைகொள்ளேனாயின், தம்மைக் காக்கும் ஆற்றலற்று எதிரிகளிடம் சிக்கிவிட்ட கொடுங்கோலன் என்று என் குடிகள் என்னைத் தூற்றட்டும்! கலையும் அறிவும் நிரம்பிய மாங்குடி மருதனைத் தலைவனாகக்கொண்ட உலகம் புகழும் கவிஞர் பாடலுக்கு நான் தகுதியற்றவனாகட்டும்! ஏழையருக்கோ, என் ஆதரவு நாடுபவருக்கோ இல்லை என்று கூறத்தக்க இழிநிலையை நான் அடையட்டும்!"

பாண்டியர் படையுடன் இச்சமயத்திலிருந்த கவிஞர் இடைக்குன்றூர்கிழார் பாண்டியன் இத் தறுவாயில் கொண்டிருந்த தோற்றத்தைக் கீழ்வருமாறு பாடுகிறார் :[2]

1. புறம் 72. 2. புறம், 77 79.

"தன் பழைமையான நகருக்கு வெளியேயுள்ள ஏரியில் குளித்து வேம்பின் ஒளிமிக்க தழை மாலையைத் தலையிலணிந்து, வீரமிக்க செழியன் தன் முன்னே முரசமுழங்க யானை மீதேறிப் போர்க்களத்துக்கு வந்துள்ளான். அவனெதிரே அணிவகுத்து நிறுத்தப்பட்ட படைவீரரோ எண்ணிலர்.

"அந்தோ! இன்றைய வெம்போரில் எத்தனை பேர் மாளாது பிழைத்திருக்கப்போகிறார்களோ?

கிண்கிணி அணிந்த அவன் கால்களில் அப்போது வீரக்கழல்கள் ஒளிதருகின்றன. வளமிக்க சிகையணியிருந்த நெற்றிமீது உழிஞைத் தழையுடன் கலந்த ஒளிமிக்க வேப்பந்தழைகள் மிடையப்பட்டுள்ளன. அழகிய காப்புக்களணிந்த கைகளில் இப்போது வலிமை வாய்ந்த வில் ஏறியுள்ளது. தனிச்சிறப்புடன் இவ்வாறு காட்சியளிக்கும் இவ்விளைஞன் யார்?

வாழ்க இவன்! மார்பில் மலர்மாலை காணப்பட்டாலும், சிறுவனாக இருந்தபோது அணிந்த பொன்மாலை இன்னும் கழற்றப்படவில்லை. இன்றுதான் பாலில்லா உணவு அவனுக்குப் பரிமாறப்பட்டது.

"எதிரியின் படைகள் அணியணியாக வந்து தாக்குவதைக் கண்டு அவன் அசையவில்லை. அவர்களைக்கண்டு அவன் அஞ்சவில்லை, ஏளனம் செய்யவுமில்லை. தன் படைவீரர் அவர்களைத் தாக்கி அழித்து, அவர்கள் கதறலை வானம் எதிரொலிக்கும்படி செய்தபோதும், அவன் தன் படைகளின் வெற்றி கண்டு மகிழ்ந்தானில்லை; பெருமை கொண்டானில்லை!"

படையெடுப்பாளர்களைத் திருப்பி ஓட்டுவதுடன் அவன் மனநிறைவு அடையவில்லை. சோழ நாட்டுக்கே போரைத் திருப்பிக்கொண்டு செல்லத் துணிவுகொண்டான். திறமை வாய்ந்த வில்வீரரும் வேல்வீரரும் அடங்கிய ஒரு பெரும்படை திரட்டி அவர்களைச் சோழநாட்டின் தென் மாகாணமாகிய மிழலைக் கூற்றத்தினுள் செலுத்தி



னான்.[1] அதன் தலைவன் பழைமையான வேளாளர் மரபினைச் சார்ந்த எவ்வி. எவ்வியை முறியடித்து அவன் மிழலைக் கூற்றத்தைத் தன் ஆட்சியுடன் சேர்த்துக்கொண்டான். அத்துடன் அவன் சேரநாட்டின் கீழ்ப்புற மாகாணமான முத்தூற்றுக் கூற்றத்தையும் வென்று கைக்கொண்டான்.

இவ் வீரச்செயல்கள் அண்டையயல் அரசன் அனைவரின் பொறாமையையும் கிளறிற்று. சோழரும் சேரரும் சேர்ந்து ஒரு மாபெரிய கூட்டு அமைப்பு உண்டுபண்ணினர். அதில் அவர்கள் தம் படைகளை வேறு ஐந்து அரசர் படைகளுடன் இணைத்தனர். அவ் வரசர்கள் பொதியத் தலைவன் திதியன், தகடூர்த் தலைவன் அதியமான் எழினி, எருமையூரன் அதாவது எருமை நாட்டின் (மைசூரின்) ஆட்சியாளன், இருங்கோவேண்மான், பொருநன் ஆகியவர்கள்.[2]

அவர்கள் பாண்டியன் வலிமையை நொறுக்கிவிட எண்ணினார்கள். ஆனால் பாண்டியன் நெருக்கடிக்கேற்ற நிறைதிறமை யுடையவனானான். அவன் அவர்கள் போக்குகளைக் கூர்ந்து கவனித்து வந்தான். ஒன்றுபட்டுச் செயலாற்றவோ, தன் நாட்டினுள் புகுந்து நிலங்களை அழிவு செய்யவோ அவர்களுக்கு வாய்ப்பளிக்காமல் அவன் துணிந்து அவர்கள் சந்திப்பிடமாகிய தலையாலங்கானத்திலேயேசென்று அவர்களைத் தாக்கினான்.

திடுமெனத் தாக்கப்பட்டாலும், நேசப்படைகள் வீறுடன் போரிட்டன. போர் ஒரு முழுப்பகலும் மும்முரமாக நடைபெற்ற பின்னரே பாண்டியன் அவர்களைக் களத்திலிருந்து துரத்த முடிந்தது. தமிழகத்திலுள்ள எல்லா மன்னரும் தலைவர்களும் அவர்கள் படைகளின் பொறுக்கியெடுத்த உயிர்ப்பகுதிகளும் இப் போரில் ஈடுபட்டன. இக் காரணத்தினாலேயே, பாண்டியன் இதில் அடைந்த வெற்றி அக்காலத்தின் தலைசிறந்த வீரச்செயலாகக் கருதப்பட்டது. அவன் குடிகள் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லை

1. புறம் 24, 2. அகம் 36.

இல்லை. அவன் அரசவையில் புலவர்களும் பாணர்களும் வந்து குழுமி, அந்நாளைய தலைசிறந்த வீரனென்று அவனை வாயாரப் புகழ்ந்தார்கள்.

இதன்பின் பாண்டியன் தானே நேரடியாகச் சேர நாட்டுக்குள் ஒரு படையெடுப்பு நடத்தினன். தனிப்பட்ட கண்ணின் வடிவமைதி காரணமாக யானைக்கண் என்றழைக்கப்பட்ட மன்னன் சேய் சிறைப்பிடிக்கப்பட்டான். சேரன் சிறையிலிருந்து தப்பியோடினன்.[1] நெடுஞ்செழியன் அவனை மேல்கடற்கரைவரை துரத்திச்சென்று முசிறி நகரருகில் அவனை மீண்டும் தோற்கடித்தான்.[2] சேரனின் கீழ் ஆண்ட தலைவனுனை அழும்பில்வேளின் ஆட்சிப் பகுதி அவனிடமிருந்து பறிக்கப்பட்டது.[3]

பாண்டியன் குட்டநாட்டுத் தலைவர்களை வென்று அந்நாட்டையும் தன் அரசுடன் சேர்த்துக்கொண்டான், 'துளுவர்' என்ற மரபினரிடமிருந்து முத்துவெள்ளில் என்ற கடல் துறைமுகத்தையும், நாகர்களிடமிருந்து (மன்னார் குடாவிலுள்ள) சாலியூர் என்ற பெயர் பெற்ற வாணிகக் களத்தையும் வென்றான்.

இரண்டாம் நெடுஞ்செழியன் கரிகாலன் மாள்வுக்குச் சிலநாள் முன்னர்த் தவிசேறினன். தலையாலங்கானத்து வெற்றிக்குப்பின் அவன் அப்பெருஞ்சோழனுடன்நட்புறவு கொண்டிருந்தான். காவிரிப்பட்டினத்துக் காரிக்கண்ணன் பாடல் இதனைக் காட்டுகிறது. கரிகாலனைப் பற்றிய இந் நூல் குறிப்பில் இது முன்பே தரப்பட்டுள்ளது.[4] நெடுஞ்செழியன் 'வெள்ளியம்பலம்' என்று அழைக்கப்பட்ட மதுரையிலுள்ள சிவன் கோயிலில் மாண்டான். இக் காரணத்தால் அதற்குப் பிற்பட்ட இலக்கியத்தில் அவன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி என்று அழைக்கப்பட்டான். அவன் ஆட்சிக்காலம் பெரிதும் கி. பி. 90 முதல் 128 வரை ஆயிருக்கக்கூடும்.

1 புறம் 17 2 அகம் 57

3 மதுரைக்காஞ்சி அடிகள் 344—345

4 மேலே இயல் II பக், பார்க்க,



இரண்டாம் நெடுஞ்செழியன் முதன்மையாக மதித்த கவிஞர் மாங்குடி மருதனர் ஆவர். அவனைப் புகழ்ந்து மதுரைக்காஞ்சி என்ற முல்லைநிலச் சிறு காவியம்[1] இயற்றியவர் அவரே. தம் புரவலனைப்பற்றிக் கவிஞர் மிகச் சீரிய பண்போவியம் தீட்டியுள்ளார்.[2]

அது வருமாறு :

"நட்பில் நீ என்றும் உறுதியுடையவன். தேவர்களை உனக்கு ஆசைகாட்டி மயக்கி, பொன்னுலகத்தையும் அமுதத்தையும் வழங்குவதாகக் கூறினும், நீ அவற்றில் வசப்படமாட்டாய். மிகவும் வலிமை வாய்ந்த மன்னவர் உன்னை எதிர்த்தாலும் இன்னொருவர் ஆணையை நீ ஏற்பதில்லை. தென்மலைகளில் வாணன் புதைத்துள்ள தங்கம் முழுதும் உனக்குக் கிடைத்தால்கூட, நீ தீச்செயல் செய்ய இணங்கமாட்டாய். நன்மை செய்வதிலேயே நீ என்றும் மகிழ்வாய்."

இப் பாடலின் நோக்கம் மன்னன் மனத்தை உலகியல் அவாக்களிலிருந்து விடுவித்துத் தன் உயிர்நிலையின் நன்னிலையில் அவா எழுப்புவதேயாகும். தெய்வப் பற்றார்வமுடைய முன்னோர்களை நினைவூட்டி அவர்கள் முன்மாதிரிகளைப் பின்பற்றும்படி அரசனுக்குக் கூறும் இறுதி அடிகள் வருமாறு :[3]

"பல வேள்விகள் செய்த முதுகுடுமியைப்போலவும், உலகின் பழம்பெருங் கலைகள் பயின்ற தலைசிறந்த கவிஞர் பாராட்டியுள்ள நிலந்தரு திருவின் நெடியோனைப்போலவும் பல அறிவர்களால் உன் வீரமும் நற்குணங்களும் புகழப் பெறுகின்றன. வெல்லுதற்கரியவற்றை வென்று, ஆட்சி யெல்லை பரப்பியும்; அறிவிற் சிறந்தவர் அறிந்தனயாவையும் அறிந்து உன் புகழை நிலைநாட்டியும் நீ கடல் நடுவே நிலவும்காலை எழுஞாயிற்றையும், விண்மீன்களுக்கிடையே

1. Idyll.

2. மதுரைக்காஞ்சி அடிகள் 190—205

3. மதுரைக்காஞ்சி அடிகள் 759—782

திகழும் முழுநிலாவையும் உன் அரசுரிமைக் குடிக்குரிய இளவரசர் சூழ்தர, இறவாப் புகழ்வாய்ந்த மாண்புமிக்க மாறன் உள்ளிட்ட போர்ப்புகழ்க் கோசர் துணைதர, ஐம் பெருங்குழுவின் மதிப்பும், குடிமன்னர் குழாத்தின் மதிப் பும் பெற்று வாழ்கிறாய்.

“ஒளிமிக்க பூண்களணிந்த உன் பணிப்பெண்கள் பொற் கலத்தில் ஏந்திய நறுமணமிக்க மதுவை நாள் தோறும் பருகி அப்பெருமையுடன் முழுநிறைவாணாள் பெற்று வாழ்வாயாக!”

படைவீரர்களிடம் அவன் காட்டிய அன்பு, படை வீட்டில் புண்பட்டவரிடம் அவன் கொண்ட கரிசனை ஆகியவை நக்கீரர் இயற்றிய நெடுநல்வாடையில் விரித் துரைக்கப்படுகின்றன.[1]

அது வருமாறு;

“நள்ளிரவில் குளிர் நடுக்குகிற வாடைக் காற்று வீசுகிறது. ஆயினும் மன்னன் பந்தம் ஏந்திய ஒருசில பணி மக்களுடன் தன் கூடாரத்தைவிட்டுப் புறப்படுகிறான். சேணமிட்டுச் சிறுமணிகளால் ஒப்பனை செய்யப்பட்ட சிறப்புமிக்க போர்க்குதிரை ஒன்று அவன் பின்னே செல் கிறது.

“முத்துக்கோவைகள் தூக்கிய வெண்குடை ஒன்று மழைத்தூறலிலிருந்து காக்கும் முறையில் அரசன் தலைக்கு மேலாகப் பிடிக்கப்படுகிறது. இடது கையால் நீண்டு தொங்கும் தன் ஆடையைப் பிடித்துக்கொண்டு, அரசுரி மைச் சின்னமான வாளைக் கையிலேந்திய கட்டுடல் வாய்ந்த ஓர் இளைஞன் தோள்மீது வலக்கை இட்டவண்ணம் அவன் செல்கிறான்.

“படைத் தலைவர்களில் ஒருவன் வேப்பந்தார் சூட்டிய வேலைத் தாங்கியபடி முன்சென்று, முன்னாள் போரில் புண் பட்ட வீரர் ஒவ்வொருவரையும் தனித்தனி சுட்டிக்காட்ட,

1 நெடுநல்வாடை, அடிகள் : 172—188.



புண்பட்ட ஒவ்வொரு வீரனிடமும் தனித்தனி உள்ளக் கனிவுடன் அவன் நலமுசாவினான்.”

இரண்டாம் நெடுஞ்செழியனுக்குப்பின் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி அரசனானான். 48 புலவர் முன்னிலை யில் திருவள்ளுவரின் மாளாப் புகழ்நூலான திருக்குறள் அரங்கேற்றப்பட்ட அவைக்களத்தின் அரசன் என்ற முறையில் தமிழ் இலக்கிய மாணவர் எல்லாருமே இவ்வர சன் பெயரை அறிவர். இவ்வரசனுக்கு கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதி என்ற பட்டப்பெயர் உண்டு. இதன் பொருளாவது, வெல்ல முடியாத கோட்டையென்று அந் நாளில் கருதப்பட்ட கானப்பேர் என்ற அரண் வாய்ந்த நகரத்தை அவன் வென்று தன் ஆட்சிக்கீழ்க் கொண்டுவந் தான் என்பதே.

இக்கோட்டையை வென்ற செய்தியை இவ்வரசனைப் பாடிய பாடலொன்று கீழ்வருமாறு புகழ்ந்துரைக்கிறது :[1]

“சாவாப் புகழுடைய வேந்தே, வாழி! மாபெருங் கோட்டையாகிய கானப்பேரை வென்று கைக்கொண்ட நின் வீரத்தைக் கவிஞர் பாராட்டியுள்ளனர்.

“அக்கோட்டையின் மதில்கள் வானத்தைச் சென் றெட்டின என்று தோற்றின. அதன் ஞாயில்கள் விண் மீன்கள்போல மின்னின. கோட்டையைச் சூழ்ந்த அகழி கடல்போன்ற எல்லையற்ற ஆழ அகலமுடையது. அதற் கப்பாலுள்ள முட்காடு ஞாயிற்றின் கதிர்கள் என்றும் நுழைந்ததில்லை என்று கூறுமளவு அடர்த்தியானது.

“இக் கோட்டையை இழந்த வேங்கைமார்பன் அப் பேரிழப்பை எண்ணி நாள்தோறும் வருகிறான். ஏனெ னில் பழுக்கக் காய்ச்சிய இரும்பில் ஊற்றிய நீர்போல, அது என்றும் மீண்டும் பெறுதற்கரியது.

“உன் எதிரிகள் அழிவுற்று மறக்கப்படக்கடவர்! உன் வேல் என்றும் வெற்றியே காணக்கடவது!”

1 புறம் 21.

இவ்வரசனைப் பற்றி வேறு எதுவும் தெரியவில்லை. அவன் ஆட்சி ஒருசில ஆண்டுகளுக்கு மேற்பட நீடித்திருக்கவில்லை என்றே பெரிதும் எண்ணத்தகும். அவனை அடுத்துவந்த அரசன் நன்மாறன் அல்லது நல்ல பாண்டியன் என்பவன். அவன் அவைக்களத்திலுள்ள புலவர் பாடிய பாடல்களுள் இரண்டு வருமாறு:[1]

மலர்மாலையணிந்த மாறனே! ஒரு மலையை வில்லாகவும், ஒரு பாம்பை நாணகவும் கொண்டு ஒப்பற்ற ஓர் அம்பெய்து அசுரரின் மூவரண்களை அழித்துச் சாவிலா வானவர்களுக்கு வெற்றி தேடித்தந்த கரிய மிடறுடைய இறைவனின் பிறையணியப்பெற்ற நெற்றியில் துலங்குகின்ற அந்த ஒப்பற்ற கண்ணைப்போல, மன்னரிடையே நீ ஒப்புயர்வற்றவனாக விளங்குகிறாய்!

மேலீடாய்ப் பார்ப்பவருக்கு ஓர் அரசனின் ஆற்றல் அவனுடைய மூர்க்கமான போர் யானைகள், விரைநடையுடைய போர்க்குதிரைகள், நெடுங்கொடிய தேர்கள், அஞ்சா நெஞ்சுடைய வீரர்கள் ஆகியவர்களைப் பொறுத்ததென்று தோற்றக்கூடும். ஆனால், உண்மையில் அதன் கடைகால் நடுநிலை நேர்மையே.

"ஆகவே உன் குடிமக்களிடம் ஒருதலைச்சார்பு காட்டாதே. அயல்நாட்டவரிடம் நேர்மை கேடாகவும் நடக்காதே. வெங்கதிரவனைப்போல வீறும், மென்மை வாய்ந்த வெண்ணிலாப்போன்ற தண்ணளியும் உன் நாட்டில் வறுமையொழிய மழைபொழியும் முகிலினங்கள் போன்று அன்பாதரவும் உடையவனாய் இருப்பாயாக!

"வெண்ணுரையை முகட்டில் கொண்ட கடலலைகள் கரைமீது ஓயாது மோதும் முருகனுக்குரிய திருநிலைவாய்ந்த செந்தில் என்னும் அழகிய துறைமுகப்பட்டினத்தினருகே வன்காற்றுக்கள் கொடுவந்து குவிக்கும் மணற் குன்றுகளிலுள்ள நுண்மணல்கள் போன்ற எண்ணற்ற ஆண்டுகள் நீ வாழ்வாயாக!

---

1 புறம் 55, 56.



மற்றொரு பாடல் வருமாறு:

"கடுஞ்சினத்தில் நீ கூற்றுவன் போன்றவன். எதிரற்ற வலிமையில் நீ பலதேவனைப்போன்றவன். புகழில், தன்னைப் புகழாதவர்களை அழிக்கும் திருமால் போன்றவன். தான் விரும்பிய அனைத்தும் முடிக்கும் திறனில் நீ முருகக் கடவுள் போன்றவன். உன்னால் இயலாதது யாது?

"எனவே உன்னிடம் இரப்பவர்க்குத் தங்குதடையின்றித் தாராளமாய் வாரி வழங்கு.

"யவனர் தம் நல்ல கப்பல்களில் கொண்டு வருகிற குளிர்ந்த மதுவை, ஒளிமிக்க வளைகளைக் கைகளில் அணிந்த உன் பணிப்பெண்கள் அழகிய பொற்கலத்தில் ஏந்த, அதனை நாள்தோறும் பருகி உன் நாட்களை இன்பமாகக் கழிப்பாயாக!

வெற்றி வாள் ஏந்திய மாற! இருளகற்றும் தழல் போன்ற கதிர்பரப்பும் கதிரவன்போலவும், மாலையில் ஒளி தரும் தண்கதிர்பரப்பும் இனிய வெண்ணிலாப்போலவும் நிலவுலகின் மன்னருள் தலைசிறந்தவனாக நீடு வாழ்வாயாக!"

இம்மன்னன் இலவந்திகைப்பள்ளி என்ற இடத்தில் மாள்வுற்றதனால் அவன் பின் வந்த புலவர்களால் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறன் என்றழைக்கப்பட்டான்.

## சேரர் குடிமரபுக் கொடி

முதலாம் ஆதன்
(கி. பி. 40—55)
(வெண்ணில் போரில் முதுகில் புண்பட்டு
வடக்கிருந்திறந்தவன்)

இரண்டாம் ஆதன் = சோணை
(கரிகால சோழன் மகள்)
(கி. பி. 55—90)
(வானவரம்பன் அல்லது செல்வக்கடுங்கோ)

செங்குட்டுவன்—வேண்மாள்
அல்லது இயவரம்பன்
(கி. பி. 90—125)
(வியலூர் கொண்டவன், மோகூர் எறிந்தவன், கடல்வழி கங்கைக் கரைமீது தண்டுசெலுத்தியவன்)

இளங்கோவடிகள்
(தமிழ்க்காப்பியமான சிலப்பதிகாரத்தின் ஆசிரியர்)

யானைக்கட்சேய்
(கி. பி. 125—135)
(பாண்டியன் இரண்டாம் நெடுஞ்செழியனுல் சிறைப்பற்றுப்பட்டுப் பின் தப்பியோடியவன்)

பெருஞ்சேரல் இரும்பொறை
(கி. பி. 135—150)
(அதிகைமான் எழினியைக்கொன்று தகடூர் கொண்டவன்)

# 7. சேரர்

நாம் எடுத்துக்கொண்ட காலத்திய முதல் சேர அரசன் முதலாம் ஆதனே. அவன் கரிகால சோழன் காலத்தவன். கரிகாலன் வரலாற்றில் ஏற்கனவே குறித்துள்ளபடி, வெண்ணில் போரில்[1] கரிகாலனைத் தன் படைகளின் தலைமையில் எதிர்த்துச் சமர்செய்தபோது, அவன் முதுகில் புண்பட்டான். இவன் அவமதிப்பைப் பொறுக்க மாட்டாமல், அவன் வடக்கிருந்து இறக்கத் துணிந்தான். மாள்விலும் அவனை விட்டுப்பிரிய மனமில்லாத பல ஆர்வத்துணைவர்கள் இச் சமயம் தாமும் மனமார அவனுடன் சென்றிருந்து உயிர்விட்டனர் என்று அறிகிறோம்.[2]

முதலாம் ஆதனையடுத்து அரசிருக்கை ஏறியவன் செல்வக்கடுங்கோ வாழியாதன் என்ற பட்டப்பெயர் கொண்ட இரண்டாம் ஆதன் ஆவான். அவன் கரிகாலன் மகள் சோணையை மணந்ததன்மூலம் கரிகாலன் நட்பைப் பெற்றான்.[3] அக்காலத் தமிழ் அரசர்களுள் வல்லமை மிக்க பேரரசன் மருமகன் என்ற முறையில், அவன் ஆட்சி அமைதியும் வளமும் உடையதாயிருந்ததாகத் தோற்றுகிறது.

பார்ப்பனரான கபிலர் இந்த அரசனின் தனி நட்புக்குரியவராயிருந்தார். இன்பமாக அளவளாவிக்கொண்டிருக்கும் நேரத்தில் ஒருநாள் சேர அரசன் கவிஞர் கையைப் பற்றி எடுத்து, அது எவ்வளவு மென்மையாயிருந்தது என்பதைக் கூர்ந்து நோக்கி வியந்தான். புகழ்ச்சிக் கலையில் வல்ல கபிலர் மன்னன் கையின் வீர வலிமையைப் புகழ்ந்து, அத்தகைய வீரன் ஆதரவில் வாழும் கவிஞர்

1 புறம் 65. 2 அகம் 55.
3 சிலப்பதிகாரம், XXIX

களின் கைகள் மெல்லியனவாக இராமல் வேறு எப்படி இருக்க முடியும் என்று அரசன் பாராட்டை நயம்பட அவன் திசையில் திருப்பினார்.

இச் சமயம் அவர் பாடிய பாடலின் கருத்து வருமாறு :[1]

" வீரமிக்க அரசனே ! உன் தடந்தோள்கள் அழகு மிக்க அணங்குகளுக்குக் காதல்நோய் ஊட்டுபவை. அதே சமயம் அவை உன் எதிரிகளுக்கும் அச்சம் தருபவை. உன் தடக்கைகளோ, பொன்வேய்ந்த அங்குசத்தால் யானையை ஊக்கி இருப்புத் தாழிட்ட உன் எதிரிகளின் கோட்டை வாயில்கள்மீது அவற்றை ஏவுபவை. உன் வீரர்களால் சமன் செய்யப்பட்ட கரைகளையுடைய ஆழ்ந்த அகழிகளைத் தாவும்படி வீறுமிக்க உன் போர்க்குதிரையை நடத்திச் செல்லும்வண்ணம் கடிவாளங்களைப் பிடித்திழுப்பவையும் அவையே ! தவிர நீ தேரில் செல்லும்போது உன் தோள் மீது தொங்கும் அம்புத் தூணியிலிருந்து அம்புகளை எடுத்து அவற்றை எய்யும்படி வில்லைவாங்கி விறல்பட வளைப்பவையும் அவையே ! இத்தகைய ஆற்றல் வாய்ந்த செயல்களைச் செய்வதனால், உன் தோள்கள் நீண்டு திரண்டும், கைகள் துவன்று வலிமை பெற்று உள்ளன.

'ஆனால் உன்னைப் பாடும் புலவர்களுக்கோ, வெந்து பொங்கிய சோறும், நெய்யில் பொரித்த இறைச்சியும், மண மூட்டிய கறிகளும் தின்பதன்றி வேறு வேலை கிடையாது. இதனால் அவர்கள் கைகள் மென்மை வாய்ந்தவையாய் விட்டன."

மற்றொரு சமயம் புலவர் அரசனைப்பற்றித் துணிகரமான கற்பனையும் உவமை நயமும் மிக்க ஒரு பாடலைப் பாடினார். அப்பாடல் கதிரவனை நோக்கிப் பாடப்பெற்றுள்ளது. கதிரவனுக்கும் மன்னனுக்குமிடையே அது பல ஒப்புமை வேற்றுமைகளை எடுத்துக் காட்டி, ஒவ்வொன்றிலும் கதிரவனைவிடக் காவலனே மேம்படுவதைக்[1] கவிஞர் நயம்பட விளக்கியுள்ளார்.[2]

1 புறம் 14.



"வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅது
இடஞ்சிறி தென்னும் ஊக்கம் துரப்ப
ஒடுங்கா உள்ளத் தோம்பா ஈகைக்
கடந்தடு தானைச் சேரல் ஆதனை
யாங்கனம் ஒத்தியோ, வீங்குசெலல் மண்டிலம் ?
பொழுதொடு வரைதி, புறக்கொடுத் திறத்தி ;
மாறிவருதி, மலைமறைந் தொளித்தி ;
அகலிரு விசும்பி னானும்
பகல்விளங் குதியால், பல்கதிர் விரித்தே !"

இது முற்றிலும் சொல்லணித் திறமாயினும், உவமை ஒப்பீடு முற்றிலும் புதுமை நயமுடையதாயிருக்கிறது. இப் புகழ்ச்சியால் அரசன் மிகவும் மகிழ்ந்திருக்கவேண்டுமென்பதில் ஐயமில்லை. புலவருக்கு அவன் பல ஊர்களை இதற்குப் பரிசாக அளித்தான்.

1. புறம் 8.

2. "மூலத்தின் சொல் நயத்தை மொழி பெயர்ப்பில் காட்டுவதரிதானாலும் அதன் பொருள்நயம் இங்கே தரப்படுகிறது" என்ற வாசகத்துடன் இவ்விடத்தில் புறம் 8 ஆம் பாடலின் ஆங்கில மொழி பெயர்ப்பு மூலநூலில் தரப்படுகிறது. தமிழாக்கத்தில் தமிழ் மூலமே நூலில் தரப்பட்டுள்ளது. மொழிபெயர்ப்பு வருமாறு :

" Bright orb that marchest proudly in the sky!
Behind the hills thou hidest from our sight,
And thou art seen by day and ne'er by night :
Though soaring in the sky so wide and high,
Alone thou darest not to show thy face,
But comest guarded by a thousand rays !
How canst thou vie with Cheral Athan bold;
Who countless chiefs in fealty doth hold,
Who knows no fear on the battle field,
And counts no cost the weak and poor to shield;
Who scorns divided empire for his sway,
And leads the legions that smite and slay?"

இரண்டாம் ஆதனுக்கு இரு புதல்வர்கள் இருந்தனர். மூத்தவன் செங்குட்டுவன். இளையவரே இளங்கோவடிகள், அஃதாவது அரச துறவி ஆவர். பின் கூறப்பட்டவரே சிலப்பதிகார காவியம் பாடியவர். தம் வாழ்க்கை நிகழ்ச்சியொன்றை இவர் இக்காவியத்தில் வரைந்துள்ளார்.[1]

ஒரு சமயம் இளங்கோவும் அவர் உடன் பிறந்தானும் அவர்கள் தந்தை வீற்றிருந்த அரசிருக்கையின் அருகே கொலுமன்றத்தில் அமர்ந்திருந்தனர். அச்சமயம் ஓர் அறிவர் அரசன்முன் தோன்றினார். அவர் மன்னன் முகப்பொலிவுடன் இரு புதல்வர்களின் முகப்பொலிவுகளையும் கூர்ந்து நோக்கினார். மன்னன் விரைவில் வாழ்க்கை நிறைவெய்துவான் என்றும், இளைய புதல்வனே அரசனாவதற்குரிய அறிகுறியுடையவனென்றும் வருங்குறியுரைத்தார்.

இளங்கோவடிகள் தம் உடன் பிறந்தவனிடம் உண்மையான பற்றுடையவராயிருந்தார். ஆகவே அரசிருக்கைக்குத் தான் வரக்கூடும் என்ற நம்பிக்கை முற்றிலும் அறும் வண்ணம், அக்கணமே உலக வாழ்வைத் துறந்து நிகண்ட வாதிகளுக்குரிய துறவறம் மேற்கொள்ளத் துணிந்தார்.

மன்னன் சிக்கற்பள்ளியில் உயிர்நீத்தான். இது முதல் அவன் சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன், அதாவது சிக்கற்பள்ளியில் உயிர்நீத்த வீர மறம் வாய்ந்த மன்னன் ஆதன் என்று அழைக்கப்பட்டான்.

செங்குட்டுவன் என்ற இமயவரம்பன் தந்தையாகிய இரண்டாம் ஆதனுக்குப்பின் ஏறத்தாழக் கி. பி. 90 இல் தவிசேறினான். பட்டத்துக்கு வந்த சிறிது நாளிலெல்லாம் அவன் வியலூரைக் கைப்பற்றினான். இந் நகரம் இருங்கோவேண்மானின் தலைநகரம். அவன் நாடு மலையடர்ந்தது. அதில் தங்கம் வெட்டியெடுக்கப்பட்டது.[2]

1 சிலப்பதிகாரம் XXX, அடிகள், 171 தொடர்ச்சி.
2 சிலப்பதிகாரம் XXVIII, அடிகள், 115 தொடர்ச்சி.



இதனையடுத்துச் சில நாட்களுக்குள் சோழர் தவிசு கரிகாலசோழனின் பெயரனும் செங்குட்டுவன் சேரனின் மைத்துனனுமான கிள்ளிவளவனுக்கு உரிமையாயிற்று. சோழ இளவரசர் ஒன்பதின்மர் அவனுக்கெதிராகக் கிளர்ந்தெழுந்தனர். செங்குட்டுவன் ஒன்பது இளவரசரையும் நேரிவாயில் என்னுமிடத்தில் முறியடித்துத் தன் மைத்துனன் அரசுரிமை காத்தான்.[1]

இதன்பின் அவன் பாண்டி நாட்டின் தென்பகுதியில் ஆண்ட பழையன்மாறனின் தலைநகரான மோகூரைத் தாக்கினான். பழையன்மாறனால் தீங்குக்கு ஆளான அறுகை என்ற தலைவனுக்காகவே அவன் இந்த நடவடிக்கையிலீடுபட்டான்.[2] பதியிழந்த தாய் சோணை கங்கை நீராடுவதற்காக அவன் வடதிசை சென்றான். பல ஆண்டுகள் கழித்துப் புதுமைவாய்ந்த சூழ்நிலையில் அவன் மீண்டும் கங்கை செல்லவேண்டி வந்தது. அந்நிகழ்ச்சி சிலப்பதிகாரத்தில் கீழ்வருமாறு விரித்துரைக்கப்பட்டுள்ளது.[3]

"வானவர்கோன் கோதை கூர்வாள் ஏந்தியவன். கடல் சூழ்ந்த கடம்பு எறிந்தவன். இமய மலையிலுள்ள வானவர் கண்டு வியக்கும்படி தன் விற்கொடியை இமய மலைமீது பொறித்தவன்.

"ஒருநாள் அவன் தன் அரசியுடன் வெள்ளிமாடத்தே வீற்றிருந்தான். அப்போது அவன் பசுங்காடுகள் நிறைந்த மலைகளைக் காணச்சென்றான். அம்மலைகளின்மீது முகில்கள் நீங்காது தங்கின அதன் அருவிகள் இடைவிடாது இன்னோசையுடன் ஆரவாரித்தன. அவனுடன் பூஞ்சோலைகளில் ஆடி விளையாடும் எண்ணங்கொண்ட வானவர் மகளிர் பலர் வஞ்சி நகரிலிருந்து சென்றிருந்தனர். அனைவரும் பெரியாற்றின் கரையிலிருந்த ஒரு மணற்குன்றின் மீது தங்கினார்கள்.

1 சிலப்பதிகாரம் XXVIII அடிகள் 118 தொடர்ச்சி.
2 சிலப்பதிகாரம் XX VIII அடிகள் 124 தொடர்ச்சி.
3 சிலப்பதிகாரம் XXV to XXX.

"பெரியாறு இவ்விடத்திலேயே மலைகளைவிட்டிறங்கித் தாழ் நிலங்களை நோக்கிப் பாய்கிறது. அதன் நீர் பரவிச் சிறு தீவுகளையும் சோலைகளையும் மாடகூடங்களையும் அம்பலங்களையும் அளாவிச் சென்றது. இங்கிருந்து அரசன் சுற்றியுள்ள அழகிய காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தான். ஆறு தன் பரப்பின்மீது பல்வகை மலர்களை ஏந்திக் கொண்டு சென்றது. மலைக்குறவர் ஆடல்பாடல்கள் கண்டு மன்னனும் மங்கையரும் மகிழ்ந்தார்கள்.

"காட்டு யானைகளைக் குழிப்பொறியில் வீழ்த்தியும் தேன் கூடுகளைக் கிழித்தும் வேடர்கள் செய்த ஆரவாரமும், அருவியின் ஆர்ப்பரிப்பும், யானைகளின் பிளிறலும், அரசனுடன் வந்த வீரர்களின் கவசங்களின் சலசலப்பும் சேர்ந்து அவர்கள் செவிகளில் ஒலித்தவண்ணம் இருந்தன.

"அரசனும் அவன் துணைவரும் இவ்வாறு இன்புற்றிருந்தவேளையில்,வேடர்கள் யானையின் வெண் தந்தங்கள், மணங்கமழும் அகில் கட்டைகள், கவரிமயிர் விசிறிகள், தேன் குடம், சந்தணக் கட்டைகள், சாதிலிங்கம், வீரம், கெந்தக அஞ்சனக்கல், ஏலக்காய், மிளகுக்குலைகள், கூவல் கிழங்கு மாவு, இனிய கவலைக்கிழங்குகள், தேங்காய், மாம்பழம், பலாப்பழங்கள், பசுந்தழை, உள்ளி, கரும்பு, தழைக்கொடி மாலைகள், பாக்கு, வாழைக்குலைகள், சிங்கக் குருளைகள், யாளிக்குருளைகள், புலிக்குட்டிகள், யானைக்கன்றுகள், குரங்குக் குட்டிகள், கரடிக்குட்டிகள் மலையாடுகள், மலை மான்கள், கத்தூரிமான் குழவிகள்; கீரிகள், மயில்கள், புனுகுப்பூனைகள், காட்டுக் கோழிகள், கிளிகள் ஆகியவற்றைச் சுமந்த வண்ணம் அவனைக் காண வந்தனர்.

"மலை வளங்களான தங்கள் விளைபொருள்களைக் காணிக்கையாக அவன்முன் வைத்து அவர்கள் வணங்கி வாழ்த்தினார்கள்.

"வாழ்க, நீடு வெற்றியுடன் வாழ்க, அரசே!



" 'எழுபிறப்பும் நாங்கள் தங்கள் குடியுரிமையுடையோம்.

" 'காட்டிலே வேங்கை மரத்தின் நிழலிலே ஒரு மார்பகமிழந்த அழகார் அணங்கு ஒருத்தி தனியே கிடந்து துன்புற்று உயிர் நீத்தாள். அவள் எந்நாட்டினள், எக்குடியினள் என்று யாம் அறியோம்.

"பன்னூறுயிரம் ஆண்டுநீ ஆளுதி, அரசே!

"மன்னனுடனிருந்த இன்தமிழ் ஆசான் சாத்தன் மன்னன் நலமார்ந்த காட்சி கண்டு மகிழ்ந்து, மன்னனுக்கும் மன்னரசிக்கும் துயரார்ந்த அவ்வணங்கின் வரலாறு கூறினன்.

"அவன் உரைத்ததாவது:

" 'அவள் காவிரிப் பட்டினத்திலுள்ள ஒரு வணிகன் மனைவி. அந்நகரத்திலுள்ள ஓர் ஆடல் அழகியிடம் தன் செல்வம் யாவும் போக்கிக் கணவன் தன் கற்புடை மனைவியுடன் மதுரைக்கு வந்தான். அப் பெண்ணிடம் அப்போது இருந்த ஒரே செல்வம் அவள் கால் சிலம்புகள் இரண்டுமே. கணவன் அவற்றுள் ஒன்றை விற்று, அதற்கு விலையாகக் கிடைத்த பணத்தைக்கொண்டு புதிதாக வணிக வாழ்க்கை தொடங்க எண்ணினன்.

" 'தன் போதாக் காலமாக, அவன் மன்னன் பொற்கொல்லனை அடைந்தான். அப்பொற்கொல்லன் ஏற்கெனவே அரசியின் சிலம்புகளில் ஒன்றைத் திருடியிருந்தவன். ஆகவே அயலானொருவனுல் திருடுபோன சிலம்பே விற்பனை நாடி வந்திருக்கிறது என்று கூறினன். திருடனைக் கொண்டேகவந்த காவலரிடம் வணிகனைக் காட்டினன்.

"திடுமென நேர்ந்த நிகழ்ச்சி மாருட்டத்தால் திகைத்து நின்ற வணிகன் சிலம்பு தன் கையில் வந்த வகையைக் காவலரிடம் விளக்கிக்கூற முடியாதவனுய்

நின்முன். அவனையே திருடனென்று ஐயுற்ற காவலர் அவ்விடத்திலேயே அவனைக் கொலைசெய்து சிலம்பை அரண்மனைக்குக் கொண்டு சென்றனர்.

" 'வணிகன் கொல்லப்பட்ட அவலச் செய்தி அவன் மனைவி செவிகளில் பட்டது. அச்சமயம் அவள் ஆயர் பாடியில் தங்கியிருந்தாள். கண்களிலிருந்து நீர் ஒழுகிய வண்ணம், அவள் கணவன் உடல் குற்றுயிராய்க் குருதி படிந்து கிடந்த இடம் சென்றாள். அரசியின் சிலம்புகளுள் ஒன்றைத் திருடியதாகக் குற்றஞ்சாட்டப்பட்டுத் தன் கணவன் கொலையுண்டானென்ற செய்தியை மக்களிடமிருந்தறிந்து வெந்துயராருத பதியிழந்த அந்த அணங்கு மன்னனைக் காட்சி நாடி அவன்முன் சென்றாள். கணவன் கையிலிருந்த சிலம்பு பாண்டிய அரசிக்குரியதன்றென்றும் தனதே என்றும் அவள் மன்னனறியக் காட்டினாள்.

" 'செய்த பழிக்கஞ்சிய மன்னன் உணர்விழந்து தவிசிலிருந்து விழுந்து திரும்ப எழாது உயிர்விட்டான். அரசியும் அவன் ஈம அழலில் பாய்ந்து மாண்டாள்.

" 'வாழ்விழந்த நங்கை தன் மார்பகங்களில் ஒன்றைத் திருகி அதை மதுரைத் தெருக்களில் எறிந்தாள். தீய பழி சூழ்ந்த அந்நகரம் தீயில் அழிக என்று வரங்கோரினாள். இதன்படி அரண்மனையும் நகரின் ஒரு பகுதியும் தீக்கிரையாயின.

" 'அவள் இதன்பின் மதுரையை விட்டகன்று மேல் திசை வழியாகச் சென்று சேரநாடடைந்து அங்கே மாண்டாள்.'

" செங்குட்டுவனும் அவன் அரசியும் இவ்வரலாறு கேட்டு மிகவும் உருகினர். அவப்பேறுற்ற கற்புடைய அந்நங்கை தெய்வமாக வழிபடுவதற்குரியவள் என்று அரசி குறித்தாள்.

" மன்னன் இக் கருத்தை ஏற்றான். தன்னைச் சூழ்ந்திருந்த அறிவாளரை நோக்கி அவர்கள் அறிவுரை கோரி



னான். பொதிய மலையிலிருந்து ஒரு கற்சிலை பெயர்த்துருவாக்கி, அதைக் காவிரியில் நீராட்டலாம் அல்லது இமய மலையிலிருந்து கற்சிலை பெயர்த்துருவாக்கிக் கங்கையில் நீராட்டலாம் என்று அவர்கள் கருதினார்கள்.

" பொதியத்தில் கல்லெடுத்துக் காவிரியில் நீராட்டுவது மறக்குடியில் வந்த தன்போன்றவர்க்கு அழகல்ல என்று மன்னன் சாற்றினான். இமய மலையிலிருந்தே கல் கொணருவதென்று துணிந்தான்.

" அவன் அமைச்சன் வில்லவன்கோதை அவனை நோக்கி இவ்வாறு கூறினான்.

" பல்லாண்டு வெற்றியுடன் வாழ்வீராக, அரசே!

" 'கொங்கு நாட்டுப் போர்க்களத்தில் தோற்றோடிய உன் மாற்றரசர்கள் தங்கள் புலிக்கொடியையும் மீன் கொடியையும் துறந்துவிட்டுச்சென்றுள்ளனர். உம்வெற்றியின் புகழ் உலகெங்கும் பரந்துள்ளது.

" 'உம் அன்னையாராகிய அரசியர் கங்கை நீராடிய சமயம், தாம் கொங்கணர், கலிங்கர், கருநாடர், பங்களர், கங்கர், கட்டியர், வடவாரியர் ஆகியோர் கூட்டுப்படைமீது தாக்கிய வெற்றித் தாக்குதலை என் கண்கள் என்றும் மறக்கமாட்டா.

" 'ஆகவே தெய்வச்சிலைக்குக் கல் பெறும்படி இமய மலைக்குச் செல்வது தம் விருப்பமாயின், அது பற்றிய செய்தி எழுத்து மூலம் வடபுல அரசருக்கு அனுப்பப் படுதல் நன்று' என்றான்.

" அழும்பில்வேள் இப்போது எழுந்து பேசினான்.

" 'வெளிநாட்டு நிலவரத் தூதர்கள் வஞ்சியின் வாயிலிலேயே தங்கியுள்ளார்கள். தம் படைச் செலவின்செய்தியை அவ்வரசர்கள் அவர்கள் மூலமே அறிந்துகொள்ளட்டும். பயண விவரத்தை நம் தலைநகரத்திலேயே முரசறைவித்தால் போதுமானது' என்றான்.

" மன்னனும் அவன் குழாத்தினரும் இதன் பின்னர் விரைவில் வஞ்சிக்குத் திரும்பி வந்தார்கள்.

மன்னன் கட்டளைப்படி கங்கைக்குச் செல்லவிருக்கும் படைப்போக்கு விவரம் மன்னுரிமை யானைமீது கொண்டு செல்லப்பட்ட முரசங்களால் நகரெங்கும் பறைசாற்றப் பட்டது.

" மன்னன் திரு ஓலக்கமண்டபம் ஏறி, அரிமானுருவங்களால் தாங்கப்பட்ட இருக்கையில் அமர்ந்தான். அவனை வரவேற்கக் குழுமிக் காத்திருந்த தலைமைக் குருவும் தலைமைக்கணியும் அரசியற்பேரமைச்சர்களும் படைப்பெருந் தலைவர்களும், " நீடுவாழ்க மன்னவர் மன்னன்," என்று வாழ்த்தெடுத்துப் பின்னர், படைப்போக்குப் பற்றிய அவன் கட்டளை யாதெனக் கேட்டனர்.

" படைத் தலைவர்களையும், வீரப்படை மறவரையும் நோக்கி மன்னன் முழங்கினான்.

வடவரசர் தமிழ் மன்னர்களைப்பற்றி ஏளனமாகப் பேசினர் என்று இமயமலையிலிருந்துவந்த யாத்திரிகர்கள் கூறினர். ஆகவே அவ்வரசர்களை முறியடித்து, அவர்கள் தம் தலையின்மீது தெய்வச் சிலைக்குரிய கல்லை ஏற்றிவரும்படி வலுக்கட்டாயப்படுத்தியதன்றி இப் படைப்போக்கினின்று மீளேன்' என்றான்.

" தலைமைக்குரு மன்னனை நோக்கிக் கட்டுரைத்தான்.

" ' கடுஞ்சின மாற்றுக, இமயவரம்பனே ! வடவரசர் ஏளனமாகப் பேசியது உன்னையென்று கூறுவதற்கில்லை. உன்னைப் போர்க்களத்தில் எதிரேற்று நிற்கத்தக்கவர் பாண்டியரும் சோழரும் அன்றி வேறு யார் இந்நிலத்தில் உளர்?

" 'தஞ்சமென்று வந்தோர்களுக்கு எல்லாம் நீயேயன்றோ தக்ககாப்பு?

"வானகமனைகள் பன்னிரண்டையும் கோளினங்கள் மீனினங்கள் நிலைகளையும் வான்கணிப்பின் ஐந்துஉறுப்புக்



களையும் உள்ளடக்கிய வானூலுணர்ந்த தலைமைக்கணி எழுந்து பேசினான் :

" 'வல்லமை பொருந்திய வேந்தே! வெற்றி என்றும் நினதாகுக!

" இதுவே நல்ல ஓரை. நீ செல்ல நினைத்த திசையில் இந்தக் கணமே புறப்படத் திருவுளங்கூருதியானால் உன் மாற்றரசர்களனைவரும் வந்து அடிவீழ்வர்' என்றான்.

" இதுகேட்டு மன்னன், தன் மன்னுரிமை வாளும் கொற்றக்குடையும் வடதிசை செல்க எனக் கட்டளையிட்டான்.

" மறவர் மகிழ்ந்து ஆர்ப்பரித்தார்கள். பெரு முரசங்கள் முழங்கின. கொடிகள் பறந்தன. ஐம்பெருங்குழுவினரும் எண்பேராயத்தாரும் குருமாரும் கணிமாரும் முறைவரும் அமைச்சரும் ஒருங்குகூடி, 'மன்னன் வாழ்க' என்று வாழ்த்தினர். பூமாலைவேய்ந்த மன்னுரிமை வாளும் கொற்றக்குடையும் மன்பேருரிமையுடன் அரச யானைமீது ஏற்றி நகர்ப்புறத்திலுள்ள ஒரு கோட்டைக்குக் கொண்டு செல்லப்பட்டன.

" திருவோலக்க மன்றமேறி மன்னன் இதன்பின் தன்படைத் தலைவர்களுக்கும் விருந்தாட்டளித்தான். அதன்பின் தலைமீது வஞ்சிமாலையணிந்து புறப்பட்டான். திருமால் கோயில் சென்று வழிபாடு செய்தபின் அவன் தன் யானை ஏறினான். கோயில் குருவிடமிருந்து சிவபெருமான் திருவடிச் சின்னம் பெற்று அதனைப் பற்றார்வத்துடன் தன் தலையிலும் தோளிலும் அணிந்தான். பொற்கோயிலிலுள்ள திருமாலின் கோயில்குரவர் நல்வாழ்த்துடன், காலாள், குதிரை, தேர், யானை ஆகிய நாலுறுப்புக்களமைந்த படை புடைசூழ, படைத்தலைவர் துணைவர, வெண்கொற்றக் குடைநிழலின்கீழ் யானைமீதமர்ந்து மன்னன் வஞ்சியை விட்டுப்புறப்பட்டான்.

"அவன் நீலகிரிக் குன்றுகளில் முதல் தங்கல் அமைத்தான்."

இந்த நீலகிரி தற்கால நீலகிரியாய்த் தோன்றவில்லை. அது ஒரிசா மாகாணத்தில் பலசோர்[1] அருகில் வங்க விரிகுடாவிலிருந்து 16 அல்லது 18 கல் தொலைவில் செங்குத்தாக நின்ற ஒரு மலை, அந்நாளைய பழைய கடலோடிகளால் அது நீலகிரி என்றழைக்கப்பட்டது.

சேர நாட்டிலிருந்து ஒரிசாவுக்குச் செல்லும் பயணம் கடல் வழியே நடைபெற்றதாகக் காவியத்தின் முடிவில் கூறப்படும் குறிப்பால் தெரிகிறது. படையுடன் கடல் கடந்து கங்கைக் கரையை அடைந்ததாக அங்கே செங்குட்டுவன் புகழப் பெறுகிறுன்.

"சேர அரசன் நீலகிரியின் அடிவாரத்தில் படைவீட்டில் தங்கியிருந்தபோது, மகதப்பேரரசாண்ட கர்ணரிடம் பணிசெய்த சஞ்சயன் என்ற படைத்தலைவன் நூறு ஆடல் நங்கையர்களுடனும், இருநூற்றெட்டுப் பாடகர்களுடனும், நூறு கழைக்கூத்தாடிகளுடனும், நூறு தேர், பதினுயிரம் குதிரைகள், இருபதினுயிரம் வண்டிகள் ஆயிரம் மெய்காவலர் ஆகியவர்களுடனும் வந்து மன்னனைக் கண்டான்.

"வாயில் காப்போன் சஞ்சயனும் அவன் படையும் வந்தது அறிவித்தான். அதன்மீது அவர்களைத் தன் கொலுவிருக்கைக்கு வரவழைக்கும்படிச் சேரமன்னன் கட்டளையிட்டருளினுன்.

"சஞ்சயன் இதன்படி மன்னன் முன்வந்து தலைதாழ்த்தி நின்று வணங்கிக் கீழ்வருமாறு செய்தியுரைத்தான்.

"'நிலவுலகமாளும் மன்னவனே, நீடு வாழ்க !

"'உன் நெருங்கிய நட்புரிமையுடைய சதகர்ணர் என் மூலமாக இந்தச் செய்தியை அனுப்பியுள்ளார் :

1. Balasore.



"தெய்வச் சிலைசெய்வதற்கு உயர்ந்த இமயமலையிலிருந்து கல்பெற வானவர் வேந்தன் திருவுளம் நேர்ந்தால், அது பெறவும் கங்கையில் நீராட்டவும் நாங்கள் உதவக் காத்திருக்கிறோம்.

"சேர அரசன் சஞ்சயனுக்கு மறுமொழி புகன்றுன்.

"'பாலகுமாரன் மைந்தர்களாகிய கனகனும் விஜயனும் தங்கள் நாவின் காவலும் காப்பும் இழந்தவர்களாய்த் தமிழரசர் வலிமையறியாமல் அவர்களைப் பழித்துள்ளார்கள். இப்படைகள் இதனுல் வெஞ்சினத்தைத் தம் கருவகம் கொண்டு முன்னேறி வருகின்றன. இதைச் சதகர்ணருக்கு அறிவிக்க ! கங்கைப் பேரியாறு கடந்து என் படைகள் செல்லும்படி ஒரு கப்பற் படையை அவர் திரட்டிவைக்கக் கடவர் !

"சஞ்சயனை அனுப்பிவிட்டு, அரசன் மெய்காவலர் ஆயிரவரையும் தன் கொலுவிருக்கையில் வர இசைவளித்தான். அவர்களிடமிருந்து மணமிக்க சந்தணக்கட்டைகளும் முத்துக்களுமடங்கிய திறையை ஏற்றுன்.

"பின் தங்கல் கலைத்து மன்னன் படையுடன் கங்கைக் கரையை அடைந்து, கர்ணர்கள் திரட்டித் தந்த கப்பற் படையின் உதவியால் அவ்வாற்றைக் கடந்தான்.

"வடகரையில் கர்ணர்களே வந்து மன்னனை வரவேற்றனர். அவர்களிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு சேரன் பின்னும் வடக்கேயுள்ள உத்தரை நாடு சென்றுன்.

"இங்கே குயிலாலுவம் என்ற இடத்தில் கனகன், விசயன் ஆகிய ஆரிய அரசரும், அவர்கள் நேச மன்னரான உத்தரன், விசித்திரன், உருத்திரன், பைரவன், சித்திரசிங்கன், தனுத்தரன், சுவேதன் ஆகியவர்களும் நடத்திய படையைச் சந்தித்தான்.

"ஆரிய அரசரின் மாபெரும் படையைக் கண்ட சேர அரசன் கழிபேருவகை எய்தினுன். முரசு முழங்க, சங்கம்

இயம்ப, காளங்கள் ஆர்ப்பரிக்க அவன் படை நடத்தித் தாக்கினான். வில் வீரர்களும் வேல் வீரர்களும் வாள் வீரர்களும் நீடித்து மும்முரமான போரில் ஈடுபட்டார்கள். படுகளம் அச்சந்தரும் குருதிக்களமாற்று.

“ நிலமுழுதும் இறந்துபட்ட வீரர் உடல்களும் குதிரை யானை ஆகியவற்றின் உடல்களும் நிரம்பிக்கிடந்தன. போர் முடிவில் தமிழர் எதிரிகளனைவரையும் துரத்தியடித்தனர்.

“ கனகனும் விசயனும் மற்றும் பல அரசரும் செங்குட்டுவனிடம் சிறைப்பட்டார்கள்.

“ கனகன் விசயன் ஆகியோர் மன்னுரிமை உடைகளைச் சேரன் ஆண்டி உடையாக மாற்றும்படி செய்தான். பின் அவர்களைத் தன் அமைச்சன் வில்லவன் கோதையுடனும் காவற் படையுடனும் இமயத்துக்கு அனுப்பினான்.

“ போர் முடிவுற்றபின் மன்னன் கங்கையின் தென் கரையடைந்தான். அங்கே ஓர் அழகிய பூங்காவினருகில் கர்ணர்கள் அரசனுக்காக ஒரு சிறந்த அரண்மனையையும், உயர் பணித்தலைவர்களும் படைத்தலைவர்களும் தங்குவதற்கான பல மாட மாளிகைகளையும் கட்டடங்களையும் கட்டி யிருந்தார்கள், இவ்விடத்தில் வந்து மன்னன் போரில் வீரச்செயலாற்றியவர்களுக்குப் பரிசுகளும் பட்டங்களும், புகழுடன் மாண்ட வீரர்களின் பிள்ளைகளுக்கு நன்மதிப்புச் சின்னங்களும் வழங்கினான்.

“ முப்பத்திரண்டு மாதங்கள் வெளிநாட்டில் கழித்ததன்பின், மன்னன் வஞ்சிக்கு மீண்டான். அரசியும் குடிகளும் கோலாகலத்துடன் அவனை வரவேற்றனர்.

“ கங்கைக் கரையிலிருந்தே சேரன் ஆரிய அரசர் கனகவிசயர்களைத் தன் காவற்படையுடன் பாண்டிய சோழ அரசர்களுக்குக் கண் காட்சியாக அனுப்பியிருந்தான். காவற்படைத் தலைவன் நீலன் காவிரிப்பட்டினத்துக்கும் மதுரைக்கும் சென்றபின் வஞ்சிக்குத் திரும்பினான்



“ இரக்கத்துக்குரிய ஆரிய அரசர்கள் நடத்தப்பட்ட வகை மிகக் கொடுமை வாய்ந்ததென்று சோழ பாண்டிய அரசர் கண்டிப்பதாக நீலன் மன்னனிடம் கூறினான். தமிழரசரின் இவ்வுரை கேட்டு மன்னன் மனம் குமுறினான்.

“ அப்போது அரசன் முன்னிலையில் இருந்த பார்ப்பனன் மாடலன் மன்னனிடம் இவ்வாறு பேசினான்.

“மன்னவர் மன்ன! உன் வெற்றி நீடுக!

“ காட்டானைகள் மிளகுச் செடியின் நிழலில் உறங்கும் வியலூரை நீ வென்றிருக்கிறாய். நேரி வாயிலின் கடும் போரில் நீ ஒன்பது சோழரை முறியடித்திருக்கிறாய். இடும்பிலில் நீ பெற்ற வெற்றி பெரிது. இப்போது மாகடல் கடந்து சென்று நீ கங்கைக் கரையில் உன்னை எதிர்த்த ஆரிய அரசரை முறியடித்திருக்கிறாய்.

“ ‘வெற்றிப் படையையுடைய வேந்தனே! அறிவார்ந்த மன்னனே! இனி நீ சினந்தணிவாயாக. பொருநையாற்றின் மணலினும் பல ஆண்டு நீ வாழ்வாயாக.

“ ‘என் சொற்களை ஏளனம் செய்யாது சிறிது செவி சாய்த்துக் கேட்பாயாக.

“ ‘இப்போது நீ ஐம்பது ஆண்டுடையாய். ஆயினும் இதுவரை நீ உன் வாழ்நாள் முழுதும் போரிலேயே கழித்திருக்கிறாய். எத்தகைய திருவேள்வியும் நீ செய்ததில்லை.

“ ‘உன் பழமை வாய்ந்த வீர மரபில் இறவாது பிழைத்தோர் யாவரும் இல்லை. கடல் நடுவில் கடம்பை எறிந்தவனும் சரி, இமய மலைமீது விற்பொறி பதித்தவனும் சரி; தன்னைப் புகழ்ந்து பாடிய பார்ப்பனன் வேள்விகளைச் செய்வதின் மூலம் துறக்கமடையும்படி செய்தவனும்சரி; கூற்றுவனைக் கடந்தவனும் சரி, யவனர் நாடாண்டு தங்கம் விளைவிக்கும் மலைகளை அடைந்தவனும் சரி; வீரப்படை செலுத்திஅகப்பா அழித்தவனும் சரி, அயிரையின் நீரிலும்

இரு கடலிலும் குளித்தோனும் சரி; தலைநகர் வஞ்சியில் நாற்பூதங்களின் வழிபாடு நிறுவி வேள்விகளை நடத்தினவனும் சரி—எல்லோருமே மாண்டு மடிந்துபோயுள்ளனர்!

" 'செல்வமும் ஆட்சியும் நில்லா என்பதனை நீ அறிவாய், தமிழர்களைப் பழித்த ஆரிய அரசர் தோல்வியும் இகழும் அடைந்தது நீயே கண்ட காட்சி. இளமையும் நில்லாது என்று நான் கூறவேண்டியதில்லை. உன் மயிர் நரைக்கத் தொடங்கியுள்ளதே அதனைக் காட்டும்.'

"இவ்வாறு தொடர்ந்து, பார்ப்பனரின் பிறப்பிறப்புக் கொள்கையை வலியுறுத்தி விளக்கி, இராசசூயம் என்னும் மாபெரு வேள்வியைச் செய்யும்படியும் அதன்மூலம் வரு பிறப்புக்களில் தன் உயிர்நிலையின் நலத்தைப் பேணும்படியும் மாடலன் அரசனை வேண்டினான்.

" மன்னன் இதன்படியே நடந்துகொண்டான். மிகப் பெரிய அளவில் இராசசூயம் நடத்துவதற்குரிய ஏற்பாடுகள் தொடங்கும்படியும், அத்துடன் கண்ணகிக்குக் கோயில் எடுக்கும்படியும் உடனேகட்டளைகள் பிறப்பிக்கப்பட்டன.

" இவ் விழாக்களில் கொங்க மன்னரும், மாளவ மன்னரும் இலங்கையரசன் கயவாகுவும் கலந்துகொண்டனர்."

செங்குட்டுவனுக்குப் பின் யானைக்கண்—அதாவது யானையின் கண்போன்ற கண்களை உடையவன்' என்ற பட்டப் பெயருடைய சேய் அரசுரிமை ஏற்றான். அவன் வீரமிக்க அரசன். அயலரசர்களுக்கு ஓயாத்தொல்லை கொடுத்துக்கொண்டு அவன் தன் ஆட்சியின் எல்லைப்புறங்களிலேயே சுற்றிக்கொண்டிருந்தான். இப்படை நடவடிக்கையின் பயனாகவே பாண்டிய அரசன் இரண்டாம் நெடுஞ்செழியன் சேரநாட்டின்மீது படையெடுத்துப் போர்த் திறச் சூழ்ச்சிகளால் அவனைச் சிறைப்பிடிப்பதில் வெற்றி



யடைந்தான் என்று தெரிகிறது.[1] ஆயினும் சேரன் தப்பிச் சென்று மீண்டும் தன் ஆட்சியை வலுப்படுத்திக் கொண்டானென்று தோற்றுகிறது.

சோழ அரசன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளியும் யானைக்கட்சேயுடன் அடிக்கடி போரிட்டதாக அறிகிறோம். மலாட்டுக்கோமான் தேர்வண்மலையன் இப்போரில் சோழனுக்குத் துணை தந்ததாகத் தோற்றுகிறது.[2]

பகைவர்களிடமிருந்து விளங்கில் என்ற நகரைக் காத்ததாக இவ்வரசனைப்பற்றிக் குறுங்கோழியூர்கிழார் என்ற புலவர் புகழ்ந்து பாடியுள்ளார். அவர் பாடல்களில் ஒன்று வருமாறு :[3]

"உயர்ந்த கொல்லிமலைக்கு இறைவனே! வீரமிக்க யானைக்கட்சேஎய்! உன்படை வீடுகள் காவல் எதுவும் தேவையில்லாதபடி அவ்வளவு அகலப் பரப்புடையனவாயுள்ளன. அங்கே குடித்து விருந்தாட்டயரும் உன் வீரர்களின் ஆரவாரம் கரைமீது மோதும் கடலின் முழக்கம் போன்றது.

"குடியரசர் செலுத்திய திறைகொண்டு நீ உன்னைச் சார்ந்தவர்களை ஊட்டுகிறாய். உன் வரையற்ற செல்வம் என்றும் நின்று நிலவுக.

"உன்னைப் பாடும் புலவர்கள் பின் வேறுயாரையும் பாடவேண்டுவதில்லை. அவர்கள் என்றும் வறுமையுறாத அளவு நீ கைவண்மையுடையாய்.

" உன்னால் ஆளப்பட்ட நாடு நிலவுலகில் ஒருபொன்னாடு போன்றது என்று கேள்வியுற்று நான் இங்கே வந்தேன். என் கண்கள் கண்டு மகிழ்ச்சியடைகின்றன.

" என்றும் செயலூக்கமுடைய நீ உன் படைகளை எப்போதும் வெளிநாடுகளில் செலுத்தி இறவாப் புகழையும் வென்றுவிட எண்ணுகிறாய்!'

---

1 புறம் 17. 2 புறம் 125. 3 புறம் 22

இவ்வரசன் மாள்வின்போது உடனிருந்த புலவர் கூடல்கிழார் அந் நிகழ்ச்சிக்கு ஏழு நாட்களுக்கு முன்பே அந் நிகழ்ச்சியை ஓர் ஒளிமிக்க எரிமீன் வீழ்ச்சி குறித்துக் காட்டிற்று என்று கூறுகிறார். இத் தறுவாயில் அவர் பாடிய பாட்டு தனிச்சிறப்புடன் நம்மால் கவனிக்கத்தக்கது. ஏனெனில் பார்ப்பனரின் வேறாகத் தமிழருக்கு வானூலாராய்ச்சி உண்டு என்பதையும், நாள்மீன்களுக்கும்[1] வானகமனைகளுக்கும்[2] தனித்தமிழ்ப் பெயர்கள் இருந்தன என்பதையும் அது தெளிவுபடுத்துகிறது.[3]

"குட்டநாளன்று (கார்த்திகை நாள்), கதிரவன் ஆட்டின் மனையில் (மேடத்தில்) இருந்த சமயம் நள்ளிரவில் முடப்பனை (அனுராதா) முதல் விண்மீனிலிருந்து குளம் (புனர்வசு) இறுதி விண்மீன்வரை வானத்தில் காட்சியளிக்க, பங்குனி மாதம் முதற்பாதியில் உச்சத்திலிருந்த நாள் மீன் உச்சத்திலிருந்து சாய்ந்துவர, எட்டாவது நாள் மீன் எழுந்ததன் பின்னும் எட்டாவது நாள் மீன் அடைவதற்கு முன்னும் வானமுழுவதும் ஒளி வீசிய ஓர் எரிமீன் காற்றின் எதிர்த்திசையில் அனற்பொறி சிதறிய வண்ணம் வடகிழக்கு நோக்கி விழுந்தது. இதைக் கண்ட நானும் மற்றப் பாணர்களும் அருவிகள் நிறைந்த வளமிக்க நாட்டின் வேந்தன் மாள்விலிருந்து காப்பாற்றப்பட வேண்டுமென்று உளமார வேண்டிக் கொண்டவர்களாய் இவ் வச்சந்தருந் தீக்குறியின் பயனைத் துயரமிக்க உள்ளத்துடன் எதிர்நோக்கியிருந்தோம்.

"ஏழாம் நாள் காலை முடிவு நாள் வந்து நேர்ந்தது. எதிரிகளைச் சிறைப்படுத்துவதில் வல்லவனும் ஈகையில் வண்மையுடையவனுமான அரசன் இப்போது வானவர் உலகம் சென்றுவிட்டான். அவன் பாரிய யானை தும்பிக் கையை நிலத்தில் நீட்டிக் கிளர்ச்சியற்றுக் கிடக்கின்றது. அவன் பெரிய முரசங்கள் கவனிப்பாரற்று நிலத்தின்மீது புரள்கின்றன. அவன் வெண்கொற்றக் குடை பிடியின்றி

1 Lunar Asterisms. 2 Signs of the Zodiac.

3 புறம் 229.



வறிதே கிடக்கிறது. அவனுடைய விரைநடைக் குதிரைகள் வாட்டத்துடன் கொட்டிலில் நிற்கின்றன. அந்தோ, வானவர் மகளிர் துணையை நாடியோ எம் அரசன் தன் அன்புக்குரிய அரசியரை மறந்துவிட்டான்!"

யானைக்கட்சேய்க்குப் பின் பெருஞ்சேரலிரும்பொறை அரசனானான். மோசிகீரனார் என்னும் புலவர் அவன் அன்புக்குரியவர் என்று தெரிகிறது. ஒருநாள் அரண்மனையின் ஒருபுறத்தே மெத்தைகளிட்டுப் புதுமலர் பரப்பிய படுக்கை ஒன்று கிடக்கக் கண்டு, கவிஞர் அதில் சிறிது சாய்ந்து, சாய்ந்தவண்ணம் உறங்கிவிட்டார். அவ்வழி செல்ல நேர்ந்த அரசன் கவிஞர் சோர்வுற்று வியர்த்துக் கிடப்பது கண்டு, அங்கிருந்த ஒரு விசிறி எடுத்து அவருக்கு விசிறினான். புலவர் எழுந்து அரசன் தனக்கு விசிறுவது கண்டு திடுக்கிட்டார்.

படுக்கை உண்மையில் அரசன் போர் முரசத்துக்குரிய திருவிருக்கை என்று இதன் பின்னரே உணர்ந்த புலவர் கீழ்வரும் பாடலைப் பாடினார்.[1]

"நறு நெய்யின் நுரைபோல மெல்லிய மலர்கள் பரப்பப்பட்ட இந்தப் படுக்கையைக் கண்டு, அது நீண்ட மயிலிறகுகளால் உழிஞையின் பொன் மலர்கள் பிணைத்த மணிமாலைகளாலும் அணிவிக்கப்பட்டுக் கருங்கண்களுடன் அழகுருவமைந்த முரசத்துக்குரியதென்று அறியாமல் அதில் படுத்துக் கண்ணயர்ந்துவிட்டேன். இந்த எனது துடுக்குத்தனத்துக்காக நீ என்னை இரு துண்டுகளாக வெட்டியிருக்கவேண்டும். ஆனால் நீயோ உன் வாளை உறையிலிருந்து உருவினாய் இல்லை. இதுவே பெரிது.

"தமிழ் நிலமெங்கும் உன் புகழ் பரப்ப இது போதாதென்று நீ உன் வலிமை மிக்க கைகளால், துயிலும் என் நெற்றி குளிர விசிறினாய்.

"நற்செயல்களின் புகழால் இவ்வுலகை நிறைத்தவர்களுக்கே பொன்னுலகின் அந்த இன்ப வாயில் திறக்கப்

1 புறம் 50.

படும் என்ற உண்மையை அறிந்ததனால்தான்போலும் அருந்திறல் வேந்தனாகிய நீ இவ்வாறு செய்தாய்?" என்றார்.

அவன் குடிமன்னருள் ஒருவனான எழினி அவனுக்கெதிராகக் கிளர்ந்தெழுந்ததனால், அவன் ஒரு பெரும்படை திரட்டிக்கொண்டு சென்று அவனது தகடூர்க் கோட்டையை முற்றுகையிட்டான். எழினி, அதிகமான் என்ற பெயருடைய மிகப் பழமையான வேளிர்குடித் தலைவன். அவர்கள் தலைநகரமாகிய தகடூர் சேலமாவட்டத்திலுள்ள தற்காலத் தருமபுரி என்று கருதப்படுகிறது. எழினி அக் கோட்டையைச் செப்பம் செய்து வலிமைப் படுத்தித் தனிமையாட்சியுரிமை பெறுவது அல்லது அம்முயற்சியில் மடிவது என்று உறுதிகொண்டான். ஆனால் சேரமன்னன் நகர முழுவதும் வளைத்து வெளித்தொடர்பிலிருந்து அதைத் துண்டுபடுத்தினான்.

நகரைச் சுற்றியிருந்த முட்காடு சேர வீரரால் அழிக்கப்பட்டது. அகழி தூர்க்கப்பட்டது. கோட்டை வாயில்கள் யானைகளால் பிளக்கப்பட்டன. சேரர்படை கோட்டைக்குள் புகுந்து பாய்ந்தது. உள்ளே நடந்த சண்டையில் எழினியும் அவன் படைத்தலைவர்களும் வீர அருஞ்செயல்கள் பல செய்து, எதிரியின் பெருந்தொகை காரணமாகவே இறுதிவரை போரிட்டு ஒவ்வொருவராக மடிந்தார்கள்.

முற்றுகையின்போது அரிசில் கிழார், பொன்முடியார் என்ற புலவர்கள் சேர அரசன் படைவீட்டிலிருந்தார்கள். இன்றுவரை நமக்கு எட்டியுள்ள அவர்கள் பாடல் பகுதிகள் கோட்டைத் தாக்குதலின் சில நிகழ்ச்சிகளை நமக்கு உயிர்ச்சித்திரங்களாகக் காட்டுகின்றன.

சேரர் படைகள் தகடூரை அணுகியபோது, எழினியும் அவன் படைத் தலைவன் பெரும்பாக்கனும் கோட்டைக்கு வெளியே அவர்களைச் சந்திக்கத் தங்கள் படைகளை வெளியே கொண்டுவந்தனர். பெரும்பாக்கன் தாக்குதலை எதிர் நோக்கித் தன் படையின் முன்பு நின்றான். புலவர்



அரிசில் கிழாரும் பொன்முடியாரும் சேர அரசனுக்கு அவனைச் சுட்டிக் காட்டி, அவன் அவர்களை நோக்கி ஏளனச் சிரிப்புச் சிரிப்பதை எடுத்துரைத்தார்கள்.[1]

"மாலைகளையணிந்த அந்த வீர இளைஞன் ஊக்க மிகுந்த குதிரைகள் பூட்டிய மின்னொளி பாயும் அழகிய தேரில் ஏறிக்கொண்டு, நம் படையை நோக்கித் தன் வலிமையில் மகிழ்ந்தவனாய் நிற்கிறான். அவன் வெறிகொண்டு நம்மைத் தாக்கினால், வீறுமிக்க மதயானைகளைக் கூட அவனால் வீழ்த்தமுடியக்கூடும். தாக்குதலை எதிர்நோக்கிய வண்ணம் மின்னிடும் தன்வேலை வீசியபடி அவன் தன் எதிரிகளைக் கண்டு நகைத்து நிற்கிறான்."

"கருந்தாடியுடைய அந்த அஞ்சா நெஞ்சுகொண்ட வீர இளைஞன் தன் போர்க்குதிரைகளின் கடிவாளங்களைப் பற்றியவண்ணம் ஒரு தடவை பூரிக்கும் தன் தோள்களைப் பார்க்கிறான். பின் தன் பின்னே அணிவகுத்து நிற்கும் யானைக் கூட்டங்களைக் கண்ணாலளக்கிறான். யானைகளுக்குப்பின்னே நிற்கும் தேர் வரிசைகளை நோக்குகிறான்; தன் போர்க்குதிரைகளை நோக்குகிறான்; பின் பறந்துவரும் அம்புகளையும் தன் கையிலுள்ள வேலையும் கையையும் பார்த்து நம்மை நோக்கிச் சிரிக்கிறான்."

முதல் நாள் போரில் எழினியின் படைகள் கோட்டைக்குள் துரத்தப்படுகின்றன. இரண்டாம் நாளில் கோட்டையைச் சுற்றியுள்ள முட்காடு அழிக்கப்படுகிறது. 'முற்றுகையின் வேகம்பற்றி என்ன கருதுகிறீர்கள்' என்று சேர அரசன் அச் சமயம் புலவர்களிடம் கருத்துசாவ அவர்கள் நிலையைப் பாடல்களில் தீட்டினர்.[2]

"நேற்று எழினியின் குதிரைகள் மான்கள்போல் துள்ளியோடின. யானைகள் மலைகள்போல் சோர்வுற்றுச் சாய்ந்தன. சீறிவரும் அம்புமாரிகளால் மற வீரர்கள் கலகலத்துக் கலைந்தனர். போரில் புதுப்புண்பட்டு அ

1. தகடூர் யாத்திரை 2. தகடூர் யாத்திரை.

சின்னங்களை உடலில் அணிந்துள்ள அரசனே! இன்று கொல்லப்பட்டவர்களின் அம்பேறுண்ட தலைகள் நம் யானைகளால் எற்றுண்டு, பாதைகளின் அருகெல்லாம் பிளந்த பனம்பழங்கள் போலக் கிடக்கின்றன, சோர்வறியாத நம் கருங்கண் இளைஞர்கள் காட்டையழித்து ஆரவாரித்தவண்ணம் எதிரிகளைக் கண்ட கண்ட இடங்களிலெல்லாம் அவர்களைக் கொன்றழிக்கின்றனர்.

"நாளை முரசு முழங்க நாம் கோட்டைக்குள் செல்வோம்."

# 8. வேளிரும் குடிமன்னரும்

பல நூற்றாண்டுகளாக முடியுடைய வேந்தர்களாய்த் தமிழகத்தில் சேர சோழ பாண்டியர் என்ற அரசர்கள் மட்டுமே இருந்துவந்தனர். இதன் பயனாகவே அவர்கள் ஒரு தொகைப்பட மூவேந்தர்கள் என்று அழைக்கப்பட்டனர். ஆயினும் தமிழகத்திலே மிகப் பரந்த பகுதிகளை ஆண்ட பல்வேறு வேளிரும் குடிமன்னரும் இருந்தனர். அவர்கள் பெரும்பாலும் மூவரசருள் யாரேனும் ஒருவருக்குக் குடியுரிமைப்பட்டவராகவே விளங்கினர். அவ்வப்போது அவர்களில் சிலர் தங்கள் மேலாட்சியைத் தூக்கி எறிந்துவிட்டுத் தனியுரிமையில் மன்னராக முயன்றதுண்டு. ஆனால் அவர்கள் மிக விரைவில் கீழடக்கப்பட்டார்கள்.

குடி மன்னருள் முதலாவதாகக் கூறக் கூடியவன் திரையன். அவன் தலைநகரம் காஞ்சிபுரம். அவன் திரையர் அதாவது கடலரசர் குடி சார்ந்தவன். இம் மரபையே சோழரும் தங்கள் குடிமரபாகக் கொண்டிருந்தனர். புகழ்பெற்ற கரிகாலசோழன் சிறுவனாயிருந்த காலத்தில், காஞ்சித் திரையன் சோழ அரசையே கைப்பற்றி அதன்மீது நீண்டநாள் ஆட்சி செய்தான். திரையனைப் புகழ்ந்து பாடப்பெற்ற பெரும்பாணாற்றுப்படையின் மூலம் இவ்வரசன் பல்வேல் திரையன் என்ற பட்டத்தையும் தொண்டைமான் என்ற பட்டத்தையும் தாங்கியிருந்தா

1. பெரும்பாணாற்றுப்படை.

றிக்கொண்டிருந்தால், அவன் சோழ அரசுரிமையில் தொடர்ந்து நீடித்துத் தன் மரபினருக்குக அதை விட்டுச் சென்றிருக்க முடியும். ஆனால் அவன் காஞ்சியிலேயே தங்கியிருந்தான். ஆகவே கரிகாலன் தன் முன்னோர்களின் அரசிருக்கையைப் பெறுவதில் தடங்கல் மிகுதி இல்லாது போயிற்று.

சோழருக்கு உட்பட்ட பிற குடிமன்னர் வேங்கடம், மலாடு, மிழலைக்கூற்றம் ஆகியவற்றை ஆண்டனர். வேங்கடத் தலைவர்களுள் புல்லி என்பவன் மாமூலனார்,[1] கல்லில் ஆத்திரையனார்[2] என்ற புலவர்களுடன் சமகாலத்தவன்.

இவ்வேளிர் எப்போதும் தமிழகத்தின் வடஎல்லையடுத்திருந்த வடுகருடன் ஓயாது போரிலீடுபட்டிருந்தனர்.

மலாட்டின் கோமான்களின் மரபுப் பெயர் மலையமான் என்பது. மலையமான் ஆட்சிப் பகுதியில் முக்கிய நகரம் பெண்ணையாற்றின் கரையில் தற்போது திருக்கோயிலூர் என்றழைக்கப்படும் கோவல் ஆகும்.[3] முள்ளூர்மலை என்ற அகலப்பரப்புடைய செழிப்பான மேட்டு நிலப்பகுதி அவன் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. இங்கே குடியேறியிருந்த பல பார்ப்பனர்களுக்கு மலையமான் காரி நிலங்களை மானியமாகக் கொடுத்தான். அவர்களில் பெருந்தொகையினர் அப்பக்கம் வந்து திரண்டு வாழ்ந்த காரணத்தால், தமிழ்க் கவிஞர் அதனை 'ஆரியர் நிரம்பிய புகழ்வாய்ந்த முள்ளூர்' என்று குறித்தனர்.[4] பார்ப்பனப் பாடகர்களுக்கு வள்ளன்மையுடன் வழங்கிய காரியைப் பார்ப்பனக் கவிஞர் கபிலர் கீழ்வருமாறு புகழ்ந்து பாடியுள்ளார்.

"வீரக்கழலணிந்த காரி! உன் நாடு மூத்தி பேணும் பார்ப்பனருக்குரியது. அதைக் கடல் கொள்ள முடியாது.

1. அகம். 294, 310, 358, 2. புறம் 175, 389.
3. அகம் 35 4. 'ஆரியர் துவன்றிய பேரிசைமுள்ளூர்'.



எதிரி கைப்பற்ற முடியாது. மூவரசருள் ஒருவர் குடி என்றவகையில் அவர்கள் உனக்குத் தரும் பரிசுகளையெல்லாம் நீ உன் குடிபுகழும் பாணர்களுக்குக் கொடுத்துவிடுகிறாய். வடமீன் போன்ற கற்புறுதியுடைய உன் துணைவி தவிர, வேறு உன் உடைமை என நீ எதுவும் வைத்துக்கொள்ளவில்லை. ஆயினும் நீ குறைவற்ற இன்பமுடையவனாய் இருக்கிறாய்."[1]

இன்னொரு கவிஞர் கீழ்வரும் பாடல்களால் அவர் ஆதரவு கோரினார் :

"எதிரிகளின் யானைகளுடைய நெற்றிகளை அணிசெய்த பொற்படாங்களின் தகடுகளைப் பறித்து அவற்றால் பொன்னாலான தாமரைப் பூக்கள் புனைந்து பாணர்களின் தலையில் சூட்டியவன் வீரமரபில் வந்தவனே! அடர்ந்த காடுகளினூடாக அருவிகள் செவிகளைத் துளைக்கும் ஆரவாரத்துடன் விழும் முள்ளூர் மலையின் வீறுடைக் கோமானே!

"உன்னையும் உன் குடிமரபையும் பாடி உன் பெயரை இறவாப் பெயராக்கியுள்ள அறிவார்ந்த பார்ப்பனனை விட (கபிலனைவிட) அறிவிற் சிறந்தவன் உலகில் இல்லை. அவன் நாட்டின் சிறப்புக்குப்பின் மற்றப் பாணர் உன்னைப் பாடுவதற்கு வழியற்றவராய் விட்டார்கள்.

"வானவன் (சேரன்) கரைக்குத் தங்கம் சுமந்துவரும் கப்பல்கள் உலவும் மேலைக் கடலிலே வேறு எந்த மரக்கலமும் செல்லமுடியாது. அதுபோல (கபிலர் பாடிய) உன்னைப் பாடவகையறியாது திகைக்கின்றோம்.

"யானைகளுடனும் இடியென முழங்கும் முரசங்களுடனும் போர் செய்யவந்த மாற்றரசர்களைச் சிதறடித்த பெண்ணைத் தீரத்தின் காவல! வறுமையால் உந்தப்பட்டு உன் புகழால் ஈர்க்கப்பட்டு உன் அருள்நாடி வருகின்றோம்."[2]

1. புறம் 122. 2. புறம் 126.

காரி கொல்லிமலைத் தலைவன் ஓரியுடன் போருடற்றினான். அவனைப் போரில் கொன்று, கொல்லிமலையை அதன் நேரிய உரிமையாளனான சேரனுக்கே தந்தான்.[1] மற்ற வேளிர்களை வென்ற வெற்றிகளால் எக்களிப்புற்று அவன் தனியுரிமையுடன் அரசாள எண்ணி முடியணிந்து கொண்டதாகத் தெரிகிறது இதனாலேயே அவன் 'திருமுடிக்காரி' அதாவது முடியேற்ற காரி என்றழைக்கப் பட்டான்.

முடியேற்ற சில நாட்களுள் அவன் தலைக்கனத்தை அடக்க எண்ணிய சோழ அரசன் ஒரு பெரும்படையுடன் மலாட்டின்மீது படையெடுத்து வெங்குருதிப் போரொன்றில் காரியை முறியடித்துக்கொன்றான்.

சோழன் காரியின் புதல்வர்களைக் கொன்று மலையமான் குடிமரபை அழித்துவிட எண்ணியிருந்தான். ஆனால் கோவூர் கிழார் என்ற புலவரின் இடையீட்டினால் அவர்கள் உயிர்கள் காப்பாற்றப்பட்டன.[2]

இங்ஙனம் மாள்விலிருந்து காப்பாற்றப்பெற்ற காரியின் புதல்வன் கண்ணன் தன் வாழ்வில் சோழ அரசனுக்குச்செய்த கைம்மாறு சிறிதன்று. ஏனெனில், சில ஆண்டுகளுக்குள்ளேயே சோழன் எதிரிகளால் மிகவும் நெருக்குண்டு தலைநகரை விட்டோடி அணுகமுடியா உயரமுடைய முள்ளூர் மலையில், தன் குடிமன்னன் கண்ணன் ஆட்சிப் பகுதியிலேயே அடைக்கலம் புகவேண்டி வந்தது.

தந்தையைப்போலவே வீரஞ்செறிந்த கண்ணன் மன்னர் ஆதரவாளரின் உளச்சோர்வகற்றிக் கலைந்த படைகளையும் திரட்டினான். எதிரிகளை மீட்டும் எதிர்த்து முறியடித்துச் சோழன் வலிமையை மறுபடியும் நிலைநாட்டினான். இந்நன்றி மறவாது சோழமன்னன் கண்ணனையே தன் அமைச்சனாக்கி அவனுக்குச் சோழிய ஏனாதி என்ற உயர்பட்டம் வழங்கினான்.[3]

1. அகம் 208. 2. புறம் 46. 3. புறம் 176.



மிழலைக் கூற்றத்தைச்சேர்ந்த புகழ்சான்ற தலைவன் மாவேள் எவ்வி. அவன் வேளாளர் மரபினன். அவன் குடிமரபு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட அந் நாளில்கூடப் பழமை சான்றது என்று கருதப் பட்டது.[1] அவன் ஆட்சிப் பகுதி காவிரியாற்றின் தென் பகுதியிலிருந்தது. அது நெல்லும் கரும்பும் விரிவாகப் பயிராகிய வளமிக்க கழனிகள் நிரம்பிய நாடு.

அவன் வள்ளன்மையின் பயனில் பங்குபெற்ற ஒரு புலவர் அவனைப்பற்றி இவ்வாறு கூறுகிறார்.

"அவன் மாளிகை அடையாத வாயில் உடையது. விருந்தினர் பலரோடன்றி அவன் என்றும் உணவுண்ண அமர்ந்ததில்லை."[2]

"அவன் நாட்டை ஆலங்கானம் வென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் படைத்தலைவர்களுள் ஒருவனான அதுகை படையெடுத்தான். எவ்வி தன் படைகளின் தலைமையில் வீரமாகப் போர்செய்து, போரில் பெற்ற புண்களால் மாண்டான்.[3]

எவ்வியின் உறவினனான வேள்பாரி பறம்பு என்ற ஒரு சிறு நிலப்பகுதியின் தலைவன். ஆனால் புலவர்களுக்கு ஆதரவளித்த மாபெரும் புரவலன் என்ற முறையில் தமிழ் மொழியுள்ளளவும் அவன் பெயர் தமிழர் நினைவில் மங்காமல் நிலைபெறத்தக்கது. எவ்வியின் வீழ்ச்சிக்குப்பின் பாரி உயர்ந்த பறம்பு மலையையும் அதனைச் சூழ்ந்த நிலங்களையும் கைக்கொண்டு மூவரசர்களில் எவரையும் மேலாளாக ஏற்காமல் தனியாட்சியாளனாக நடக்கத் தொடங்கினான்.

அவன் தங்குதடையற்று அருஞ்செயல் வேட்டத்தில் முனைந்த வீரமறவன். அதே சமயம் கவலையற்ற இன்ப வாழ்வினன். தூய உள்ளமும் வள்ளன்மையுமுடையவன். கவிதையில் அவன் ஆர்வம் பெரிதாயிருந்தது. நாடோடி

1. புறம் 202. 2. புறம் 324. 3. புறம் 233.

யாக வந்த ஒவ்வொரு பாணனும் அவன் அரண்மனையில் அன்புடன் ஆதரவு பெற்று விருந்தளிக்கப்பெற்றுன்.

அஞ்சா நெஞ்சம், வள்ளன்மை, எந்த இடரிலும் கலங்காது மகிழ்ந்து நிற்கும் வீறுவகை—கவிஞர்கள் தம் பாட்டுடைத் தலைவனுக்கு இருப்பதாகப் புகழ்ந்து பாடும் பண்புகள் ஒன்று குறையாமல் அவனிடம் இணைந்திருப்பதை அவர்கள் கண்டார்கள். பாரியின் இப்பண்புகளைக் கவிதை மொழிகளில் புகழ்ந்தும் அவன் கொடைத் திறத்தை வியந்து பாராட்டியும் சேர சோழ பாண்டியர் அவைக்களங்களிலேயே புலவர்கள் பாடினர். இது மூவரசர் பொருமையைக் கிளறிற்று. அவர்கள் பறம்பு மலையை முற்றுகையிடத் தம் படைகளை அனுப்பினார்கள்.

பாரியின் துணையாட்களுக்கு மலைக்கணவாய்களின் மேடுபள்ளங்கள் யாவும் நன்கு தெரிந்திருந்தன. அவற்றை அவர்கள் திறம்படக் காத்து வந்தார்கள். போரில் இரு திறங்களின் ஏற்றத்தாழ்வு பெரிதாயிருந்தாலும் சில நாட்கள் பாரி படைக்கல வாய்ப்பிலும் தொகையிலும் மிகவும் மேம்பட்ட எதிரிகளைத் தன் தனி வீரத்தால் காத்து நின்றுன். ஆனால் இறுதியில் எதிரிகள் படிப்படியாக மலைமீது போரிட்டு முன்னேறி, பாரியை முறியடித்துக் கொன்றனர்.[1]

பாரியின் கெழுதகை நண்பரான கபிலர் மூவரசர் படைகளும் பறம்பை முற்றுகையிட்ட சமயம் கீழ்வரும் பாடல்களைப் பாடினார்.

"மூவரசரும் தம் ஒன்றுபட்ட படைகளுடன் முற்றுகையிட்டாலும், பறம்பு மலையை வெல்வது அரிது. வளமிக்க பறம்பு நாட்டின் ஊர்கள் முந்நூறு உண்டு. முந்நூறும் இப்போது புலவர்களுக்கு உரியன. நானும் பாரியும்தான் இங்கே இருக்கிறோம். எங்கள் பறம்பு மலையும் இதோ இருக்கிறது. பாணராக எங்களைப் பாட வருவீரானால், வாருங்கள்."[2]

1. புறம் 105—120 2. புறம் 110.



"பாரிக்குரிய பறம்பை வெல்வது எளிதென்று எண்ணுகிறீர்கள்? முழங்கும் முரசுடைய மூவரசரும் முற்றுகையிட்டாலும், அக்காலத்திலும் அது உழவின்றியே நன்கு மாவளங்கள் தரும். முதலது மெல்லிலையுடைய மூங்கில் தரும் அரிசி. இரண்டாவது பலாமரங்கள் தரும் இனிய கனிகள். மூன்றுவது வள்ளிக்கொழுங்கொடிகள் தரும் இனிய கிழங்குகள். நான்காவது தேன் கூடுகளின் மீது மந்திகள் தாவுவதனால் குன்றுகளில் வழிந்தோடும் தேன்.

"வானளாவ வளர்ந்தகன்றது பறம்புமலை உச்சி: அதிலுள்ள நறுநீர்ச் சுனைகளோ வானத்து மீன்கள் போல மிகப்பல. ஒவ்வொரு பண்ணையிலும் ஒரு தேரையும், ஒவ்வொரு மரத்தருகிலும் ஒரு யானையையும் நீங்கள் காவல் வைத்தாலும், உங்கள் வீரரால் அதை முற்றுகையிட முடியாது. அவர்கள் வாள்கள் அதன் வழியாகப் பாதை உண்டுபண்ணி முன்னேறவும் இயலாது.

"மலையைக் கைப்பற்றும் வகையை நான் அறிவேன். சிறிய யாழின் நரம்புகளை உளர்ந்து இன்னிசையெழுப்பி, உங்கள் பெண்டிருடன் ஆடிப்பாடி வருவீரானல், அவன் உங்களுக்குத் தன் நிலங்கள் யாவற்றையும் மலையையும் தருவான்."[1]

பாரியின் வீரமிக்க உறவினர்களிலே அவன் பாதுகாப்பிலேயே ஒவ்வொருவரும் வீழ்ந்துபட்டனர். அவன் முறையற்ற மடிவுக்கு வருந்த அவன் இரு புதல்வியர்களே மீந்தனர். அவன் செல்வத்தையே தம் செல்வமாகக் கொண்டு வாழ்ந்த பாணர் குலம் இறந்துபட்ட தம் தலைவனுக்காக வாய்விட்டரற்றிற்று. துணையற்றுத் தவித்த இரு புதல்வியர் கண்ணீருடன் அவர்கள் கண்ணீர் கலந்தது.

பாரியின் அன்புக்குரிய பாணர் கபிலர் பாரியின் புதல்வியர்களைப் பேணும் பொறுப்பை மேற்கொண்டார்.

1. புறம் 109.

பறம்பைவிட்டுப் பிரியும் சமயம் அவர் அம்மலையை நோக்கிக் கீழ்வருமாறு புலம்பினர்.

"மாண்புமிக்க பறம்பே! நீ ஒருகால் எங்கள் அன்புக்குரிய பொருளாக இருந்ததுண்டு. அப்போது மதுக்குடங்கள் திறந்திருந்தன. ஆடுகள் கொல்லப்பட்டன. நாங்கள் விரும்புமளவு உண்ணும்படி கறியுடன் சமைத்த சோறு வட்டிக்கப்பட்டது. இப்போது பாரி இறந்துவிட்டதனால், துணையற்றவராய், துயருற்றவராய், கண்களிலிருந்து நீர் அருவியாக ஒழுக, நாங்கள் உன்னைவிட்டு விடைகொண்டு செல்கிறோம். நறுங்கூந்தலுடன் வளையணிந்த கையினரான பாரியின் புதல்வியருக்கேற்ற கணவரைக் காணுமாறு செல்கின்றோம்."

இவ்வாறு அரற்றியவண்ணம் கபிலர் பெண்களுடன் தமிழகத்திலுள்ள வேளிர்களுள் விச்சிக்கோ, இருங்கோவேள் ஆகிய இருவரையும் முதலில் அணுகினர் இருவரும் அவர்களை மணந்துகொள்ள மறுத்தபின் அவர் அவர்களைப் பார்ப்பனர்களுக்கே கொடுத்தார்.[1]

செய்யாற்றுத் தீரத்தில் செங்கண்மாவின் கோமானை நன்னன் சோழ அரசின் இன்னொரு பெயர்பெற்ற தலைவன். பெருங்கௌசிகனர் என்ற புலவர் அவனைப் புகழ்ந்து மலைபடுகடாம் என்ற பாடலைப் பாடியுள்ளார். இப்பாடலிலிருந்து அவன் ஆட்சிப் பகுதியில் நவிரம் என்ற மலை உச்சிமீது காரியுண்டிக் கடவுள் என வழங்கிய சிவபெருமானின் கோயில் ஒன்று இருந்ததாகத் தெரிகிறது.[2]

பாண்டிய அரசர் மேலுரிமை ஏற்ற முக்கியமான வேளிர் ஆய், பொருநன், பழையன்மாறன் ஆகியவர்களே.

இவர்களில் மாவேள் ஆய் என்பவன் வேளாளர் மரபினன், பொதியமலைக்கும் அதனைச் சூழ்ந்த நிலங்களுக்கும் உரியவன். அவன் ஆட்சிப் பகுதியின் தலைநகர் ஆய்குடி.[3] ஆய்குடியை ஆண்டவர்களுள் ஒருவனை ஆய்

1. புறம் 117    2. மலைபடுகடாம்.    3. புறம் 127-132.



அண்டிரன் ஒருகால் கொங்கர்களை முறியடித்து அவர்களை மேலைக்கடலுக்குத் துரத்தியதாகத் தெரியவருகிறது.[1] ஆய் அண்டிரனின் பின்னுரிமையாளரில் ஒருவனை திதியன் பாண்டியன் நெடுஞ்செழியனை எதிர்த்த கூட்டில் ஒருவனைச் சேர்த்து ஆலங்கானப் போரில் முறியடிக்கப்பட்டான்.[2]

பொருநன் என்பது நாஞ்சில் நாட்டு வேளிரின் குடிப்பெயர். இது பொதியமலையின் மேற்குப்புறத்திலுள்ளது.[3] இப்பகுதி இன்றும் நாஞ்சில் நாடு என்றே அழைக்கப்படுகிறது. அது தற்காலத் திருவாங்கூர் அரசின் ஒரு பகுதியாய் உள்ளது.

மோகூர்த் தலைவன் பழையன் மாறன் பண்டை மாறர் குடியின் தலைவன். அவர்கள் பொதியமலை யருகில் குடியேறியவர்கள். பாண்டிய அரசர் குடியும் இம்மூல மரபுக்குரியதே. பாண்டியன் முதலாம் நெடுஞ்செழியன் ஆட்சியில் பழையன் மாறன் பாண்டிய அரசில் மன்னர்க்கடுத்த உயர்மதிப் புடையவனு யிருந்தான்.[4]

சோழ அரசன் கிள்ளிவளவன் பெரும்படையுடன் மதுரையை முற்றுகையிட்ட சமயம், பழையன் மாறன் விரைநடைக் குதிரைவீரரும், வெஞ்சீற்றமுடைய யானைகளும் அடங்கிய ஒரு பெரும்படையுடன் அவனைத் தாக்கிச் சோழர்படையை முற்றிலும் நிலைகுலையச் செய்தான்.[5]

சேரனுக்கு உட்பட்ட ஒருதலைவனை அவமதித்ததற்காகப் பழையன் மாறனைத் தண்டிக்க எண்ணி, சேர அரசன் செங்குட்டுவன் அவன் ஆட்சிப் பகுதியைப் படையெடுத்துத் தாக்கியதாகக் கூறப்படுகிறது.[6]

அழும்பில், குதிரைமலை, பாலி, தகடூர் ஆகியவற்றின் வேளிர் சேர அரசனுக்கு உட்பட்டவர்கள்.

1. புறம் 130.    2. அகம் 36.    3. புறம் 137-140
4. மதுரைக்காஞ்சி.    5. அகம், 345.
6. சிலப்பதிகாரம், XXVII, 124—126

அழும்பில் வேள் அழும்பில் நகரின் தலைவன். அந் நகரம் பெரிதும் குட்டநாட்டைச் சேர்ந்ததாயிருக்க வேண்டும். பாண்டியன் முதலாம் நெடுஞ்செழியன் சேர நாட்டைப் படையெடுத்தபோது, அழும்பில்வேளை எதிர்த் துத்தாக்கி முறியடித்து அவன் ஆட்சிப் பகுதி முழுவதை யும் பாண்டிய அரசுடன் சேர்த்துக்கொண்டான்.[1]

வல்லமைமிக்க அவ்வரசனுட்சிக்குப்பின் அழும்பில் வேள் அந்நிலப் பகுதியை மீட்டுக்கொண்டான் என்று தெரிகிறது. சேரன் செங்குட்டுவன் அரசவைப் பெரு மக்களில் அவன் மீட்டும் தலைமையிடம் வகிக்கக்காண் கிறோம்.[2]

குதிரைமலைத் தலைவனை பிட்டன்கொற்றன் சேரர் படைத் தலைவனுயிருந்தான்.[3]

வேண்மான் பாலி வேளிரின் குடிப்பெயர். பாலி என்பது வைநாட்டுக்கும் வடகிழக்கு மலபாருக்கும் வடக்கே தற்போது குடகு என்றழைக்கப்படும் பகுதி முழுவதும் உள்ளடக்கிய சுரங்கத்தொழிற்பகுதியிலுள்ள அரண் அமைப்புடைய ஒரு நகரம்.[4] இம்மண்டலத்தி லுள்ள வேறு இரண்டு நகரங்கள் அரயமும் வியலூரும் ஆகும்.[5]

பாலிவேளான நன்னன் வேள்மான் கொலைபுரிந்த வன் என்ற கொடும்பெயருக்கு ஆளானுன். சிறு குற்றம் செய்த ஒரு சிறு பெண்ணுக்கு, அவள் உறவினர் அவள் எடையின் ஒன்பது மடங்கு தங்கம் மன்னிப்பீடாகத் தருவ தாகக் கூறியும் கேளாமல் அவன் அவளைக் கொலைத் தண்டனைக்கு உட்படுத்தினுன்.[6]

1. மதுரைக்காஞ்சி. 2. சிலப்பதிகாரம்.
3. புறம், 172. 4. அகம் 257-396.
5. அகம், 97; புறம் 202, 203,
6. பெண் கொலை புரிந்த நன்னன்.



இம் மரபுக்குரிய தலைவன் ஒருவன் சேர அரசன் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலால் பெருந்துறையில் நடைபெற்ற போரில் முறியடிக்கப்பட்டான்.[1]

அதியமான் மழவர்குடித் தலைவன். அவன் இன்றைய சேலம் மாவட்டத்திலுள்ள தர்மபுரி என்னும் தகடூர் ஆண்டவன்.[1] அவன் முன்னேர்கள் தென்னுட்டில் கரும்புப் பயிரைக் கொண்டு வந்தார்கள்.[3] சேர அரசன் பெருஞ்சேரலிரும்பொறையின் ஆட்சிக் காலத்தில் அதிய மான் குடித்தலைவன் நெடுமான் அஞ்சி என்பவன். அவன் மலாட்டின் மீது படையெடுத்து மலையமான் தலைநகரான கோவலூரைச் சூறையாடினுன்.[4] இத்தறுவாயில் பரணர் என்னும் புலவர் அவன் வீரப்புகழ் பாடினுர்.

பேரவாவும் வீரமும் வாய்ந்த தலைவனுதலால், அவன் தன் ஆட்சிப் பகுதியை விரிவுபடுத்த விரும்பினுன். குதிரைமலை மேலிருந்து கண்டால் கண்ணுக்குத் தெரிகிற அம்மலை சூழ்ந்த நாடு முழுவதும் அவனுக்குத்தரச் சேர அரசன் முன்வரினும், அவன் அமையாது மேலும் கோரி னுன். இதனுல் போர் மூண்டது. சேர அரசன் படை யுடன் அவனை அடக்கப் புறப்பட்டான். தகடூர் முற் றுகையின்போது நெடுமான் அஞ்சி படுபுண்பட்டு விரைவில் மாண்டான். சேர அரசன் பெருஞ்சேரலிரும் பொறை ஆட்சியை விரித்துரைக்குமிடத்தில் இம் முற் றுகை பற்றிய விவரங்கள் தரப்பட்டுள்ளன.[5]

அதியமான் அவையில் அவன் பேரன்புக்கும், மதிப் புக்குமுரிய புலவராயிருந்த அவ்வையார் அவனையும் அவன் வீரரையும் பற்றி அண்டையயலிலிருந்த தலைவர் கள் கொண்டிருந்த அச்சம் குறித்துக் கீழ்வரும் பாடலில் விரித்துரைத்துள்ளார்.

"எதிரிகளின் கோட்டைகளைத் தாக்கி முனைமழுங்கிய தந்தங்களையுடைய உன் யானைப்படைகளைக் கண்டவர்கள்

1. அகம். 198. 2. புறம். 230. 3. புறம் 99.
4. புறம் 99. 5. தகடூர் யாத்திரை.

தங்கள் கோட்டை வாயில் கதவுகளைப் பிணிக்கும் வல் லிரும்புக் கம்பிகளைப் புதுப்பிக்கின்றனர். காலடியில் துவைத்தழித்த எதிரிகளின் குருதி தோய்ந்த குளம்புகளையுடைய உன் குதிரைப் படைகளைக் கண்டோர் தங்கள் கோட்டை வாயில்களுக்குத் திண்ணிய முள்மரக் கட்டைகளால் வாயில் வழியை அடைக்கப்பார்க்கின்றனர். வாள்புண்ஏற்ற தழும்புகள் பல தாங்கிய உடல்களையுடைய உன் கொடுஞ்செயல் வீரர்களைக்கண்டோரெல்லாம் தம் அம்புத்தூணியிலுள்ள அம்புகளை வீணாக்காது பேணுகின்றனர்.

ஆனால் நீயோ, தம் கோட்டைவாயிலின் உள்ளே உன் படைகளைத் தடுத்து நிறுத்துவதற்காக உன் எதிரிகள் அதன்முன் எரிக்கும் ஐயவியின் நச்சுப்புகையைப்பொருட்படுத்தாமல் முன்னேறிக் கூற்றுவன்போல அவர்களைக் கைப்பற்றி மாய்க்கிறாய்.

"அந்தோ, அலையாடும் கதிர்மணிகள் நிறைந்த வயல்களையுடைய உன் எதிரியின் நிலங்களை இனிப் பாதுகாப்பவர் யார்?"

1. புறம் 98.

# 9. சமூக வாழ்வு

மூவரசர்களையும் அவர்களுக்குக் கீழ் உள்ள வேளிர்களையும் பற்றிய மேற்கண்ட வரலாற்றிலிருந்து அவர்கள் அடிக்கடி போரிட்டு வந்தார்களென்றும், அவர்கள் குடிகள் போர்களின் நடுவே, போர் முழக்கங்களிடையே தான் வாழ்ந்துவந்தனர் என்றும் காணலாம். இத்தகைய நிலையில் அமைதிகாலக் கலைகள் எப்படித் தழைக்கமுடியும் என்று கேட்கவும் தோன்றும். இதற்கு விடை எளிது. படைத்துறைப் பயிற்சிபெற்ற வீரர்மட்டுமே போரிலீடுபட்டனர். மற்ற மக்கள் மதில்நகர்களில் வாழ்ந்து, தொல்லையின்றித் தத்தம் தொழில்களை நடத்தினர்.

தலைநகர்களிலிருந்து தொலைவிலிருந்த சிற்றூர்களில் வாழ்ந்த ஏழைமக்கள்தாம் அடிக்கடி அயலரசர் தாக்குதலுக்கு இலக்காகிக் கடும் துன்பங்களுக்கு ஆளாகி வந்தார்கள். அவர்கள் கன்று காலிகள் கொண்டேகப்பட்டன. அவர்கள் வீடுகள் எரியூட்டப்பட்டன. சில சமயம் அவர்கள் தம் ஊர்களிலிருந்து வெளியே துரத்தப்பட்டோ, மிகச் சிறிதளவு எதிர்ப்புக்காட்டினால்கூடக் கொல்லப்பட்டோ அவதியுற்றனர். ஆனால் மதுரை, கரூர், காவிரிப்பட்டினம் போன்ற பெரிய நகர்களிலுள்ள பெருந்தொகையான மக்கள் போரின் அட்டூழியங்களிலிருந்து கிட்டத்தட்ட முழுவிடுதலை பெற்றே வாழ்ந்தனர்.

வலிமையான அரண்காவல் வாய்ந்த முக்கிய நகரங்களில் பலவற்றின் மக்களும் இதுபோலவே எதிரிபடைகளது வல்லாட்சியின் தீய விளைவுகளிலிருந்து பெரிதும் பாதுகாப்படைந்திருந்தனர். கலைத் தொழிலாளர்களுக்கும் பொது மக்களுக்கும் நலம் தரும் வாணிகமும் கைத்தொழில்

களும் பெரிதும் இத்தகைய அரண் காவல் வாய்ந்த நகர்களிலேயே நடைபெற்றன.

வாணிகரின் சாத்துக்கள் நகருக்கு நகர் படைவீரரின் பாதுகாப்புடன் பயணம் செய்தன. உள்நாட்டிலுள்ள முக்கிய வாணிகக்களங்கள் மன்னன் படை வீரர்களால் காவல் செய்யப்பட்டு வந்தன. அரசபாதைகளில் சுங்க வரிகள் பிரிக்கப்பட்டன.

ஆட்சிமுறை வன் முடியாட்சியாய் இல்லை. பேரளவு குடியாட்சிப்பண்பு அமைந்திருந்தது. இதுவும் பொது நலத்துக்குப் பெரிதும் உகந்ததாயிருந்தது.

அரசியலின் தலைவன் மரபுரிமையுடைய ஓர் அரசனே. ஆனால் அவன் ஆற்றல் ஐந்து குழுக்களின் ஆற்றலால் வரையறுக்கப்பட்டிருந்தது. இவையே ஐம்பெருங் குழாங்கள் எனப்பட்டன.[1] அக்குழுக்கள் முறையே குடிகள், குருமார், மருத்துவர், கணிகள் அல்லது குறிகாரர், அமைச்சர் ஆகியோரின் பேராட்கள் அடங்கியவையாயிருந்தன. இப்பேராட்கள்மன்றம் குடிமக்களின் உரிமைகளையும் காப்புரிமைகளையும் பாதுகாத்து வந்தது.

குருமார் எல்லா வினைமுறைகளையும் இயக்கினர். மருத்துவர் மன்னன் உடல்நிலையையும் மக்கள் உடல்நலங்களையும் பாதிக்கும் எல்லாச் செய்திகளையும் கவனித்து வந்தனர். கணிகள் பொதுவினை முறைகளுக்குரிய காலங்களை வரையறை செய்ததுடன், முக்கிய செய்திகளை முன்னறிவித்தனர். அமைச்சர்கள் வரி வருவாய்ப் பிரிவையும் செலவையும் அறமுறையையும் கண்காணித்தனர்.[2]

இக் குழாங்களில் ஒவ்வொன்றுக்கும் தலைநகரில் தனித்தனி இடங்கள் வரையறுக்கப் பட்டிருந்தன.[3] முக்கிய நிகழ்ச்சிகளின்போதும், அரசன் அரசிருக்கையில் அமர்ந்து கொலுமன்றம் கூடும் சமயங்களிலும், மன்னுரிமை ஊர்வலங்களிலும் அவர்கள் கலந்துகொண்டனர்.

1 சிலப். III 126; V 157; XXVI 38; மணிமேகலை, I, 17.

2 சிலப்பதிகாரம் அரும்பதவுரை, காதை V அடி 157.

3 மதுரைக் காஞ்சி.



இந்த ஐம்பெரும் குழாங்களைப்பற்றி இன்னும் விவரமான செய்திகள் அறிய நாம் விரும்புவது இயல்பு. ஆனால் நமக்குக் கிடைத்துள்ள பண்டை ஏடுகளில் இவற்றின் மிகுதியான தகவல்கள் அகப்படவில்லை.

அரசியல் ஆட்சி உரிமைகள் யாவும் அரசனிடமும் ஐம்பெருங் குழாங்களிடமுமே பொறுப்பாக விடப்பட்டிருந்தன.

சேர சோழ பாண்டியராகிய மூன்று அரசர்களும் ஒருவரை ஒருவர் சாராத தனியரசரானாலும், மூவரசுகளிலும் இதே முறைதான் கையாளப்பட்டதென்பது குறிப்பிடத்தக்க செய்தி ஆகும். ஆகவே மூவரசுகளையும் நிறுவியவர்கள் தென்னாட்டில் வந்து குடியேறுமுன் வாழ்ந்த மூலத் தாயகமாகிய மகதப்பேரரசிலிருந்த முறையையே இங்கும் கொண்டுவந்து பின்பற்றினர் என்று கருத இடமுண்டு.

அரசன் திருமுன்பும் அரச சூழலும் பெரு மதிப்புக்கும் பகட்டாரவாரத்துக்கும் உரியனவாயிருந்தன. பெருந்தொகையான பணிமக்கள் அவனுக்கு ஊழியம் செய்தனர். அவர்களே அடிக்கடி எண்பேராயங்கள் என்றழைக்கப்பட்டனர். அவர்கள் விவரம் வருமாறு:

மணப்பொருளாளர், மாலைக்காரர், அடைப்பைக்காரர், பாக்குப்பணியாளர், கவசக்காரர், ஆடையணி புனைவோர், பந்தமேந்திகள், மெய்காவலர்.

அரசன் மணிகள் பதிக்கப்பெற்றுப் பொன்னாலான முடி அணிந்திருந்தான். கைகளில் பொன் காப்புக்களும் வலது காலில் தங்கக்கழலும், கழுத்தில் முத்து அல்லது மணிமாலையும் அவனால் அணியப்பட்ட அணிமணிகள். முத்துக் கோவைகளில் ஒப்பனை செய்யப்பட்ட சீரிய

குடை ஒன்று, அவன் அரண்மனையில் தவிசிலமர்ந்திருக்கும் சமயத்திலும் அரண்மனைக்கு வெளியே போகுமிடங்களிலும் அவன் தலைக்கு நேராகப் பிடிக்கப்பட்டன.

பொதுவாக அரசன் யானைமீதோ, குதிரைமீதோ, நாலு குதிரைகள் பூட்டிய தேரின்மீதோ இவர்ந்து சென்றான். காலையிலும் மாலையிலும் அரண்மனை வாயிலில் பெரிய முரசங்கள் முழங்கின. நாழிகை வட்டில்களால் கணக்கிடப்பட்ட ஒவ்வொரு நாழிகை முடிவையும் அறிவிப்பதற்கென்று அரண்மனையில் நாழிகைவாணர் அமர்வு பெற்றிருந்தனர்.[1]

அரசிக்கும் அவள் பணிப்பெண்டிருக்குமாக அரண்மனையில் ஒரு தனிப்பகுதி ஒதுக்கப்பட்டிருந்தது. அரசுரிமையை அவள் தன் வழியுரிமையாகக் கொண்டிருந்தாலன்றி அவள் முடி அணிவதில்லை. எல்லா மன்னுரிமைப் பொது அமயங்களிலும் அரசனுடன் அவள் வீற்றிருந்தாள். ஆனால் அரண்மனையில் அரசியின் உரிமையிடங்கள் ஆடவர் புகமுடியாதவையாயிருந்தன. [2]பெருங்குடிப் பெண்டிரன்றிக் குறள்களும் கூன்களும் அலிகளும் அவளைச் சூழ்ந்து பணிசெய்தனர்.[3]

செங்குட்டுவன் அரசி வேண்மாள் நிலவெறித்த ஓர் இரவில் அரண்மனை நிலாமாடத்தில் தன் கணவனைக் காணச்சென்ற சமயம் அவளைச் சூழ்ந்துசென்ற பணிப் பெண்டிர் சிலப்பதிகாரத்தில் கீழ்வருமாறு வருணிக்கப்படுகின்றனர்.[4]

"முழவும் யாழும் இயக்கிக்கொண்டு சில பெண்கள் வந்தனர். கூனும் குறளும் நானம் சந்தனம் ஆகியவை தாங்கி வந்தனர். பேடியர் பெண்கள் உடையில் நறுமணச் சாந்தும் பொடியும் கொணர்ந்தனர். சிலர் கையில் நறுமண நெய்களும் நறும்புகையும் மாலைகளும் மெல்லணை

1 சிலப்பதிகாரம், V 49; மதுரைக்காஞ்சி, 670—671.
2 நெடுநல்வாடை. 3 சிலப்பதிகாரம், XX, 17.
4 சிலப்பதிகாரம், XXVIII, அடிகள்: 53-64.



களும் ஏந்தினர். சிலர் நிலைக்கண்ணாடிகளும் ஆடைகளும் அணிமணிகளும் சுமந்து வந்தனர். மேலும் சிலர் விளக்கை ஏந்தியவராய், அவ்விளக்கின் ஒளியில் தாங்கள் அணிந்த வளைகள் மின்னும்படி நடந்துவந்து நீடு வாழ்க அரசி' என்று வாழ்த்தெடுத்தனர்."

அரசியலின் முக்கிய பணியாளர் தலைமை குரு, தலைமை கணி, அமைச்சர், படைத்தலைவர் ஆகியோர்.[1] முறைநடுவர், தண்டலாளர் கடமைகளைச் செய்யத் தனிப் பணியாளர் இருந்தனர். ஆனால் எல்லா உரிமை வழக்குகளிலும் குற்றவழக்குகளிலும் அரசனே கடைசி நிலைக்குரிய உச்ச உயர்நடுவராயிருந்தான். நடுவராயமர்ந்திருந்தவர் முறைமன்றத்திலுள்ள மற்ற எல்லாப்பணியாளரிடமிருந்தும் தனித்துவேறு பிரித்தறியும் வகையில் தனிப்பட்ட தலையணி அணிந்திருந்தார்.[2]

வழக்காடிகளுக்கு இலவசமாகவே முறை வழங்கப்பட்டது. ஆயினும் தண்டனைகள் மிகக் கடுமையாக இருந்தன. குற்றமும் இதனால் அருநிகழ்வாகவே இருந்தது. கையில் தொண்டியுடன் பிடிபட்ட திருடன் கொலைத் தண்டனை தரப்பட்டான்.[3] தகாப் புணர்ச்சிச் செயலில் பிடிபட்டவன் கொலை செய்யப்பட்டான்.[4] அவ்வெண்ணத்துடன் மற்றொருவன் வீட்டில் நுழைந்தவன் கால்கள் வெட்டப்பட்டன.[5] குருட்டு நம்பிக்கைகள் சார்ந்த அச்சமே சில சமயம் நீதியின் பெயரால் அரசனைச் செயல்கள் செய்வித்தன. மக்கள் வாழ்வு குறித்த அரசன் ஆணைகள் யானை மீதேறிச் சென்ற பணி முதல்வர்களால் தலைநகரமெங்கும் முரசறைந்து தெரிவிக்கப்பட்டது.[6]

தீர்வை, சுங்கம், நிலவரி ஆகியவையே வரி வருமானத்தில் முக்கிய பகுதிகள். தீர்வைகள் எல்லாக் கடல்

1 சிலப்பதிகாரம், XXVI, அடிகள்: 3-4.
2 மதுரைக்காஞ்சி, அடி, 494.
3 சிலப்பதிகாரம், XX, அடிகள்: 64-65. 4 நாலடியார்.
5 நாலடியார். 6 சிலப்பதிகாரம், XXIII, அடிகள்: 130-131.

துறைமுகங்களிலும் பிரிக்கப்பட்டன. இறக்குமதி செய்யப்பட்ட சரக்குகள் யாவும் அரச சின்னம் தாங்கிய முத்திரை பொறிக்கப்பட்டன. தீர்வை செலுத்தப்பட்ட பின்பே சரக்குகள் வணிகரின் பண்டசாலைகளுக்கு அனுப்பப்பட்டன.[1] சுங்கங்கள் வணிகச் சாத்துக்கள் செல்வதற்குரிய அரச பாதைகளிலும் ஒவ்வொரு அரசின் எல்லைகளிலும் தெண்டப்பட்டன.[2] நிலவரி பணமாகவோ சரக்காகவோ கொடுப்பவனது விருப்பப்படி கொள்ளப்பட்டது.

குடிமன்னரும் வேளிரும் கொடுக்கும் திறை, எல்லைப்புறப் போர் நடவடிக்கையில் பெற்ற கொள்ளை வருவாய், முத்துப்பண்ணைகள், காட்டியானை, காட்டுவளம் ஆகிய அரசர் தனிக் களங்களில் வரும் ஆதாயங்கள் ஆகியவை அரசன் வருவாயில் பெரும்பகுதியாயமைந்தன. நிலவரியில் ஆறில் ஒருபங்கு நேர்மைவாய்ந்த அரசன் பங்காயிருந்தது. அரசியலாரால் வழங்கப்பட்ட தண்ணீருக்கீடாகத் தனிப்பட உழவர்களிடமிருந்து தண்ணீர்வரி பிரிக்கப்பட்டது.

அரசன் அரசியலுக்குமட்டுமன்றிச் சமுதாயத்துக்கும் தலைவனாயிருந்தான். வழக்கமாக அவன் மெய்காவலர் முதலிய பணியாளர்கள் சூழவே சென்றாலும், அந்நிலையிலேயே மக்களுடன் தங்குதடையின்றிப் பழகினான். தலைநகரின் விழாக்களில் அவன் தலைமை வகித்தான். பஞ்சம், பெருநோய் காலங்களில் நோன்புகள், வேள்விகளாற்றுவதிலும் அவன் முதலிடம் தாங்கினான். மக்கள் இன்பதுன்பங்களை அவன் பகிர்ந்தான் — குறைந்த அளவில் அரசவை மரபுகள் அங்ஙனம் பகிரும்படி அவனை வலிந்து கட்டாயப்படுத்தின.

சில அரசரிடம் மக்கள் வழக்கத்துக்கு மிகுதியான பற்றுக் காட்டினர். படையெடுப்பாளர் தங்கள் ஊர்களைக் கைப்பற்றிய விவரங்களில், ஊர் மக்கள் முழுவதுமே தங்கள் வீடு குடிகளை விட்டுவிட்டுத் தம் அரசன் இருந்த

1 பட்டினப்பாலை, அடிகள்: 125-135.
2 பெரும்பாணாற்றுப்படை, அடி 81.



பகுதியிலேயே சென்று குழுமிய செய்திகள் தெரியவருகின்றன.[1] விழாக்காலங்களில், பொது அம்பலங்களிலும் சரி, தனி இல்லங்களிலும் சரி, எங்கும் மக்களால் மன்னன் வெற்றியுடன் நீண்ட வாழ்வும் குறித்து வாழ்த்து வழிபாடு செய்யப்பட்டது.

கோயிலிலிருந்து மீண்ட ஒருநங்கை தன் தோழியிடம் பேசும்போது வழக்கமான இவ்வாழ்த்தைக் கேட்கிறோம். "(எம் அரசன்) ஆதன் வாழ்க, (எம் அரசன்) அவினி வாழ்க என என் தாய் வணங்கினாள். அத்துடன் நானும் ஓசைபடாமல் உள்ளத்துக்குள்ளாக (என் காதலன்) செழுங்கழனியை உடையான் 'விரைந்து ஊர் திரும்புக என்று வழிபட்டேன்" என்று அவள் கூறுகிறாள்.[2]

ஆரியர் பின்பற்றிய பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என்ற நால் வருணப் பாகுபாடு தமிழர்களிடையில் இருந்ததில்லை. திருநூல் அணியப்பெற்றவர்களுக்கெல்லாம் ஆரியர்களால் இருபிறப்பாளர் என்ற சிறப்புப்பெயர் வழங்கப்படுகின்றது. பண்டைத் தமிழிலக்கியத்தில் அது பார்ப்பனரை மட்டுமே குறிக்க வழங்கிற்று. இதிலிருந்து திருநூலணிந்த க்ஷத்திரியரும் வைசியரும் தமிழகத்தில் இருக்கவில்லை என்று அறிகிறோம்.

தூய தனித்தமிழினத்தவரிடையே மிகவும் உயர் மதிப்புக்குரியவர்கள் அறிவர் அல்லது சித்தர்களே. அவர்கள் காலத்தின் மூன்று கூறுகளையும் அதாவது இறந்தகாலம், நிகழ்காலம், வருங்காலம் மூன்றையும் அறிந்தவர்களாகக் கருதப்பட்டனர். அவர்கள் ஒதுங்கிய சமய வாழ்வு வாழ்ந்ததால், பெருநகரங்களுக்கு வெளியிலேயே தங்கியிருந்தனர். பார்ப்பனர் ஆடல் நங்கையருடனும் கூத்தியருடனும் ஊடாடத் தயங்கவில்லை.[3] காதலரிடையே

1 கலித்தொகை, பாட்டு, 78.

2 ஐங்குறுநூறு, பாட்டு, 1-10; கலித்தொகை, பாட்டு, 103, 104, 105, 106.

3 தொல்காப்பியம், III, சூத். 502: கலித்தொகை, பாட்டு, 72, அடிகள்: 17-20; சிலப்பதிகாரம், XIII, அடிகள்: 71-82.

தூதுவராய்ச் செல்லவும் தயங்கவில்லை. ஆனால் அறிவர்கள் இவற்றிலிருந்து முற்றிலும் விலகியிருந்தனர்.[1]

அறிவருக்கடுத்தபடி மதிப்புடையவர் உழவர் அல்லது வேளாளர். அறிவர் துறவிகளே. ஆகவே சமுதாயம் பற்றியமட்டில், இவ் வேளாளரே உச்ச உயர்வகுப்பினரா வர். அவர்களே நாட்டின் உயர்குடிப் பெருமக்கள் அல்லது நிலக்கிழார் மரபினராயிருந்தனர். அவர்கள் வெள்ளாளர் அதாவது வெள்ளத்தை ஆண்டவர்கள் என்றும், காராளர் அல்லது முகிலை ஆண்டவர் என்றும் அழைக்கப் பட்டனர். இப்பட்டங்கள் பெருவெள்ளங்களை அணையிட்டுத் தடுத்து உழவுத் தொழிலுக்காக அதைத் தேக்கிவைப்பதில் அவர்களுக்கிருந்த திறத்தைக் காட்டின.

சேர சோழ பாண்டிய அரசர்களும் தமிழக வேளிரில் பெரும்பாலானவர்களும் இந்த வேளாளர் மரபைச் சேர்ந்தவர்களே. சிறிதளவே நிலமுடைய ஏழை வேளாளர் குடியினர் பொதுவாக 'வீழ்குடி உழவர்' அல்லது வீழ்ச்சியடைந்த வேளாளர் எனப்பட்டனர். மற்ற வேளாளர்கள் செல்வக்குடியினர் என்பதையே இது குறித்திருக்கக் கூடும்[2].

பெரும்புகழ்க் கரிகாலன் அருவாளரை வென்று அவர்கள் நாட்டைத் தன் அரசுடன் சேர்த்துக்கொண்ட போது, அவன் வென்ற நாடுகளைத் தன் வேளாளர் தலைவர்களுக்குப் பகிர்ந்துகொடுத்தான்.[3] இத் தலைவர்களின் வழிவந்தவர் இன்றும் தங்கள் நிலங்களுடன் அரசியலாரின்கீழ்[4] நேரடியான உரிமைபெற்றவராய்ச் சிறுநிலக்கிழாராக வாழ்கின்றனர்.[1] இன்றும் அவர்கள் முதலிகள் அல்லது முதல் வகுப்பினர் என்றே அழைக்கப்படுகின்றனர்.

1 தொல்காப்பியம், III, சூத். 503.

2 சிலப்பதிகாரம், V, அடி 43; புறநானூறு, பாட்டு, 230, அடி 13.

3 தொண்டைமண்டல சதகம்.

4 ஆங்கில முதல் நூல் எழுதப்பட்டது பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில். ஆகவே அரசியலார் என்று தமிழிலிருப்பது அதில் பிரிட்டிஷ் அரசியலார் என்றுள்ளது.



வடுகம் அல்லது தற்காலத்தெலுங்கு நாட்டைவென்ற வேளாளக் குடியினர் வேளமர் என்றழைக்கப்பட்டனர். அங்குள்ள பெருநிலக்கிழார் இன்றும் இன்னும் இவ்வேளமர் வகுப்பினரே.

கன்னட நாட்டில் இவ்வேளாளர் பெள்ளாளமரபை நிறுவிப் பல நூற்றாண்டுகளாக நாடாண்டனர்.

வேளாளர்களுக்குக் கங்ககுலம் அல்லது கங்கவம்சம் என்ற பெயரும் உண்டு. ஏனெனில் அவர்கள் பிளினி, டாலமி ஆகியவர்களால் குறிப்பிடப்பட்ட கங்கைத் தீரத்திலுள்ள வல்லமைவாய்ந்த கங்கரிடே என்ற மாபெருங்குடிமரபிலிருந்து தங்கள் குலமரபை வரன்முறையாகக் கொண்டனர்.

வேளாளர்களே பெரும்பாலும் நிறைந்த மைசூரின் ஒரு பகுதி கி.பி. 10, 11 ஆம் நூற்றாண்டுகளில் கங்கவாடி என்றழைக்கப்பட்டது.

இம்மரபைச் சேர்ந்த மற்றொரு குடிவழி கங்க வம்சம் என்ற பெயருடன் 11, 12 ஆம் நூற்றாண்டுகளில் ஒரிசாவை ஆண்டது.

ஆயர் அல்லது இடையரும், வேட்டுவர் அல்லது வேடரும் உழவருக்கு அடுத்தபடியிலுள்ளவர்கள்.[2] பொற்கொல்லர், கருமான், தச்சர், குயவர் முதலிய கலைத்தொழிலாளர் ஆயர்களுக்கு அடுத்தபடியிலுள்ளவர்கள். அவர்களுக்கு அடுத்தபடியிலுள்ளவர்கள் படையாட்சியர் அல்லது மீன் தொழிலாளரும் புலையர் அல்லது தோட்டிகளும் கடைசிப் படியிலிருந்தார்கள்.

1 செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள செய்யூர், சூணம்பட்டு நிலக்கிழார்கள்.

2 கலித்தொகை, பாட்டு, 105, அடி 7.

உயர்வகுப்பினர் தெருவில் சென்றபோது, தாழ்வகுப்பினர் அவர்களுக்கு வழிவிட்டனர்[1]; பெருமகனைக் கண்ட புலையன் அல்லது தோட்டி வழிபடுபவன்போல இரு கைகளையும் கூப்பித் தலைவணங்கினான்[2].

அடிமைத்தனம் தமிழரிடை இருந்ததில்லை. அப்பழங் காலத்தில் அவர்கள் அடைந்திருந்த உயர் நாகரிகப்படியை இது குறித்துக் காட்டுகிறது.

தமிழர்களிடையேயுள்ள மேற்காட்டிய வகுப்புமுறை மெகஸ்தெனிஸ் கண்டு தீட்டிய பண்டை மகதப்பேரரசிலுள்ள மக்கள் நிலையைப் பெரிதும் ஒத்துள்ளன.

அவர் குறித்துள்ளபடி மக்கள்தொகுதி ஏழு வகுப்புக்களாகப் பிரிவுபட்டிருந்தது. முதல் வகுப்பு அறிவர் வகுப்பே. ஆனால் தொகையில் இவர்கள் மிகமிகக் குறைவானவர்களே. தனிப்பட்ட மனிதர்களால் அவர்கள் வேள்விகளிலும் மற்றத் திருவினைகளிலும் ஈடுபடுத்தப்பட்டார்கள். ஆண்டுத் தொடக்கத்தில் அரசன் அவர்களைத் தன் பேரவைக்கு அழைத்தான். அப்போது அவர்கள் பொதுமக்களுக்கு அந்த ஆண்டின் பஞ்சப்பருவங்கள், மழை, அரசியல்கோளாறுகள் ஆகியவைபற்றிய முன்னறிவுரை நல்கினர்.

இந்த அறிவர்கள் ஆடையற்றவர்களாகவே இருந்தார்கள். குளிர்காலத்தில் அவர்கள் வெயில்காயும்படி வெட்டவெளியிலே தங்கினார்கள். வேனிற்காலத்தில் அவர்கள் புல் வெளிகளிலும் தாழ்நிலங்களிலும் மரங்களினடியில் தங்கினார்கள்.

இரண்டாவது வகுப்பு உழவர் வகுப்பு. அது தன் நேர முழுவதையும் நிலம் பண்படுத்துவதிலேயே செலவிட்டது. அவர்கள்தம் உழைப்பின் நான்கிலொருபங்கை அரசனுக்கு இறையாகத் தந்தனர்.

1 சிலப்பதிகாரம், XVI, 107

2 கலித்தொகை, பாட்டு 55, அடிகள்: 18, 1.



ஆயர்களும் வேடர்களும் மூன்றும் வகுப்பினர். அவர்கள் தங்கள் கால்நடைகளைப் பேணியும் கூடாரங்களில் தங்கியும் நாடோடி வாழ்வு வாழ்ந்தனர். அவர்கள் கால்நடைகளையே வரியாகத் தந்தனர். வயல்களில் விதைத்த பயிர்களை அழிக்கும் பறவைகளையும் விலங்குகளையும் அகற்றி நிலத்தைப் பாதுகாப்பதற்காக அரசனிடமிருந்து அவர்கள் படி நெல் பெற்றனர்.

நான்காம் வகுப்பு தொழில் வகுப்பு. பொருள்கள் வாங்கி விற்றல், கூலிவேலை செய்தல் அவர்கள் வேலை. படைக்கலத் தொழிலாளரும் கவசத்தொழிலாளரும், எல்லாவகைப்பட்ட கலைத்தொழிலாளர்களும் இப் பகுப்பினர்.

போர் வீரர் ஐந்தாம் வகுப்பாயினர். அவர்கள் அரசன் செலவில் வாழ்ந்தனர். அவர்களுக்குப் படைத்துறை வேலைதவிர வேலை இல்லை. அமைதிக்காலங்களில் அவர்கள் தங்கள் நேரத்தைக் குடித்துச் சோம்பித்திரிவதிலேயே கழித்தனர்.

ஆறும் வகுப்பு மேற்பார்வை செய்தது. நாட்டிலும் நகரிலும் நடப்பதை ஒற்றறிந்து அரசனுக்கோ தண்டலாருக்கோ அறிவிப்பது அவர்கள் கடமை.

ஏழாவது வகுப்பு தன்னாட்சியுடைய நகர்களில் பொது ஆட்சிக் காரியங்களில் மன்னன் அல்லது தண்டலாளர்களுக்கு அறிவுரை கூறிய மன்றத்தார் அடங்கியதாயிருந்தது.

நாட்டின் பழக்க வழக்கச் சட்டதிட்டங்கள் வகுப்புக்கு வகுப்பு கலப்புமணத்தைக் கண்டித்தது. எவரும் ஒரு வகுப்பிலிருந்து மற்றொரு வகுப்புக்கு மாறவும் இசைவளிக்கப்படவில்லை. எடுத்துக்காட்டாக, ஓர் உழவன் இடையனாக மாறவோ, அல்லது இடையர் வகுப்பு அல்லது கலைத் தொழில் வகுப்பிலிருந்து பெண்கொள்ளவோ முடியாது.

அறிவர் வகுப்புக்குமட்டும் இச்சட்டதிட்டம் முழு விலக்களித்தது. அவர் எந்த வகுப்பினராகவும் இருக்க

லாம். ஏனெனில் அவர் வாழ்வு எளிதான ஒன்றல்ல. அத்துடன் அவர்களில் மிகச் சிலரே முன்னறிவின் திறம் வாய்க்கப்பெற்றனர்.[1]

பண்டை மகதம்பற்றிய மேற்கூறிய வகுப்புப் பிரிவினை விளக்கத்தில் ஒற்றர்களையும் மேற்பார்வையாளர்களையும் அறிவுரையாளர்களையும் தனி வகுப்புக்களாக மெகஸ்தனிஸ் கருதியது தவறு என்பது தெளிவு. மற்ற வகுப்புக்களெல்லாம் தமிழரிடையிலும் மகதத்திலும் முற்றிலும் இசைகின்றன.

இதிலிருந்து இரு இனங்களுமே மிகத்தொல் பழங் காலத்திலேயே நாகரிகமற்ற நிலையிலிருந்து விலகி நீண்ட காலமாகக் குடிவாழ்வும் நிலையான ஆட்சிமுறையும் உடையவராய் இருந்தனர் என்றும், பல நூற்றாண்டுகளாகப் போரும் முரட்டுப்பூசலும் அவர்களிடையே இல்லாதிருந்தன என்றும் தெரியவருகிறது. அவர்கள் நாகரிகம் ஆரியர் நாகரிகத்தைவிட மிகவும் பழமையானது என்பதில் ஐயமில்லை. ஏனெனில் ஆரியர்களிடையே போர்வீரர் படி குருமார்படிக்கு அடுத்ததாயிருந்தது. நேர்மாறாகத் தமிழரிடையே வேளாளரே சமயகுருமாருக் கடுத்தபடியாயிருந்தனர். போர்வீரர் வகுப்பு அவர்களுக்கு மட்டுமின்றி ஆயர்களுக்கும் உழவுத் தொழிலாளருக்கும் கூடக் கீழ்ப்பட்டிருந்தது.

நாம் குறிப்பிடும் காலத்துக்குக் குறைந்தது ஐந்து அல்லது ஆறு நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே பார்ப்பனர் தமிழகத்தில் குடியேறத் தொடங்கிவிட்டனர். அவர்கள் தமிழர்மீது தங்கள் சாதி வருணமுறையைச் சுமத்த அரும்பாடுபட்டனர்.

நமக்குக் கிட்டியுள்ள மிகப் பழமையான தமிழ் இலக்கணத்தின் ஆசிரியர் தொல்காப்பியர் என்ற ஒரு பார்ப்ப

1 மக்கிரிண்டில்: மகஸ்தனிஸும் அரியனும் விரித்துரைத்த பண்டை இந்தியா: பக். 41-44, 83-86.



னர்.[1] அவர் கி.மு. 1ஆவது அல்லது 2ஆவது நூற்றாண்டுக்குரியவர். அவர் அடிக்கடி அறிவர் அல்லது சித்தர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.[2] ஆனால் சமுதாய வகுப்புக்களைக் குறிக்கும் இயலில் ஆசிரியர் அறிவரைப்பற்றிய பேச்சையே எடுக்கவில்லை. திருநூலணிந்த பார்ப்பனரையே[3] முதல் வகுப்பினராகக் குறிப்பிடுகிறார்.[4]

1 தொல்காப்பியம் III சூத். 75, 193, 503, 510.

2 தொல்காப்பியம் III மரபியல்.

3 மறைமலையடிகள் தொல்காப்பியர் ஆரியர் என்ற கருத்தை மறுத்தார். நூலாசிரியரைப்போல அவர் ஆரியர் என்று கருதுபவர் இன்னும் சிலர் உண்டு. ஆயினும் இக்கருத்து இன்று வலுவிழந்தே வருகிறது. அகத்தியர் தொல்காப்பியர் கதையையின்றி இதற்கு ஆதாரம் இல்லை. அக்கதைக்கோ தொல்காப்பியத்தில் ஒரு சிறிதுகூட ஆதாரம் கிடையாது. ஆயினும் தொல்காப்பியத்தை அடிப்படையாகக் கொண்டு ஆசிரியர் காட்டும் ஆரிய—தமிழினப் பண்பு வேறுபாடுகள் இவ்வடிப்படைத் தவறுதலால் வலிவிழக்கவில்லை. தொல்காப்பியர் கூறும் அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் பிரிவினை சாதி வேறுபாடு அன்று, தொழில் வேறுபாடே. அதுவும், நாட்டின் நடுப்பகுதியாகிய மருதத்திணையை மட்டுமே அது குறித்தது. நாலு பிரிவுகளும் வேளாளர் வகுப்பின் பிரிவுகளேயாகும். ஏனெனில் வேளாளரே மருதநிலக்குடிகள்.

4 தொல்காப்பியர் ஒரு ஆரியப் பார்ப்பனர் என்ற கருத்தைத் தொடர்ந்து எழுந்ததே இந்தக் கருத்தும். திருநூல் அணிதல் முதலான குறியீடுகள் ஆரியப் பார்ப்பனருக்கே உரியன என்ற கருத்து இதனுடன் இணைகிறது. ஆனால் திருநூல் அணிதல் தமிழ்ப் பார்ப்பனர் அல்லது குருமாரிடமிருந்து குருமார் தொழிலை மேற்கொண்ட ஆரியர் கைக்கொண்ட வழக்கம் என்பதில் ஐயமில்லை. ஏனெனில் ஆரியர் இந்தியா வருமுன் நூலும் நூற்றலும் உடையவரல்லர். சிலர் ஆரியர் வரும்போது அதைத் தோலால் அணிந்திருந்தனர் என்றும், அது அவர்கள் வேட்டுவ நிலைக் காலத்தில் அம்புக்கூடுகள் தொங்கவிடுவதற்காக இட்டவாரே என்றும், இன்றும் பூணூலில் மான்தோல் துண்டு இணைப்பது அம்மரபின் சின்னமே என்றுங் கூறுவர்.

இன்றும் பார்ப்பனர் மட்டுமின்றி, கம்மியர் முதலிய கலைத்தொழிலாளரும் திருநூலணிகின்றனர். சிலர் கருதுவதுபோல இது புது வழக்கென்று தோன்றவில்லை. நூலணிதல் நூலறிவின் குறியாதலின், தனித்துறை நூலறிவு இன்றியமையாது வேண்டப்பட்ட தொழில் துறையினர் யாவரும் தொழிற் குழுக்கள் அமைந்த காலையில் அதை மேற்கொண்டனர். தமிழ்ப்

மிகுந்த திறமை நயத்துடன் போர்வீரரை விலக்கி அரசரைமட்டும் அவர் தெய்விக வகுப்பில் சேர்த்துக் கொள்கிறார். சேர சோழ பாண்டியராகிய மூவரசர்மட்டும் ஒரு வகுப்பாக அமையப் போதியவரென்று அவர் கருதினார் போலும்? வாணிகத்தில் வாழ்பவரே மூன்றாம் வகுப்பு என அவர் குறித்தார். ஆயினும் அரசரோ வணிகரோ திருநூல் அணிந்ததாக அவர் குறிக்கவில்லை!

இதன்பின் அவர் வேளாளரைத் தனியாகப் பிரித்து அவர்களுக்கு உழவல்லது தொழிலில்லை என்று வகுக்கிறார். இங்கும் அவர் வேளாளர் சூத்திரர் என்று குறிக்கவில்லை. ஆயினும் பொதுநிலை வேளாளர் சூத்திரராகக் கணிக்கப்படவேண்டியவர்கள் என்ற தொனிபடக் குறிக்கிறார். அதேசமயம் அரசராக அமர்ந்த வேளாளர் க்ஷத்திரியராகக் கருதப்படவேண்டுமென்றும் பிரிக்கிறார்.

தமிழரைத் தங்கள் சாதி வருணமுறைக்குக் கொண்டுவரப் பார்ப்பனர் செய்த முதல் முயற்சி இதுவே. ஆனால், தமிழகத்தில் க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் ஆகிய பிரிவுகள் இல்லாத நிலையில் அவர்கள் வெற்றியடைய முடியவில்லை. ஏனெனில் இன்றளவும் தன்னை க்ஷத்திரியன் என்று கூறிக்கொள்ளும் ஒரு படையாட்சியின் வீட்டில் அல்லது தன்னை வைசிகன் என்று கூறிக்கொள்ளும் ஒரு வணிகன் வீட்டில் வெள்ளாளன் உணவுகொள்ளவோ குடிக்க நீர்பெறவோ செய்வதில்லை.

தொல்காப்பியர் தம் இலக்கணத்தில் ஆயர் அல்லது இடையரைப்பற்றியும், வேடுவர் அல்லது வேடரைப்பற்றியும் குறிப்பிட்டுள்ளார். ஆனால் வகுப்புப் பிரிவுபற்றிய இயலில் அவர் மறவர், வலையர், புலையர் முதலிய வகுப்புகளைப்பற்றிக் கூறவில்லை.[1] ஏனெனில் பார்ப்பனீய சாதி

பார்ப்பனர் ஆகம நூலறிவுகாட்ட அணிந்த அதனையே, தம் வேத அறிவுகாட்ட ஆரியப் பார்ப்பனர் மேற்கொண்டனராதல் வேண்டும் என்னலாம்.

1. மேலே பக்கம் 205 அடிக்குறிப்பு 1 பார்க்க.



முறையுடன் முரண்படாதபடி அவர்களைப்பற்றிக் குறிப்பிட அவரால் முடியவில்லை.[1]

தமிழ்மக்கள் அணிந்த ஆடை சமுதாயத்தில் அவர்கள் படிமுறையையும் அவர்கள் மரபினங்களையும் பொறுத்துப் பல்வகை வேறுபாடுடையது. தூய தனித்தமிழரிடையே நடுத்தர வகுப்பினர் பொதுவாக அரையைச் சுற்றி முழந்தாள்வரை படியும்படி ஒன்றும் தலையைச் சுற்றித் தளர்வாகக் கட்டிய ஒன்றுமாக இரண்டு ஆடைகளே அணிந்தார்கள்.[2] அவர்கள், தலைமயிரை வெட்டுவதில்லை. அதை இயற்கை வளர்ச்சியளவுக்கே வளரவிட்டனர் அல்லது ஒருபுறமாக அதில் ஒரு பெரிய முடியிட்டுக் கட்டினர். இந்தத் தலையின் முடியைக்கட்ட உயர் வகுப்பினர் பளபளப்பான நீலமணிகள் கோத்த நிறமார்ந்த இழைகளைப் பயன்படுத்தினர். இழைகள் குஞ்சம் போல் தொங்கவிடப்பட்டன.[3]

நாகமரபுசார்ந்த மறவர் தலைவன் அரையாடையை நீலநிற வாரால் இறுக்கிக் கட்டினான். அவன் தலையில் மயிலிறகுகள் செருகப்பட்டிருந்தன.[4]

பார்ப்பனர் தம் தலைமயிரைக் குறுகத்தறித்தனர். ஆனால் தலையுச்சியில் ஒரு குடுமியை விட்டுவைத்தனர். ஒரு தமிழ்ப்புலவர் குதிரையின் தலையில் உள்ள குறுமயிருக்குப் பார்ப்பன இளைஞர் தலைமயிரை உவமை கூறியுள்ளார்.[5] பொது வீதிகளைக் காவல்காத்த வீரரும் அரசன் அரண்மனையிலுள்ள பணியாட்களும் சட்டைகள் அணிந்தார்கள்.[6]

1 இது குறிப்பிடாததற்கான உண்மைக் காரணம் இதுவன்று. மேலே பக்கம் 205 அடிக்குறிப்பு 1 பார்க்க.

2 புறநானூறு, பாட்டு 189.

3 புறநானூறு, பாட்டு 150.

4 புறநானூறு, பாட்டு 274.

5 தொல்காப்பியம், III பக். 470 தாமோதரம் பிள்ளை பதிப்பு.

6 பெரும்பாணாற்றுப்படை அடி 69; சிலப். XVI, அடி 107.

இப் பண்டைக்காலத்தில் முழுமேனி உடை ஒரு தலைவன் சின்னமாயமையவில்லை, ஒரு வேலைக்காரன் சின்னமாகவே கருதப்பட்டது. பெருமக்கள் வெப்பமான வளிநிலையில் மிகுந்த வாய்ப்புக்கேடின்றி எந்த அளவு உடை அணியமுடியுமோ அந்த அளவு குறைந்த உடையே அணிந்தனர்.

தமிழ்ப்பெண்டிரின் பொதுநிலை ஆடையில் தோளும் கையும் இடுப்புவரையுள்ள உடலும் முற்றிலும் வெறுமையாகவே இருந்தன. ஆடை என்பதெல்லாம் முழுவதும் அரையிலிருந்து தொடங்கிக் கணைக்கால்வரையிலுமே இருந்தன.[1] திறந்திருந்த உடற்பகுதி பொதுவாகச் சந்தன முதலிய நறுமணச் சாந்துகளால் ஒப்பனை செய்யப்பட்டிருந்தது.[2] நாகப்பெண்களோ அமராவதிச் செதுக்குக் கலையில் காணப்படுவதுபோலக் கிட்டத்தட்ட ஆடையற்றவர்களாகவே இருந்ததாகத் தெரிகிறது.

ஆடல் நங்கையர் அணிந்த மெல்லிய மல்மல் ஆடை அரையிலிருந்து துடை நடுவரைக்குமே மூடின. அதுவும் மிகநேரியதாயிருந்ததால் அது மேனியை ஒரு சிறிதும் மறைக்கவில்லை.[3] மலங்குடி மங்கையர் தங்கள் அரையைச் சுற்றிக்கட்டிக் கயிற்றில் மாட்டப்பட்ட தழைக் கொத்துக்களையே அணிந்தனர்.[4] பாணர்களின் ஊர் சூழ்வரலின்போது அவர்களுடன் சென்ற அவர்கள் மனைவியர் முற்றிலும் ஆடையற்றவர்களாகவே வருணிக்கப்பட்டுள்ளனர்.[5] உண்மையில் பண்டை இந்தியாவில் அம்மணத்தன்மை ஓர் இழிபண்பாகக் கருதப்பட்டதாகத் தெரியவில்லை.

தமிழ்ப்பெண்டிர் தங்கள் கூந்தலைப் புதுமைவாய்ந்த முறைகளில் புனைந்தனர். அதை அவர்கள் ஐந்து பகுதி

1 கலித்தொகை பாட்டு 111, 115.
2 கலித்தொகை, பாட்டு 18, அடி 3.
3 சிலப்பதிகாரம் VI, அடி 88.
4 குறிஞ்சிப்பாட்டு, அடி 102.
5 பொருநராற்றுப்படை, அடி 39.



களாகப் பிரித்து, ஒவ்வொன்றையும் தனித்தனியாகச் சுற்றி அல்லது பின்னி ஐந்து தனித்தனி முடிகளுடன் வனப்பு நயமுடையன என்று கருதப்பட்டவைகளிலே முடிப்புக்கடந்த பகுதியைத் தலையின்பின் தொங்கவிட்டனர். கூந்தலைப் பேணுவதிலும் அவர்கள் மிகுந்த கவனம் செலுத்தியதாகத் தெரிகிறது. ஏனெனில் இளம்பெண்கள் தலையோட்டின் மென்றோல் தெரியுமளவு தங்கள் தலைமயிரைக் கத்திரிகளால் ஒட்டக் கத்திரித்து, ஐந்து முடிகள் மட்டும் ஒன்றிலிருந்து ஒன்று அகல்வாக விடுவதும், பெண்கள் வளர்ச்சியுடன் வளர்ச்சியாக இம் முடிப்பகுதி படிப்படியாக விரிவுபடுத்தப்பட்டு இறுதியில் தலைமுழுதும் உட்கொள்ளுவதும் வழக்கமென்று தோன்றுகிறது.[1]

கூந்தலை இவ்வாறு முடிக்குமுன் ஐம்பாலாகப் பகுக்கும் வழக்கம் இன்னும் பர்மியரிடையே இருக்கிறது என்று கேள்விப்படுகிறோம். இது என்றும் ஆரியப்பெண்டிரால் மேற்கொள்ளப்படவில்லை. தற்போது இது தமிழரிடமிருந்தும் முற்றிலும் மறைந்துவிட்டது.

ஆடவரும் பெண்டிரும், எல்லா வகுப்பினரும், தம் தலைக்கு எண்ணெயிட்டனர். பெண்டிர் தலைகோதி முடிக்கும்போது அடிக்கடி மணப் பொருள்களை வழங்கியதுடன் பல்வகை மலர்களாலும் அணிமணிகளாலும் அதை ஒப்பனை செய்தனர்.

இருபாலாரும் பலவகை நறுநெய்களால் மேனிக்கு மணமூட்டினர். செந்நிறம், பொன்னிறம் கொண்ட பல்வகைப் பொடிகளையும் வழங்கினர்.[2] மாதர் கண்ணிமைகளுக்குக் கருநிற மை தீட்டினர்.[3] உயர் வகுப்பினர் இல்லங்களில் சாம்பிராணி முதலிய மணப்புகைப் பொருள்கள் புகைக்கப்பட்டன.[4]

1 கலித்தொகை பாட்டு 33,35.
2 சிலப்பதிகாரம், I, 69; VIII, 21.
3 சிலப்பதிகாரம், IV, 53.
4 சிலப்பதிகாரம், XIV, அடிகள்: 98, 99.

ஆடை அளவு குறைவாயிருந்தாலும் தமிழ் மக்கள் அணிமணிகளை ஏராளமாகப் புனைந்தார்கள். கழுத்து, கை, இடுப்பு ஆகியவற்றில் அணிந்த பல்வகை அணிமணிகளே அவர்கள் மேனி ஒப்பனையில் மிகச் சிறப்புவாய்ந்த பகுதியாயிருந்தன.

வேளிரும் இருநிலக்கிழவரும் விலையுயர்ந்த மணிமாலை அல்லது முத்துமாலை அணிந்தனர். கைகளில் பளுவேறிய கெட்டிக்காப்புப் பூண்டனர். அரச குடியினரும் சிறுகுடி மன்னரும் இதனுடன் தனிச்சிறப்புப்படக் காலில் கழல் பூட்டினர்.

வேளிர் குடிமகன் ஒருவன் அணிமணி கீழ்வருமாறு வருணிக்கப்பட்டுள்ளது :

"அவன் கால்களில் இரட்டைப் பொன்னிழைப் பின்னலுடன் தொங்கவிடப்பட்ட சிறு மணிகளின் வரிசை வாய்ந்த கழல் கிடந்தது. அவன் அரையைச் சுற்றிப் பொன் காசுகள் நிரை நிரையாகத் தூக்கிய பவளக்கொடி அரைஞாண் தொங்கிற்று. அதன்மீது அவன் இடுப்பில் மிக நேரிய ஒரு மல்மல் ஆடை உடுத்தியிருந்தான். நண்டின் கண்கள்போல அழகுறப் புனையப்பட்ட பின்னல் வேலைப்பாடுடைய அழகிய தோள்வளைகள் தோளை அணிசெய்தன. கழுத்தில் தொங்கிய இரட்டைப்பட்டைப் பொற் சங்கிலியிலிருந்து மழு வாள் படைகளின் சிற்றுருக்களும் அதிற்கோத்த எருதின் உருவாய்ந்த ஒரு பதக்கமும் தொங்கின. அவன் தலைமீது முப்புரிகளாக முறுக்கிய முத்துப் பவளங்களாலான தலைமாலையும் அதன்மேல் ஒரு பூமாலையும் ஒளிமிக்க நீலமணிகள்கோத்த இழையால் ஒருங்கு பிணைக்கப்பட்டிருந்தன."[1]

"தாழ்நிலை வகுப்பினரிடையே மாதர் சங்கு வளைகள், வெண்மணிகள், நீலமணிகளாலான கழுத்துமாலை, முதலிய மலிவான நகைகள் அணிந்தனர். நடுத்தர வகுப்பினர் பெரும்பாலும் தங்க நகைகளே அணிந்தார்கள், ஏனெனில்

1. கலித்தொகை, பாட்டு 85.



இந்தக்காலத்தில் இந்தியாவில் வெள்ளி மிகவும் அரிதான ஒரு பொருள். செல்வரின் நகைகள் மிக விலையேறியதாக இருந்தன. பொது ஆடல்மகளிர் பூண்களே மிகப் பகட்டாரவாரமானவையாய் இருந்தன.

"ஆடல்நங்கை யணிந்த பூண்களைப்பற்றிச் சிலப்பதிகாரத்தில் தரப்படும் கீழ்வரும் வருணனை நகையணி மணிவகையில் இருந்த ஆரவார இன்ப வாழ்வைக் காட்ட வல்லது.

"அவள் கூந்தலை மணநெய்யில் தோய்த்தாள். அக் கூந்தல் முப்பத்திரண்டு வகை ஓமாலிகையும் ஐவகை மணப்பொருள்களும் பத்துவகைத் துவர்களும் கலந்து ஊறிக்காய்ந்த நன்னீரால் ஆட்டப்பட்டது. அகிற்புகையில் கூந்தலை உலர்த்திப் பின் அவள் அதனை ஐம்பாலாகப் பகுத்துக் கத்தூரி கலந்த நறுநெய் பூசினாள். காலடிகளை அவள் செம்பஞ்சிக்குழம்பால் செவ்வண்ணம் தோயத்தீட்டினாள். காலின் சிறு விரல்களுக்குப் பீலிகள் மாட்டினாள்.

"அவள் காலடிகளில் கணைக்காலிலிருந்து பெருவிரல் வரை ஒன்றடுத்தொன்று இதழ் விரித்தாற்போன்று படரும் காலணிவகை யணிந்தாள். கணைக்காலில் மணிச் சிலம்பு, சதங்கை முதலிய நால்வகைக் கழல்களணிந்தாள். துடைகளில் துடைமாட்டிகள் ஏறின. வனப்பமைய மடித்த மிக நேர்த்தியான நீலநிற மல்மல் ஆடையை அவள் இடுப்பில் சேர்த்து அதன்மீது முப்பத்திரண்டு மணிகளுள்ள மேகலை அணிந்தாள்.

"முழங்கைக்குமேலாக மிக உயர்ந்த முத்துமணிகளாலான பொன்பொதிந்த தோள்வளைகளும், முன்கைகளில் பளப்பளப்பான வலம்புரி, பவளவளைகளுடனும், சில பொன்வளைகளும் சில அரிய வேலைப்பாடமைந்த வயிர மரகதமணிகள் பதித்த வளைகளும் பூட்டினாள். கைவிரல்களுக்குப் பற்பல வகைப்பட்ட மோதிரங்கள் இடப்பட்டன. ஒன்று மகரவாய் போன்றிருந்தது. ஒன்று நடுவே மரகதமும் சூழ வயிரங்களும் உடையதாயிருந்தது,

"கழுத்தில் (வயிற்று நடுவரை வந்து மறைக்கும்படி) பலவகைப் பொன்மாலைகள் பூட்டப்பட்டன, ஒன்று தங்கச் சங்கிலியாகவும் ஒன்று முறுக்கிய பொன்னிழை வடிவாகவும் மற்றொன்று பொன் தழை மாலையாகவும் இருந்தன. கழுத்தின் பின்னே மாலைகள் அனைத்தையும் சேர்த்து ஒரு நிலைப்படுத்திப் பிடிக்கும்படி மிகப் பகட்டான தோற்றமுடைய ஒருசேர்த் திருக்கு அணியப்பெற்றது.

"தோடுகளில் மாறிமாறி வயிரமும் நீலமும் இடம் பெற்றன.

"தலையில் அவள் சூட்டிய அணிமணிப் பின்னல்கள் மற்ற எல்லா அணிமணிகளையும் ஒருசேர வெல்லத்தக்கவையாய் இருந்தன."[1]

பெண்டிர் வீண்பகட்டில்லாமலே வாழ்க்கைத் தொழில்களங்களிலும் இன்பப் பொழுதுபோக்கு இடங்களிலும் பிறருடன் தாராளமாகப் பழகினர். நகரங்களிலும் பட்டினங்களிலும் ஏழை வகுப்புப் பெண்டிர் தெருவிற் பணியாளர்களாகவும் சிறு வணிகராகவும் கடைக்காரராகவும் செல்வர்வீடுகளில் பணியாட்களாகவும் தொழிலிடுபாடு கொண்டிருந்தனர். சிற்றூர்களில் அவர்கள் வயல்களிலும் தோட்டங்களிலும் ஆடவருடன் ஒத்து வேலைசெய்து அவர்கள் கட்டநட்டங்களைத் தாங்களும் பகிர்ந்து கொண்டனர்.

உயர்வகுப்பு மாதர் பெரிதும் வீட்டிலேயே வாழ்ந்தனர். ஆனால் அவர்களும் சமூகத்திலிருந்து முற்றிலும் துண்டுபட்டு விடவில்லை. அரசிமுதல் எல்லா உயர்குடி மாதருமே கோயில்களுக்குச் சென்று வழிபட்டனர். மாலை நேரங்களில் அவர்கள் தங்கள் தங்கள் வீட்டுமாடி முற்றங்களில் வந்திருந்து தெருவின் காட்சிகளைப் பார்த்திருந்தார்கள். விழாக்காலங்களில் அவர்கள் ஊர்வலங்களில் கலந்துகொண்டார்கள். நண்பர்கள், உறவினர்களுக்கு அழைப்புக் கூறவும் அவர்கள் சென்றார்கள்.[2]

1 சிலப்பதிகாரம் VI, 76—108.
2 சிலப்பதிகாரம் I, 36—37.



பெண்டிருக்கிருந்த தங்குதடையற்ற விடுதலையுரிமை காரணமாக, இளம்பருவத்தினர் திருமணத்திற்கு முன்பே காதலில் ஈடுபடுவதற்கு வாய்ப்பிருந்தது. ஓர் இளமங்கை காதலனுடன் உடன்போக்குப் பெறுவதுகூடப் பின்னால் அவர்கள் உறவினரிடம் மீண்டுவந்து மணவாழ்வில் ஈடுபடுவதானால், தகாததென்று கருதப்படவில்லை.

அரசவை, படைவீடு, சோலை ஆகிய எல்லா இடங்களிலுமே அந்நாள் பொன்னின் பேரவா ஆளவில்லை. அன்பே ஆண்டது. இருபாலாரும் ஒருவருடன் ஒருவர் பரிமாறிக்கொள்ளும் முறை இன்றிருப்பதைவிட இணக்க நயமும் பண்புநயமும் உடையதாயிருந்தது. இந்நிலையில் அந்நாளைய கவிதையில் பெரும்பகுதி காதல்பற்றியதாயிருப்பதிலும் காதல்பாக்கள் எழுதுவதுபற்றிய இலக்கண விதிகள் அமைந்திருந்ததிலும் வியப்பில்லை.

இளம்பருவத்தினர் மணவாழ்வுக்கு முன் காதல் கூர்தல் தமிழரிடையே அன்றே மிகப் பழமைவாய்ந்த நிலைபெற்றுவிட்ட ஒரு வழக்கமாயிருந்தது. எனவேதான் அந்நாளில் திருவள்ளுவர் பெருமான் இயற்றிய புகழ்மிக்க அறமுறைச் சமுதாய ஒழுக்க நூலில்[1] நூலின் மூன்று பால்களில் ஒருபால் காதல்பற்றியதாயுள்ளது. இவ்வழக்கம் இன்னும் தமிழகத்தில் முற்றிலும் அழிந்துபட்டு விட்டதென்று கூறுவதற்கில்லை. ஏனெனில் அது இன்னும் மலையாளக்கரையில் நீடிக்கிறது. இருபாலாருக்கிடையிலும் இருந்த தொடர்பைப் பண்டைக் கவிஞர் சொற்களாலேயே கூறுவது நலம்.

காதல்பற்றிய சில பாடல்களிலிருந்து கீழ்வரும் கருத்துக்களைத் தருகிறோம்.

ஒருபெண் நடந்துகொண்டவகைபற்றி அவள் தோழி பெண்ணின் காதலனிடம் கீழ்வருமாறு பேசுகிறாள் :

"என்னைக் கனிவுடன் நோக்கி, என் அணிமணிகளைத் திருத்தி, சந்தனக்குழம்பால் என் தோள்களில் தொய்யில்

1 குறள் அல்லது முப்பால்.

எழுதுகிறானே—அந்தப் பெருந்தன்மையுடைய இளைஞனுக்கே, என் அயலார் கூறுகிறபடி நான் என் நெஞ்சைப் பறிகொடுத்துவிட்டேனா என்று நீ கேட்கிறாயாக்கும்? அங்ஙனமாயின் நான் சொல்வதைக் கேள்.

"நீ கூறுகிறபடியே, கடற்கரையிலே நான் அவனுடன் நீண்ட நேரம் திண்ணிய கடல் கோரைகளைப் பற்றி இழுத்துப் பறித்துக்கொண்டே உலவுவதுண்டு. அங்ஙனம் பறிப்பதால் கைகளெல்லாம் சிவந்துவிடும். ஆனால் இதெல்லாம் எனக்காக அவன் செய்துதந்த கோரைப் பொம்மைக்காகத்தான். அயலார்கள் கட்டிவிடுகின்ற கதைகளையெல்லாம் இதற்காக நீ நம்பிவிடுவது வியப்புக்குரியதாகவே யிருக்கிறது. ஏனெனில் இந்த அயலார்களுக்கு ஊர்வம்பு பேசாதபோது மன அமைதியே யிருப்பதில்லைபோலிருக்கிறது!

"வியப்பார்வத்துடன் நோக்கும் உன் கண் பார்வையில் படுவதற்கு அஞ்சி நான் என் வீட்டிலிருந்து திரும்பி நடந்தேன். அவன் நான் திரும்பி வருவதுகண்டு, சதுப்பு நிலத்தில் வளர்ந்துகிடந்த சில மலர்களைப் பறித்து அவற்றை ஒரு மாலையாகக் கட்டி அதை எனக்குத் தந்தான். அவன் என்னிடம் காட்டிய இந்தச் சிறிதளவு நட்புரிமைக்காகவா, இத்தகைய போலிக்கதைகளுடன் உன்னை என்னிடம் அனுப்பியவர்களைக் கண்டித்துக் கேட்காமல், என்னிடம் கேள்வி கேட்க வந்திருக்கிறாய்?

"என் தோள்களில் அவன் சந்தனக்குழம்பால் கரும்பின் தண்டினை அழகாகத்தான் எழுதினான். எனக்கு அப்படி எழுதவராதென்று கூறிக்கொண்டே எழுதினான். இந்தச் சிறிய அன்பாதரவுக்காகவா என் விளையாட்டுத் தோழியர் கூறிய சோம்பேறி வம்புரைகளுக்குச் செவி கொடுத்துக் கேட்டுக்கொண்டு என்னைத் தொந்தரவு படுத்துகிறாய்?"[1]

1 கலித்தொகை பாட்டு 76.



குறும்பனான கட்டற்ற இளைஞனொருவன் கடிகாதலனாக மாறுவதையும் அவனைப்பற்றிப் பெண் தன் தோழியிடம் பேசுவதையும் கீழே காண்கிறோம்.

"நான் கூறுவதைக் கேள், தோழி!

"நம் சிறு வீடுகளை அழித்து, நம் தலையிலுள்ள மாலைகளைக் குலைத்து, நாம் தெருவில்வைத்து விளையாடும் பந்தைப் பறித்தோடி நமக்கு எல்லையில்லாத தொல்லை கொடுக்கும் அந்தக் குறும்புச் சிறுவனை நீ அறிவாய் அல்லவா?

ஒரு நாள், நானும் என் தாயும் வீட்டு வேலையிலீடுபட்டிருக்கும்போது, அவன் வீட்டுக்கு வந்து நீர் வேட்கையாய் இருக்கிறது என்று கூறினான். 'அவனுக்கு ஒரு கலத்தில் நீர் கொடு' என்று என் தாய் ஏவினாள். நானும் அவன் குறும்புகளை மறந்து ஒரு கலந் தண்ணீர்கொண்டு சென்று கொடுத்தேன். அவனோ என்னைக் கையைப் பிடித்து அணைக்க முயன்றான். 'ஐயையோ! இந்த இளைஞன் என்ன செய்கிறான் பார்!'' என்று கூவினேன்.

"கூக்குரலைக்கேட்டு என் அன்னை நாங்கள் நின்ற இடத்துக்கு ஓடி வந்தாள். நீர் குடிப்பதில் அவன் விக்கினான் என்று நான் ஒருபொய் அளந்தேன். என் தாய் அவன் முதுகைத் தடவிக் கொடுத்தாள். அப்போது அக் கள்வன் மகன் என்னைக் குத்திவிடுபவன்போல நோக்கி என்னைச் சிரிக்கவைத்தான்.[1]

குன்றங்களிலும் முல்லைச்சோலை நிலங்களிலும் வரும் புத்தார்வக் காதல் காட்சிகளுள் கீழ்வருவதனைவிடப் புத்தார்வமுடைய எதையும் காணமுடியாது.

"நானும் என் தலைவியும் புதுவெள்ளத்தால் பொங்கிப் புரண்டோடிய காட்டாற்றில் குளித்துக் கொண்டிருந்தோம். ஆற்றின் நடுநீரோட்டத்தருகே தலைவிவழுக்கி, ஓட்டத்தில் நிலைகொள்ளமாட்டாமல் மிதந்துசென்றாள். அவள்

1 கலித்தொகை, பாட்டு 51.

இடர்நிலைகண்ட மாலைகளணிந்த ஒரு வீர இளவரசன் அவளை ஆதரவாக எடுத்துக் கரைக்குக் கொண்டுவந்து சேர்த்தான். அச்சமயம் அவள் திரண்ட மார்பகங்கள் அவன் தோள்கள்மீது பொருந்திக்கிடந்தன என்று அருகிலுள்ளோர் கண்டு பேசிக்கொண்டார்கள். இதுகேட்டு என் தலைவி, 'இனி நான் இந்த இளைஞனிடமே என் உள்ளத்தைப் பதிய விட்டுவிடுகிறேன்' என்று சூளுரைத்தாள்.

“அவன் மலங்குறவரின் ஒரு வல்லமைவாய்ந்த குழுவின் தலைவன்.

“நான் அவர்களுக்கு எடுத்துக் கூறினேன். 'குறவர் குடிப்பெண் தன் காதலனை மறந்து நடந்ததும் கிடையாது. குறவர் எய்த அம்பு தன் குறியில் தப்புவதும் கிடையாது. ஆகவே மலங்குறவராகிய நீங்கள் மரபுபொய்ப்பீர்களானால், வள்ளிக்கொடிகள் கிழங்கு வீழ்த்தமாட்டா. தேனீக்கள் தேனிறால் கட்டமாட்டா. உங்கள் மலங்கழனிகள் பயிர் வளம்பெறமாட்டா' என்றேன்.

“என் சொற்கள்கேட்டதாய், அதைத் தந்தையரிடம்[1] கூறினாள். அவர்கள் தங்கள் விருப்பத்துக்குரிய மற்றோர் இளைஞனை அவளுடன் மணம் புணர்விக்க விரும்பியிருந்தார்கள். ஆகவே இதுகேட்டு அவர்கள் சினமூண்டது. கண்கள் அழன்றன. அவர்கள் வில்லும் அம்பும் தேர்ந்தனர். ஒருநாள் முழுதும் பழிச்செயல்களிலேயே அவர்கள் எண்ணம் சென்றது.

“ஆனால் இளையோர் இருசாராரிடத்தும் குற்றமில்லை என்பதைக் கண்டபின் அவர்கள் கோபம் தணிந்தது. தம் மகள் அவள் காதலனை மணப்பதற்கு அவர்கள் இசைவளித்தனர்.

“இதன்பின் கோத்த கைகளுடன் நாங்கள் குரவைக் கூத்தாடினோம்.........

1 தமிழில் தந்தையின் உடன்பிறந்தாரும் தந்தையர் என்றே வழங்கப்படுவர். மாமன்மாருடன் ஒன்றுபட்ட சொல்லால் (ஆங்கில மொழி uncles போல) வழங்கப்பெறுவதில்லை. [இது ஆங்கிலமறிந்தோருக்கு விளங்க ஆங்கில மூல நூலாசிரியர் தரும் விளக்கமே.]



“பின்னர்க் குலத்தின் மூத்தோர் ஊர்ப் பொதுவில் கூடி, அறிவன் தலைமையில் மணவிழா அயர முற்பட்டனர்.”[1]

கற்புநெறிநின்ற அடக்கமிக்க ஒரு நங்கையின் காதல் வரலாறு மேலே தரப்பட்டது. காதல் முனைப்புடைய அக் காலத்திய குறும்புக்காரப் பெண் ஒருத்தியின் செய்தி கீழே தரப்படுகிறது.

“காயாம்பூ ஒத்த கருவிழி நங்காய், கேள்!

“அழகிய மாலையணிந்து வில் ஏந்தியவனாய் ஏதோ வேட்டையைத் தொடர்ந்து வந்தவன்போல ஓர் இளைஞன் என்முன் வருவான். வந்து கனிவுடன் நீண்டநேரம் என்னை நோக்குவான் ஆனால் ஒருசொல்கூடச் சொல்லாமல் சென்று விடுவான். அவனைப்பற்றிய எண்ணம் என் உறக்கத்தையே கெடுத்தது. நான் உள்ளூரத் துயரடைந்தேன். அவன் தன் காதலைக் கண்ணினால் தெரிவித்தானேயன்றி, நாவால் உரைப்பதில்லை. நானும் பெண்ணாய் இருப்பதினால் நாணம் காரணமாக அவனை எவ்வளவு காதலிக்கிறேன் என்று அவனிடம் கூறமுடியவில்லை.

“மறைவான என் காதலின் துன்பம் பொறுக்கமாட்டாமல் நான் செய்த ஒரு செயல் இப்போது நினைத்தால்கூட நான் வெட்கப்படத் தக்கதாயிருக்கிறது. ஒருநாள் நான் நம் பண்ணையருகில் ஊஞ்சலில் உட்கார்ந்துகொண்டிருந்தேன். அவன் வழக்கம்போல் என் முன் வந்து நின்றான். நான் அவனை அழைத்து, “ஐய என்னை ஊஞ்சலில் சிறிது ஆட்டிவிடு” என்றேன். “மகிழ்ச்சியுடன் அப்படியே செய்கிறேன்” என்று கூறி அவன் ஊசலாட்டினான். அப்போது நான் ஊசலிலிருந்து நழுவி விழுபவள் போல நடித்து அவன் தோள்கள்மீது விழுந்தேன்.

“அவன் என்னை உடனே தன் கைகளால் இறுகப் பிடித்தான். நானும் உணர்விழந்தவள்போல அவன் தோள்மீது கிடந்தேன். அவன் என்னை மேலும் இறுக

1 கலித்தொகை, பாட்டு 39.

அணைத்துக்கொண்டான். ஆனால் நான் கண் விழித்ததும் கனிவுடன் தடவிக்கொடுத்துப் போகும்படி விட்டுவிட்டான். ஆனால் என்னை ஆர்வமாகத் தானும் காதலிப்பதை அவன் செயல் உறுதியாகக் காட்டிவிட்டது."[1]

பண்டைக் காதல் பாடல்களில் ஒரு புதுமை வாய்ந்த வழக்கம் குறிப்பிடப்பட்டுள்ளது. அதுவே மனமுறிவுற்ற காதலன் தன் காதலை வெளிப்படையாகக் கூறி நடுத்தெருவில் தற்கொலை முயற்சியில் இறங்கும் பழக்கம் ஆகும். ஒரு பெண்ணிடத்தில் நீக்கமுடியாத காதல்கொண்டு, அவள் காதலைத் தான் பெறாதுபோய் விட்டபோது, அவன் பனையின் கருக்குமட்டைகளை எடுத்து அவற்றைக் கொண்டு குதிரை உருவம் ஒன்று செய்வான். அதில் மணிகளும் மயிலிறகுகளும் வைத்து ஒப்பனை செய்து, கடிவாளம்போல ஒரு கயிற்றை அதன்மீது மாட்டிக் கொண்டு, தெருவழியாக அதன்மீது ஊர்வான். ஊரும்போது தன் காதலிமீது காதற்பாட்டுக்களைப் பாடிக் கொண்டே செல்வான்.[2]

இக் காட்சி கண்டு சில சமயம் காதலியே இரங்கி மனமாறுவதுண்டு. அல்லது அவள் உறவினர் அவனை மணம் செய்யும்படி அவளைத் தூண்டுவர். ஆனால் காதலை இந்த அளவு வெளிப்படுத்தியும் காதலி அவனிடம் கனிவு காட்டவில்லையானால், அவன் செங்குத்தான குன்றிலிருந்து வீழ்ந்து தன் உயிரை மாய்த்துக் கொள்வான்.

ஒவ்வொரு நகரிலும் ஊரிலும் பொதுமகளிர் தெரு ஒன்று இருந்தது. பெரிய நகரங்களில் கல்வி கேள்விகளிலும் கலைகளிலும் தேர்ச்சிபெற்ற ஆடல் அணங்குகள் இருந்தனர். அவர்கள் செல்வமிக்க பெருங்குடி மக்களின் காதற் கிழத்தியரா யிருந்தனர். இவ்வாடல் நங்கையருக்கு அரசன் தனி மதிப்பும் பாதுகாப்பும் அளித்தான். அவர்கள் தேரிலும் சிவிகைகளிலும் செல்லவும், மன்னன் பூங்

1 கலித்தொகை, பாட்டு 37.
2 கலித்தொகை, பாட்டுக்கள் 138, 139, 141.



காக்களில் உலவவும், பொன்னாலான வெற்றிலைச் செல்லங்களும் கவரிமானின் வெண்மயிர்க் கற்றை விசிறிகளும் வழங்கவும், இல்லங்களிலிருந்து வெளிச் செல்லும்போது உடை வாளணிந்த மெய்காவலர் குழுவின் காப்புடன் செல்லவும் இசைவளிக்கப்பட்டனர்.[1]

பிறர் மனைவியருடன் ஊடாடுவது பெருங்குற்றமாகக் கருதப்பட்டுத் தண்டிக்கப் பட்டாலும், பொதுமகளிரை அல்லது ஆடல் நங்கையரை அணுகுவதோ, அவர்களுடன் பூங்காக்களில் உலவுவதோ, பொது நீராட்டுத்துறைகளில் அவர்களுடன் களித்து விளையாடுவதோ அவமதிப்பென்று கருதப்படவில்லை.

இளைஞர்கள் 16இலும் இளநங்கையர்கள் 12இலும் மணப் பருவமெய்தியவர் என்று கருதப்பட்டனர்.[2] அந்நாளைய காதற் பாடல்களில் பொம்மையும் விளையாட்டுப் பொருள்களும் துறக்காத பருவத்திலேயே பெண்களை இளைஞர் காதலாடும் நிகழ்ச்சிகளுக்குப் பல சான்றுகள் காட்டலாம். இச் சிறுபருவ மணவினையைத்தான் மெகஸ்தனிஸ் குறிப்பிடுகிறாரானாலும், 'பாண்டிய நாட்டுப் பெண்கள் ஆறு வயதிலேயே குழந்தைபெற்றுவிடுகிறார்கள்' என்று கூறும்போது அவர் உயர்வு நவிற்சியீடுபடுகிறார் என்பதில் ஐயமில்லை.[3]

மணவினைக்குச் சில நாட்களுக்கு முன்னால், அணியிழைபூண்ட பெண்கள் யானை மீதேறி நண்பர்களிடமும் உறவினர்களிடமும் சென்று திருமண விழாவுக்கு வரும்படி அழைப்புக் கூறினர். பெண் இல்லத்தின்முன்னே அகலமான உயர்ந்த காவணம் அமைக்கப்பட்டது. அதன் மேல்தளமெங்கும் பூமாலைகள் தொங்கவிடப்பட்டன. மண

1 சிலப்பதிகாரம் XIV, அடிகள் 126 – 131.
2 சிலப்பதிகாரம் I.
3 மக்கிரிண்டிலின் பண்டை இந்தியா, மெகஸ்தனிஸும் அரியனும் (Mecrindle's Ancient India Megasthenes and Arrian) பக்கம் 14; பக்கம் 202 இல் "பெண்கள் ஏழு வயதில் திருமண வயதடைகின்றனர்" என்ற கூற்றும் காண்க.

வினைக்காகக் குறித்த நன்னாளில், பார்ப்பனக் குருக்கள் வந்து காவணத்தடியில் திருக்கனல் ஏற்றினான். முரசும் குழலும் சங்கும் இன்னிசை இயம்பின. மணமகனும் மணமகளும் திருக்கனலைச் சுற்றி மும்முறை வலம் வரும்படி இட்டுச் செல்லப்பட்டனர்.

ஏற்றிய விளக்குகளுடன் நறும்புகை, மலர்கள், மணப் பொடிகள் ஆகியவை ஏந்தியவண்ணம் பெண்டிர் மண மக்கள்மீது மலர்தூவிப் பாடல்களுடனும் வாழ்த்துக்களுடனும் அவர்களை, மணவறைக்கு இட்டேகினர்.[1]

நகரங்களில் ஏழை வகுப்பினரும் மலங்குடியினரும் அன்று பார்ப்பனர் செல்வாக்குக்கு உட்படவில்லை. ஆகவே திருமணவினை அறிவர் அல்லது தமிழ்ப் பார்ப்பனர்களாலேயே நிகழ்த்தப்பட்டது.[2]

திருமண முதலிய குடும்ப விழாக்காலங்கள் தவிர, மற்றச் சமயங்களில் பொதுவாக உணவு நேரத்தில் குடும்பம் கூடுவதில்லை. ஒவ்வொரு குடும்ப உறுப்பினரும் அவரவருக்கு வாய்ப்பான சமயத்தில் தம் உணவை உட்கொண்டு வந்தனர்.

உணவு எப்போதும் எளிய உணவாகவே இருந்தது. உணவின் பெரும்பகுதி அரிசியே. பால், வெண்ணெய், தேன் மிகப் பொதுப்படையாகவே வழங்கப்பட்டன.

வெவ்வேறு வகுப்பினரும் உயிர்வாழ்க்கைக்கு உட்கொண்ட உணவு வகைகளை ஒரு நாடுசூழ்வாணர் கீழ்வருமாறு விரித்துரைக்கிறார் :

"எயினர் அல்லது வேடர் செந்நிறமுடைய முரட்டு அரிசியுடன் உடும்பின் இறைச்சி கலந்து தேக்கின் அகன்ற இலையில் இட்டுப் பரிமாறினர். ஆயர் பாலில் வேகவைத்த சோளமும் மொச்சையும் சாமையும் நல்கினர். உழவு நிலங்களில் தொழிலாளர் கோழியிறைச்சிப் பொரியலுடன் வெள்ளை அரிசி உணவு வட்டித்தமைத்தனர். கடற்கரை

1 சிலப்பதிகாரம் I. 2 கலித்தொகை.



யில் மீன் படவர் பனை ஓலைப் பட்டைகளில் பொரித்த மீனுடன் சோறிட்டனர்.

"பார்ப்பனர் மாங்காய் ஊறுகாயுடன் சோறும், மணமுடைய கருவேம்பின் இலையுடன் வெண்ணெயில் வெந்த மாதுளம் பிஞ்சும் தந்தனர். உழவர் அல்லது வேளாளர் இனிய தின்பண்டங்களும் பலாப்பழங்களும் வாழைப்பழங்களும் தேங்காயின் குளிர்ச்சிபொருந்திய நீரும் வழங்கினர். கள்ளுக்கடைகளில் பலநாள் அரிசிமாவுணவிட்டுக் கொட்டிலிலேயே தங்கிக் கொழுக்கவைக்கப்பட்ட ஆண்பன்றியின் வறுவலுடன் கள்ளும் வழங்கினர்"[1]

தொழிலாளர், படைவீரர், நாடுசூழ்வாணர் ஆகிய ஏழை வகுப்பினர்களால் தென்னையிலிருந்து இறக்கிய கள் பருகப்பட்டது.[2] செல்வ வகுப்பினர் அரிசி, தாதகிப்பூ[3] முதலிய மணப்பொருள்களிலிருந்து வடிக்கப்படும் நறுமணமூட்டப்பட்ட தேறல் வகையை வழங்கினார்கள்.[4] யவனர் கலங்களில் கொண்டுவரப்பட்ட குளிர்நறுந் தேறல் வகைகள் மிக விலையேறியவையாய் இருந்திருக்கவேண்டும். இவையே மன்னரின் விருப்பத்துக்குரிய குடிவகைகளாய் இருந்தன.[5]

காடைச்சண்டைகள், ஆடல்பாடல்கள், இசையரங்குகள், சமய விழாக்கள் ஆகியவையே பொதுமக்களின் தலையாய பொழுதுபோக்குகளாக இருந்தன. மாதர் வள்ளைப்பாட்டும் அம்மானைப்பாட்டும் பாடும்படி கிளிகளுக்குக் கற்பித்தும், ஊஞ்சலில் ஊசலாடியும், தாயம், கழங்கு, பந்து முதலியவை யாடியும் வீட்டில் பொழுதுபோக்கினர்.

தாயம் என்பது தற்போதைய சொக்கட்டான் ஆட்டமே. ஆனால் சொக்கட்டான்காய்கள் இப்போதிருப்பது போல நீள் சதுக்கமான கட்டைகளால் இல்லை. கரும்

1 பெரும்பாணாற்றுப்படை, அடிகள் 99 முதல் 362 வரை.
2 மணிமேகலை III, 99-89.
3 Bauhimia Tomentosa
4 மணிமேகலை XXVIII, 260-261.
5 புறம், பாட்டு 56, அடி 18.

புள்ளியிட்ட நண்டின் தோடுபோல வட்டவடிவமாயிருந்தன. கழங்காடலில் ஒவ்வொன்றும் ஒருபாக்களவான ஏழு சின்னஞ் சிறு கழல்கள் வழங்கப்பட்டன. ஆடுவோர், உட்கார்ந்திருந்தபடியே கழல்களை ஒன்றொன்றாக, இரண்டிரண்டாக என ஏற்றி ஏழேழ்வரை மேலே எறிந்து விழாது உள்ளங்கையிலோ, புறங்கையிலோ தாங்க முயன்றனர். பந்தாட்டத்திற் எலுமிச்சம்பழத்தளவுள்ள பந்துகள் வழங்கப்பட்டன. பந்தைக் கையால் தொடர்ந்து அடித்த வண்ணம் பந்து செல்லும் திசையில் முன்னாகவோ பின்னாகவோ, சுழன்றோ சென்றாடினர்.[1]

பண்டைத் தமிழரிடையே கவின்கலைகள் மிக உயர்ந்த நிலையில் வளர்ச்சிபெற்றிருந்தன.

பொதுக்கல்விமுறையில் இசைத்துறை ஓர் இன்றியமையாக் கூறாய் இருந்தது. உள்ளத்தில் மென்மையும் இணக்க நயமும் வாய்ந்த உணர்ச்சிகளை எழுப்பும் இனிமையான பண்களில் தமிழர் மேம்பட்டிருந்தனர். இசைப் பட்டியில் ஏழு சுரங்கள் இருந்தன. அவை தாரம், உழை, குரல், இளி, துத்தம், விளரி, கைக்கிளை என்பன.[2] முக்கியமான பண்கள் அல்லது இசைக்குரல்கள் நான்கு. அவை பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என்பன[3] ஒவ்வொரு பண்ணிலும் பல கிளைத் திரிபுகள் இருந்தன. அவையனைத்தும் சேர்ந்து 103 தனிப்பண் கூறுகள்[4] அந்நாளைய இசை நூல்களில் வகுத்துணரப்பட்டன.

இசையின் பகுதிகளாகிய தாழ்குரல், இடைக் குரல், உச்சக் குரல், ஆகியவை அறியப்பட்டிருந்தன. ஆனால் அவை ஒருங்கே பாடப்பெறவில்லை.[5] ஒன்றன்பின் ஒன்றாகப் பாடப்பட்டன.

1 கலித்தொகை, பாட்டுக்கள் 57,136.

2 சிலப்பதிகாரம் VIII, அடிகள் 31, 32.

3 சிலப்பதிகாரம்.

4 Tunes.

5 தாழ்குரல் (Bass), இடைக்குரல் (Tenor), உச்சக்குரல் (Treble) ஒருங்கே ஒலித்தல் மேலை இசைக் கலையின் பாணி.



வளிக்கருவிகளில் (துளைக் கருவிகளில்) பல்வேறு வகைப்பட்டவை வழங்கப்பட்டன. ஆழ்ந்தமுழக்கமுடைய சங்குகள் கோயில்களிலும் திருமண விழாக்களிலும் சாவிழாக்களிலும் பயன்படுத்தப்பட்டன. புல்லாங்குழலில் எட்டுத்துளைகள் இருந்தன. அது பல்வகை இசைநயங்களை வெளிப்படுத்தத் தக்கதாயிருந்தது.

ஒருமுக முரசமும் இருமுக முரசமும் பல்வேறுவகை ஊதுகொம்புகளும் ஒவ்வோர் இசையரங்கிலும் குழலுடன் இணைந்தன.

யாழில் நான்கு வகைகள் இருந்தன. மிகச் சிறிதும் பொதுவாக வழங்கப்பட்டதும் ஏழு நரம்புகளுடையதுமாயிருந்தது.[1] மற்ற யாழ்வகைகள் முறையே பதினான்கு, பதினேழு, இருபத்தொரு நரம்புகள் உடையனவாயிருந்தன.[2] வாசிக்கப்படும்போது, யாழ் இடதுகையில் பற்றப்பட்டது. அதன் நான்கு விரல்கள் முறுக்காணிகளின் மீது படிந்தன. நரம்புகள் பெருவிரல் தவிர வலது கையில் மற்ற விரல்களில் ஏதேனும் ஒன்றால் உளரப்பட்டன.[3]

தமிழ் இசையும் ஆரிய இசையும் தனித்தனியாகக் குறிக்கப்பட்டுள்ளன. அவை ஒன்றுடனொன்று தொடர்பற்ற இரு வேறுமுறைகள் என்பதையும், இசையில் முழு நிறைவுபெற விரும்புகிறவர்கள் இரண்டையும் கற்றனர் என்பதையும் இது காட்டுகின்றது.

ஆடலும் ஒரு கவின் கலையாகப் பயிலப்பட்டது. அக்காலத்தில் வழக்கிலிருந்த பலவகை ஆடல்களுக்கும் விதிகள் வகுக்கப்பட்டிருந்ததுடன், அக்கலைக்குரிய இலக்கண நூல்கள் ஏற்கெனவே அமைந்திருந்தன. இவை இன்று கிட்டவில்லை. ஆனால் ஆடலைப்பற்றிய பல செய்திகள் சிலப்பதிகாரத்திலிருந்து தெரியவருகின்றன. இந்நூலிலிருந்தே ஆரியக்கூத்து, தமிழ்க்கூத்து என்று இருவகையான ஆடல்வகைகள் இருந்தன என்று அறிகிறோம்.

1 சிலப்பதிகாரம் 2 சிலப்பதிகாரம் பக்கம் 81.

3 சிலப்பதிகாரம் XXVII, 245 சிலப்பதிகாரம் XXIX, அகம் பாட்டு 17.

ஆரியக் கூத்தில் பதினொரு வகைகள் கூறப்படுகின்றன. அவை கீழ்வரும் நிகழ்ச்சிகளைச் சித்திரித்தன.[1]

(1) சிவபெருமான் திரிபுரம் எரித்தல்.

(2) திரிபுரத்துக்குச் செல்ல நான்முகன் கொணர்ந்த தேரில் சிவபெருமான் ஏறுதல்.

(3) கஞ்சனால் அனுப்பப்பட்ட யானையைக் கண்ணன் அழித்தல்.

(4) கண்ணன் பாணாசுரனுடன் மற்போரிட்டு அவனைக் கொல்லுதல்.

(5) கந்தன் இலங்கையில் அசுரனை முறியடித்தல்.

(6) கந்தன் அசுரர் படையுடன் போரிடல்.

(7) கண்ணன் பாணாசுரன் கோட்டையை அழித்தல்.

(8) காமதேவன் அலியுருவில் தன் மகன் அநிருத்தனைக் காப்பாற்றப் பாணாசுரன் கோட்டையில் புகல்.

(9) கொற்றவை அசுரர்களை அழித்தல்.

(10) திருமகள் அசுரரை ஏமாற்றல்.

(11) இந்திரன் மனைவி அயிராணி பாணாசுரன் கோட்டையின் வடக்கு வாயில்முன் தோன்றுவது.

தமிழ்க் கூத்துக்களில் பலவகைகள் இருந்தன. சில தெய்வங்களையோ, அரசரையோ, அவர்கள் வீரச் செயல்களையோ புகழ்ந்தன. சில மனிதரையோ, விலங்குகளையோ அவிநயித்தன. சில காதற் காட்சிகளைச் சித்தரித்தன. இவையன்றிக் குரவைக்கூத்தும் மக்கள் விரும்பிய ஆடல் வகையாய் இருந்தது. இதில் ஏழு, எட்டு அல்லது ஒன்பது பேர் வளையமாக ஒருவருடனொருவர் கைகோத்து ஆடுவர் இவ்வாடலில் ஆடவரும் பெண்டிரும் கலந்து கொண்டனர். அதனுடன் காதல் அல்லது போர்பற்றிய பாடல்கள் இணைக்கப்பட்டன.[2]

1. அகம். 2 அகம்.



இக்கூத்துக்களில் பலவும் ஆடலணங்குகள் அல்லது கூத்தியரால் நிகழ்த்தப்பட்டன.

ஆடலணங்கின் கலைப்பயிற்சி மிக இளமையில் ஐந்து வயதிலேயே தொடங்கப்பட்டு ஏழாண்டுகள் தொடர்ந்து நடைபெற்றது.

அவள் பயிற்சிப்பாடத் திட்டங்கள் இன்று கலைப் பயிற்சி நிறைவுடைய நங்கைக்குக்கூடப் பெருமைதரத் தக்கதாகும்.

ஆடவும், பாடவும், மென்னய நடையுடை பழக்கங்கள் பயிலவும் அவள் கற்பிக்கப்பட்டாள். இஃதல்லாமலும் யாழும் குழலும் முழவும் கையாளவும், அயல்மொழிகளில் இயற்றப்பட்ட பாடல்களைப் பாடவும் அவர்கள் பழகினர். ஓவியம் வரைதல், நீர்விளையாட்டு, பகட்டான பல்வண்ணத் தூள்களால் மேனி ஒப்பனை செய்தல், அழகிய பூமாலைகள் தொடுத்தல், பூணணி மணிபுனைதல், பள்ளியறை சிங்காரித்தல், காலக்கணிப் புணர்தல், பருவத்திற்கேற்ற செயல் தகுதி யுணர்தல், பல்வேறு கலை இயல்துறைகளின் செய்திகள் பற்றி வாதித்தல், புதிர்கள் போடுதல், புதிர்கள் விடுத்தல், பிறர் கருத்துக்களை உய்த்துணர்ந்து கூறல் ஆகிய இத்தனையும் அவர்கள் முழு நிறை பயிற்சியின் கூறுகளாய் இருந்தன.[1]

சுருக்கமாகக் கூறுவதானால் ஆடவர்களுக்குப் பொழுது போக்கும் இன்பக்களிப்பும் தருவன என்றோ, அவர்கள் உள்ளங்களில் வியப்பார்வம், கவர்ச்சி ஆகியவற்றை ஊட்டுவன என்றோ கருதத்தக்க யாவற்றையும் ஆடலணங்கு பயின்றாள்.

அவளது பன்னிரண்டாம் வயதில், அரசன் நகர்ப் பெருமக்கள் ஆகியோர் முன்னிலையில் அவள் அரங்க வாழ்வில் அடி எடுத்து வைத்தாள்.

1 மணிமேகலை II, அடிகள் 18-31.

சமயத்துக்கேற்பஉடனடிப்பாடல் பாடவல்ல ஒரு கவிதையாசிரியனும், அக்கவிஞன் பாடலுக்கு உடனடியாகப் பண்ணமைத்துப் பாடவல்ல இசையாசிரியனும், ஒரு யாழாசிரியனும், ஒருகுழாலாசிரியனும்,ஒருதண்ணுமையாசிரியனும் ஆடலணங்குடன் எப்போதும் உடன் சென்றனர். இவர்கள் ஒவ்வொருவருமே அவரவர் துறைகளில் துறைபோகப் பயிற்சிபெற்றவரா யிருந்தனர்.

அரங்கமேடை இரண்டடி உயரமும் பதினன்கடி அகலமும் பதினறடி நீளமும் உடையதாயிருந்தது. மேடையில் ஏழடி உயரத்தில் தூண்களின் ஆதாரத்தின்மேல் ஒரு மேற்கட்டி இடப்பட்டிருந்தது. இம் மேற்கட்டின் மேல் காவல் தெய்வங்களின் உருவங்கள் நிறுவப்பட்டிருந்தன. ஓவியந் திட்டப்பட்ட எழினிகள் (திரைகள்) அரங்க மேடையின் நாற்புறமும் தொங்கவிடப்பட்டிருந்தன.

ஆட்டம் விளக்கு வைக்கும் நேரத்திலேயே தொடங்கப்பட்டது. அரங்கமேடை முழுதும் ஒளிமயமாக்கப் பட்டது.

மேடையின் அகலத்தில் ஆறடி ஆடலணங்கின் ஆட்டத்துக்கென ஒதுக்கப்பட்டிருந்தது. அவளுக்குப் பின் அவள் ஆட்டத்திற்குவேண்டிய தூண்டுதல்கள் தர இரண்டு மூன்று புதிய ஆடலணங்குகள் நின்றனர். இவர்களுக்குப்பின் ஆடலணங்குகளுக்கு ஓய்வு கொடுத்து மக்களைக் களிப்பிக்கும் முறையில் இடைநேரங்களில் பாடவல்ல சில பாடகர் இருந்தனர்.

தன் சிறப்பணி மணியுடன் ஆடலணங்குஅரங்கத்தில் ஏறினள். விளக்கொளியில் மெய்யாகவே சுடரிட்டொளி வீசும் நிலையில், மெருகிடப்பட்ட பொன்னும், பட்டை தீர்ந்த மணிகளும் நிரம்பிய அவள் அணிமணிகளிலிருந்து ஆயிரஒளிக்கதிர்கள் நாற்புறமும் வீசுவதுபோன்றிருந்தன.

ஆடலைத் தொடங்குகையில் ஆடல் நங்கை தன் வெள்ளிமணிக் குரலில் தன்னைத் தீங்குகளிலிருந்து காத்து அருள்பாலிக்கும்படி தெய்வங்களை வணங்கித் தெய்வ



வாழ்த்துப் பாடினள். அதன்பின் முன்பே தேர்ந்தெடுத்துத் திட்டம் செய்யப்பட்ட ஆடல்பாடல்களை ஒவ்வொன்ருக ஆடினள்.

அவள் உடலும் உடலுறுப்புக்களும் மனித உடல் கொள்ளத்தகும் அழகிய பலவகைப் பாவங்களும் தோற்ற எல்லா வளைவு நெளிவு குழைவுகளும் காட்டின. அவள் இளமையும் எழிலும், அவள் மாய இசையும் மருட்சியூட்டும் இன்னய நிலைகளும், வண்ண ஒளி விளக்கங்களும் இன்னிசை யலைகளும் காண்போரைக் களிமயக்கத்தில் ஆழ்த்தின.

அரசன் அவளுக்கு ஆயிரத்தெட்டுப் பொன் காசு பெறுமானமுள்ள பொன்மாலையை அத்தகைய தறுவாய்களில் பரிசாக அளித்தான்.[1]

ஓவியம், சிற்பம் ஆகிய கலைகளிலும், தமிழர்போதிய அளவு உயர்தேர்ச்சி பெற்றிருந்தனர். தெய்வங்கள், மனிதர், விலங்கு வடிவங்கள், தனிமனிதர் இல்லங்கள், கோயில், அரண்மனைபோன்ற பொதுவிடங்கள் ஆகிய வற்றின் மதில்கள் பல்வேறு வண்ணங்களால் தீட்டப்பட்டிருந்தன.[2] படுக்கையறைத் திரைகளிலும் நாடக அரங்கத்திரைகளிலும் யாழ்முதலிய இசைக்கருவிகளுக்குரிய துணி உறைகளிலும் பூக்களும் பூங்கொடிகளும் மெய்வடிவுற அழகாக வரையப்பட்டிருந்தன.[3]

மரத்தாலும் மெல்லிய கிடையாலும் மிக அழகிய பதுமைகள் செய்யப்பட்டன.[4] கோயில்களிலும் மடங்களிலும் தேவ தேவியர் உருவங்கள் இருந்தன. தங்கள் வேண்டுகோள்களைச் செவிமடுத்து வரமளிக்கும் ஆற்றல் ஓவியர் கைத்திறத்தால் அப்பதுமைகளுக்கு அளிக்கப்பட்டன என்று மூட நம்பிக்கையுடைய பொதுமக்கள் எளிதில் நம்பினர். அந்த அளவுக்கு மிக நேர்த்தியான முறையில் அவை உயிர்த்தோற்றம் உடையவையாய் மெய்

1 சிலப்பதிகாரம், காதை III. 2 மணிமேகலை III. 127-130.
3 சிலப்பதிகாரம் VII, I. 4 சிலப்பதிகாரம் V, 33.

வண்ணம் தீட்டப்பட்டிருந்தன. ஆயினும் கல் உலோகம் முதலிய உறுதிவாய்ந்த பொருள்களால் செய்யப்பட்ட உருவங்கள், சிலைகள் பற்றிய குறிப்பு எதுவும் அந்நாளைய இலக்கியத்தில் இல்லை.

7 அல்லது 8ஆம் நூற்றாண்டில் கட்டமைக்கப்பட்ட மாமல்லபுரம் சிற்பங்களைவிடப் பழமை வாய்ந்த எந்தச் சிற்பக்கலைச் சின்னமும் தமிழகத்தில் கிடைக்காமலிருப்பதன் காரணத்தை இது விளக்குகிறது.

ஏழை எளிய வகுப்பினரின் வீடுகள் களிமண்ணால் கட்டப்பட்டன. கூரைகள் புல் வேயப்பட்டன. அல்லது தென்னை ஓலையோ, பனை ஓலையோ பாவப்பட்டன. சுவர்களில் செம்மண் பூசப்பட்டது. நகரங்களிலுள்ள வீடுகள் பெரும்பாலும் செங்கல்லால் கட்டப்பட்டு ஓடடுக்கப்பட்டிருந்தன. சுவர்கள் சுண்ணும்பு தீற்றப்பெற்றன. மான் கண்போல வடிவமுடைய பலகணிகள் வழியாக உள்ளறைகளுக்குள் ஒளியும் காற்றும் புகுந்தன.

வாயில் முகப்பு அல்லது பூமுகம் எப்போதும் வீட்டின் ஒரு முனைப்பான பகுதியாய் அமைந்திருந்தது. அதில் ஏறுவதற்குத் தெருவிலிருந்து படிவரிசைகள் இடப்பட்டு இருபுறமும் ஓட்டுத் திண்ணைகள் கட்டப்பட்டிருந்தன. இவற்றிலேயே வருகையாளர் அல்லது வீட்டு மக்கள் ஓய்வு நேரங்களில் தங்கியிருந்தனர்.[1] வாயில் முகப்புப் பொதுவாகக் கட்டடத்திலிருந்து விலகியிருந்தது. இடையேயுள்ள முற்றத்தில வீட்டுக்குரியவனுடைய ஆடு மாடுகள் முதலிய கால்நடைகளுக்குத் தொழுக்கள் கட்டப்பட்டன.

செல்வர் மாளிகைகளுக்குக் காரைக்கட்டு மெத்தைகள், கூடகோபுரங்கள், வேனற்காலத்துக்கும் மழைகாலத்துக்கும் வேறுவேருன தனிப்படுக்கையறைகள் ஆகியவை இருந்தன. உயர் இருக்கைகள், கட்டில்கள், மேற்கட்டிகள், அன்னத்தின் தூவிநிறைத்த மெத்தைகள், சிலையுருவங்களால் ஏந்தப்பட்ட விளக்குகள், பெண்டிர் குழந்தைகள் இன்பப் பொழுதுபோக்கான ஊஞ்சல்கள் முதலிய பல்வேறுவகைப்பட்ட தட்டுமுட்டுப் பொருள்களும் வழக்கத்தி லிருந்தன.

1 பட்டினப்பாலை அடிகள் 140—145.



கோயில்களும் அரண்மனைகளும்கூடச் செங்கலாலேயே கட்டப்பட்டன. அக்கால இலக்கியத்தில் கல் கட்டடமாக எதுவும் குறிப்பிடப்படவில்லை. ஒருவேளை பெரிய கோட்டைகளின் மதில்களும் ஞாயில்களும் கோபுரங்களும் மட்டும் அரைகுறை வேலைப்பாடுடைய கற்களும் நீறும் கொண்டு கட்டப்பட்டிருக்கக்கூடும்.

கிட்டத்தட்ட எல்லா நகர்களும் ஊர்களும் பகைவர்களிடமிருந்தும் திருடர்களிடமிருந்தும் பாதுகாப்பாக அரண் செய்யப்பட்டது. ஒவ்வொரு ஊரும் முள்மரங்களின் செறிந்த வேலியால் காக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு நகரத்தைச் சுற்றிலும் ஒரு மதிலும் அகழியும், அகழியைச் சுற்றிலும் மிகுந்த அகலமுடைய முள்மரக்காட்டு வளையமும் இருந்தன. மதுரை, கரூர், காஞ்சி ஆகிய பெரு நகரங்களின் கோட்டைகளின் ஞாயில்களில் முற்றுகையிடுபவர்கள்மீது அம்புகள் வீசவும், கற்களெறியவும்வல்ல பொறிகள் இருந்தன.

மதிலருகே வருவோரைப்பற்றி இழுத்துக் கொல்லத்தக்க தூண்டில் முள்போன்ற பொறிகளும், இரும்பு விரல்களால் பற்றிக் கிழிக்கும் பொறிகளும் இருந்தன. தவிர, மதிலேறிவர முயல்பவர்கள்மீது கொதிக்கும் நெய்யையும், உருக்கிய ஈயத்தையும் கொட்டவல்ல கொதி உலைகள் பேணப்பட்டன. அவர்களைக் குத்தித் தள்ளுவதற்கரிய நீண்ட ஈட்டிகளும், வேல்கம்புகளும் இருந்தன.[1] கோட்டையின் படைக்கலச்சாலையில் உடைவாள்கள், வாள்கள், வில் அம்புத்தூணி நிரைகள், கேடயங்கள், மார்புக் கவசங்கள், தேர்கள், குதிரைச் சேணங்கள், யானைப்படாங்கள் முதலியன சேமித்து வைக்கப்பட்டிருந்தன.

1 சிலப்பதிகாரம், XV 207—217.

கோட்டை முற்றுகை வகையில் தமிழர் பின்பற்றிய முறைப்படி, முதலில் கோட்டை சூழ்ந்த காட்டில் ஒரு பெரும் பிளவு செயது வழி உண்டுபண்ணப்படும். அதன் பின் அகழி தூர்த்துப் படைகள் மதிலை அணுக இடம் உண்டுபண்ணப்படும். இறுதியில் ஏணிகள்மூலம் மதில் ஏறி உட்செல்லவோ அல்லது அரண் தகர்க்கும்படி பயிற்சி தரப்பட்ட யானைகள்மூலம் வாயில்களை முறிக்கவோ முயற்சிகள் செய்யப்படும்.

போர் அணி வகுத்து நிறுத்தப்பட்டபோது, யானைகள் முன்னணியிலும், அவற்றின்பின் தேர்களும் குதிரை வீரரும், இறுதியிலேயே காலாட்படையினரும் நின்றனர். பொதுமுறைக் காலாள் வீரர் இடதுகையில் மாட்டுத் தோலால் செய்யப்பட்ட பெரிய கேடயங்களும், வலது கையில் ஈட்டி அல்லது போர்க்கோடாரிகளும் தாங்கினர். வில்லவர் இடதுகையில் நீண்ட வில்லும், தோளில் தொங்கலாக அம்புத்தூணியும் தாங்கினர். தவிர, ஈட்டி வீரர், வில்லவர் ஆகிய இருதிறத்தாரும் இரண்டுமுழ நீளமுள்ள அகன்றவாள் அணிந்திருந்தனர்.

காலாள்கள் தாங்கியதைவிடக் குதிரைவீரர் குறைந்த பளுவுடைய படைக்கலங்களும் சிறிய கேடயங்களும் தாங்கினர். படைகளை நடத்திய தலைவர்கள் தேரிலும் யானைகளிலும் ஏறிச்சென்றனர். அவர்கள் எப்போதும் உயர்குடியாளராய் இருந்தனர். அவர்கள் ஈட்டியும் வாளும் ஏந்தினர். பொன் வேலைப்பாடுடைய கேடயம் தாங்கினர். இருப்புக் கவசம் அணிந்தனர். போருக்குரிய தேர்கள் பளுவற்றனவாய், உயரம் குறைந்த இரண்டு உருளைகளின் மீது ஏற்றப்பட்டிருந்தன. தேரின் தட்டைச்சுற்றிலும முரட்டுப்பாய் வேய்ந்திருந்தது. அதனுள் பாகன் வீரன் ஆகிய இருவருக்குமட்டுமே இடம் இருந்தன.

ஒவ்வொரு தேரும் இரண்டு குதிரைகளால் இழுக்கப்பட்டது. நான்கு அல்லது ஏழு குதிரைகள் பூட்டிய பெருந்தேர்கள் ஊர்வலங்களிலும் விழாக்களிலும்தான் பயன் படுத்தப்பட்டன.



எதிரிகளைத் தாக்கும்போது, வில்லாளிகள் அம்புகளை எதிரிகளின் யானைகளின்மீதும் அவற்றின்மீது இவர்ந்த தலைவர்கள்மீதும் வீசினர். வில்லாளிகள் கைதேர்ந்தவர்களாகவும் பெருந்திரளாகவும் இருந்தால், முதல் அம்பு மாரியிலேயே எதிரி யானைப்படையை மருண்டோட வைத்து அவர்களிடையே குழப்பம் உண்டுபண்ணுவர். ஆனால் யானைகள் தாக்குதலை எதிர்த்து நின்றுவிட்டால், குதிரை வீரர்கள் அவற்றின்மீது வேல்களாலும், காலாள் வீரர் நீண்ட ஈட்டிகளாலும் தாக்குவர். இதன்பின் நெருங்கிய கைகலப்பில் அவர்கள் எதிரிகளின் வாட்படை, போர்க்கோடரிப் படைகளுடன் மற்போரிடுவர்.

யானைப் படையே ஒருபடையின் மிகப்பெரிய வலிமை வாய்ந்த பகுதியாயிருந்தது. ஆகவேதான் ஒரு வீரரையோ மிகப் பல வீரர்களையோ கொன்று வீழ்த்துவதைவிட ஒரு யானையைக் கொல்வதோ, போருக்குதவாதபடி செய்வதோ, மிகப்பெரிய அருஞ்செயலாகக் கருதப்பட்டது.

தமிழரிடையே படைவீரர் வகுப்பைச் சார்ந்த போர் வீரர் தம் மன்னரிடம் மிகவும் உண்மைப்பற்றுடையவராயிருந்தனர். ஒரு புலவர் தம் தலைவரிடம் ஓர் இளவீரனைச் சுட்டிக்காட்டிக் கூறுவதாவது: "அழகிய தேரும் யானைப் படையும் கொண்ட வேந்தே! நீர் பருகும் கள்ளை இந்த இளைஞனுடன் பங்கிட்டுப் பருகுவீராக. ஏனெனில் இவன் தந்தை கொடும்போரில் உம் தந்தையின் தந்தை உயிரைக் காக்கத் தன் உயிரைவிட்டான். உம் பகைவர் தம் ஈட்டிகளை உம்மை நோக்கி வீசும்போது வீரமிக்க இவ்விளைஞன் எதிரிகளுக்கும் உமக்கும் இடைநின்று போர்செய்வான்" என்று கூறினர்.[1]

மறவரிடமிருந்த இதே வீரம் மறக்குலப் பெண்டிரிடமும் கருக்கொண்டிருந்தது. ஒரு புலவர் கூற்று இதை விளக்குகிறது.

---

1 புறம். 290.

"ஆ என்னே இவள் துணிச்சல்! மறவர் குலத்துக்குத் தகுதிவாய்ந்த தாயே இவள்! நேற்று முன்னாள் தான் இவள் தந்தை போர்க்களத்தில் ஒரு யானையை வீழ்த்தித் தானும் கடும்போர் செய்து வீழ்ந்தான்: நேற்று இவள் கணவன் ஒரு யானைப்படை முழுவதையும் குலைத்தான். ஆயினும் இன்று போர் முரசு கேட்டவுடன் அவள் நிறை மகிழ்ச்சி கொண்டுள்ளாள். அவள் தன் மகனுக்கு வெள்ளாடை உடுத்துத் தலைசீவி, கையில் ஈட்டி தந்து களத்துக்கு அனுப்புகிறாள்."[1]

இன்னொரு மறக்குலத்தாய்பற்றி மற்றும் ஒரு புலவர் விரித்துரைக்கிறார்.

"நடுங்கும் உடலும் வற்றிய கைகளும் உடையவள் தான் இவள்! ஆனால் மகன் போர்க்களத்திலிருந்து ஓடினான் என்று கேட்டதுமே, அவன் உண்மையிலேயே புறங்காட்டியிருந்தால், அவனுக்குப் பாலூட்டிய மார்பகங்களை வெட்டி எறிவேன் என்ற சூளுரை கூறிக்கொண்டு, கையில் வாளேந்திக் களம் சென்றாள். குற்றுயிராகக் கிடந்த மகனுடல் கண்டு, அவனைப் பெற்றபொழுது அடைந்த மகிழ்வைவிடக் கழி மகிழ்வெய்தினாள்."[2]

போரில் இறந்தால் வீரர்களுக்கென வானுலகில் ஒதுக்கப்பட்டிருந்த தனியிடத்துக்குத் தங்கள் உயிர்கள் செல்லும் என்று வீரர்கள் நம்பினார்கள். இம்மூடநம்பிக்கையில் அவர்களுக்கிருந்த உறுதி காரணமாக, தம்மன்னர் சேவையில் உயிர்விட அவர்கள் சிறிதும் தயங்கவில்லை. மன்னர்களுக்கும் இதே மூட நம்பிக்கை இருந்தது. போரில் மிகக் கடும்புண்பட்டு வீழ்ந்தபோதும் சரி, முதுமையாலோ நோயாலோ இறக்க நேர்ந்தபோதும் சரி, அவர்கள் பார்ப்பனர் பரப்பிய திருவார்ந்த அறுகின்மீது கிடத்தப்பட்டு, வீரமாள்வு பெறும்படி வாளால் பிளக்கப்பட்டு இறப்பதையே விரும்பினர்.[3]

1 புறம். 279. 2 புறம். 278.
3 புறம். 93; மணிமேகலை, XXIII, 13—14.



அண்டையயலாருடன் ஓயாது நடைபெற்ற போர்கள் படை வீரருக்கு இடைவிடாப் பயிற்சி தந்து அவர்கள் வீர உணர்வை வளர்த்துப்பேணின. மன்னர் ஆயச்சுற்றத்தின் ஒரு பகுதியான பாணரும் புலவரும் அவர்களிடையே வீரப் புகழார்வத்தை உண்டுபண்ணவும் அதை வளர்க்கவும் மிகப் பெரிதும் உதவினர். அமைதிக் காலங்களில் அவர்கள் மன்னனுக்கும் அவன் வீரர்களுக்கும் அவர்கள் முன்னோர்களின் வீரச் செயல்கள் பற்றிய காதைகள் கூறி மகிழ்வித்தனர். போர்க்காலங்களில் அவர்கள் படையுடன் சென்று மூதாதையரின் வீரச் செயல்களைப் பின்பற்றும்படி தம் போர்ப்பாடல்களால் வீரர்களையும் தலைவர்களையும் ஊக்கினர்.

தமிழ்ப் பாடல்கள் கூறுகிறபடி புலவர்களில் நான்கு வகுப்பினர் இருந்தனர். அவர்களே பாணர், கூத்தர், பொருநர், விறலியர் என்பவர்கள்.

பாணர்கள் மிகத் தாழ்ந்த வகுப்பினர். அவர்கள் நகர்ப்புறங்களில் பொதுமகளிருடன் வாழ்ந்தனர். அவர்கள் நகருக்குநகர் சென்றபோதும் அவர்கள் மனைவியரும் பிள்ளைகளும் அவர்களுடன் உணவுக்கலமும் சமயற்கலங்களும் தூக்கிக்கொண்டு புறப்பட்டனர். கூத்தர்கள் நடிகர்கள் ஆவர். அவர்கள் ஆடியவை முறையான நாடகங்கள் அல்ல. இசைநாடகமுறை சார்ந்தவை. அதனை அவர்கள் பாடியே நடித்தனர்.

பொருநர் அல்லது போர்ப்பாடகர் மன்னன் அல்லது தலைவன் படையின் ஒருபகுதியேயாவர். அவர்கள் ஒரு சிறு முரசு ஏந்திச் சென்றனர். அதில் ஒரு குறுங்கோல் கட்டப்பட்டிருந்தது. அதனுதவியால் அவர்கள் முரசறைந்தனர்.

சோழ அரசன் நலங்கிள்ளியைப் பாடும் புலவர் கோவூர் கிழார் கூறுவதாவது : 'என் முரசில் கட்டப்பட்டிருக்கும் குணில்கொண்டு நான் முரசையடிக்கும் ஒவ்வொரு தடவையும், உன் பகைவர் நடுங்குகின்றனர்"

என்று அவர் குறிக்கிறார். இதிலிருந்து பொருநன் முரசு அறையும் போதெல்லாம், அது படையெடுத்துச் செல்லுதற்கு ஒரு அறிகுறி என்று தெரிகிறது.[1]

இவ் வகுப்பின் பெண்புலவர் விறலியர் எனப் பட்டனர்.

அப் பண்டைக் காலத்திய இலக்கியத்தின் ஒருபெரும் பகுதிக்குரிய ஆசிரியர்கள் இந்தப் போர்ப்பாடகரேயாவர்.

அக்காலப் புலவர்கள் விட்டுச்சென்ற பாடல்களிலிருந்து நமக்கு மதுரைமா நகரின் ஒரு விளக்கமான முழு உயிர் ஓவியம் கிடைத்துள்ளது. அந்த ஓவியமே தமிழர் சமுதாய வாழ்வு குறித்த இந்த இயலின் நிறைமுடிவாகக் கூறத்தக்கதாயமைகின்றது.[2]

“விடிய ஒரு யாமத்துக்கு முன்பே, பார்ப்பன இளையாணவர்கள் மறைவாசகங்களை ஓதத்தொடங்குகின்றனர். இசைவலார்கள் தம் யாழை மீட்டி அதில் பாடற்பயிற்சி தொடங்குகின்றனர். அப்ப வாணிகர் எழுந்ததும் கடைகளின் நிலத்தளத்தைத் துப்புரவாக்க முனைகின்றனர். கள்விலைஞர் முந்தி வருகின்ற தம் வாடிக்கைக்காரரை எண்ணிக் கடைகளைத் திறக்கின்றனர்.[3]

“பாணர் தம் காலை வாழ்த்துக்களைப் பாடியவண்ணம் வலம் வருகின்றனர். கோயில்களிலும், துறவியர் மடங்களிலும், பாண்டியன் அரண்மனையிலும் சங்குகள் முழங்குகின்றன. இடியோசைபோல முரசுகள் இயம்புகின்றன.[4]

1 புறம் 382.

2 மாங்குடி மருதனாரின் மதுரைக் காஞ்சி, நக்கீரரின் நெடுநல் வாடை, இளங்கோ அடிகள் சிலப்பதிகாரம்.

3 மதுரைக் காஞ்சி, அடிகள் 654 தொடர்ச்சி. கிறித்தவக் கல்லூரி மாத வெளியீடு (Christian College Magazine). பத்துப் பாட்டு என்ற தலைப்பில் தந்துள்ள இரண்டு சுவைகரமான கட்டுரைகள் மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை ஆகியவற்றின் பகுதிகளை மொழி பெயர்த்துத் தருகின்றன.

4 சிலப்பதிகாரம், XIV, 7—14.



காலைக் கதிரவன் இளங்கதிர்கள் கோட்டையின் கோபுரங்களின் உச்சிகளுக்குப் பொன்முலாம் பூசி நகரின் பாரிய நீள அகலங்களை எடுத்துக்காட்டுகின்றன.

“பெரு வீதிகள் ஆறுகள்போன்ற நீள அகல முடையன. அவற்றின் இரு மருங்கிலும் உள்ள உயரிய கட்டடங்கள் பெரும்பாலும் மேல் மாடிகளையும் பல மாடிப் பலகணிகளையும் உடையவையாய்த் திகழ்கின்றன.[1]

“ஒவ்வொரு கோயிலிலும் ஒரு கொடி பறக்கிறது. ஒவ்வொரு கள் விலையகத்திலும் ஒரு களிதுகில் ஆடுகின்றது. ஒவ்வொரு வாணிகக்களத்தின் பண்டசாலையிலும் ஒரு தனிக்கொடி திகழ்கின்றது. அதனுடன் அரசன் படைகள் பெற்ற ஒவ்வொரு வெற்றி குறித்தும் ஒவ்வொன்றாகப் பல்வண்ணத் துகிற்கொடிகள் அலைவீசுகின்றன. இக்கொடிகளின் திரளும் பல வண்ணங்களும் சேர்ந்து, நகரம் ஒரு விழாவுக்காக அணிசெய்யப்பட்டதோ என்ற தோற்றம் அளிக்கிறது.

“பகைப் புலங்களில் சூறையாடிய மன்னன் படைப் பிரிவுகள் நகருக்குவந்துகொண்டிருக்கின்றன. குதிரைகள் யானைகள், முற்றுகையிட்டுவென்ற கோட்டைகளின் அணி மணிவாயில்கள் போன்ற வெற்றிச்சின்னங்களை அவர்கள் கொணர்கின்றனர். வேறுசில படைப் பிரிவுகள் இரவில் எரியூட்டிப் பகைவர் ஊர்களிலிருந்து கவர்ந்த ஆனிரைகளை, ஈட்டிகளையே கோலாகக்கொண்டு துரத்திக்கொண்டு வருகின்றன. மன்னனுக்குக் காணிக்கையாகத் தரக் குடி மன்னர் பரிசுகளுடன் அவர்களைப் பின் தொடர்ந்து வருகின்றனர்.

“சிறிது நேரத்துக்குள் உதிரிப் பூக்களும் மாலைகளும் நிறைந்த கூடைகளை ஏந்திய பூவணிகர், மணத்தூள், பாக்கு வெற்றிலை ஆகியவற்றின் விற்பனையாளர் தெருக்களில் உலவியும் உயர் மாடங்களின் நிழலில் ஒதுங்கி இளைப்பாறியும் காட்சி தருகின்றனர். சுவை தரும்

1 மதுரைக் காஞ்சி, 357 தொடர்ச்சி,

இன்பண்டங்களும் இளமண மலர்களும் கொண்டுசெல்லும் முதியபெண்டிர் வாயில்தோறும் ஏறி இறங்கி வீட்டிலுள்ளவர்களிடம் பொருள்களை விற்பனை செய்கின்றனர்.

"செல்வ வகுப்பினர் குதிரைகள் பூட்டிய தேர்களில் அல்லது தனிப்பயிற்சிபெற்ற குதிநடைபோடும் போர்க் குதிரைகள் மீது செல்கின்றனர்.

"அவ்வப்போது ஒரு மதயானை தன் சங்கிலிப் பிணிப்பை அறுத்துக்கொண்டு காவலரைக் கொன்று வீதிவழியே பாய்ந்தோடுகின்றது. அதுகண்டு ஏழை விற்பனையாளரும் சிறு வணிகரும் அச்சமும் கிலியும் கொண்டு அங்குமிங்கும் பரபரப்புடன் ஓடுகின்றனர். யானையின் முன்னும் பின்னும் காவல்மக்கள் ஓடுகின்றனர். தெருவிலுள்ள மக்களை எச்சரிக்கும்படி அவர்கள் சங்குகளை முழக்கிக்கொண்டு செல்லுகின்றனர்.

"அவ்வப்போது குடித்து வெறிகொண்ட போர்வீரர் தெருவின் அமைதி கெடுக்கின்றனர்.

"அகன்ற சதுக்கங்களில் அமைந்துள்ள சந்தைகளில் பல் வகைப்பொருள்களும் விற்பனைக்கு அடுக்கியுள்ளன. [1]

"வண்டிகள், தேர்கள், தேரின் அணிமுகடுகள்; வாளால் துணிக்கமுடியாத கவசங்கள், இருப்பு அரைக் கச்சைகள் , தோல் மிதியடிகள், கவரியின் வெள்ளிய வால் மயிரால் செய்த விசிறிகள் ; யானை ஊக்கும் அங்குசங்கள், முகபடாத்தின் காப்புக்கேடயங்கள் ; செம்பு பித்தளையால் செய்த பலவகை உருப்படிகள் ; அழகிய பூ மாலைகள், பூசு சாந்தம், புகைச்சாந்தம் முதலிய சொல்லுதற்கரிய பல வகைப் பொருள்கள் அச்சந்தைகளில் கொட்டப்பட்டுக் கிடக்கின்றன.

"அணிமணிகாரர் வீதியில் அந்நாளைய வணிகர்களே வகையறிந்திருந்த நால்வகை வயிரங்கள், மரகதங்கள், மாணிக்கங்கள், நீலங்கள், புட்பராகங்கள், வைடூரியங்கள்,

1 சிலப்பதிகாரம் XIV 168—211.



கோமேதகங்கள், ஒளிதரும் முத்துக்கள் செம்பவள மணிகள் ஆகியவை விற்கப்பட்டன.

பொன் வணிகர் ஒரு தனி வீதியில் வாழ்ந்தனர். அவர்கள் சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம் என்ற பெயர்களைக்கொண்ட நால்வகைப்பட்ட தங்கத்தையும் விற்றனர்.

"பருத்தியாலும் கம்பளியாலும் பட்டாலும் இயன்று பல்வண்ணமும் பல்வகைப் படிவங்களும் கொண்ட ஆடைகள் பகட்டாக நிரைநிரையாக மடித்தடுக்கப்பட்டு ஒவ்வோர் அறுவைக்கடையிலும் நூற்றுக்கணக்காக விற்பனைக்குக் காத்துக்கிடந்தன.

"மிளகுச் சரக்குகள், நெல், சாமை, கொள்ளு, பயறு, எள்ளு முதலிய பதினாறுவகைக் கூலங்களின் குவியல்கள் கடைகளிலும் வீதிகளிலும் நிரப்பிக்கிடந்தன.

"கையில் எஃகு முழக்கோலும் படியளவைகளும் ஏந்தியவாறு தரகர்கள் எங்கும் சுற்றித்திரிகின்றனர். மக்கள் வாங்கும் மிளகையும் கூலவகைகளையும் வணிகர் அளந்துகொண்டிருக்கின்றனர்.

"அறங்கூறவையங்களில் கலைநிறை நடுவர் தலைமையிடத்தில் வீற்றிருக்கின்றனர். அவர்கள் கடுஞ்சினமோ மிகுதி கண்ணோட்டமோ இன்றி, இருதிறச்சான்றுகளையும் ஒப்ப எடைபோட்டுப் பார்த்து, அச்சமோ சலுகையோ இன்றிச் சட்டமுறைகளை ஆய்ந்துரைக்கின்றனர்.

"அமைச்சரவையில் காவிதி என்னும் உயர் பட்டம் பெற்ற புகழுடைய மன்னர் மதியமைச்சர்கள் வீற்றிருக்கின்றனர். அவர்கள் தம் கூரிய அறிவுத்திட்பத்தால் மன்னனுக்கும் அவன் ஆளும் மக்களுக்கும் நேரக்கூடும் தீமைகளை முன்னறிந்து தடுத்தும், நன்மைகளை அறிந்து பெருக்கியும் செயலாற்றுகின்றனர்."

1 மதுரைக் காஞ்சி, அடிகள் 489 தொடர்ச்சி.

மதில்சூழ்ந்த ஒரு பேரகல் வளைவுக்குள் பாண்டியன் அரண்மனை திகழ்கின்றது.[1] அதன் வாயில் மிக உயரமாக இருப்பதனால், யானைகள் தம்மீதுள்ள கொடிகளைத் தாழ்த்தாமலே உள்ளே நுழைய முடிகிறது.

ஒரு கவிஞர் வாயிலைப் பாடியுள்ளார்.

"வாயில்மீதுள்ள கோபுரம் ஒரு மலை போன்றது. அதன் அடியிலுள்ள வாயில் மலை குடைந்து திறந்து உருவாக்கிய துரப்புவழி போன்றிருக்கிறது."

"வாயில் கதவுகள் மடக்குக் கதவுகளாய், இரும்பு விசிறி இணைக்கப்பட்டு, திண்ணிய கனத்த இரும்புக்கம்பிகளும் தாழ்களுமிட்டு வலுவூட்டப்பட்டவையாய் விளங்குகின்றன. இவையாவும் செங்குருதிவண்ணத்தில் தீட்டப்பட்டுள்ளன. வாயில் தூண்களில் காவல் தெய்வங்களின் உருவங்கள் தீட்டப்பட்டுள்ளன.

"உள்முற்ற வெளியில் மணல் பரப்பப்பட்டுள்ளது. அம்மணலில் நீண்ட வால்மயிருடைய கவரிமானும் குறுங்கால்களையுடைய அன்னங்களும் விளையாடுகின்றன. முற்றத்தின் மற்றொருபுறத்தில் மன்னன் குதிரை இலாயங்கள் இருக்கின்றன. அவற்றில் மன்னன் சிறப்புரிமைக்குரிய உயரிய தோற்றமுடைய போர்க்குதிரைகள் எந்த நேரமும் ஆயத்தமாக நிற்கின்றன.

"அரசியாருக்கும் அரசியாரின் ஆயத்தாருக்கும் தனிப்பட்ட வீறுமிக்க மாடங்கள் உள்ளன. அவற்றின் எல்லையில் மன்னன் தவிர மற்ற எந்த ஆடவரும் நுழைதல் கூடாது. அவற்றில் வானவில்லின் ஏழு நிறங்களும் கொண்ட கொடிகள் ஆடுகின்றன. சுவர்கள் மெருகிட்ட பித்தளை நிறமாகத் தீற்றப்பட்டுள்ளன. இடையிடையே வெள்ளிபோல மின்னும் நிறத்துடன் அவை நீறிடப்பப்பட்டுள்ளன. சுவரின்மீது தீட்டப்பட்ட அழகிய பூங்கொடி ஓவியங்களும் தூண்களின் நீல நிறமும் சேர்ந்து மிக அழகிய ஓவியக்காட்சியாய் அமைகின்றன.

1. நெடுநல்வாடை, அடிகள், 76—114.



"கொலுமண்டபத்தில் பாண்டியன் அழகுடன் வீற்றிருக்கின்றான். அவன் இடுப்பில் முறுகலாகத் தேய்த்துமடியிடப்பட்ட ஒரே ஒரு ஆடை அணிந்திருக்கிறான்.[1] அதன் மீது மணிபதித்த கச்சை இறுகக் கட்டப்பட்டுள்ளது.

"முழங்கைக்குமேல், மூடாத மேற்கைமீது, அழகிய வேலைப்பாடமைந்த பொன்னாலான கையணிகள் உள்ளன.

"அவன் அகன்ற தோள்கள் இனிய மணமுடைய சாந்தணியப்பெற்றுள்ளது. அதன்மீது பூ மாலையுடன் ஒளிமிக்க முத்துமாலை ஒன்றும் புரள்கின்றது.

"அரசனைச் சூழ்ந்து பல அரண்களைக் கைப்பற்றியும் பல யானைகளைப் போரில் வீழ்த்தியும் புகழ்பெற்று, பல கலங்களில் நைந்து முறிவுற்ற பெருமையுடைய கவசமணிந்தவாறு அவன் நம்பிக்கைக்குரிய உரமிக்க வீரரும் படைத்தலைவர்களும் நிற்கின்றனர்.

"கூத்தரும் பாணரும் யாழ்ப்பாணரும் மன்னன் முன்னிலையில் தங்கள் திறங்கள்காட்டித் தேரும் யானைகளும் பரிசில்களாகப் பெறுகின்றனர்.

"குளிர்ந்த மாலை நேரங்களில், பெருமக்கள் குதிரைகள் பூட்டப்பட்ட அழகியதேர்களில் ஏறிச்செல்கின்றனர். அவர்கள் காலாள்வீரன் அவர்களுடன் தேரின் அருகிலேயே ஓடிவருகிறான்.[2] அவர்கள் சிவந்த ஆடை அணிகின்றனர். பொன்னால் இழைக்கப்பட்ட உறைகளில், விலாப்பக்கமாக அவர்கள் வாள்கள் தொங்குகின்றன.

பெருங்குடிப் பெண்டிர் காலில் சிலம்பும் கையில் பொன்வளைகளும் அணிந்து மாளிகையின் மாடங்களில் வந்து நின்று உலவுகின்றனர். அவர்கள் மேனிமீதுள்ள நறுமணம் தெருக்களில் பரவுகின்றது.

"பொது வீதிகளில் சங்கறுப்போர், மணிகோப்பவர்கள், பொன் வினைஞர், கன்னார், தையல் வேலைக்காரர்

1 மதுரைக் காஞ்சி, அடிகள், 716—752.
2 மதுரைக் காஞ்சி, அடிகள், 431 தொடர்ச்சி.

கள், நெசவு வேலையாட்கள், ஓவியர், பூவாணிகர்கள், மணப் பொருள் வாணிகர் முதலிய பல்வேறு வகைப்பட்டமக்கள் மிடைந்து நெருங்கித் தத்தம் பொருள்களை விற்றவண்ணம் செல்கின்றனர்.[1]

"உணவகங்களும் அருந்தகங்களும் இப்போது வருவோர் போவோர் திரள்களால் நிரம்பியுள்ளன. அவர்கள் மாங்கனியும் பலாக்கனியும் கற்கண்டும் பசுங்காய்களும் காய்ச்சற்கிழங்கும் சர்க்கரைப் பொங்கலும் இனியசுவை மலிந்த கறியுணவுகளும் உண்ணுகின்றனர்.

"பல்வகை அரவங்களை அடக்கி மேலெழுந்து முரசுகளும் இசைக்கருவிகளும் 'திடுமென முழங்கி, மக்களை மாலை வழிபாட்டுக்குக் கூவியழைக்கின்றன. மின்னும் அணிமணியாடைபுனைந்த பெண்டிர் தத்தம் கணவருடனும் மக்களுடனும் நறும்புகையும் மலரும் தாங்கிப் புத்த மடங்களுக்குச் செல்கின்றனர்.

"குடைந்த பாறைகளிலுள்ள குகைகள் போன்று விளங்கும் ஒதுக்கிடங்களில் பார்ப்பனத் துறவிகள் தத்தம் சமயக்கிளைகளுக்குரிய மந்திரங்களை முணுமுணுக்கின்றனர். அம்மடங்களில் மதில்கள் செவ்வண்ணம் பூசப்பட்டு வானளாவி யுயர்ந்துள்ளன. அவற்றை யடுத்து அழகிய பூந்தோட்டங்கள் உள்ளன.

"வேறு சிலர் பார்ப்பனச் சமயக் கோயில்களுக்குச் சென்று தெய்வங்களுக்கு மாலை வேள்வியாற்றுகின்றனர்.

"அத் தெய்வங்களில் முதன்மையானவர் ஐம்பூதங்களையும் படைத்து ஆற்றல் சான்ற மழுப்படை ஏந்திய தெய்வம் (சிவபெருமான்) ஆவர்.[2]

"மாலை நிழற்படலங்கள் நெருங்குந்தோறும், ஒவ்வொரு வீட்டிலும் விளக்குகள் ஏற்றப்படுகின்றன. பன்னிற உடையணிந்த இளைஞர்கள் ஒருபுறம், மலர்களும்

1 மதுரைக் காஞ்சி, அடிகள், 511 தொடர்ச்சி.

2 மதுரைக் காஞ்சி, அடிகள், 453 தொடர்ச்சி.



அணிமணியிழைகளும் பூண்ட பொதுமகளிர் மற்றொருபுறம் வீதிகளில் உலவத் தொடங்குகின்றனர். தெருவில் யானைகள் செல்லாமல் தடுப்பதற்காகக் கவைக்கற்கள் போடப்பட்டுள்ளன. அவற்றைச் சட்டைபண்ணாமல் தள்ளாடியவண்ணம் அவற்றின் மீதே குடிவெறியர் செல்கின்றனர்.

"இளந்தாயரான நங்கையர்கள் விளக்குகளுடனும் உறவினர்காவலுடனும் யாழும் முழவும் உடனிணைய இனிய பண் பாடிக்கொண்டு, தம் குழந்தைகளுக்குத் தீங்கற்ற நல்வாழ்வு அருளும்படி தேவியை வணங்குவதற்காக அவியுணவும் காணிக்கைகளும் கொண்டு செல்கின்றனர். பூசைநங்கையுடன் அவர்கள் அவ்வருளுணவைப் பகிர்ந்துண்கின்றனர்.

"புறஞ்சேரிகளில் ஏழை வகுப்பினர் கணியரின் ஆணைப்படி முருகனுக்கு விழாவெடுக்கின்றனர். கல்லா முரட்டுப் பெண்களுடனும் ஆரவாரத்துடனும் பாட்டு முழக்கத்துடனும் அவர்கள் கைகோத்து ஆடுகின்றனர். சில்லிட்டு ஆர்ப்பரிக்கும் தாளங்களும் முரசங்களும் சேர்ந்து முரணிசை முழக்குகின்றன.

"படிப்படியாக ஆடல்பாடற் குழுக்கள் கலைகின்றன. சிறு கடைக்காரர்கள் தம் கடைகளை அடைக்கின்றனர். இன்னுஞ் வாணிகர் தத்தம் கடை முன்றிலிலேயே துயில் கொள்கின்றனர். நகரில் அரவம் முற்றிலும் ஓய்கிறது.

"இரவு காவலர் இப்போது தெருக்களில் காவல் வருகின்றனர். பிழையா இலக்குடைய வில்லம்பேந்தியவர்களாய், அஞ்சாத நெஞ்சுடனும் துயிலாத கண்களுடனும் அவர்கள் நகர் சுற்றுகின்றனர். மழைபொழியும் இருண்ட இரவுகளில் தெருவெல்லாம் வெள்ளக்காடாக ஓடும்போதும் அவர்கள் தங்கள் கடமைகளில் சிறிதும் தவறுவதில்லை."[1]

---

1. மதுரைக் காஞ்சி, அடிகள், 646—650.

# 10. திருவள்ளுவர் குறள்

அக்காலச் செய்யுள் நூல்களுள் பல முழு வடிவிலே இன்று நமக்கு வந்து சேர்ந்துள்ளன. அவற்றிடையே தலைசிறந்த மக்கட்புகழ் உடையது வள்ளுவரால் இயற்றப் பட்ட முப்பால் அல்லது குறள் ஆகும். பின்வந்த தலைமுறைகளனைத்திலுமே அதன் செல்வாக்கு மிகுதியாகக் காணப்படுகிறது.

திருவள்ளுவர் வாழ்க்கையைப்பற்றி நமக்கு ஆராய்ச்சி முறைக்கு ஒத்த சான்றுகள் எதுவும் கிட்டவில்லை. ஆனால் அவர் தற்போது சென்னைமாநகரின் பேட்டைகளுள் ஒன்றாயிருக்கும் பழமைவாய்ந்த மயிலாப்பூரில் பிறந்தவர் என்று பொதுவாக நம்பப்படுகிறது. தம் பெரு நூலுக்குப் பாண்டியன் ஆதரவையும் பாண்டியனுடைய சங்கப்புலவர் ஒப்புதலையும் பெறும் நோக்கத்துடன் அவர் மதுரைக்குச் சென்றார்.

இப் புலவர்களில் சிலர் மதுரையிற் பிறந்தவர்கள். மற்றும் சிலர் சோணாட்டிலுள்ள உறையூரிலிருந்தும் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்தும் வந்தவர்கள். வேறு சிலர் கொங்கு நாட்டிலுள்ள செல்லூரிலிருந்தும் தொண்டை நாட்டிலுள்ள வேங்கடத்திலிருந்தும் தமிழகத்தின் ஏனைய பகுதிகளிலிருந்தும் வந்தவர்கள்.

'இனிய நாற்பது' என்ற சிறிய நூலின் ஆசிரியர் பூதன்சேந்தனார்; அறநெறி வாசகங்களடங்கிய திரிகடுகத்தின் ஆசிரியர் நல்லாதனார்; கலித்தொகை தொகுத்த நல்லந்துவனார்; இன்பத்துறை அதாவது அகப்பொருள் இலக்கணம் தந்த இறையனார்; குறிஞ்சிப்பாட்டு, இன்னா நாற்பது ஆகிய சிறுமணிச் செல்வங்களை அளித்த கபிலர்;



ஆலங்கானப்போர் வெற்றிகண்ட பாண்டியன் நெடுஞ்செழியன்; வெற்றிவாகையை மதுரைக்காஞ்சியால் விறல் படப்பாடிய மாங்குடி மருதனார்; நெடுநல்வாடை, திருமுருகாற்றுப்படை முதலிய கவினுறு சிறு காவியங்களியற்றிய புலமைசால் நக்கீரர்; சுவைமிக்க புத்த பெருங்காவியமாகிய மணிமேகலையை உருவாக்கித்தந்த புத்தப் பெரும் புலவர் சீத்தலைச் சாத்தனார் ஆகியோர் அப்புலவர் பெருங்குழுவில் இருந்தனர்

இவர்களல்லாமல், மருத்துவம், கணிதம், இலக்கியம் ஆகியவற்றில் தனிச்சிறப்படைந்த பெரும்பேராசிரியர்களும் இடம் பெற்றிருந்தனர். ஆனால் இவர்களுக்குரிய தனிச் சிறப்பு நூல்கள் நம்மைவந் தெட்டவில்லை.

அந்நாளைய தலைசிறந்த கவிஞர், புலவர் ஆகியவர்களிடையே, தமிழகத்தின் புலவர்களை ஆதரிக்கும் புரவலர்களில் தலைசிறந்தவனான பாண்டியன் உக்கிரப்பெரு வழுதியின் முன்னிலையிலே, வள்ளுவர் தம் அரிய நூலின் மதிப்புரையையும் ஒப்புதலையும் எதிர்நோக்கி நின்றிருக்க வேண்டும்!

நூலின் பெயரே குறித்துக்காட்டுகிறபடி, முப்பால் மூன்று கூறுகளாய் இயங்கிற்று. அவை அறம் அல்லது நற்குணம், பொருள் அல்லது செல்வ வாழ்வு, இன்பம் அதாவது காதல் என்பன. சூத்திரப் பண்பின் மணிச் சுருக்கச்செறிவோடு கவிதைப்பண்பின் இனிமையும் ஒருங்கேகொண்ட நீதி வாசகங்களின் தொகுதி அது.

ஆசிரியர் நிகண்டநெறி சார்ந்தவரென்று தோற்றுகிறது.[1] இங்ஙனம் தம் நிகண்ட நெறியில் உறுதியான பற்றுடையவராயினும், அவர் திறந்த சிந்தையராகக் காணப்படுகிறார். மெய்யறிவென்பது மெய்யின்பத்துக் குரிய அறிவென்று அவர் கருதினார்.

---

1. "கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்"

*"ஈதலை ஏற்பது, ஏற்பவன் குறைகளைக் கட்டாயம் நீக்கும். ஆயினும் ஏற்றல் நல்லதன்று" என்றார் அவர். அதுமட்டுமன்று. "ஈதலின் பயனாகத் துறக்கம் என்று ஒன்று கிட்டாதிருந்தால்கூட, ஈதல் நல்லதே" என்று அவர் வலியுறுத்தினார்.*

---

"தினற்பொருட்டால் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவா ரில்"

என்பன போன்ற குறட்பாக்களே பெரிதும் மூலஆசிரியரின் இக்கருத்துக்குக் காரணம் என்பதில் ஐயமில்லை.

"ஊனைத்தின் றூனைப் பெருக்காமை முன்னினிதே!"

என்று இனியது நாற்பதும்,

"அக்கேபோ லங்கை ஒழிய விரலழுகித்
துக்கத் தொழுநோய் எழுபவே—அக்கால்
அலவனைக் காதலித்துக் கான்முறித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்"

என்று நாலடியாரும் இதே கருத்தை வலியுறுத்துகின்றது.

கொல்லாமையும் ஊன் மறுப்பும் சமணச்சமயத்துக்குத் தனிச் சிறப்புடைய கோட்பாடுகள் என்பதில் ஐயமில்லை. வேறு எச்சமயமும் இவற்றை இவ்வளவு கண்டிப்பாக வலியுறுத்தவில்லை. ஆயினும் அக்கொள்கை புத்தம், சைவம், வைணவம் ஆகியவற்றுக்கு மாறுபட்டதன்று. அவற்றுக்கும் பொதுவுரிமையுடையதே. வள்ளுவர் சமணர்தான் என்று வலியுறுத்த இந்த ஒரு கொள்கை போதாது. வள்ளுவர் குறளில் காட்டத்தகும் பிற சமணமதச் சான்றுகளும் இவ்வாறு பொதுத் தன்மையுடையனவே. இந்திரனே சாலும் கரி, தாமரைக்கண்ணான், தவ்வை, திருமகள் ஆகிய குறிப்புக்களும் கீழ்த்திசையிலுள்ள பெரும்பாலான சமயங்களுக்கு, அவற்றை அளாவி நீரிடை நெய்போல் இலங்கும் ஆரிய சுமார்த்த சமயத்துக்குக்கூடப் பொதுவானதே. 'மலர்மிசை ஏகினான்' முதலிய குறிப்புக்கள் பொதுவுரிமையுடன் புத்தசமயத்திற்கே சிறப்புரிமையாகக் கொள்ளத்தக்கன.

தவிர, வள்ளுவர் 'கொல்லாமை'க் கருத்தை நாலடியார் முதலிய சமண நூல்களுடனும், புத்த முதலிய பிற சமய நூல்களுடனும் ஒப்பிட்டுக் கண்டால் ஒரு புதிய உண்மை விளங்கும். கல்வியை வலியுறுத்தும்போது கல்லாதவன் விலங்கு என்று கூறி, அதை மனித இனத்தின் இன்றியமையா அடிப்படைப் பொதுப் பண்பாகக் காட்டியவர் திருவள்ளுவர் கொல்லாமையை வலியுறுத்தும் போது அதைப் படிப்படியாக உலகை உண்ணின்று திருத்தும் ஒரு குறிக்கோளாக்கி, அதனைச்



*"அஞ்சாத வீர உள்ளம் உயர்வுடையதே. ஆனால் இன்னலில் உழல்பவர் நிலைகண்டு உருகும் ஈரநெஞ்சம் அதனினும் சிறந்ததாகும்" என்பது அவர் கருத்து.*

*இன்பம் நிறைந்த இல்லறவாழ்வின் அருஞ்சிறப்புக்களை அவர் இனிய வளமிக்க சொற்களால் பாராட்டுகிறார். கற்புடைய மனைவியை அவர் கடவுள் தன்மையுடைய ஒருவராகப் போற்றுகிறார்.*

*"தாம் ஈன்றெடுத்த சிறுவர் மழலை இளஞ்சொற்களைக் கேளாதவர் தாம் புல்லாங்குழலின் இசை இனிதென்பர்; யாழிசை இனிதென்பர்."*

*"கணவனையன்றி வேறு கடவுளை வணங்காத காரிகையரின் விருப்பத்துக்கு வானமும் இணங்கி மழை பொழியும்."*

*பொதுமகளிர் தொடர்பை நாடுவோரை அவர் இகழுக்குரியோர் என எடுத்துக்காட்டினார். "விலைமகள் முயங்கும் பொய் முயக்கம் இருட்டறையில் தடவிப் பிணம் தழுவிய அனுபவத்துக்கு ஒப்பாகும்"*

*மாந்தர் செய்யத்தக்க தொழில்கள் எல்லாவற்றிலும் வேளாண் தொழில் செய்பவரையே அவர் உயர்வுமிக்கோராகக்கொண்டனர். "உழுதுண்டு வாழ்பவர்கள் தாம் உண்மையில் இன்ப வாழ்வு வாழ்பவர்கள். மற்றவர்கள் வாழ்வெல்லாம் பிறரைப் பின்பற்றி நின்று தொழுது வாழும் வாழ்வேயாகும்."*

---

செயல்முறைக் கோட்பாடாகக் கொண்டவரைத் 'தெய்வமனிதர்,' 'அந்தணர்' எனக் காட்டினார் 'கொள்ள முடியாதவரும் பின்பற்றுக, பின்பற்ற முடியாதவரும் பேணுக, பாராட்டுக, வழுத்துக' என்றார்.

புத்த, சமண, சைன, வைணவக் கருத்துக்கள் உருவாகுமுன் அச்சமயப்பெயர்கள் வேறு வேறாகத் தமிழர் நெறியினின்று பிரியுமுன், ஆரியம் இடைநின்று தமிழரின் ஒரே நெறியைப் பலவாகப் பிரிக்குமுன் அவ்வெல்லா நெறிகளுக்கும் வழிகாட்டிய மிக முற்பட்டகாலத் தமிழ் அறிவர். மரபுசார்ந்த அறிஞருள் ஒருவரே திருவள்ளுவர் என்பது உய்த்துக் காணத்தக்க உண்மை ஆகும்.

செயலற்று அழுதழியும் ஊழ்வாதிகளைக்கண்டு அவர் ஏளன நகை நகைக்கிருர். எத்தகு பெருங் காரியத்தையும் முயற்சியாலடைதல் கூடும் என அவர் ஊக்குகிருர். "அயராது ஊக்கத்துடன் உழைப்பவர் ஊழையும் வெல்வது உறுதி" என்பது அவர் கோட்பாடு.

"ஒரு செயல் மிகக் கடுமையானது என்றெண்ணி மனந் தளர்வடையாதே! பெரு வெற்றிகள் யாவும் இடைவிடாமுயற்சியின் பயன்களே!"

கல்வியை அவர் எல்லார்க்கும் உரிய பொதுவுரிமையாகப் பராவினர். கல்வியில்லாத வாழ்வு வாழ்வதற்குரிய சிறப்புடையதன்று எனக் கூறினர். "கல்வியற்றவர்களும் வாழ்கிருர்கள். ஆனல் அது என்றும் விளைவியாதவற்றற் பாலை போன்ற வாழ்வு." "கல்வி கல்லாதவர்களுக்கும் கல்வி கற்றவர்களுக்கும் இடையே உள்ளவேறுபடு விலங்குகளுக்கும் மக்களுக்கும் இடையேயுள்ள வேறுபாடே!" "மெய்யறிவுடையவர்கள், எல்லாப் பொருள்களும் உடையவர்களே! அறிவில்லாதவர்களோ, எது இருந்தாலும், ஒன்றும் இல்லாதவரேயாவர்."

நிகண்டவாதியானபடியால்,[1] உயிருடைய ஒன்றனை அழிக்காமலிருப்பதையே அவர் உயர்வுமிக்க நெறி என்று

1. மூல ஆசிரியரின் இக்கருத்து முழுதும் உண்மையல்ல என்பதை அவர் அடுத்துக்கூறும வாசகங்களே காட்டுகின்றன. திருவள்ளுவருக்குரிய சமயம் எதுவாயினும் அவர்க்குரிய சிறப்பு அவர் மேற்கொண்ட சமயமன்று, அவர் திறந்த சிந்தையேயாகும். கொல்லாநெறி நிகண்டவாதிகளுக்கே தனிச்சிறப்புடைய கோட்பாடாயினும், இன்றைய புத்தம், சமணம், வைணவம் போன்ற கீழை உலக நெறிகள் எல்லாவற்றுக்கும் சிறப்பற்றதன்று. ஏனைய சமயங்களுக்குக்கூட முற்றிலும் முரண்பட்டதன்று. உலக நெறிகள், உலக இலக்கியங்களை ஆய்ந்துணர்ந்த பெரியார் பலரும், ஆல்ஃவிரட் ஷ்வைட்ஸர் உட்பட, அவரைச் சமயம்சார்ந்த அறிஞர் என்பதைவிட, சமயம் கடந்த அறிஞர் என்றே கொள்கின்றனர் என்பதும் கூர்ந்து நோக்கத் தக்கது.

தவிர, திருவள்ளுவர் காலம் சங்க காலத்திறுதிக்கு முற்பட்டது என்பதைத்தவிர, வேறெவ்வகையிலும் உறுதிபெறவில்லை. இந்நிலையில்



கொண்டார். பிராமணர்களின் குருதிப் பலி வேள்வி முறைகளை அவர் இகழ்ந்தார். "நெய்யூற்றி ஆயிரம் வேள்விகள் செய்துகூட என்னபயன்! ஓர் உயிரைக் கொல்லாமலிருப்பதே அவற்றைவிட மிகுதியான பயனைத் தரும்!"

வினைப்பயனின்[1] மெய்ம்மையில் அவர் நம்பிக்கையுடையவர். "முற்பகலில் நீ பிறருக்குத் தீங்குசெய்தால், பிற்பகலிலேயே நீ அதன் விளைவாகத் தீமையை நுகர்வாய்!" "உன்னை நீ நேசிப்பது உண்மையானல், தீய செயல்களைக் கனவிலும் கருதாதே!"

கற்றவர்க்கு அவர் கூறும் உறுதிமொழிகள் கல்வி இறுமாப்பைவிட்டு, ஓயாக் கடு உழைப்பை நாடவேண்டும் என்பதே. "நன்மையயத்தலில்லாத எந்தச் செயலையும் செய்ய முயலக்கூடாது." "இயலுலகை ஆளும் தனிமுதல் அறிவனை வணங்கி வழிபடவேண்டும்."

"இன்பத்தை நாடி அவாவாதவன், துன்பத்தை என்றும் அடையமாட்டான்."

புத்த சமண நெறிகள் தாமும் அவர் காலத்தில் இயங்கின என்று அறுதியிட்டுரைத்தல் கூடாதது. அந்நெறிகளின் கோட்பாடுகள் உளவாகலாம். ஆனல் அந்நெறிகளுக்கு முற்பட்டே அக் கோட்பாடுகளைக் காண்பது அரிதன்று. ஏனெனில் அவ்விருபெருஞ் சமயங்களும் சைவ வைணவ சமயங்களைப் போன்றே தொன்று தொட்டு வளர்ந்துவந்த கருத்துக்களின் மலர்ச்சிகள் ஆகும். தெளிவாக உருவானபின்னரே புத்தம், சமணம், சைவம், வைணவம் என்ற பெயர்களுக்குக் கொள்கைகள் இலக்காவன. அத்தகைய நிலையில்உருவான எச்சமயத்தின் தெளிவான கோட்பாடுகளையோ சின்னத்தையோ திருக்குறளில் அறவே காண முடியாது. சங்க இலக்கியங்களிலும் தொலகாப்பியத்திலும்கூட அவற்றைப் பிற்கால நூல்களில் காணும் முறையில், காணும் அளவில், காணடலரிது.

தமிழர் பண்டைச்சமய வாழ்வு இன்றைய பல சமயங்களின் உருவாகா மூலக்கருமுதலைத் தன்னிடமாகக்கொண்ட வாழ்வேயாகும். அதில் எல்லாச் சமய மூலமும் காணலாம். ஆனல் அது எச்சமயத்துக்கும் உரித்தன்று.

1. Nemesis.

"என்றும் தற்பெருமைகொண்டு தருக்காதே. நலம் பயவாத எச்செயலையும் செய்யாதே."

"அந்தோ! கற்றறிந்தவர் அறிவின் முதல்வன் அடிகளை வழிபடவில்லையானால், கல்வியினால் என்ன பயன்?"

தமிழர் அன்றறிந்த மொழிகளிலே, எம்மொழியிலும் இதுபோல ஒரு நூல் அதுவரை வெளிவந்ததில்லை.[1] எனவே அவர்கள் அதைப் போற்றத்தக்க ஏடென ஏற்றனர். அரசனை முன்னிலைப்படுத்தி ஒவ்வொரு புலவரும் அவ்வேடு பற்றிய தத்தம் கருத்தைத் தெரிவித்தனர்.

"வள்ளுவர் ஏடு என்றும் நின்று நிலவும். வருங் காலத்துக்குரிய எத்தனையோ தலைமுறைகளுக்கு அது வழிகாட்டி ஊக்கும்" என்று இறையனார் உண்மையிலேயே இறைமையுணர்வுடன் முன்னறிந்து கூறினார் என்னலாம்.

"என்றும் ஒருவரோடொருவர் பூசலிட்டே வந்தனர், அறுசமயத்தவர்! இன்று இந்த முப்பாலை அறுவரும் ஒருவராகநின்று ஏற்றுக்கொண்டனரே! என்ன அருமைப்பாடு!" என்று வியந்தார் கல்லாடர்.

மற்றொரு புலவர் எழுந்து கிளர்ச்சியுடன் கூறினார்! "நெடுமாறனே! எதிரிகளை வீழ்த்தும் வெற்றிவாள்

1. நாமறிந்தவரை இன்றும் தமிழர் அறிந்த எந்த மொழியிலும் இது போன்ற ஒரு நூல் எழுந்ததில்லை என்பதை உறுதியாகக் கூறலாம். உலகின் பல மொழிகளையும் இலக்கியங்களையும் ஆய்ந்துணர்ந்த உலக அறிஞர் எத்தனையோ பேர் திருக்குறளின் மறவாப்புகழை இறவாப் புகழாக ஏத்தியுள்ளனர். சமஸ்கிருத வாணர்கூட இந்நூலுக்கு இணை நூலாக சமஸ்கிருதத்தில் எதையும் எடுத்தியம்பக்காணோம். ஜெர்மன் பேரறிஞரான ஆல்ஃவிரட் ஷ்வைட்ஸர் 'இந்தியாவின் சமயச் சிந்தனை' (The Religious Thought of India by Alfred Schweitzer) என்ற நூலில் இந்தியாவின் பேரருட் பெரியார் சிந்தனைகளுக்கெல்லாம் மூலமுதலான சிந்தனைக் கருமூலம் திருவள்ளுவர் திருக்குறளே என்றும், மேலை உலகின் அருட்பெரியார் சிந்தனைகள் அனைத்துக்கும் அதுமேம்பட்ட புதுவிளக்கம் என்றும் கட்டற்றமுறையில் கட்டுரைத்துள்ளார்



உன்னுடையதே. இத்துடன் இன்று நீ கேட்ட சொல்லை வேறு எவரும் என்றும் கேட்டிருக்கமாட்டார்கள். அது கேட்டு நாம் அறம் இன்னதென்றறிந்தோம். பொருள் இது எனப் புரிந்தோம். இன்பவழியும் தெரிந்தோம். உலவா வீட்டின்பமும் இனி எமக்கு எளிது!" என்றார்.

"ஏட்டில் எழுதினால் மதிப்புக் கெட்டுவிடும் என்று எண்ணி ஆரியர் தம் வேதத்தை எழுதிவைக்காமல் நெட்டுருப்பண்ணிப் பேணுகின்றனர். ஆனால் வள்ளுவர் முப்பாலை ஏட்டில் எழுதி எல்லாரும் வாசித்தாலும் அதன் மதிப்புக் குறைவதில்லை" என்று பாராட்டினார் மற்றொருவர்.

"ஞாயிறு, திங்கள், வெள்ளி, வியாழன் ஆகிய நான்குமே மண்ணகத்தின் பரப்பில் நின்று இருளை ஓட்டுகின்றன. ஆனால் கற்றறிந்த வள்ளுவரின் குறள் ஒன்றே மக்கள் உள்ளங்களுக்கு ஒளி கொடுக்கின்றது" என்று அழகான வானநூல் உவமை தந்தார், ஒரு வானநூற் புலவர்.

"கொம்புகளால் கல்லரண்களைப் பிளக்கும் யானை போன்ற விறலுடைய அரசனே! சிந்திக்கண்டமும் சுக்குத் துண்டும் தேனும் கலந்து முகர்ந்தால் எவருக்கும் தலையிடி குணமாய்விடும். ஆனால் நம் (சீத்தலைச்) சாத்தனாருக்கு முப்பால் கேட்டபின்தான் தலையிடி தீர்ந்தது!" என முப்பால்பாராட்டுடன் தம்முடைமை மருந்து விளம்பரத்தையும் இணைத்தார் ஒரு மருத்துவப் புலவர்! இப்புலவர் நயமிக்க நகைச்சுவையும் உடையவராயிருந்திருக்க வேண்டும்! ஏனென்றால் தம் புலமைத்தோழரான சாத்தனாருக்கு அவர் இப்பாட்டில் ஒரு பாராட்டையும் ஒருநையாண்டியையும் ஒருங்கே அளித்துள்ளார்.

ஒவ்வொரு பாட்டுப் பிழைக்கும் இலக்கணப் பிழைக்கும் சாத்தனார் எழுத்தாணியால் ஒருதடவை தம் தலையில் குத்திக்கொள்வாராம். புலவர் கழகத்தில் திருக்குறளின் 1330 பாக்களும் வாசிக்கப்பட்டபோது,

ஒருதடவையாவது இப்படிக் குத்திக்கொள்ள அவருக்கு வாய்ப்பு நேரவில்லையாம்.

"குறள் இனிது. அத்துடன் பாட்டில், சொல்லில், பொருளில் எதிலும் அது குற்றமற்றது. எல்லாக்காலத் துக்கு முரிய எல்லா ஆசிரியர்களின் கருத்தையும் அது ஒருங்கே தன்னகமாகக் கொண்டுள்ளது."

இது இன்னொரு புலவர் மதிப்பீடு!

குறள்பற்றி ஒருமிக்க யாவரும் புகழ்ந்த புகழுரைகளை யெல்லாம் கேட்டு, உக்கிரபாண்டியன் இப்பெரும்பேராசிரி யரையும் அவரது மாபெருநூலையும் தானும் பாராட்டினான்.

"நான்முகன் படைத்த பண்ணவன்தான் உருமாறி வள்ளுவராக வந்திருக்கவேண்டும்! வந்து நால்வேதப் பொருளையும் முப்பாலாகத் தந்திருக்கவேண்டும்! அத்தகு நூலை வணங்கட்டும் தலை; வாழ்த்தட்டும் வாய்; கேட்கட் டும் செவிகள்; சிந்திக்கட்டும் உள்ளம்!"

# 11. சிலப்பதிகாரக் கதை

முப்பாலினும் இனிய சுவையுடையன, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய காப்பியங்கள். பண்டைத் தமிழர் சமுதாய வாழ்வுபற்றிய முழுநிறை வண்ண விளக்கங்கள் அவற்றில் இடம்பெறுகின்றன. கோவலன். அவன் மனைவி ஆகியோரின் துயர் பீறிடும் கதையைக் கூறுவது சிலப் பதிகாரம். புத்ததுறவினியாய்விட்ட கோவலன் மகளின் புத்தார்வக் கதை புகலுவது மணிமேகலை.

சிலப்பதிகாரத்தின் கதைச் சுருக்கம் வருமாறு:

சம்புத்தீவத்[1]தின் பண்டைப் பெரு நகரங்களில் வள மிக்கது புகார் அல்லது காவிரிப்பட்டினம். அது காவிரி யின் கடல் முகத்திலுள்ள ஒரு பெருந் துறைமுக நகரம். பல நாடுகளின் மைய வாணிகக்களமாக அது இயங்கிற்று. அணிமையிலும் தொலைவிலும் உள்ள உள்நாட்டு நகரங் களிலிருந்தும் வாணிகக் குழாங்கள் அதன் அடர்ந்த தெருக்களில் நெருங்கி முன்னேறிச் சென்றன. கடல் கடந்த பல நாடுகளிலிருந்து வாணிகக் கப்பல்கள் துறை முகத்தில் குழுமி நின்றன. கப்பலிலுள்ள பல்வேறு நாட்டு மக்கள் புரியாப் பல்வேறு மொழிகளில் பேசி ஆரவாரித்த னர்.

அந்நகர் வணிக இளங்கோக்களுள் வாரிவழங்கும் வண்புகழ்வாய்ந்த மாநாய்கன் என்பவன் ஒருவன். அவன் மகள் கண்ணகி எல்லாராலும் புகழப்படும் மேனி அழகும் மனப்பண்பும் ஒருங்கே வாய்ந்தவள். அதே நகரில் கணக்கிலாச் செல்வங் குவித்த மாசாத்துவன் என்னும்

1 Jambudvipa: இமாலய மேட்டு நிலத்துக்குத் தெற்கிலுள்ள ஆசியாவின் பகுதி ஜம்புத்வீபமென வழங்கப்பட்டது.

மற்ெருரு வணிகர் பெருமகன் வாழ்ந்தான். அவன் மகன் கோவலன் அருங்கலைத்திறங்கள் பலவும் வாய்க்கப்பெற்ற இளைஞன். போர்வேளை ஒத்த வனப்புடையவன் அவன். இனிய நடையினன். இருபெரு வணிகரும் தம் மக்களை மணவினையால் ஒன்றுபடுத்த எண்ணினர். வீறுமிக்க புகார்முன் என்றும் காணுதவகையில் கோவலன்-கண்ணகி திருமணம் முழக்கமாக நடைபெற்றது.

மணவினையடுத்து, செல்வத்தால் பெறத்தக்க எல்லா வகை இன்பப் பொருள்களும் நிரம்பிய பரந்தகன்ற மாளிகையொன்றில் இளந்துணைவர்களைப் பெற்ருேர் குடியேற்றினர். பெருந்திரளான ஏவலர் அவர்களுக்கு வேண்டும் ஊழியங்கள் செய்து அவர்களை இன்புறுத்தும் படி அமர்த்தப்பட்டிருந்தனர்.

கோவலன் தன் இள மனைவியிடம் ஆராக்காதல் கொண்டிருந்தான். கண்ணே, கவினே என்று போற்றிஞன். மாசிலா முத்தே, விலையிலா மாணிக்கமே என்று நலம் பாராட்டிஞன். மயிலின் சாயலிலும் இனிய சாயலினள் என்றும், களிதவழ் அன்ன நடையினும் மென்னடையினள் என்றும், கிளி மொழியினும் இனிய மொழியினள் என்றும் அவளைப் புகழ்ந்து அருமை பாராட்டிஞன். பூவும் மணியும் கொண்டு அவளைப் புனைந்த சேடியரிடம் அவன் குறைகண்டான். 'இவை அவள் புனையா அழகைப் புனையவல்லன அல்லவே! மேலும் இவற்றின் பளுவை அவள் மெல்லிடை பொறுக்கமாட்டாதே!' என்று இரங்கிஞன்.

கணவன் காதலன்பு முழுதும் கைவரப்பெற்ற கண்ணகியின் உள்ளம் நிறை இன்பம் எய்திற்று. அவள் எல்லையற்ற களிமகிழ்வுடன் இல்லத் தலைவியின் பொறுப்பை ஏற்றுத் தன் கடமைகளை நிறைவேற்றப் புகுந்தாள். கணவனைக் காணவந்த விருந்தினரை உவந்து வரவேற்றல், வீடுநாடி அணுகிய அந்தணர் அறவோரைப் பேணுதல், பசித்தோருக்கு உணவளித்தல், ஆடையற்ருேருக்கு ஆடையுதவல் ஆகிய வேலைகளில் அவள் அன்புக் கனிவுடன் ஈடுபட்டு மகிழ்ந்தாள். பிறருக்கு நலம் புரிவதிலேயே பயின்ற அவள் நாட்கள் களங்கமற்ற ஒளியுடன் விரைந்து சென்றன. எல்லார் அன்பையும் அவள் பெற்ருள். புதுமணவாழ்வு பொலிவுடன் மெல்ல நழுவிச் சென்றது.[1]



கரிகால்மாவளவன் அப்போது சோழநாட்டை அரசாண்டு வந்தான். அவன் புகாரை அரண்செய்து அதையே தன் தலைநகராக்கிக்கொண்டிருந்தான். அக்காலத்தில் தென் இந்தியா அஃதாவது தெக்கணபதத்தில் வலிமைமிக்க, அறிவார்ந்த பேரரசனுக அவன் விளங்கிஞன். எனவே அவந்தி அரசர், மாளவ அரசர் மகத அரசர் ஆகியோர் அவன் நேசத்துணையை நாடினர். அவன் கொற்றவை ஒளிமிக்கதாகவும் இன்பக்களியாட்டம் நிறைந்ததாகவும் இருந்தது. அவனையும் அவன் அவையோரையும் மகிழ்விக்கும் முறையில் எத்தனையோ ஆடல் நங்கையர்கள் அவையில் ஆடிப்பாடினர்.

மாதவி இளமையும் அழகும் இணைந்த ஆடல் நங்கை அவள் மரபு இந்திரன் அவையில் ஆடிய மாதருள் ஒருவர் மரபென்று கூறப்பட்டு வந்தது. அவள் அரசர் முன்னிலையில், நகரத்தின் உயர்குடி மக்கள், செல்வர் நடுவே ஆடரங்கேற்றம் நிகழ்த்திஞள். அவள் ஆடல் பாடலின் நயமும் நேர்த்தியும் முதல்தரமாய் அமைந்தது. அரசனும் தகுதிக்குரிய முறையில் அவளுக்கு உச்சநிலை உயர் பரிசளிக்க முன்வந்தான். 1008 பொற்காசுகள் இணைத்த பொன் மாலை ஒன்றை அவளுக்குப் பரிசளித்தான்.

கோவலன் இசைதேர்ந்த கலைஞனுகவும், இசையில் ஆர்வ ஈடுபாடுடைவனுகவும் இருந்தான். மாதவியின் ஆடல் பாடலில் அவன் முற்றிலும் தன்னை மறந்தான். அவளுடன் பழகவிரும்பிஞன். கலை நங்கையிடம் கொண்ட ஆர்வ எழுச்சி காரணமாக, பொதுவிலை கூறப்பட்ட பரிசு மாலையை அவன் உயர்விலை கொடுத்து வாங்கி, அதனை மீட்டும் அவளுக்கே மகிழ்ந்து பரிசளித்தான்.

1 சிலப்பதிகாரம் : காதை I, II.

மாதவியை இவ்வாறடைந்த கோவலன் புனையா ஓவியம்போன்ற அவள் இயற்கை எழிலின் ஒளியில் மயங்கினான். அவள் முகத்தின் பொலிவும் பேச்சின் திறமும் அவன் உள்ளத்தில் மனைவியின் எண்ணத்தையே மறக்கடித்தன. அவன் ஆடலரசியிடமே காதலுற்று அவளை விட்டு நீங்க இயலாநிலை எய்தினான்.

செல்வமிக்க இவ்விள வணிகச்செம்மலை மாதவியும் மனமுவந்து காதலனாக ஏற்றாள். பகலையும் இரவையும் கோவலன் அம்மாய அழகணங்குடனே கழித்து, தன் முன்னோர் ஈட்டிய செல்வமுழுவதையும் அவள் காலடியிலேயே சொரிந்தான்.[1]

நாளடைவில் மாதவி ஓர் அழகிய பெண்மகவை ஈன்றாள். குழந்தை பிறந்த ஐந்தாம் நாள் ஆயிரம் ஆடல் நங்கையர்கள் மாதவியின் இல்லத்தில் ஒருங்கு கூடினர். கோவலன் விருப்பப்படி அவர்கள் அருவினைகள் பல ஆற்றிக் குழந்தையை வாழ்த்தி, அதற்கு மணிமேகலை என்று பெயரிட்டனர். ஏனெனில், கோவலனுடைய முன்னோர்கள் குலதெய்வம், கடல்தெய்வமாகிய மணிமேகலையே ஆவள். கோவலன் அவ் விழாவில் கலந்துகொண்ட அந்தணர்க்குக் கைநிறையப் பொன் அளித்தான்.[2]

குழந்தையின் பிறப்பு மாதவி கோவலன் தொடர்பை மேலும் நெருக்கமாக்குவதாகவே தோற்றிற்று. அவன் கலைநங்கையிடம் முன்னிலும் மிகப் பற்றுடையவனானான். ஆனால், தங்குதடையற்ற இன்பத்தில் கழித்த இந்தச் சில ஆண்டுகள் அவன் செல்வவளத்தை இறைத்தன. முன்னோர் செல்வம் முற்றிலும் தீர்ந்த பின்னும், அவன் மனைவியின் அணிமணிகளை ஒவ்வொன்றாக விற்றுச் செலவழிக்கவே முனைந்தான். அவன் மனைவியோ, தன் அன்புக்குப் போட்டியாக எவரும் வந்து தன்னிடமிருந்து அவனைப் பிரிக்காமுன்னம் அவனிடம் எவ்வளவுபாசம் கொண்டிருந்

1 சிலப்பதிகாரம். காதை III.

2. சிலப்பதிகாரம் : காதை XV.



தாளோ, அதே அளவு பாசத்தை இப்போதும் கொண்டிருந்தாள். ஆகவே அவள் எத்தகைய தடையும் கூறவில்லை. கணவனை மகிழ்விக்கும் ஒரே நோக்கம்கொண்டு, விருப்புடன் தன் நகைகளை அவனிடம் தந்தாள்.

இந்திரன் பெயரால் ஆண்டுதோறும் நடைபெறும் விழா அந்த ஆண்டு புகார் நகரில் பேராரவாரத்துடன் நடந்தேறிற்று. இருபத்தெட்டு நாட்கள் தொடர்ந்து நடைபெற்ற அவ்விழாவில் அந்த இன்ப மாநகர் தன் எழில் முழுதும் காட்டி இன்மகிழ்வூட்டிற்று. முதல்நாள் அரசனே நேரில் வந்திருந்து விழாவைத் தொடங்கி வைத்தான். அரண்மனையிலிருந்து அவன் ஊர்வலமாகப் புறப்பட்டுச் சென்றான். அவன் ஆட்சி முதல்வர்களும், ஐம்பெருங் குழுவினரும், எண்பேராயத்தாரும், நகரப் பெருமக்களும், செல்வரும் தேரூர்ந்தும் யானை குதிரையிவர்ந்தும் சென்று காவிரிக்கரையை அணுகினர். மன்னர் முன்னிலையில், மன்னிளங்கோக்களால் தங்கக் குடங்களில் ஆற்றுநீர் நிரப்பப்பட்டது. அதன்பின் ஊர்வலம் இந்திர விகாரம் சென்றது மக்கள் வாழ்த்தொலி எழுப்ப, இசைக்குழுவினர் இசையார்ப்பொலி கூட்ட, வானவர் வேந்தன் திருவுருவம் சிறந்த நன்னீரினால் திருமுழுக்காட்டப்பட்டது.[1] விழாமுடிவில் இளங்கோக்களும் பெருமக்களும் தத்தம் புடையர் சுற்றம்சூழக் காவிரி கடலுடன் கலக்குமிடத்தில் கடலில் நீராடினர்.

விழாவின் இறுதிநாட்களில் ஒருநாள் இரவு, கடலின் காட்சியையும் கடற்கரையில் மக்கள் நீராடி விளையாடுவதையும் மாதவி காண அவாவுற்றாள். விலையேறிய தன் ஆடையணிமணிகளை அணிந்து தன்னை ஒப்பனை செய்துகொண்டு, சேடியர் சிலர்சூழ அவள் தேரூர்ந்து சென்றாள். கோவலன் தன் தோழர் சிலர் உடன்வர, கோவேறு கழுதை ஒன்றில் ஏறி உடன்சென்றான். கடைத்தெரு வழியாகச் சென்று அவர்கள் கடற்கரையை அணுகினார்கள். அங்கே பலர் தனித்தனி குழுமியிருந்து களியாட்

1 சிலப்பதிகாரம் : காதை V.

டயர்ந்திருந்தனர். சிலர் கடலில் நீராடிக்கொண்டிருந்தார்கள். சிலர் திறந்தவெளியில் காற்றுற உட்கார்ந்திருந்தார்கள்.

உழையர் சேடியர் கொண்டுவந்த ஒரு சாய்விருக்கையில் கோவலனும் மாதவியும் அமர்ந்தனர். அமர்ந்த இடம் ஒரு புன்னை மரநீழல். புன்னை மலர்நிறைந்து குலுங்கிற்று. உழையர் அவ்விடத்தைச் சுற்றிலும் ஓவியம் தீட்டிய பட்டிகைகளிட்டு அழகுபடுத்தியிருந்தனர்.

இருவரும் சிறிதுநேரம் இளைப்பாறினர். அதன்பின் மாதவியின் ஆருயிர்த்தோழி வசந்தமாலை அவள் விரும்பி வாசித்துவந்த இனிய யாழை அவளிடம் நீட்டினாள்.[1] அது மென்மையும் பளபளப்பும் உடையதாய் வனையப்பட்டிருந்தது. அதன்மீது அழகிய ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்த உறையிருந்தது. நறுமலர்மாலை ஒன்றைச்சேடியர் அதன் கைப்பிடிமீது கட்டியிருந்தனர். மாதவி இந்த யாழை வாங்கிச் சுருதி மீட்டினாள். பின் அதை அவள் தன் காதலனிடம் தந்து, 'தங்கள் விருப்பமெதுவோ?' என்று கனிவாய் மலர்ந்தாள்.

கோவலன் அவ்வின்பச் சூழலால் வெறிமயக்கம் கொண்டிருந்தான். தன் உள்ளக்களிப்பு முழுவதையும் பாட்டில் வெளிப்படுத்தினான். அவன் வீணையை மீட்டி இனிய மெல்லோசையுடன் காவிரியாற்றைப் புகழ்ந்தும் பழம்பெருநகரான புகாரைப் பராவியும் ஆர்வமீதூரக் காதற் பாடல்களைப் பொழிந்தான். அவன் பாடல்கள் உளங்கவரும் அழகுமிக்க ஒருசெம்படவ நங்கையைப் புனைந்து தீட்டின. ஆடவர் நெஞ்சங்களைப் பிளப்பதில் அவள் கண்கள் கூரிய அம்புகள்போன்றிருந்தன. அவள் அழகில் கண்களை ஈடுபடவிட்ட ஆடவர் உளமுறிவுற்று மாண்டதால், அவ்வழகி ஒரு கொலை நங்கையாய் விளங்கினாள்.

1 சிலப்பதிகாரம், காதை VI.



கோவலன் அருந்திறல்மிக்க பாடலின் அழகு நயங்களை மாதவி ஆர்வமீதூரக்கேட்டு உளமகிழ்வுற்றாள். ஆயினும் அப்பாடல்கள் தன்னையே குறித்தன என்று அவள் எண்ணாமலிருக்க முடியவில்லை. தன் காதலன் தன்னிடம் உவர்ப்புத்தட்டியதனாலேயே இவ்வாறு பாடியதாக அவள் எண்ணினாள்.

காதலன் கையிலுள்ள யாழை அவள் மெல்ல வாங்கினாள். அவளும் வெறியூட்டும் இனிய குரலில் பாடத்தொடங்கினாள். அதன் இனிய அலைகளைச் செவிகொடுத்துக் கேட்டவர் அனைவரின் உள்ளங்களையும் அது கனிவித்து உருக்கிற்று. அவளும் காவிரியையும் புகார் நகரத்தையும் பொருளாக வைத்தே பாடினாள். அதன்பின் அதே செம்படவ நங்கையின் குரலை எழுப்பி, தன்னுடன் இல்லாதுபிரிந்து இருக்கும் காதலனை நினைந்து அவள் பாடுவதாகத் தன் ஏக்க முழுதும் தெரிவித்தாள்.[1]

"புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணேபோல்
துன்பம் உழவாய் துயிலப் பெறுதியால்!
இன்கள் வாய்நெய்தால்! நீ எய்தும் கனவினுள்
வன்கணார் கானல் வரக்கண் டறிதியோ?

1. மூலநூலாசிரியர் சிலப்பதிகாரத்திலிருந்து மொழி பெயர்த்துக் கொடுத்த ஆங்கில அடிகள் கீழே தரப்படுகின்றன. நூலின் தமிழாக்கத்தில் இவ்வாங்கில அடிகளுக்கு இணையான சிலப்பதிகார அடிகளே தரப்பட்டுள்ளன :

Pretty flower! bright and blooming
Oh! how happy art thou sleeping;
While with sleepless eyes and lonely,
Waiting for him I am weeping.
Lovely flower! full of honey,
Art thou dreaming that my lover,
In this moonlight soft and pleasant,
Cometh back into my bower?
The birds have flown away to roost
The glowing sun has set;
But still I wait with streaming eyes
Where last my love I met.

பறவைபாட் டடங்கினவே!பகல்செய்வான் மறைந்தனனே!
நிறைநிலா நோய்கூர நெடுங்கணீர் உகுத்தனவே!
துறுமலர்அவிழ்குழலாய்! துறந்தார்நாட்டுஉளதாங்கொல்,
மறவையாய் என்உயிர்மேல் வந்தஇம் மருள் மாலை ?''

சிலப். VII, கானல்வரி.

இப்பாடலின் உருக்கமான உணர்ச்சி கோவலன் கவனத்தை முற்றிலும் அவள்பால் ஈர்த்தது. அவள் குரலதிர்வினால் ஏற்பட்ட இசையலைகள் அவனுக்கு வெறியூட்டின: ஆனால், அதன் உள்ளார்ந்த மெய்ப்பாடு அவனைத் திடுக்கிட வைத்தது. மாதவி தன் உள்ளத்தை வேறு ஒருவரிடத்தில் செலுத்தி யிருந்தனளோ என்ற ஐயம் அவனிடம் எழுந்தது. பொறாமை அவன் உள்ளத்தைக் கிளறிற்று. நேரமாயிற்று என்ற உணர்ச்சியற்ற சாக்குப் போக்குக் கூறி அவன் உடனே எழுந்து சென்றான். அவன் உழையரும் அவன்பின் சென்றுவிட்டனர்.

தலைவனின் புரியாப் போக்குக்கண்டு மாதவி மனமறுகினாள். அவளும் தன் தேரிலேறித் தன் இல்லம் மீண்டாள்.[1]

இளவேனில் பருவம் இப்போது வந்தெய்திற்று. தமிழகத்தார்க்கு இது காதற் செல்வனின் தனியாட்சிக் காலம். இப் பருவத்துக்குரிய தென்றற்காற்றின் அலைகள் காதலஞ் செல்வன் ஆணைகளைக் காதலுலகமெங்கும் கொண்டு பரப்பின. பூங்காதோறும் இசை முழக்கிய வண்டினங்கள் அவன் முரசங்களாக இயங்கின. காதலன் பிரிவால் நைந்த உள்ளத்தினளாயிருந்த மாதவி தன் மாளிகையின் மாடியிலிருந்த வேனில் மாடத்தில் தன் படுக்கையில் சென்று அமர்ந்தாள். இசையின் இன்பத்தில் ஆறுதல் பெற முயன்றாள்.

அவள் யாழைத் தன் கையிலெடுத்துப் பாட முயன்றாள். ஆனால், அவள் உள்ளத்தின் உள்ளதிர்வால் ஒன்றிரண்டு சொற்களுக்குமேல் அவள் தொண்டையிலிருந்து

1. சிலப்பதிகாரம், காதை VII.



வெளிவரவில்லை. யாழைமட்டும் மீட்டி அவலச்சுவை தோய்ந்த ஒரு பண்ணை எழுப்பினாள். இதிலும் தோல்வியே அவள் முயற்சிகளைத் தொடர்ந்தது. கோவலனையே எண்ணிய உள்ளம் அவனைக் காணும் அவா ஒன்றிலேயே முனைந்தது.

அவள் இளம் பிச்சி அரும்பொன்றை எடுத்துச் செம்பஞ்சுக் குழம்பில் தோய்த்தாள். மணமிகுந்த தாழை இதழினமீது காதலனுக்குக் கனிவுடன் கடிதம் தீட்டினாள்.

"எல்லா உயிரினங்களின் உள்ளங்களையும் இளவேனில் காதலை நாடிச் செலுத்திவருகிறது. காதலே ஆட்சியுரிமை பெற்றுள்ள சமயம் இது. மாலைக்காலத்தின் மங்கிய மதியம் ஒரிவரிடமிருந்தொருவர் பிரிவுற்ற காதலர்கள்மீது சினத்தை அள்ளிச் சொரிகிறது. தன் காதலனைப் பெறாத ஒவ்வொரு காதலியின் உள்ளத்தையும் இப்பருவத்தில் காதற்செல்வன் தன் மலர்க்கணைகளால் துளைக்காமல் இருக்கமாட்டான். இவற்றை உளங்கொண்டு என்மீது அருள்கூர்க," என்று எழுதினாள்.

அவள் தன் தோழி வசந்தமாலையை அழைத்துக் கடிதத்தை அவள் கையில் கொடுத்துக் கோவலனிடம் சேர்ப்பிக்கும்படி பணித்தாள். வசந்தமாலை கடிதத்தை எடுத்துக்கொண்டு சென்று சந்தைத் தெருவில் கோவலனைக்கண்டு அவனிடம் அதைக் கொடுத்தாள். ஆனால், அவன் அதை வாசித்துப் பார்க்கவே மறுத்துவிட்டான். "நான் உன் தலைவியை மிக நன்றாக அறிவேன். நாடக அரங்கில் எந்நிலையிலும் நடிக்கப் பழகியவள் அவள். இரண்டக வாழ்வின் எல்லாத் திறங்களையும் இதனால் நன்றாகக் கையாள முடிகிறது. இத்தகைய தலைவியின் கடிதத்தை அவளிடமே திருப்பிக் கொண்டு கொடுத்துவிடு," என்றான்.

துயரார்ந்த உள்ளத்துடன் வசந்தமாலை திரும்பிவந்து தன் தலைவியிடம் கோவலன் கடிதத்தை மறுத்த செய்தியைக் கூறினாள். "அவர் இன்று இரவு வராவிட்டாலும்

நாளைக்காலையில் கட்டாயமாக வருவார்,'' என்று தனக்குள்ளாக மனவருத்தத்துடன் கூறியவண்ணம் மாதவி படுக்கையில் கிடந்தாள்.[1]

அதே மாலையில் கண்ணகியும் தன் மாளிகையில் தனியாகக் கிளர்ச்சியற்ற நிலையிலேயே வீற்றிருந்தாள். பல துயர எண்ணங்கள் அவள் உள்ளத்தை அரித்துக் கொண்டிருந்தன. அவள் தன் கண்ணுக்கு மைதீட்ட வில்லை கூந்தலைக் கோதவில்லை. கழுத்திலுள்ள மண வணியன்றி வேறு அணி எதுவும் அணிந்துகொள்ள வில்லை.[2]

இச்சமயம் தேவந்தி என்ற ஒரு பார்ப்பனமாது கண்ணகிக்கு ஆறுதல்தரும் நோக்கத்துடன் வந்தாள். அவள்மீது அறுகும் அரிசியும் தூவி, "உன் கணவன் அன்பை நீ மீண்டும் பெறுவாயாக" என்று வாழ்த்தினாள். ஆனால், கண்ணகிக்கு அந்த நம்பிக்கை வரவில்லை. "அந்தோ, அந்த இன்பம் எனக்கு மீட்டும் கிட்டக்கூடியது என்று எனக்குத் தோற்றவில்லை. அத்துடன் நான் ஒரு கனாக்கண்டேன். கனவில் என் கணவர் என்னைத் தொலை தூரமான ஒரு நகரத்துக்கு இட்டுச் சென்றதாகத் தோன்றிற்று. நாங்கள் அங்கே இருக்கும்போது, ஏதோ அயலார் எம்மீது மிகப் பெரியதொரு குற்றத்தைச் சாட்டினார்கள். என் கணவருக்குப் பெருத்த இடுக்கண் நேர்ந்தது. அவர் சார்பில் அறங்கோர நான் மன்னனிடம் சென்றேன். மன்னனுக்கும் மாநகருக்கும் பெருந் தீங்கு விளைந்தது. ஆனால் அதன்பின் எனக்கும் என் கணவருக்கும் நேர்ந்த பேரின்பச்செய்தியை நான் கூறினால் நீ நம்பமாட்டாய்," என்று அவள் முறையிட்டாள்.

தேவந்தி மீண்டும் பேசினாள். "உன் கணவருக்கு உன்மீது வெறுப்புக்கிடையாது. உன் முன்பிறப்பில் நீ ஒரு நோன்புறுதியை மீறியிருக்கிறாய். ஆனால் அப்பழ

1 சிலப்பதிகாரம், காதை VIII.
2. சிலப்பதிகாரம், காதை IV, அடிகள் : 47-57.



வினையின் தீயபயனை அகற்ற வழி இல்லாமலில்லை. காவிரியின் கடல்முகத்தில் கதிரவனுக்கும் தண்மதிக்கும் உரிய தெய்விக ஆற்றலுடைய இரு குளங்கள் உள்ளன. அவற்றில் குளித்துக் காதற்கடவுளுக்குக் கோயில் வழிபாடாற்றுவாயானால் தீவினை நீங்கும் என்னுடன் வந்து ஒருநாள் அவற்றில் குளிப்பாயாக,'' என்று அவள் கூறினாள்.

அங்ஙனம் நான் செய்வது தகுதியன்று என்று கண்ணகி மறுத்தாள். இச்சமயம் பணிப்பெண் ஒருத்தி வந்து கோவலன் மனையகம் வந்துவிட்டான் என்று தெரிவித்தாள். கண்ணகி உடனே கணவனைக் காண விரைந்தாள். கோவலன் படுக்கையறையில் புகுந்து மனைவியைத் தன் அருகே இழுத்தணைத்து, துயரால் மெலிந்த உடலையும் வாடிய முகத்தையும் கூர்ந்து நோக்கினான்.

"நானே என் நிலைபற்றி வெட்கமடைகிறேன். என் பெற்றோர்கள் எனக்களித்த செல்வமுழுவதையும் வஞ்சமனங்கொண்ட ஓர் ஆடல் நங்கையினிடமாக வீண்செலவு செய்து அழித்துவிட்டேன்,'' என்றான்.

கண்ணகி புன்முறுவல் பூத்தாள். "இதோ என்னிடம் இரண்டு சிலம்புகள் உள்ளனவே; எடுத்துப் பயன்படுத்திக்கொள்ளுங்கள்,'' என்றாள். அவன் அமைந்து விடையளித்தான். "கண்மணி, நான் சொல்வதைக் கேள். இவற்றை முதலீடாகக்கொண்டு வாணிகம்செய்து, இழந்த செல்வத்தை மீட்க எண்ணுகிறேன். அதுகாரணமாகப் புகழ்வாய்ந்த மதுரை செல்ல விரும்புகிறேன். நீயும் என்னுடன் வா,'' என்றான்.

கணவன் ஆடல்நங்கையைத் துறந்து தன்னிடமே மீண்டும் வந்ததுகண்ட கண்ணகி கரையற்ற மகிழ்ச்சி கொண்டாள். உலகின் எந்தக்கோடிக்காயினும் அவனுடன் செல்ல அவள் தயங்கவில்லை.[1]

1. சிலப்பதிகாரம், காதை IX.

பணியாட்கள் எவரும் அறியாமல் விடிய நெடுநேரத்துக்கு முன்பே கணவனும் மனைவியும் தங்கள் வீட்டை விட்டுப் புறப்பட்டனர். இரவின் அமைதியிடையே அவர்கள் புறவாயிலின் தாழை மெல்லத் திறந்து தெருவில் நடந்தனர். திருமால் கோயிலையும், இந்திரனால் கட்டப்பட்டதாகக் கருதப்பட்ட ஏழு புத்தவிகாரங்களையும் கடந்து, நிகண்டத் துறவியர் இருந்து அறங்கூறும் ஒண்பளிங்குக் கல் மேடையை அணுகினர். மதியார்வத்துடன் அதைச் சுற்றி வலம்வந்து நீள் அகல் வீதிவழியாக நகர்க்கோட்டையின் வாயிலை அடைந்தனர்.

கோட்டைவாயில் கடந்து அவர்கள் மன்னர் மலர் வனத்தின் வழியாகச்சென்று காவிரிக்கரை யணைந்தனர். பின் மேற்கு முகமாகத் திரும்பி ஆற்றின் வடகரை வழியாக ஒரு காவத தொலை கடந்து நிகண்டத் துறவியரின் கன்னி மாடம் சேர்ந்தனர். இங்கே அவர்கள் ஒரு சோலையில் தங்கினர். நடந்து வழக்கமற்ற கண்ணகி பெருமூச்சுவிட்டு இளைத்தாள். கொப்புளங்கண்டு வீங்கிய தன் கால்களுக்கு அவள் ஓய்வுதந்தாள். உலகறியா அவள் மடமையை, ‘மதுரைமூதூர் எந்தப்பக்கம் இருக்கிறது?’ என்ற அவள் கேள்வி எல்லாருக்கும் எடுத்துக்காட்டிற்று.

மனைவியின் அறியாமை கண்டு புன்னகையுடன், “அது நம் நாட்டிலிருந்து மிகுதொலைவில் இல்லை, ஐந் தாறு காவதத்தில்தான் இருக்கிறது,” என்று அவன் இரண்டகமாகக் கூறிவைத்தான். ஐந்துமடங்கு ஆறு அதாவது முப்பது காவதம் என்று அவன் தெளிவாகக் கூறவில்லை. அதுகேட்டு அவள் அஞ்சக்கூடும் என்று நினைத்து, ஐந்து அல்லது ஆறு காவதம் என்று அவள் நினைக்கும்முறையில் ஐந்தாறு காவதம் என்று சிலேடை மொழியில் பேசினான்.

பொழுது இன்னும் இருட்டவில்லை. ஆகவே அவர்கள் கன்னித்துறவியர் மடத்தில் புகுந்து அங்கே வாழ்ந்த



‘கவுந்தி’[1] என்ற துறவி நங்கையைக்கண்டு வணங்கினர். இவ்வன்ன காதல்துணைவரின் அழகிய உயர் குடித் தோற்றம் கண்டு வியப்படைந்தாள். அத்தகையவர் வீட்டைவிட்டு நாடோடிகள் போலக் கால்நடையாகத் திரியவேண்டிய காரணம் என்ன என்று அவள் உசாவினாள்.

“என் செல்வநிலையைச் சரிசெய்ய மதுரை நகர் செல்ல விரும்புகிறேன், அன்னையே! வேறொன்றுமில்லை,” என்றான் கோவலன்.

துறவுநங்கை கண்ணகி பக்கம் திரும்பி நோக்கினாள். “நீங்கள் போகவேண்டிய தொலையோ மிகப்பெரிது. காட்டு வழி; கரடுமுரடான முட்பாதைகள் நிறைந்தது. இதில் இம் மெல்லியலாளுடன் செல்வது எளிதான காரியமல்ல. ஆகவே இக் கடுமுயற்சியைக் கைவிட்டுவிடும்படி நான் உங்களை வேண்டுகிறேன். ஆயினும் நீங்கள் மதுரைக்குச் செல்வதிலேயே முனைந்திருக்கிறீர்கள் என்று காண்கிறேன். எப்படியும் சிலகாலமாக நானும் மதுரைக்குச் செல்ல வேண்டுமென்னும் ஆவலுடையவளா யிருக்கிறேன். அந் நகரின் அறிவார்ந்த நூலறிபுலவர்களிடம் அருகனின் அருமெய்மைகளைக் கேட்டுணர வேண்டுமென்ற ஆர்வம் எனக்கு மிகுதி. எனவே இத்தறுவாயில் நான் உங்களுடன் வரலாம் என்று கருதுகிறேன். ஒன்றாகவே நாம் புறப்படலாம்,” என்றாள்.

கோவலன் அறநங்கையை நன்றியுணர்வுடன் வணங்கினான். “அருள்சான்ற அன்னையே! தாங்கள் எம்முடன் செல்லத் திருவுளங்கொள்வதானால், என் மனைவியின் பாதுகாப்புப்பற்றிய என் கவலைகள் யாவும் அகன்றன. தங்களுக்கு என் மனமார்ந்த நன்றி உரியது,” என்றான்.

அறநங்கை மதுரைக்குச் செல்லும் பாதைகளின் கடுமைகளையும், இடர்களையும் விளக்கினாள். சிறப்பாக

1. கந்தி என்பது நிகண்டக் கன்னித்துறவி அல்லது பெண்டிரைக் குறித்த ஒரு சொல்.

வழியில் உள்ள ஊர்கள் எவ்வளவு சின்னஞ்சிறியவை யானாலும் அவற்றுக்குத் தீங்கு நேராதிருக்கும் வகையில் எச்சரிக்கையாய் இருக்கும்படி அவள் அறிவுறுத்தினாள். இத்தீங்குகள் நிகண்ட அறவோர்களால் படுபழிகளாகக் கருதப்பட்டிருந்தன.

பயணம் இடரற்றதா யிருக்கவேண்டுமென்று அருகனை வேண்டியவண்ணம் அவள் தன் திருக்கலத்தைத் தோளிலிட்டு, கையில் மயில்பீலியுடன் புறப்பட்டாள்.

சிறுசிறு தொலையாக நடந்து அவர்கள் வளமான நாட்டுப்பகுதி வழியாகச் சென்றார்கள். கதிர்கள் அலையாடும் பசுங்கழனிகள், நீண்டுயர்ந்த கருப்பங்கொல்லைகள் பசுஞ் சோலைவனங்களின் நிழலகஞ்சார்ந்து நிலவிய சிற்றூர்கள் ஆகியவை அவர்களுக்கு இருபுறமும் நிறைந்து கிடந்தன. காவிரியிலிருந்து பிரிந்துசென்ற கிளைக் கால்வாய்களில் மதகுகளின் வழியாகவும் சீப்புக்களின் வழியாகவும் பீறிட்டுச்செல்லும் நீரின் சலசலப்போசையால் அவர்கள் நடையின் அலுப்புத் தோன்றாது முன்னேறினர். தவிர வயல்களில் உழைக்கும் மாதர்குழாத்தின் வள்ளைப் பாட்டொலியும், எருதுகளை ஏரில்பூட்டி உழும் உழவரின் இரைச்சலும், களியாட்டப் பாடல்களும், அறுவடை செய்த பயிரின் தாள்களை மிதித்துத் துவைத்த எருமைகளைக் களமர் ஊக்கும் ஒலிகளும் எங்கும் நிறைந்திருந்தன.

பலநாள் பயணம் செய்தபின் அவர்கள் காவிரியின் நடுவேயுள்ள ஒரு தீவை அடைந்தனர். இங்கே மணங் கமழ் மலர்கெழுமிய சோலை ஒன்றில் அவர்கள் ஒரு நிகண்டத் துறவியைக் கண்டனர். அவர் காலடிகளில் வீழ்ந்து அவர்கள் அவர் வாழ்த்துரை கோரினர். உள்ளத்தின் உள்ளொளி மூலம் தம்முன் நிற்போர் முன்னைய வாழ்வும் வருங்காலவாழ்வும் காணவல்ல அப்பெரியார் அறநங்கையை நோக்கிக் கீழ்வருமாறு பேசினார்:

"அருளார்வமிக்க அறநங்கையே, என் சொற்களைக் கூர்ந்து கேட்பாயாக! தத்தம் நல்வினை தீவினைப்பயன்



களை விட்டுவிலக யாராலும் ஆகாது. விதைத்த வித்துக்கள் தம்மின விளைவே தருதல்போல், நம்செயல்களே நம் மீது எதிர்செயல்களாக வந்து தாக்குகின்றன. திறந்த வெளியிலுள்ள விளக்கொளிகள் காற்று வீசும்போது அணைந்துபோவதுபோல, நம் உயிர்நிலைகள் நம் உடலை விட்டேகுகின்றன. அருகனால் உரைக்கப்பட்ட மெய்ம்மையின் ஒளிபெற்ற உள்ளம் உடையவர்மட்டுமே பிறப்பிறப்பென்னும் இச்சிறையினின்று விடுபடுவர்" என்று அவர் அறவுரை பகர்ந்தார்.

கவுந்தியடிகள் தலை நிலம்பட வணங்கினாள். "என் வாழ்நாள் முடிவுவரினும் அருகனைத்தவிர வேறு தெய்வம் வணங்குவதில்லை யென்றும், அவருடைய ஆகமங்கள் வாயிலாக வெளியிடப்பட்ட அறவுரைகள் தவிர வேறு அறிவுரைகள் எதுவும் பின்பற்றுவதில்லை யென்றும் உறுதிபூண்டுள்ளேன், அறவீர்!" என்று கனிந்துரைத்தாள். கவுந்தியடிகளின் உரைகேட்ட அறவோர் மகிழ்ந்து அவரையும், அவருடன் பயணம் செய்வோரையும் வாழ்த்தினார். "அவாவின் கட்டிலிருந்து நீவிர் விடுபடுவீராக!" என்று நல்லுரை கூறினார்.

மூவரும் இதன்பின் படகேறி ஆற்றின் தென்கரையிலுள்ள உறையூரில் நுழைந்தனர்.[1]

உறையூரிலுள்ள ஒரு நிகண்டத்துறவியர் மடத்தில் அவர்கள் தங்கினர். அங்கே அசோகமரத்தடியில் முக்குடைநீழலில் அமைந்த ஒள்ளிய அருகனுருவத்தை அவர்கள் வணங்கினர். ஒருநாள் முழுதும் மடத்தில் தங்கியபின் மறுநாள் காலை விடியுமுன் அவர்கள் புறப்பட்டு விடியும் நேரத்தில் குளிர்தடங் குளங்களும் பசும்பொழில்களும் சூழ்ந்த ஒரு காவனம் அடைந்தார்கள்.

இவ்விடத்தில் அவர்கள் இளைப்பாறிக்கொண்டிருந்தபொழுது, அங்கே ஒரு பிராமண யாத்திரிகன் வந்து சேர்ந்தான். அவன் சேரநாட்டில் மாங்காடு என்ற ஊரைச்

1. சிலப்பதிகாரம், காதை X.

சேர்ந்தவன். அவன் பாண்டிநாடு முழுவதும் சுற்றிப் பார்த்து அரங்கம் அல்லது வேங்கடத்தில் உள்ள திருமால் திருப்பள்ளிகளைப் பார்க்கப் புறப்பட்டிருந்தான்.

கோவலன் அவனிடம் மதுரைக்குச் செல்லும் வழிப் பாதைகளைப்பற்றியும் அவற்றின் இயல்புபற்றியும் கேட்டான். அவனுக்கு மறுமொழியாகப் பிராமணன் அவற்றைப்பற்றிய விவரங்கள் கூறினன்.

"இம்மெல்லியல் நங்கையுடன் நீங்கள் இப்பருவத்தில் வந்தது வாய்ப்புக்கேடானது. ஏனென்ருல் ஞாயிற்றின் வெங்கதிர்கள் இப்பருவத்தில்தான் நிலத்தை வாட்டிப் பொசுக்குகிறது. இப்போது பயணம் செய்வது மிகவும் இன்னல் தருவதாகும். உறையூரிலிருந்து கொடும்பையிலுள்ள[1] பெரிய ஏரிவரையுள்ள பாதை பாறைகள் வழியாகவும், இடுமுடுக்கான துரடுகள் வழியாகவும் செல்கின்றது.

"அங்கிருந்து மதுரைக்குச் செல்வதற்கு மூன்று பாதைகள் உண்டு. வலது கைப்பக்கமான பாதை காட்டுவழியாகச் செல்வது. அங்கே தண்ணீர் கிடையாது. அத்துடன் கொடிய ஆறலைக்கள்வர் வழிச்செல்வோர்க்குப் பேரிடுக்கண் விளைப்பார்கள். இப்பாதையில் வழியிலேயே சிறுமலை என்ற குன்றுத்தொகுதியை நீங்கள்காணக்கூடும். அவற்றில் எல்லாவகைப்பட்ட பழங்களும் ஏராளமாக விளைகின்றன.[2] இம்மலைக்கு இடதுபுறமாகச் சென்ருல் மதுரையை அடையலாம்.

"கொடும்பையிலிருந்து இடதுபுறமாகச் செல்லும் பாதையில் முன்னேறுபவர் வயல்களும் காடுகளும் வற்றற் பாலைகளும் கடந்துசென்று ஒருமலையை அடைவர். அதன் உச்சியில் திருமால் கோயில் உளது. அடிவாரத்திலே சிலம்பாறு ஓடுகிறது. அம்மலை யருகேயுள்ள பள்ளத்தாக்கின் காவல்தெய்வம் அவ்வழிச் செல்வோருக்கு இடையூறு உண்டுபண்ணக்கூடும். காத்தருள் புரியும்படி திருமாலை

1 இதன் தற்போதைய பெயர் கொடும்பாளூர்.

2 சிறுமலை இன்றும் பழங்களுக்குப் பேர்போனதே. வாழைப் பழங்களில் சிறுமலைப்பழம் அருமதிப்புடையது.



வணங்கியவண்ணம் பள்ளத்தாக்கைக் கடந்தால் மதுரை சென்று சேரலாம்.

"மேலேசொன்ன இந்த இரண்டு பாதைகளுக்கும் நடுவேயுள்ள வழி மற்றஇரண்டையும்விட நல்ல வாய்ப்புடையது; இன்பகரமானது. ஏனெனில் இது சோலைகள், சிற்றூர்கள் நிறைந்த பகுதிகளினூடாகச் செல்கிறது. இப் பாதையை நீங்கள் பின்பற்றுவதே நல்லது."

வாய்ப்பான வழியறிந்துகொண்டபின் கண்ணகியும் கோவலனும் கவுந்தியடிகளும் மீண்டும் மதுரைக்குப் பயணம் தொடர்ந்தார்கள். இடையே கண்ணகி கால் நோவாலும் களைப்பாலும் வருந்தியதனல் அவர்கள் வேடர்கள்[1] வாழ்ந்த ஒருசிற்றூரருகே ஒருகாளிகோயிலில் ஒருநாள் தங்கவேண்டியதாயிற்று. இங்கே காளிக்குப் பூசனையாற்றும் வெறியாட்டுநங்கை காளியின்அச்சந்தரும் உருவம்பூண்டு ஆடிய மெய்சிலிர்க்கவைக்கும் ஆட்டத்தைக் கண்ணுற்றூர்கள். பேய்பிடித்தவர்போல அவள் ஊர் வெளியில் நின்று துடிதுடிப்புடன் ஆடியவண்ணம், மறவர்கோயிலில் சில நாளாகப் பலிகொடாததனல் காளி கடுஞ்சினங் கொண்டுள்ளாளென்றும், அவர்கள் உடனே கிளர்ந்தெழுந்து அருகிலுள்ள ஊர்க் கால்நடைகளைத் தாக்கிக் கொள்ளையிட்டுப் பலி கொடுக்கவேண்டுமென்றும் ஆரவாரித்தாள்.[2]

பாண்டியர் ஆண்ட பகுதிகளில் திருடர் அச்சமோ கொடு விலங்குகளின் அச்சமோ அரசபாதைகளில் கிடையாது என்று அவர்கள் கேள்வியுற்றனர். ஆகவே பகலில் கண்ணகி வெயிலைத் தாங்கவோ, நிலத்தின் பழுத்த வெப்பில் கால் பாவவோ முடியாதாகையால், இரவிலேயே பயணம்செய்தல் நன்று என்று கோவலன் கருத்துரைத்தான். கவுந்தியடிகள் இக்கருத்தை வரவேற்கவே, அவர்கள் வேடர் ஊரிலிருந்து ஏற்பாட்டின்போது புறப்

1. சிலப்பதிகாரம், காதை XI.

2. சிலப்பதிகாரம், காதை XII.

பட்டார்கள். அச்சமயம் முழுநிலவெறிக்கும் காலமாய் இருந்தபோதிலும் இரவின் தனிமைகண்டஞ்சிய கண்ணகி கணவனை விடாது நிழல்போலப் பற்றி அவன் தோளில் கையிட்டவண்ணம் சென்றாள் கவுந்தியடிகளும் வழி நடையின் அலுப்புத்தோன்றாதிருக்கத் தான் சமய ஏடுகளிலிருந்து கற்றுணர்ந்த பல கதைகளைக் கூறிவந்தாள்.

இரவு முழுதும் பயணம்செய்தபின், அவர்கள் புலர் காலையில் ஒரு பிராமணச்சேரியை அடைந்தார்கள். கோவலன் தன் மனைவியைக் கவுந்தியுடன் ஒரு தோட்டத்தில் தங்கும்படி விட்டுவிட்டு, வேலியடைப்பாக வைத்திருந்த முள்கிளைகளை அகற்றிவிட்டுக் குளத்தை அணுகினான். அதேசமயத்தில் கௌசிகன் என்னும் பிராமணன் குளத்தருகே வந்தான். தான் முன்னே காண்பது கோவலன் தானோ என்று ஐயுற்றதனால் அதை உறுதியாயறியும்படி அவன் ஒரு பூங்கொடியை நோக்கிப் பேசுவதாக நடித்துத் தனக்குள்ளே பேசினான்.

“பூங்கொடியே, நீ ஏன் வாடியிருக்கிறாய்? இந்த இளவேனில் வெப்பால் நீயும் தன்னைவிட்டு அகன்ற காதலனாகிய கோவலன் பிரிவால் வருந்தும் உன் பெயர்பூண்ட நீண்ட விழியுடைய மாதவிபோல் வாடுகிறாயா?”[1] என்று கேட்டான்.

‘உன் கூற்றின் கருத்து என்னவோ?’ என்று கோவலன் உடனே கௌசிகனைக் கேட்க, அக்கேள்வியால் கோவலனை அவன் அடையாளமறிந்து அவனை அணுகிப் பலபடப் பேசினான். அவன் கூறிய மாற்றம் இது :

கோவலனும் அவன் மனைவியும் வீட்டைவிட்டுச் சென்றுவிட்டனர் என்று அறிந்தே, அவன் வேலையாட்கள் நாலாபுறமும் அவனைக் கண்டுபிடித்து மீட்டுக் கொண்டுவரும்படி அனுப்பப்பட்டனர். வயது சென்ற கோவலன் பெற்றோர்கள் ஆராத்துயரில் ஆழ்ந்தார்கள்.

1 மாதவி என்பது (பெண்ணின் பெயர் மட்டுமன்று) ஒரு பூங்கொடிக்கும் பெயர் ஆகும்.



அவன் உறவினரும் துன்புற்றனர். மாதவி இம்மறைவுச் செய்தி கேட்டு வெந்துயரடைந்து மாழ்கினாள். அவள் அவதிகேட்டுப் பிராமணன் அவளைச்சென்று கண்டான். கண்ணின் கருமணிபோன்ற தன் காதலனுக்கு ஒரு முடங்கல் கொண்டேகும்படி அவள் அவனை வேண்டினாள். இம்முடங்கலுடன் கோவலனைத்தேடி அவன் பல இடங்களுக்கும் சென்றான். இறுதியில் நல்லகாலமாக இவ்வாறு தற்செயலாகக் கண்டெய்தினான்.

இத்தகவல்களுடன் தான் கொண்டுவந்த ஓலைச் சுருள் ஒன்றைப் பிராமணன் கோவலனிடம் கொடுத்தான். ஓலையின் நறுமணம் ஆடல் நங்கையின் கூந்தல் மணத்தையே கோவலனுக்கு நினைவூட்டிற்று. அவனையறியாமல் அவன் கைகள் சிறிது நடுக்குற்றன. அவன் ஓலையை விரித்து வாசித்தான்.

மாதவி கீழ்வருமாறு எழுதியிருந்தாள் :

“மேன்மைதங்கிய தம் திருவடிகளில் விழுந்து வணக்கம் செய்து, அடியேன் எளியமொழிகளுக்குச் செவிசாய்த்தருளவேண்டுகிறேன். தம் இனிய துணைவியுடன் தாய் தந்தையரறியாமல் இரவோடிரவாக வீட்டைவிட்டுப் போகும் அளவுக்கு நான் தங்களுக்கு என்ன குற்றம் புரிந்துவிட்டேன் என்பது எனக்கு விளங்கவில்லை. தம் தூய உயரிய உள்ளம் எங்கள்துயர் தீர்க்க அருள்கூருமாக,” என்பது அக்கடிதம்.

கோவலன் அதை வாசித்து மகிழ்ந்தான். அவன் உள்ளத்தில் ஒரு பாரம் நீங்கியதுபோலிருந்தது. ஏனெனில் மாதவிவகையில் அவன் கொண்டிருந்த ஐயம் தப்பெண்ணத்தாலேற்பட்டது என்று அவன் கண்டான். அவன் பிராமணனை நோக்கி, “ஐய! விரைந்து சென்று என் நலம் பற்றிய செய்தியினை என் பெற்றோருக்குச் சொல்லி, என் மறைவுபற்றி வருந்தாதிருக்கும்படி கூறுக,” என்றான்.

மனைவியும் கவுந்தியடிகளும் தங்கிய சோலைக்குக் கோவலன் திரும்பி வந்தபின், அங்குக் குழுமியிருந்த ஒரு

பாடற் குழுவினுடன் சேர்ந்து தன் யாழ்த்திறனைக் காட்டி அவர்களை மகிழ்வித்தான். அவர்களிடமிருந்தே மதுரை இன்னும் சில நாழிகை தொலையிலேயே இருந்ததென்றும், எத்தகைய அச்சமுமில்லாமல் இனிச் செல்லலாமென்றும் உணர்ந்துகொண்டான்.

முந்தின நாளைப்போலவே மூவரும் இரவில் பயணம் செய்து, விடியற்காலையில் தொலைவில் மதுரைமா நகரின் முரசொலிகளைக்கேட்கக் களிமகிழ்வு எய்தினர். மேலும் சிறிது நடந்தபின் யானைகளின் பிளிறலொலியையும், போர்க்குதிரைகளின் கனைப்பையும், திருமறை ஓதுபவரின் பண்ணோசையையும் பாணரின் வள்ளைப்பாடலையும் செவி மடுத்தனர். அவை கடற்கரை அடுத்துக் கேட்கும் அலை ஓசைபோன்றிருந்தன. அவர்கள் உள்ளத்தில் இப்போது மகிழ்ச்சி பொங்கிற்று. ஏனெனில் திருவோங்கிய வையையை அணுகியதும் புலவர் பாடல்களைக் கேட்டுத் தூய தமிழ்மா மதுரை யடைந்தோமென்று அவர்கள் அக மகிழ்ந்தனர்.

பொதுப் படகுத்துறையில் குதிரைமுகம், அரிமுகம், யானைமுகம் உடைய படகுகளில் மக்கள் ஏறிக்கொண்டு இடைவிடாது சாரிசாரியாக வையையைக் கடந்தவண்ணம் இருந்தனர். அத் திரள்கண்டு ஒதுங்கி மிகுதி நெருக்கமற்ற ஒருசிறு துறையை அணுகி ஒரு புணையிலேறி அவர்கள் ஆற்றின் தென்கரை யடைந்தனர். நகரின் இடப்பக்கமாகச் சுற்றிச்சென்று அவர்கள் கிழக்குக் கோபுரவாயிலை அணுகி, அங்கே மதிற்புறத்திலுள்ள ஒரு சிற்றூரில் தங்கினர். இங்கே கமுகுகளும் தெங்குகளும் நிறைந்திருந்தன. துறவிகளும் சமயத்திருத்தொண்டருமே இங்கே மிகுதியாக வாழ்ந்தனர்.[1]

மறுநாள் காலையில் அரண்மனையின் காலை முரசமும் நகரின் பல்வேறு கோயில்களின் முரசங்களும் முழங்கிய முழக்கம் மதிற்புறமுள்ளோர் செவிகளில் பட்டதும்,

1. சிலப்பதிகாரம், காதை XIII.



கோவலன் கவுந்தியடிகளை அணுகி மதிப்பார்வத்துடன் வணக்கம்செய்து பேசினான். "இறைப் பற்றார்வமிக்க அன்னையே! நன்னெறி பிறழ்ந்து வாழ்ந்ததன்காரணமாக நான் என் நன்மனைவிக்கு எவ்வளவோ துன்பம் நேரக் காரணமாயிருந்துவிட்டேன். வெங்காட்டு வெளிகளில் பயணம் செய்து இருவரும் சொல்லொணாத் துன்பங்கள் எய்தியுள்ளோம். நான் இப்போது நகருக்குள் சென்று அங்குள்ள வணிகர்களைக்கண்டு பழகவேண்டியிருக்கிறது. நான் திரும்பி வரும்வரையிலும் என் மனைவியைத் தங்கள் பாதுகாப்பில் விட்டுப்போக எண்ணுகிறேன்," என்றான்.

"காதலித்த பெண்ணுக்காகவேண்டி இதற்குமுன் வருந்தியவர் எத்தனையோ பேர் உண்டு" என்று தொடங்கி, அறநங்கை மேலும் பேசினார். "தந்தையின் ஆணை தலைமேற்கொண்டு மனைவியுடன் கானகமடைந்து, அவளையிழந்ததனால் நெடுங்காலம் துன்பத்துக்கு ஆளான இராமன் கதை உனக்குத் தெரியாதா? மற்றொரு மன்னவன் சூதாடி நாடிழந்து, மனைவியுடன் காடுசென்று அங்கே அவளைக் கைவிட்டான். இந்த அரசர்களைப்பார்க்க உன் நிலை எவ்வளவோ போற்றத்தக்கது. ஆகவே ஊக்கத்தைக் கைவிடாது நகருக்குள்சென்று, தக்க தங்கலிடம் தேடி மீள்க!" என்றார்.

கவுந்தியடிகளிடம் விடைபெற்றுக்கொண்டு, கோவலன் வாயில்கடந்து நகருக்குள் சென்றான். வாயில்களில் யவன வீரர் உருவிய வாளுடன்நின்று காவல் செய்துகொண்டிருந்தனர். மாண்புமிக்க மாநகரத்தின் அகல் வீதிகளையும் செல்வ வளமிக்கவர் வாழ்ந்த மாடமாளிகைகளையும் அவன் வியப்புடன் நோக்கினான். நண்பகல்வரை அவன் சந்தைத் தெருவழியாகவும் வணிகர் வீதிவழியாகவும் பொதுச் சதுக்கங்களினூடாகவும் நடந்து திரிந்தான். அதன்பின் உச்சி வெயில் தாங்கமாட்டாமல் தெருவில் வரிசையாக நிறுவப்பட்டிருந்த கொடிகளின் நிழலில் ஒதுங்கியவண்ணம் திரும்பினான்.[1]

1. சிலப்பதிகாரம், காதை XIV.

கோவலன் கவுந்தியடிகளிடம் மதுரையின் வீறமைதி பற்றியும் அதன் மக்களின் இன்ப நிறைவுபற்றியும், பாண்டியன் பேராற்றல்பற்றியும் வருணித்துக்கொண்டிருந்தான். அச்சமயம் புகார்நகர் அருகிலுள்ள தலைச்செங்கானம் என்ற ஊரிலுள்ள பார்ப்பன யாத்திரிகனான மாடலன் என்பவன் அவர்கள் தங்கியிருந்த சோலைக்கு வந்தான். கோவலன் முன்பே அவனுடன் அறிமுகமானவனாயிருந்ததனால், அவனை வணங்கி வரவேற்றான்.

கோவலன் தன் மனைவியுடன் கால்நடையாகவே மதுரைக்கு வந்து சேர்ந்திருந்தான் என்றுகேட்டு மாடலன் வியப்பார்வம் உற்றான். புகாரில் இருக்கும்போது கோவலனால் நிகழ்த்தப்பட்ட அன்பறச்செயல்களைப் புகழ்ந்து எடுத்துரைத்ததுடன், துன்புற்றவர்கட்கும் ஏழைகட்கும் இவ்வளவு தண்ணளிகாட்டிய அவ்வண்ணல் இவ்வாறு துன்பமுழக்க நேர்ந்ததெவ்வாறு என்று வியந்தான்.

பொழுதடையுமுன் கோவலன் மீண்டும் நகருக்குள் சென்று வணிகர்மனைகள் இருந்தபகுதியில் தங்கிடம் அமர்த்திக்கொள்ள வேண்டுமென்று மாடலனும் கவுந்தியடிகளும் வற்புறுத்தினர். துறவிகளுடனும் ஆண்டிகளுடனும் அவர்கள் திறந்தவெளியில் தங்குவது சரியல்லவென்றும் கருதினர்.

அவர்கள் உரையாடிக்கொண்டிருக்கையில், மாதரி என்ற ஆய நங்கை கவுந்தியடிகளைக்கண்டு வணங்கினாள் நகர்ப்புறத்திருந்த ஒரு தெய்வத்தை வணங்கிவிட்டு அவள் மதுரைக்குத் திரும்பிச் சென்றுகொண்டிருந்தாள்.

கண்ணகியை ஆய நங்கையின் பாதுகாப்பில் விடுவதே நல்லதென்று கவுந்தியடிகள் எண்ணினாள். ஆகவே அவள் மாதரியை நோக்கிப் பேசினாள். "நான் சொல்வதைக் கேள், மாதரி! இந் நகரத்திலுள்ள வணிகர்கள் இவ்வணங்கின் கணவனின் தந்தை பெயர் கேட்டால் அவளைத் தத்தம் இல்லத்துக்கு வரவேற்று விருந்தினளாக நடத்துவதைத் தமக்கு ஒரு பெருமையாகக் கொள்வர் ஆனால் அவள் அவர்களுடன் அறிமுகமாகித் தகுதி வாய்ந்த தங்கிடம் பெறும்வரை இந் நங்கையை நான் உன்னுடைய பாதுகாப்பில்விட விரும்புகிறேன். அவளை உன் இல்லத்துக்கு இட்டுச் செல்க. அங்கே சென்று அவள் நீராடி ஆடைமாற்றிக் கொள்ளட்டும். அவளுக்குக் கண்ணுக்கு மையிட்டுப் பூச்சூடி அவளைப் பேணுவாயாக! உன் உரிமை மகளாக அவளைப் போற்றுவாயாக! செல்வச் சூழலில் பிறந்த அவள் கால்கள் அந்நகரில் நிலத்தைமிதித்தறிந்திருக்கமாட்டாது. ஆயினும் இப்போது அவள் நெடுந்தொலை நடந்து வந்துள்ளாள். அவ்வழியில் அவள் தன் நோவைச் சிறிதும் எண்ணியதில்லை. தன் கணவன் கடு வெயிலில் அலைந்ததற்கே துடித்து, அவன் தேவைகளைப் பெரிதும் கவலையுடன் கவனித்துவந்தாள். இத்தனை அன்புறுதியுடைய மனைவியை நான் கண்டதில்லை. அவளை உன்னுடன் இட்டுக்கொண்டு விரைக!" என்றார்.

கண்ணகிபோன்ற மெல்லியல் மாதுக்குத் துணைதர மாதரி மகிழ்வுடன் இணங்கினாள். பொழுது சாயும் நேரத்தில், ஆயர் கன்றை எண்ணிக் கரையும் தங்கள் ஆனிரைகளுடன் மேய்ச்சல் நிலங்களிலிருந்து திரும்பிச் செல்லும் சமயத்தில், அவள் கண்ணகியை உடனாகக்கொண்டு, ஆய நங்கையர் பலர் புடைசூழ நகருக்குட்புகுந்தாள். தன் வீட்டுக்கே அவள் கண்ணகியை இட்டுச் சென்றாள்.[1]

கண்ணகி கோவலன் போன்ற மேன்மக்களை விருந்தினராகக் கொள்வதில் மாதரி உண்மையிலேயே மிகவும் பெருமை கொண்டாள். அவர்களுக்காக அவள் ஒரு வனப்பு வாய்ந்த சிறு குடிசையைத் துப்புரவு செய்து கொடுத்தாள். அதற்கு நாற்புறமும் வேலியிட்டிருந்தது. அதன் சுவர்கள் செங்காவியால் தீட்டப்பட்டிருந்தன. அவள் கண்ணகி நீராடவும் ஆடைகள் மாற்றவும், தக்க துணை தந்தபின், தன் புதல்வி ஐயையை அவளுக்கு அறிமுகம் செய்துவைத்தாள் "அழகுமிக்க நங்கையே!

1 சிலப்பதிகாரம், காதை XV.

என் புதல்வி ஐயை உன் தோழியாய் இருப்பாள். என் இல்லத்தில் நீயும் உன் கணவனும் தங்கியிருக்கும்வரை உங்களுக்கு யாதொரு குறையும் இல்லாமல் காப்போம்!'' என்று அவள் கண்ணகியிடம் கூறினாள்.

மறுநாள் காலையில் மாதரி கண்ணகிக்கு உணவு சமைப்பதற்குரிய புதிய கலங்கள் வழங்கினாள். நேர்த்தியான செந்நெல் அரிசியும், பிஞ்சுமாவு, மாதுளை, கதலி முதலிய காய்கறி வகைகளும், தன் ஆவினத்திலிருந்து புதிது கறந்த நறும்பாலும் தந்தாள்.

கண்ணகி உடனடியாகக் காலை உண்டி சமைக்கத் தொடங்கினாள். காய்கறிகளை அவள் ஆய்ந்தரிந்தாள். ஐயை அவளுக்கு அடுப்புமூட்ட உதவி செய்தாள். தன்னாலியன்றவரையும் கவனிப்புடனே அவள் சோறும் கறியும் சமைத்தாள். ஆனால் அடுப்பின் வெப்பத்துக்கெதிராக இருந்த காரணத்தால் அவள் கண்கள் சிவந்தன. வியர்வை முகமெங்கும் ஆறாய் ஓடிற்று. சமையல் முடிந்ததும் அவள் கணவனை உணவு உட்கொள்ளும்படி அழைத்தாள்

உலர்ந்த புல்லால் முடையப்பெற்ற சின்னஞ் சிறு பாயிட்டு அதில் அவனை அமர்வித்தாள். கைகாலலம்பி அவன் பாயில் அமர்ந்தபின், அவள் அவன் அமர்ந்த இடத்தின் முன்புறமெங்கும் நீர் தெளித்து மெழுகி, தூய அந் நிலத்தில் வாழையின் இளந்தளிரிலை பரப்பி அதில் அமுது படைத்தாள்.

வணிகக் குடிப்பிறந்தார்க்கு விதித்துள்ள முறையிலே வழக்கமான வணக்க வழிபாடுகளை ஆற்றியபின், கோவலன் தன்முன் வைக்கப்பட்ட உணவை உட்கொண்டான். உண்டு களையாறித் தனியேயிருந்தபின். கண்ணகி அவனுக்கு வெற்றிலையும் பாக்கும் அளித்து உண்பித்தாள்.

அவளைத் தன் அருகே அழைத்துக் கோவலன் உரையாடினான். ``நாம் வந்த பாதை எவ்வளவோ கரடு முரடானது. அதில் நடக்கமுடியாமல் உன் மெல்லிய காலடிகள் எவ்வளவு வருந்தியிருக்கும்! இதை நினைத்து



வயது முதிர்வுற்ற நம் பெற்றோர் எவ்வளவு வருந்தியிருப்பார்கள்? இந்த இன்னல் முழுவதும் ஒரு கனவா அல்லது உண்மையிலேயே நிகழ்ந்ததானால் என் தீவினைகளின் பயனா? இன்னும் ஊழ் நமக்கு என்னென்ன அனுப்ப இருக்கிறதோ என்றஎண்ணம் என்னை நடுங்கவைக்கிறது. சோம்பேறிகளுடனும் போக்கிரிகளுடனும் பொழுது போக்குவதையே விரும்பியும் மூத்தோர் சொற்களைப் புறக்கணித்தும், பெற்றோர்க்குச் செய்யவேண்டும் கடமைகளில் தவறியும், இனநலமும் குணநலமும் ஒருங்கே வாய்த்த உன் போன்ற மனைவிக்குச் சொல்லொணாத்துன்பம் விளைத்தும் பெரும்பழி செய்துள்ள என்னையும் தெய்வம் பொறுத்துப் புன்முறுவல் காட்டுமா? நான் சென்றநெறி எவ்வளவு கொடிது என்பதை நான் என்றும் ஒருசிறிதும் அமைந்து எண்ணியதில்லை. அப்படியிருந்தும் இத் தொலைப்பயணத்துக்கு நான் துணிந்து உன்னை அழைத்தபோது நீ அட்டியின்றி உடன் தானே இணங்கி என்னுடன் வந்தாய். அந்தோ, என்ன காரியம் செய்தாய்?'' என்றான்.

கண்ணகி மெல்ல மறுமொழி பகர்ந்தாள். ``மாண்புமிக்க உங்கள் பெற்றோர்கள் அவ்வப்போது என்னைக் காண வந்ததுண்டு. நான் அவர்களைப் புன்முறுவலுடன் வரவேற்பது வழக்கம். அப்போது அவர்கள் என் பொறுமையைப் புகழ்ந்து அன்புகனிந்த மொழிகளால் எனக்கு ஆறுதல் உரைத்தார்கள். என் உள்ளத்தில் கடுந்துயர் அழுத்திக்கொண்டிருந்தது என்பதையும், அது காரணமாக, ஒரு காலத்தில் நான் மகிழ்வுடன் நிறைவேற்றிய இல்வாழ்வின் கடமைகள் யாவற்றையும் கவனியாமல் புறக்கணித்து வந்தேனென்பதையும் அவர்கள் அறிந்துகொண்டனர். என் துயரை நான் வெளிக்குக் காட்டாமல் அவர்களிடமிருந்து மறைத்துவைக்க முயன்றது காரணமாக, அவர்கள் துயரம் இரட்டிப்பாயிற்றேயன்றி வேறன்று. தாங்கள் இவ்வாறு எவரும் விரும்பாத வாழ்க்கை வாழ்ந்தாலுங்கூட, உங்கள் சிறு விருப்பத்தை மறுக்கக்கூட எனக்கு உவந்து மனம் வரவில்லை. என்னை

நீங்கள் உடன்வர அழைத்தபோது என்னால் வராமலிருக்க மனம் வரவில்லை,'' என்றாள்.

கோவலன் மேலும் இன்மொழி புகன்றான். ''உன்னிடம் அன்புமிக்க பெற்றோரையும் கடமை தவறாத உன் தோழியர்களையும் நண்பர்களையும் விட்டுவிட்டு, உன் நற்குணங்களன்றி வேறு துணையின்றி நீ என்னுடன் வந்து என் துன்பங்களில் பங்குகொண்டாய். உண்மையில் துன்ப நேரத்தில் துணைதரும் தெய்வமாகவே நீ நடந்துகொண்டிருக்கிறாய். இப்போது உன் காற்சிலம்புகளை விற்பனைக்கு எடுத்துச் செல்கிறேன். நான் திரும்பிவரும் வரை நீ இங்கேயே இரு. உன்னைத் தனியே விட்டுச்செல்கிறேனென்று நீ அஞ்சவேண்டா,'' என்று கூறி அவன் கண்ணகியை அன்புடன் அணைத்துக்கொண்டு அவள் கால் சிலம்புகளில் ஒன்றைக் கைக்கொண்டு குடிசையை விட்டு வெளிக்கிளம்பினான். அப்போது ஆண்டகையாகிய அவன் கன்னங்கள் வழியாகக் கண்ணீர் பெருகிற்று. ஆனால் வேறு யாவரும் காணுமுன் அவன் அதைத் துடைத்துக்கொண்டான். தள்ளாடிய நடையுடன் அவன் ஆயர்தெரு வழியாக நடந்து, பொதுமகளிர் வாழும் மறுகு கடந்து சந்தைப்பாதையை அடைந்தான்.

இங்கே, தமிழர் பொதுவே அணியும் ஆடையுடன், அதன்மேல ஒரு நீண்ட அங்கி அணிந்து, தனிச் சிறப்புடைய தோற்றத்துடன் பணியாட்கள் சுற்றிவரச் செம்மாப்புடன் அவர்களிடையே ஒருவன் எதிரே நடந்துவந்தான். அவனே பாண்டிய மன்னனின் தலைமைப் பொற்கொல்லன் என்று கேள்வியுற்று, அவன் அப்பொற்கொல்லனை அணுகினான். ''அரசியர் அணிதற்குரிய காற்சிலம்பொன்றினை நீங்கள் மதிப்பிட்டுக் காணமுடியுமா?'' என்று கேட்டான்.

பொற்கொல்லன் கோவலனை இருகையுமெடுத்துக் கூப்பி வணங்கினான். ''தம்பணி நிற்கும் அடியேன்சரியாக மதிப்பிட முடியாதிருக்கலாம். ஆனால் மன்னர் மணிமுடியும் பிறவும் இயற்றவல்லவனே நான்,'' என்றான்.



கோவலன் தன் ஆடையில் சுற்றிவைத்திருந்த அணிகலனை அவிழ்த்தெடுத்துப் பொற்கொல்லனுக்குக் காட்டினான். மரகதங்களும் வயிரங்களும் பதித்துமிக அழகிதான வேலைப்பாடுடைய அந்த மேம்பட்ட சிலம்பைக்காண அவன் வியப்புற்றான். ''அரசி தவிர வேறுயாரும் இதனையணியும் தகுதியுடையவரல்லர். ஆகவே அரசனுக்குத் தகவல் கூறி அவர் விருப்பத்தை உனக்குத் தெரிவிக்கிறேன், அதுகாறும் என் சிறு குடிலிலேயே தங்கியிருக்கக் கோருகிறேன்,'' என்றான். கோவலன் அதன்படியே பொற்கொல்லன் வீட்டின் அருகாமையிலிருந்த ஒரு கோவிலகத்தே வீற்றிருந்தான்.

பொற்கொல்லன் உள்ளம் தனக்குள்ளாகப் பேசிக்கொண்டது: ''இந்த அணிகலன் நான் திருடியுள்ள அரசியின் அணிகலன்போன்றே இருக்கிறது. இக்களவு வகையில் அரசன் என்மீது ஐயுற ஏதேனும் வாய்ப்பு ஏற்படுமுன், இந்த அயலானே அதைத் திருடினானென்று நான் குற்றம் சாட்டிவிடுதல் நலமாகலாம்.'' இவ்வாறு எண்ணியவனாய் அவன் நேரே அரண்மனைக்குச் சென்றான்.

அவன் அரசனை அணுகிய சமயம், அரசன் அரசியின் உவளகம்நுழையத்தொடங்கியிருந்தான். பொற்கொல்லன் அச்சமயம் பார்த்து அரசன் காலடியில் வீழ்ந்து செய்தி கூறினான். ''கடப்பாரையோ கன்னக்கோலோ இன்றித் தன் மாயத்தாலேயே அரண்மனைக் காவலர்களைத் துயிலுறுவித்து அரசியின் சிலம்பைத் திருடிச்சென்ற கள்வன் இதுகாறும் நகர் காவலரின் தேடுமுயற்சிகளுக்கு அகப்படாமல் தப்பியிருக்கிறான். ஆனால் இப்போது அவன் என் சிறு குடிசையில் வந்து தங்கியிருக்கிறான்,'' என்றான்

மன்னன் காவலரில் சிலரை அழைத்தான். ''சிலம்பு திருடன் கையிலிருக்கிறதா என்று பார்த்து, இருக்குமானால், திருடனைக்கொன்று அணிகலனைக் கொணர்க,'' என்று பணித்தான்.

தன் சூழ்ச்சி முறை நன்கு பலித்து வருவது கண்ட பொற்கொல்லன் மகிழ்வுடன்காவலர்களைக் கோவலனிடம்

அழைத்துச் சென்றான். "மன்னராணையால் இவ்வீரர்கள் அந்தச் சிலம்பைக்காண வந்திருக்கிறார்கள்." என்றான். கோவலன் அணிகலனைக் காட்டினான். அவர்கள் அணிகலனையும் கோவலனையும் மாறிமாறிப் பார்த்தார்கள். பொற்கொல்லனைத் தனியே அழைத்துச் சென்று, "இவன் உயர்குடியினனாகக் காணப்படுகிறான்; இவன் திருடனாயிருக்கமுடியாது," என்றனர்.

"திருடர்களெல்லாம் மாயமும் மருந்தும் மந்திரமும் வல்லவர்கள், மன்னன் பணியை நிறைவேற்றுவதில் நீங்கள் காலந்தாழ்த்தினால், திருடன் தன் மாயத்தால் உருக்கரந்து மறைந்துவிடக் கூடும். அல்லது மந்திர மருந்துகளால் எல்லாரையும் துயிலில் ஆழ்த்திவிட்டுச் சென்றுவிடக்கூடும். எது எப்படியானாலும், மன்னர் ஆணையை நிறைவேற்றாமல் விட்டால், மன்னர் மனமறுக்கத்துக்கு ஆளாகி, தண்டனையடையவே நேரிடும்," என்று பொற்கொல்லன் நயவஞ்சகமாகக் கூறினான்.

அவன் விடாது பின்னும் அவர்களை ஊக்கினான். "அன்றொரு நாள் பகலில் வெளிநாட்டுத் தூதுவனைப்போல அரண்மனைவாயிலில் வீற்றிருந்து, இரவில் பணிப்பெண் போல உருக்கொண்டு அரண்மனைக்குள் புகுந்து தூண்களின் நிழல்களினூடாகப் பதுங்கிச் சென்று, மன்னர் உடன் பிறந்தானின் படுக்கையறையடைந்து அவர் மெய்யகத்துள்ள கழுத்துமாலையைக்களவாடிச்சென்றானே, அவனை உங்களில் எவராவது தேடிக் கண்டுபிடித்து விட்டீர்களா? இளவரசன் விழித்தெழுந்து திருடனை வெட்டி வீழ்த்தத் தம் வாளை உருவியபோதுகூட, அவன் உறைகொண்டு தன்னைக் காத்துக்கொண்டதுடன், திறமையாகத் தூணின் பின்சென்று மறைந்து, அந்தக் கல் தூணுடனே இளவரசனைப் போராடும்படி விட்டுச் சென்றதை நீங்கள் அறிவீர்களா?" என்று அவன் காவலர்களை அதட்டினான்.

காவலர்களுள் ஒருவன் இப்போது அவன் எதிரொலியாகப் பேசினான். "எனக்கு இப்போது நினைவு வருகிறது.



முன்னொருநாள் மழையும் இருட்டும்கூடிய ஓர் இரவில், நான் நகரைச் சுற்றிச் சென்றுகொண்டிருந்தபோது, என் முன் திடுமெனக் கடப்பாரை தாங்கிய ஒருதிருடன் தோன்றிப் புலிபோல உறுமிக்கொண்டு நின்றான். நான் உடனே வாளை உருவினேன். ஆனால், அவன் அதை என் கையிலிருந்து பறித்துக்கொண்டுவிட்டான். இரவின்இருட்டிலே நான் அவனையும் திரும்பக் காணமுடியவில்லை. வாளையும் திரும்பக் காணவில்லை. ஆகவே, தோழர்களே! நாம் என்ன செய்யவேண்டுமென்பதை விரைவிலேயே முடிவு செய்ய வேண்டும். அன்றேல் நாம் கட்டாயமாக மன்னவன் தண்டனைக்கு ஆளாவோம்" என்றான்.

அவன் பேசி வாய்மூடவில்லை. அதற்குள்ளாகவே, கல்லா இளைஞனான மற்றொரு மெய்காவல்வீரன் தன் வாளை உருவினான். அதன் ஒரே மின்னல் வீச்சால், கோவலன் தலை மண்ணில் உருண்டது. அவன் உடல் சாய்ந்தது. அதினின்று செங்குருதி குதித்தோடி மண்ணைக் கவ்விற்று.[1]

இதற்கிடையில், நகரின் ஆய்ப்பாடியில் ஆய் நங்கையர்கள் தங்கள் கால்நடைகளின் நலத்தையும்கண்ணகியின் பொழுதுபோக்கையும் உன்னி, திருநிலைபெற்ற குரவைக் கூத்தாடினார்கள். நங்கையருள் ஒருத்தி ஆய்க்குல வீரனான கண்ணனாக நடித்தாள். மற்றொருத்தி அவன் தமையன் பலதேவனாக நடித்தாள். மூன்றாவது ஒருத்தி கண்ணனின் அன்புக்குரிய காதல் நங்கையாக நடித்தாள். ஏழு ஆய்நங்கையர்கள் கைகோத்துச் சூழ்வட்டமாக நின்று சில நாழிகைநேரம் இன்பக் கூத்தாடினர்.[2]

கூத்து முடிவில், நங்கையருள் ஒருத்தி மலரும் நறும்புகையும் சந்தனமும் கொண்டுசென்று வைகையில் நீராடி திருமாலை அடிபணிந்தாள். வழியில் கோவலன் கொல்லப்பட்டானென்ற அலருரை கேட்டு அவள் கண்ணகியின்

1. சிலப்பதிகாரம், காதை, XVI
2. சிலப்பதிகாரம், காதை, XVII.

குடிசைக்கு விரைந்தாள். தான் கேட்டவற்றை அவள் அண்டையயலார்களுக்கு மெல்லவேனும் உரைக்க முடிந்தது. ஆனல், கண்ணகி முன்னிலையில் அவளால் வாய் திறக்க முடியவில்லை. துணுக்குறும் அச்செய்தியைக் கூறமாட்டாமல் அவள் நின்றாள்.

தன் கணவன் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த கண்ணகி, அவளிடம் வற்புறுத்தி உசாவினாள். "அண்டையயலார் வாயடங்கி உரைப்பது என்ன, தோழியே! என் கணவன் சென்று நெடுநேரம் ஆயிற்று. அவர்நலம்பற்றிப் பெருங்கவலைப்படுகிறது என்நெஞ்சம்," என்றாள்.

"அரண்மனையில் ஒரு சிலம்பைத்திருடினன் என்ற குற்றச்சாட்டினால், உன் கணவன் கொலைப்பட்டான்," என்று அந்நங்கை கூறினாள்.

இச் சொற்களைக் கேட்டதே கண்ணகியின் கண்கள் கண்ணீரை ஆறுய்ப்பெருக்கின. அவள் நிலத்தின் மீது சாய்ந்தாள்! "அந்தோ! கண்ணாளரே, கண்ணாளரே!" என்று அலறினாள். துயர்வேகத்தால் வெறிகொண்டு அவள் மீண்டும் எழுந்து நின்றாள். யாவரும் கேட்க முழங்கினாள்.

"கேண்மின்கள், என்முன் குரவைக் கூத்தாடிய நங்கைமீர்! இந்த அகல் உலகில் நடக்கும் எல்லாவற்றையும் கண்கொண்டு காணும் கதிரவனே கேளாய்! எனக்குச் சான்றாய் இருப்பீர்களாக! என் கணவன் கள்வனா?"

வானின்று ஒருகுரல் கூக்குரலிட்டுக் கூவிற்று. "உன் கணவன் கள்வனல்லன். இந்நகர் தீயூழ்ப்பட்டுத் தீயாலெரிக்கப்படும்," என்று அது அலறிற்று.

மறு சிலம்பை அவள் தன் கையில் எடுத்தாள். கண்கள் இரண்டிலிருந்தும் கண்ணீர் ஆறாக ஓட, அவள் ஆய்ப்பாடியினின்றும் வெளியேறினாள். "என் கணவன் கள்வனல்லன்" என்று அவள் தன்னைச் சூழ்ந்து பின்



தொடர்ந்த மக்களை நோக்கி ஓலமிட்டாள். "அவர் கொண்டுசென்றது என் காற் சிலம்புகளில் ஒன்றே. அவர் முறைகேடாகவே கொல்லப்பட்டுள்ளார்," என்று கூவிக் கொண்டே சென்றாள்.

அழுதரற்றிக்கொண்டே அவள் வீதிகளின் வழியாகப் பாய்ந்துசென்றாள். ஆடவரும் பெண்டிரும் இல்லங்களிலிருந்து வெளிவந்து அவளைக் கண்டு இரங்கி, திகிலுடனும் திகைப்புடனும் அவளுக்கு நேர்ந்த கொடும்பழி கண்டு குமுறினர்.

தன் கணவன் பிணமாய்க்கிடந்த இடத்தை அவள் அணுகியபோது, கதிரவன் சாயும் தறுவாயிலிருந்தான். அவள் தன் கணவன் உடலை எடுத்தணைத்தாள். அது விறைத்துக் கிடந்ததுகண்டு திடுக்கிட்டாள். அவள் பிணத்தருகே விழுந்துகிடந்து புரண்டாள். இரவுமுழுதும் அவள் அழுகைக்குரல் தெருவீதி எங்குங் கேட்டது.

அன்பரே, என் துயரை நீர் காண்கின்றீரா? அந்தோ, உம் பொன்னுடல் புழுதியிலன்றோ புரளுகிறது! அந்தோ, இரவின் இருட்டிலே, துணையின்றித் தனியாக நான் உம் அருகிலிருந்து அழுகிறேன், உம் உடலோ வெறு நிலத்தில் வாளா கிடக்கின்றது. உம் உடல் புழுதியில் கிடப்பதையும் உம் உடம்பின் ஊறுவாயிலிருந்து குருதிசோருவதையும் கண்டு, என் கண்கள் கண்ணீர் உகுக்கின்றன," என்று அவள் புலம்பிக்கொண்டிருந்தாள்.

துன்பவெறியில் அவள் மீண்டும் மீண்டும் கணவன் உடலை அணைத்துக்கொண்டாள். மயக்கமுற்ற அவள் மனக்கண்முன் அவன் எழுந்து அவள் முகத்திலொழுகும் கண்ணீரைத் துடைத்ததாக அவளுக்குத் தோற்றிற்று. ஆனல், அவள் அவன் காலடிகளைத் தழுவமுயன்றபோது, 'நீ இங்கேயே இரு' என்றுகூறி அவன் ஆவி வானுலகத்துக்குத் தாவிற்று என்று அவள் கண்டாள். அவன் வாழ்நாளில் அவன் வாழ்க்கைத்துணைவியாக இருக்க

அவள் அவாக்கொண்டிருந்தாள். அவன் இன்ப துன்பங்களில் பங்குகொண்டு, துன்பத்தில் ஆறுதலளித்து உறுதுணையாக வாழ எண்ணியிருந்தாள். ஆனால், இந்த அவாக்களெல்லாம் இப்போது மண்ணுடன் மண்ணாக மடிந்தன.

தன் கனவை இப்போது அவள் எண்ணிப்பார்த்தாள். எதிர்பாராதபடி இவ்வளவு விரைவில் அது நிறைவேறிவிட்டதே என்று ஏங்கினாள்.

அவளுக்கு இப்போது வாழ்வு கசந்துவிட்டது. அழன்றெரிகின்ற ஒரே ஓர் அவா இப்போது அவளை ஆட்கொண்டது. அதுவே, கணவன் குற்றமின்மையைத் தெளிவுபடுத்தி, அவன் கொலைக்குக் காரணமான கொடுங்கோல் மன்னனைப் பழிக்கிரையாக்கி விடவேண்டுமென்பது.[1]

அதே இரவில், பாண்டிய அரசி அச்சந்தரும் கனவுகள், தீக்குறிகள் கண்டாள். ஆகவே அவள் காலையில் குறளர்கள், பேடியர்கள், கூனர்கள், தோழியர்கள் புடைசூழ, மன்னனிடம் விரைந்து சென்றாள். அதற்குள்ளாகவே அரசன் எழுந்திருந்து அரியணையில் வீற்றிருக்கக் கண்டாள். அவனிடம் அவள் தன் கனவை எடுத்துரைத்தாள். அதை அவள் கூறிக்கொண்டிருக்கும்போதே, கண்ணகி அரண்மனைவாயிலுக்கு வந்து விட்டாள்.

"வாயிலோனே!" என்று அவள் வாயில்காப்போனை அதட்டி விளித்தாள்.

"குடிகளிடம் தன் கடமையுணராத அறிவற்ற மட்டியரசனுக்கு ஆட்பட்டு வேலைசெய்யும் வாயிலோனே!

"சிலம்பு கைக் கொண்டு, கணவனை இழந்த காரிகை ஒருத்தி வந்திருக்கிறாளென்று உன் அரசனிடம் போய்ச் சொல்!" என்று அவள் உறுமினாள்.

1. சிலப்பதிகாரம், காதை, XIX.



வாயில்காப்பவர்களில் ஒருவன் அரசன் முன்னிலையில் சென்று வழக்கமான வணக்கவுரை கூறி, செய்தியுரைத்தான்.

"நீடுவாழ்க, கொற்கை வேந்தனே !
'நீடுவாழ்க, பொதியை மன்னனே !
"நீடுவாழிசெழிய, தென்னாடு ஆளும் தென்னவவாழி!
"தீதுசெய்ய முனையாய் பஞ்சவ, வாழி!

"கொற்றவையோ, காளியோ என்னும்படி, கையில் பொற் சிலம்பு ஒன்று ஏந்தியவண்ணம் கணவனை இழந்த காரிகை ஒருத்தி அரண்மனை வாயிலில் வந்து நிற்கிறாள்!" என்றான்.

"அவள் இங்கே வரட்டும்; இங்கே அவளைக் கொண்டுவா," என்றான் மன்னன்.

காவலன் முன்வர, அரசனும் அரசியும் வீற்றிருந்த மண்டபத்தினுள் கண்ணகி புகுந்தாள்.

அவள் கோதா நீண்முடி குலைந்து புரண்டது. அவள் உடல் முழுதும் புழுதி படிந்திருந்தது. அவள் கண்களிலிருந்து கண்ணீர் கன்னங்களில் விரைந்தோடிற்று.

அவளைக் கண்டு இளகிய உள்ளத்தினனாய் அரசன் கனிவுடன் பேசினான் :

"நீரார்ந்த கண்களுடன் வந்து நிற்கும் நங்கையே, நீ யார் ?"' என்று கேட்டான்.

"நுண்ணறிவற்ற அரசனே !" என்று விளித்து பொங்கிவரும் கடுஞ்சினத்தை அடக்கமாட்டாதவளாய், அதிர்ந்து துடிக்கும் குரலுடன் கண்ணகி சொற்களைக் கொட்டினாள்: "நுண்ணறிவற்ற அரசனே, உன்னிடம் தான் பேசவந்திருக்கிறேன். நடுநிலைகோடா நேர்மைக்குப் பேர்போன மன்னர்களாண்டது என் நகர். அவ்வரசர்களுள் ஒருவன் ஒரு புறாவைக் காப்பதற்காகத் தன்

உடலின் தசையையே அரிந்து அளித்தான். மற்றோர் அரசன் ஒரு கன்றைக் கொன்ற பழிதீரத் தன் அருமை மைந்தன்மீதே தேர்க்காலை உருட்டினான். அத்தகைய மன்னர்கள் ஆண்ட புகார் நகரத்தினள் நான். என்பெயர் கண்ணகி. புகழ் வாய்ந்த வணிகன் மாசாத்துவான் மகனாகிய கோவலன் மனைவி நான். அக்கோவலன் வாழ்வின் ஆக்கம் நாடி உன் நகருக்கு வந்து என் சிலம்பு ஒன்றை விற்கச்சென்றவிடத்தில் உன்னால் கொல்லப்பட்டான்" என்றாள்.

"பெண்ணணங்கே, கள்வனைக் கொல்லுதல் குற்றமாகுமா? நாடாளும் மன்னர் உரிமை அதுதானே!" என்று மன்னன் அமைதியுடனே கூறினான்.

"செங்கோன்மை பிறழ்ந்த அரசே! என் சிலம்புகள் வைரங்கள் நிறைந்தவை," என்றாள் கண்ணகி.

"நன்று கூறினாய். என் சிலம்புகள் முத்துக்கள் நிறைந்தவை. சிலம்பைக் கொணர்க, தேர்வோம்!" என்று அரசன் கூறினான்.

சிலம்பு அரசன் முன் வைக்கப்பட்டது. கண்ணகி அதை உடைத்ததும் அதிலுள்ள வைரங்கள் தெறித்தன. சில மன்னன் முகத்தின் மீதே சென்று விழுந்தன.

தெறித்த ஒண்மணிகளைக் கண்டதே, மன்னன் மனமுடைவுற்றான். பொற்கொல்லனால் தான் வஞ்சிக்கப் பட்டதை உடனே உணர்ந்தான்.

மன்னன் என்ற மதிப்பிழந்து, நேர்மைபிழைத்ததனால் மனமுடைந்து மன்னன் ஏங்கினான். "அந்தோ! நான் ஓர் அரசனா! அல்ல, அல்ல! பொற்கொல்லன் சொற்களில் நான் உறுதி வைத்தேனே! நானே கள்வன். தென்னாடாண்ட நீண்டபுகழ் மன்னர் மரபுக்கு நான் மாறாக் களங்கமானேன். மானமிழந்து நான் வாழ்வதை விட மாள்வதேமேல்," என்றுகூறி அவன் உணர்விழந்து விழுந்தான்.



பாண்டிய அரசியும் கண்ணகி காலில் விழுந்தாள். கணவன் இறந்தபின் மனைவிக்குக் கூறத்தகும் ஆறுதலிது என அறியாதவளாய் அவள் மன்னிப்புக் கோரினாள்.[1]

"இம்மன்னன் மாளட்டும். இவ்வரண்மனை தீக்கிரையாகட்டும்" என்று கடுஞ்சீற்றமும் ஏக்கமும் கலந்த மனத்துடன் முழக்கிய வண்ணம், கண்ணகி தீக்கடவுளையே வன்சினங்கொண்டழைத்தாள்.

அரண்மனை உடன்தானே தீப்பற்றிக்கொண்டு குமுறிற்று. அரண்மனை வாயிலிலிருந்து கரும்புகை வெளிவருவது கண்ட காவலர் கடுவியப்புற்றனர். யானைகளும் குதிரைகளும் இலாயங்களிலிருந்து கட்டுத்தறிகளை முறித்துக்கொண்டு தீக்கஞ்சி நகரில் ஓடின. அரச குருவும் அமைச்சர்களும் பிற அரசியற்பணி முதல்வர்களும் மன்னனும் அரசியும் மடிந்தனர் என்பதறியாது தீயை அணைக்க விரைந்தோடி வந்தனர்.[2]

மதுரைத் தெய்வம் கண்ணகிமுன் தோன்றிக் காட்சியளித்து, சீற்றம் தணியுமாறும் நகரை முற்றிலும் அழியாமல் காக்குமாறும் மன்றாடினாள், "முற்பிறப்பில் செய்த ஒரு தீவினையின் பயனாகவே உன் கணவன் கொலைப்பட்டிருக்கிறான். கலிங்க நாட்டில் சிங்கபுரம், கலிங்கபுரம் என்ற இடங்களை ஆண்ட வசு, குமரன் என்ற இருமன்னர்கள் தம்முள் கொடும்போர் புரிந்து வந்தார்கள். ஆறு காவத எல்லைக்குள் அவர்கள் நகரங்களை எவருமே அணுகவில்லை. பெருத்த ஆதாயம் பெறும் ஆவலால் சங்கமன் என்னும் வணிகன் போர்க்களத்தினூடாகவே தன் மனைவியுடன் சிங்கபுரத்தில் நுழைந்து தன் சரக்குகளை விற்க முனைந்தான். அச்சமயம் வசுவினிடம் உழைத்த பரதன் என்னும் பணியாளன் சங்கமனைக் கைப்பற்றி அவன் ஒற்றனென்று அரசனிடம் குற்றஞ்சாட்டி முறைகேடாகத் தூக்கிலிட்டான். அத்தப் பரதனே கோவலனாகப் பிறந்து தன் பழவினைப்பயன் துய்க்கும்படி மாண்டான்," என்றாள்.

1. சிலப்பதிகாரம், காதை, XX.
2. சிலப்பதிகாரம், காதை, XXI, XXII.

கண்ணகி தன் மங்கலக் காப்புகளைக் கொற்றவை கோயிலில் சென்று உடைத்து மேற்குவாயில்வழி வெளியே சென்றாள், "என் கணவனுடனே கிழக்கு வாயில் புகுந்தேன். ஆனால் மேற்கு வாயில் வழியே தனியே போகின்றேன்," என்று அவள் மனங்கவன்று பிதற்றிக் கொண்டே சென்றாள்.

கணவனை இழந்த அவள் உள்ளம் பகலும் இரவும் ஒரு சிறுபோதும் ஓய்வு காணவில்லை. வெந்துயரால் உள்ளம் வெம்பி வெதும்பியவளாய், உணவு உட்கொள்ளவும்முடியாமல், உறங்கவும் இயலாமல், அவள் வைகையின் வடகரை வழியாக நடந்து, முருகனுக்குரிய திருநிலையுடைய குன்றில் ஏறினாள். அங்கே குறவருக்குரிய சிற்றூர்களிடையே, கோவலனிறந்த பதினான்காம் நாளில், வாழ்நாள் முழுவதும் ஒரு சிறு தீங்கும் உன்னியறியாமலே வாழ்வின் கொடுந் துன்பமுற்றிலும் துய்த்த அம்மெல்லியல்மாது வானுலகெய்தினாள்.[1]

கோவலன் கொலையுண்ட துன்பச் செய்தியையும் கண்ணகி நகர் நீங்கிய உருக்கமான வரலாற்றையும்கேட்ட கவுந்தியடிகள் துயரமேலீட்டால் உணவு நீர் வெறுத்து விரைவில் உயிர் நீத்தார்.

பார்ப்பன யாத்திரிகனான மாடலன் தன் ஊருக்குச் செல்லும் வழியில் புகாருக்குப் போய் இச்செய்திகள் யாவும் கூறினான்.

கோவலன் தந்தை புதல்வன் துயர்முடிவு கேட்டுத் திகைத்து உலகவாழ்வில் மன வெறுப்புற்றுத் துறவறம் பூண்டு புத்தத் துறவியாயினான். கோவலன் தாயோ துயர் தாங்காது உயிர் விட்டாள்.

கண்ணகியின் தந்தை தன் செல்வமுழுவதும் அறவழியில் ஈந்துவிட்டு ஆசீவகத்துறவியருடன் சென்று வாழலானான். கண்ணகியின் தாயும் துயரால் உலகு நீத்தாள்.

1. சிலப்பதிகாரம், காதை, XXIII.



ஆடல் நங்கையாகிய மாதவி இச் செய்திகள் கேட்டு, இனிச் சமயத்துறைக்கே தன் வாழ்வை ஒப்படைத்து விடுவதென்று துணிந்தாள், அத்துடன் தன் மகளாகிய மணிமேகலையையும் அவள் புத்தத் துறவு நங்கையருள் சேர்ந்தாள்.

கோவலன் கொலையுண்ட பெரும்பழி சூழ்ந்த நாள் முதல் பாண்டிநாட்டிலே மழை பொய்த்து விட்டது. பஞ்சமும் காய்ச்சலும் அம்மை நோயும் மக்களைக்கொடுமைகளுக்கு ஆளாக்கின. கண்ணகியின் வஞ்சினத்தாலேயே இவையெல்லாம் நேர்ந்ததெனக் கருதிக் கொற்கையில் தன் ஆட்சி நிறுவிய மன்னன் வெற்றிவேற்செழியன் கண்ணகியின் திருமுன்பு ஆயிரம் பொற்கொல்லரைக் கழுவேற்றி, அவள் பெயரால் விழாக் கொண்டாடினான். அதன்பின் மழை மதங்கொண்டு பொழிந்தது. பஞ்சமும் நோயும் பாண்டி நாட்டிலிருந்து விலகியோடின.

கொங்குநாட்டரசராகிய கோசரும் இலங்கைமன்னன் கயவாகுவும், சோழன் பெருங்கிள்ளியும் கண்ணகி பெயரால் கோயில்கள் எழுப்பி விழாக்கள் கொண்டாடினர் அவர்கள் நாடுகளிலும் பொய்யா நெடுமழை பெய்து பயிர் வளம் பொங்கிற்று.

சேரன் செங்குட்டுவன் தானே கங்கைக் கரைக்குத் தண்டெடுத்துச் சென்று மகதத்தை ஆண்ட கர்னர்கள் உதவியால் இமயமலையிலிருந்து கல்லெடுத்துக் கங்கையில் திரு நீராட்டினான். பின் அதைத் தங்கள் தலைநகரான வஞ்சிக்குக் கொணர்ந்து, அதையே கண்ணகியின் அழகிய உருவச் சிலையாகச் செப்பம் செய்வித்தான். சிலைக்குரிய திருமுழுக்காட்டு விழாவை அவன் பெருஞ் சிறப்புடன் கொங்கு மன்னர், மாளவ மன்னர், இலங்கை மன்னன் கயவாகு ஆகியவர்கள் முன்னிலையிலேயே கொண்டாடினான்.

முடிவில் ஆசிரியர் அறத்தின்நீதி கடக்கவொண்ணா உறுதி பயப்பது என்ற கோட்பாட்டைச் சுட்டிக்காட்டுகிறார், வந்தணவழிபாடோ, பலியாட்டோ

எதுவும் தீவினையின் பழியை அகற்றி விடாது. தீவினையின் வினைப்பயனைத் துய்த்தே தீர வேண்டும். அவர் இறுதி அறமுறை வாசகங்களாவன:

"உலகத்து மக்களே, கேளுங்கள்! உன்னிப்பாகக் கேளுங்கள்!! இளமையும் செல்வமும் நிலையாக நிற்க மாட்டா. ஆகவே உங்கள் வாழ்நாளை வீண்நாளாகக் கழிக்காதேயுங்கள். காலத்தை முன்னறிந்து. காலத்தே நல்வினைசெய்து நற்பயன் சேகரியுங்கள். அது ஒன்றே வருங்கால வாழ்வில் உங்களுக்கு ஊன்றுகோலாய் உதவுவது."

# 12. மணிமேகலைக் கதை

மணிமேகலை ஒரு பெருங்காப்பிய ஏடு. அதன் சரியான பெயர், அதன் ஆசிரியராலேயே குறிக்கப்பட்டபடி, மணிமேகலை துறவு[1] என்பதாகும். கோவலன் மகளாகிய மணிமேகலை உலக வாழ்வைத் துறந்து புத்த அறநங்கையாக நேர்ந்ததற்குரிய சூழ்நிலைகளை இக்காப்பியம் விரித்துரைக்கிறது. இந்நூல் சிறப்பாக, தென் இந்தியாவிலும் இலங்கையிலும், சுமத்ராவிலும் கி. பி. இரண்டாம் நூற்றூண்டின் முற்பகுதியில் புத்தநெறி எந்த அளவுக்குப் பரவியிருந்தது என்பதைத் தெரிவிக்கும் மதிப்பு வாய்ந்த ஓர் எழுத்துமூலம் ஆகும். இலங்கையில் பாஹியான், ஹியூன் சாங் ஆகியவர்களின் சீன நூல்களையும் இலங்கையின் பாளி மொழியிலுள்ள காலக்கணிப்பேடுகளான தீபவம்சோ, மகாவம்சோ ஆகியவற்றைவிட அது பழைமைவாய்ந்ததாதலால், அதன் அருமை இன்னும் உயர்ந்ததாகும். புத்தசமயத் திருநூல்களுக்கு அடுத்தபடியாக, புத்தசமயத்தினர் வணக்கப் பொருள்கள், வழிபாட்டு முறைகள், தனிப்பட்ட சமயக்கருத்துக்கள், மூடநம்பிக்கைகள், நுணுக்க மெய்விளக்கக் கொள்கை கோட்பாடுகள் ஆகியவற்றைத் தெரிவிக்கும் வகையில் உலகில் வேறெம் மொழியில் இருக்கும் நூல்களையும்விட இது பழமை வாய்ந்ததாகும்.

1. அணிமையில் கும்பகோணம் கல்லூரித் தமிழாசிரியர் திரு. வி. சாமிநாதய்யரவர்கள் விளக்கவுரையுடன் கூடிய இந்நூலின் ஒரு சிறந்த பதிப்பை வெளிக்கொணர்ந்துள்ளார்.

இக் காப்பியத்திலிருந்து நாம் புத்தர்கால வழக்குகளைப்பற்றிய பல செய்திகளை உணரலாம். எடுத்துக்காட்டாக, தமிழகத்தில் அந்நாளில் புத்த துறவியர் பெருந்தொகையினராய் இருந்தார்கள். அவர்களில் சிலரேனும் நடந்ததும் நடக்கவிருப்பதுமான செய்திகளை அறிதல் முதலிய மாயச் சித்துக்கள் தம்மிடமிருப்பதாகக் கூறி வந்தனர். அத்துடன் அவர்கள் மாயங்களிலும் மந்திரங்களிலும் நம்பிக்கை உடையவர்களாய் இருந்தார்கள். மனிதர்களுடன் தொடர்புகொண்டு ஊடாடிய தெய்வங்கள் பற்றிய நம்பிக்கையும் அவர்களுக்கு இருந்தது.

ஏட்டின் ஆசிரியர் சீத்தலைச் சாத்தனார் புலமையும் ஆர்வமும் மிக்கஒரு புத்தராயிருந்ததாகத் தோற்றுகிறது. புத்தர் பெருமானின் வான்வழிப் போக்கு வரவுகள், முன் பின் பிறவிகள் பற்றிய அவர் அறிவு ஆகிய அந்நாளைய ஆர்வ நம்பிக்கை மரபுகளைப் பின்பற்றி, அவர் காப்பியத் தலைவியும் வானில் இயங்குவதாகவும், பல்வேறு செயற்கருஞ் செயல்கள் செய்வதாகவும் புனைந்துரைத்துள்ளார்.

தமிழகத்தில் அந்நாள் நிலவிய சமயங்களைப் பற்றி நான் இறுதியில் விரித்துரைக்க இருக்கிறேன். புத்த சமயத்தைப் பற்றிய காப்பியக் குறிப்புக்களை அவ்விடத்துக்கு ஒதுக்கிவைத்துவிட்டு, இங்கே மணிமேகலைக் காப்பியக் கதையை மட்டும் சுருக்கி வரைகிறேன்.

வானவர் வேந்தனாகிய இந்திரன் பெயரால் புகாரில் ஆண்டுதோறும் நடத்தப்பட்டுவந்த விழாவுக்குரிய காலம் அடுத்து வந்துகொண்டிருந்தது. அவ்விழாவை முதல் முதல் நிறுவியவன் தொடித்தோட் செம்பியன் என்ற சோழன். அவன் வானவெளியில் இயங்கிய மாயக் கோட்டையாகிய தூங்கெயிலை எறிந்தவன் என்ற அரும் புகழ் பெற்றவன். அவன் காலமுதல் அவனுக்குப்பின் ஆண்ட சோழர் ஒவ்வொருவராலும் அவ்விழா தவறாது நடத்தப்பட்டுவந்தது. நீண்ட பழைமையான இம்மரபு முறை வழாமல், அப்போது சோழநாட்டை ஆண்ட கிள்ளி



வளவனும் விழாத் தொடக்கத்துக்கான வினைமுறைகளை நடத்தும்படி ஆணையிட்டான்.

குதிரை வீரர்களும் தேர்வீரர்களும், யானைவீரர்களும் ஒள்ளிய வாட்படை ஏந்திய காலாள் வீரருமாக ஆரவாரமாக அணிமணியுடை அணிந்த பெரும்படை வீரர் ஊர் வலமொன்று இந்திரன் கோட்டத்திலிருந்து புறப்பட்டது. அப்படையின்முன் கோயிலின் பெருமாமுரசங்கள் யானைமீது ஏற்றப்பட்டுக் காவிரிப்பட்டணத்தின் அகல்பெருந் தெருக்களின் வழி சென்றன. விழாநாள் அடுத்துவிட்டதென்ற செய்தி முரசொலியால் எங்கும் பரப்பப்பட்டது.

மன்னர் ஆணைமொழியை வள்ளுவச்சாக்கையன் பறையறைந்து சாற்றினான்.

“அகல் வீதிகளையும் சந்தி சதுக்கங்களையும் துப்புரவு செய்து புதுமணல் பரப்புங்கள்! செங்கரும்புங் கொடிகளும் குலைகள் தூங்கும் வாழைகளும் கமுகக்குலைகளும் எங்கும் நாட்டுங்கள்! கொடித்துகில்கள் எங்கும் பறக்க விடுங்கள். உங்கள் வீடுகளின் முன் சிலையுருவேந்திய குத்து விளக்கங்களும் நிறைநீர்க்குடங்களும் நிரல்பட வையுங்கள்! தாணங்களை முத்துக்களாலும் மலர்மாலைகளாலும் ஒப்பனை செய்து, அணிமணிவாயில் வளைவுகள் புனையுங்கள்!

“அந்தணீர்! உமக்குரிய வேறு வேறு கோயில்களிலும் வழிபாடுகள் நடத்துங்கள்; சிவன்பெருங்கோயில் முதல் எல்லாச் சிறு தெய்வங்களின் கோயில்கள் வரை உங்கள் வழிபாடு முழங்கட்டும்!

“அறம்கூறும் அவையீர்! உமக்குரிய தனித்தனி அறமேடைகள் ஏறுங்கள்!

“சமயத்திறங் கூறும் சால்புடையீர்! வாதப் பொது மண்டபங்களில் ஏறுங்கள்!

“இப்பெரு விழாவிற்குரிய இருபத்தெட்டு நாட்களிலும் போரும் பூசலும் முற்றிலும் ஒழிக; ஏனெனில் தேவர்

களே இவ் விழாக் காலத்தில் உருக்கரந்து மனிதருடன் மனிதராக இந்நகரில் சுற்றி வருவர்!

"மழைவளங் கூருக, விளைவு கொழிக்க! வான்புகழ் புகார் நகரம் பல்வளமோங்குக!

"எம் மன்னவன் நேர்மைவழாது நெடிது செங்கோல் நடாத்துக"[1]

இவ்வறிக்கையை உளநைவுடன் சித்ராபதி கேட்டாள். ஏனெனில் இவ்விழாவிற்கு வழக்கப்படி தன் மகள் மாதவியோ, பேர்த்தி மணிமேகலையோ முன்னேற்பாடாக ஒப்பனை செய்யமாட்டார்கள் என்பதை அவள் அறிந்திருந்தாள். இந்நிலையில் அவள் தன் மகளின் தோழியான வயந்தமாலையை அழைத்து கன்னித்துறவியர் மாடத்தில் மாதவி புகுந்துள்ளது பற்றி மாதவியின் நண்பர்கள் என்ன கருதியுள்ளார்கள் என்பதை அவளுக்கு எடுத்துரைக்கும்படி அனுப்பினாள். தோழி புத்தர் துறவு மடத்திற்குச் சென்றபோது அங்கே மாதவி கூடத்தில் அமர்ந்து, தன் மகள் மணிமேகலையுடன் பூத் தொடுத்துக் கொண்டிருந்தாள். முன்பு இன்னலங்கெழுமும் நடிகையாயிருந்த அவளது இப்போதைய மாறிய தோற்றங்கண்டு அவள் இரங்கினாள். கலைத்திறம் நிறையப்பெற்ற ஓர் ஆடல்நங்கை புத்த துறவியாவது எவ்வளவு பொருந்தாச்செயல் என்று மக்கள் கூறுவதை அவள் மாதவிக்கு எடுத்துரைத்தாள்.

மாதவி துயரார்ந்த முகத்துடன் மறுமொழி பகர்ந்தாள்:

"ஆ, தோழி! என் காதலன்முடிவுகேட்ட அக்கணமே என் உயிர் உடலைவிட்டுப் போய்விடாதிருந்தமைக்கு மிக வருந்துகிறேன். இந்நாட்டின் மங்கல மாதர் கணவன் இறந்தவுடனே துயராற்றமாட்டாமல் உயிரை விட்டுவிடுவார்கள். அன்றேல் கணவன் சிதையுடன் தம் உடலையும் தாமே விரும்பி அழல்சிதைக்க விட்டுவிடுவார்கள்.

1. மணிமேகலை காதை. I.



இரண்டுமின்றேல் வரும் பிறப்புக்களில் தன் கணவருடன் சேரும் பொருட்டு வழிபாடுகள், நோன்புகள் ஆற்றுவர். ஆனால், என் காதலனின் திருநிலையுற்ற துணைவி தன் கணவனின் நேர்மைகெட்ட கொலை கேட்டுச் சினங்கொண்டெழுந்து, அக்கொடுஞ்சினத் தீக்கு மதுரையை இரையாக்கினாள்.

"அத்தெய்வக் கற்புடை மாதராருக்குப் புதல்வி முறையாகிய என் மகள் மணிமேகலை ஒருநாளும் பயனற்ற அவல வாழ்க்கை வாழாள்; தன் வாழ்நாள் முழுவதையுமே அறத்தின் பணிக்கு ஒப்படைப்பாள்.

"இன்னும் நான் கூறுவதைக் கேள், தோழி!

"நான் இந்நகரிலுள்ள புத்தமடத்திற்குச் சென்று மாண்புமிக்க மடத்தின் தலைவர் திருவடிமீது வணங்கி என் காதலனின் துயரக் கதையை அவரிடம் கூறினேன். அவர் துன்புற்ற என் மனத்துக்கு ஆறுதலளிக்கும்படி எனக்கு மேலான உண்மைகளைத் தெரிவித்தார்.

"பிறந்தார் பெறுவது பெருகிய துன்பம்
பிறவார் உறுவது பெரும் பேரின்பம்;
பற்றின் வருவது முன்னது, பின்னது
அற்றோர் உறுவது"

என்றார். மற்றும் வீட்டின்பத்திற்கு வழிவகுக்கும் ஐவகைத் தூய்மைகள் பற்றியும் அவர் விளக்கினார். அவர் அறிவுரைகளையே பின்பற்றி நான் உறுதிகொண்டு விட்டதாகச் சித்ராபதியிடமும் அவள் நண்பரிடமுங் கூறுக!" என்று மாதவி கூறினாள்.

இவ்வுரைகளைக் கேட்டு, விலைமதிப்பற்ற மணியைக் கடலில் விழவிட்டுமீள்பவள்போலக் கடுந்துன்பமடைந்து சோர்வுற்ற உள்ளத்துடன் வயந்தமாலை மீண்டாள்.[1]

தன் தாயும் அவள் தோழியும் பேசியபேச்சு முழுவதையும் மணிமேகலை கேட்டுக்கொண்டிருந்தாள். தன்

1. மணிமேகலை, காதை, I.

தந்தையும் உற்றதாயும் அடைந்த துயர முடிபின் வரலாற்றை எண்ணி அவள் கண்கள் கண்ணீருகுத்தன. ஆறுக விரைந்தோடிய கண்ணீர் அவள் தொடுத்துக் கொண்டிருந்த மாலையில் விழுந்து அதன் பொலிவைக் கெடுத்தது. தன் மகள் கண்கலங்குவதைக் கண்ட மாதவி அவளை ஆற்றி, தன் மெல் விரல்களால் அவள் கண்களைத் துடைத்தாள். பின், "கண்மணி, இம்மாலைகள் உன் கண்ணீரால் நனைந்து விட்டன. இப்போது அது தெய்வத்துக்கு அணியும் தகுதியற்றதாய் விட்டது. ஆகவே போய்ப் புதுமலர் பறித்துவா," என்றாள்.

மடத்துக்கு ஒப்படைக்கும்படி, சுதமதி என்ற அறநங்கையும் மலர் தொடுத்துக்கொண்டிருந்தாள். "மணிமேகலையைத் தனியே வெளியே போகவிடலாமா?" என்று அவள் கேட்டாள். "அவள் அழகிய முகமும் கருவிழிகளும் காண்போர் எல்லாரையுமே கவருமே! அதிலும் அரச மலர்க்காவனம் தாண்டினால், சோழர்குடி இளவரசர்கள் கண்படநேரும். ஆகவே மலர்க்காகச் சம்பாதிவனத்துக்கோ, கவேரவனத்துக்கோ அவளை அனுப்புவது நன்றல்ல. ஆயினும் புத்தர்பெருமானருளால், எப்போதும் மலர் நிறைந்துள்ள ஒரு மலர்வனம் அருகிலுள்ளது. அங்கே புத்தபீடிகை ஒன்றை உட்கொண்ட பளிக்கு மண்டபம் ஒன்று உண்டு. உன் மகள் அங்கே இடையூறின்றிச் செல்லலாம். நானும் அவளுடன் செல்கிறேன்," என்றாள்.

மாதவி இணங்கினாள். மணிமேகலையும் சுதமதியும் துறவி மடத்தைவிட்டு வெளியேறி மலர் வனத்துக்குச் செல்லும் தேர்வீதி வழி நடந்தார்கள்.

இந்திரவிழாத் தொடங்கிவிட்டதனால், பொது வீதிகளெங்கும் விழா வயர்வோர் நிறைந்திருந்தனர்.

கையில் கோலுடனும் தோளில் கமண்டலத்துடனும் காட்சியளித்த ஆடையற்ற ஒரு நிகண்டமடத்துத் துறவியின்முன்னே ஒரு குடியன் சென்றுநின்றான் 'மாண்புடைப்



பெரியீர்! வருக, வருக. உமது திருவடிகளை வணங்குகிறேன். நான் சொல்வதைக் கொஞ்சம் கவனித்துக் கேளும். தூய்மையற்ற உம் உடலுக்குள்ளே இருக்கிற உயிர் சிறைக்கூடத்துக்குள் அடைபட்டிருக்கிற குற்றவாளிபோல மறுகுகிறது. தென்னம்பாளையிலிருந்து வடிக்கப்பட்ட இந்தக் கள்ளைச் சற்று அருந்தும். அது உமக்கு இந்த உலகிலும் மறு உலகிலும் இன்பந்தரும். நான் சொல்வது உண்மைதானா என்பதைச் செயல் மூலம் பாரும்," என்று பிதற்றினான்.

தெருவின் மற்றொரு பக்கத்தில் ஒரு பித்தன் நின்றான். அவன் கந்தல் துணிகளுடன் இலை தழைகளை இணைத்துக் கட்டிக்கொண்டிருந்தான். உடல் முழுவதும் சந்தனக் குழம்பை அப்பிக்கொண்டு, அலரி, எருக்கை மலர்களை மாலையாகச் சூட்டிய வண்ணம் அவன் அங்கும் இங்கும் ஓடியாடிக் கொண்டிருந்தான். அவனைச் சுற்றிலும் வேலையற்ற சோம்பேறிக்கூட்டம் ஒன்றுகூடி மகிழ்ந்து நின்றது.

மற்றுமொருபுறம் ஊமைக்கூத்தன் ஒருவன் வாணன் பேரூரில் கண்ணன் அவன் மகள்முன் பேடியாடிய கூத்தை ஆடிக்கொண்டிருந்தான்.

இக்காட்சிகளையெல்லாம் பார்த்துக்கொண்டேமக்கள் திரள் திரளாகத் தெருக்களில் உலவிக்கொண்டிருந்தனர். அவர்கள் காணச் சிறுவர்கள் சிறு மணியணிகள் பூட்டிக் கொண்டும், சக்கரங்கள் அமைந்த விளையாட்டு யானைகள் மீது ஊர்ந்துகொண்டும் இருந்தனர்.

இக்காட்சிகளை விட்டு வேறு சிலர் கட்டடங்களின் மதிற் சுவர்கள் மேல் தீட்டப்பட்டிருந்த உயிரோவியங்களைப் பார்த்துக்கொண்டே சென்றனர். அவ்வோவியங்கள் தேவர்களையும் மனிதர்களையும் பல்வகைப்பட்ட விலங்குகளையும் தீட்டிக் காட்டின.

மணிமேகலையின் மென்னயம் வாய்ந்த எழில் வடிவைக் கண்டதும் கும்பல் கும்பலாகச் சென்ற மனிதர் எல்லாருடைய முகங்களிலும் இன்னதென்று வரையறுக்க

முடியாத கனிவின் நறும்பொலிவு ஒன்று ஒளிவீசிற்று அவளது வியத்தகு வனப்பில் ஈடுபட்டு அவர்கள் அவளைச் சுற்றி வந்து குழுமினர். அவள் முகஅழகையும் வடிவழகையும் அவர்கள் கண்டு பாராட்டினர். பலர் அவளைத் தம்மையு மறியாது பின்தொடர்ந்தனர். கட்டிளமைப் பருவத்திலே இவ்வளவு அழகிய நங்கையைத் துறவறத்தின் இன்ப நாட்டமற்ற வாழ்வில் தள்ளியது மாதவியின் உணர்ச்சியற்ற செயலென்று கடிந்து அவர்கள் மனம் வருந்தினர்.

எதுவும் வாயாடாமலே சுதமதியும் மணிமேகலையும் இக்கும்பல்களைக் கடந்துசென்றனர். மணிமேகலை கால்கள் நிலத்தில் பாவினவோ அல்லவோ என்னும்படி அவள் மென்னடை நடந்து சென்றதால், மணல் நிலத்தில் அவள் காலடிகளின் சுவடுகளையே காணமுடியவில்லை.

அவர்கள் மலர் வனத்தில் புகுந்தனர். கலைத்திறம் படைத்த ஓவியன் வரைந்த வண்ணத்திரை ஓவியம்போல அது அவர்கள் கண்ணுக்குக் காட்சியளித்தது. இங்கே குருந்தும் கொன்றையும், நரந்தமும் நாகமும், பிடவமும் நறுமணமிக்க முல்லையும், அசோகமும் அனல்போலும் செந்நிறமுடைய இலவமும் எங்கும் பரந்து ஒன்றுடனொன்று அழகுப் போட்டியிட்டன. இக் கண்கொள்ளா எழிலைத் துய்த்தவண்ணம் மணிமேகலையும் தோழியும் மகிழ்வுடன் நெடும்பொழுது மலர்வனத்தில் உலவிக் கொண்டிருந்தனர்.[1]

மணிமேகலையும் சுதமதியும் மலர் வனத்தில் இருந்த போது, அரசுரிமை யானைக்கூடத்திலிருந்து ஒரு பெரிய யானை கட்டுத்தறியை முறித்துக்கொண்டு அரண்மனைத் தெரு, தேர்த்தெரு, சந்தைத் தெரு ஆகியவற்றின் வழியாக ஓடிற்று. அதைக் கண்டு வெருண்ட மக்கள் தங்கள் தங்கள் உயிர்களைக் காத்துக்கொள்ள நாலா திசைகளிலும் ஓடினார்கள். யானைப்பாகரும் முரசறை

1. மணிமேகலை



வோரும் அதன் பின்னால் ஓடிக்கொண்டே தங்கள் கூக்குரல்களாலும் முரசொலிகளாலும் அதன் பாதையிலிருந்து விலகி ஓடும்படி மக்களை எச்சரித்துக்கொண்டிருந்தனர்.

சோழ அரசன் கிள்ளிவளவன் மகனாகிய உதயகுமாரன் இவ்விடையூற்றைப்பற்றிக் கேள்வியுற்று, வேகமிக்க போர்க்குதிரை ஒன்றில் விரைந்தேறி, யானையைத் துரத்திப் பிடித்து அதன் வெறிகொண்ட போக்கை அடக்கி, அதை அதன் பாகர்கள் வசம் ஒப்படைத்தான். அதன்பின் அவன் ஒரு தேரிலேறி ஆடல்நங்கையர் வீதி வழியாகத் தன் அரண்மனைக்குத் திரும்பி வந்துகொண்டிருந்தான். அச்சமயம் அவன் தோற்றத்தில் ஒரு தேவன் போல் விளங்கினான்.

வழியில் ஓர் ஆடல்நங்கையின் வீட்டில் தெருமுகமாய் அமைந்திருந்த பலகணியருகில் வீட்டினுள் உயர்குடி சார்ந்த வணிகனொருவன் உள்ளத்தில் கடுந்துயரமுற்றிருப்பவன் போன்ற தோற்றத்துடன் ஆடாது அசையாது வெறித்திருக்கக் கண்டான். இளவரசன் பொன்முலாமிட்ட அம்மாளிகையின் வாயிலருகே தன் தேரை நிறுத்திக்கொண்டு, இறங்கி வந்து அவனிடம் பேச்சுக் கொடுத்தான். "உம் துயரம் யாது? நீரும் ஆடல் நங்கையரும் இவ்வளவு மனம் சோர்வடைந்திருப்பானேன்!" என்று கேட்டான்.

வணிகன் ஆடல் நங்கையுடன் இளவரசனை அணுகி வந்து, தலைதாழ்த்தி வணக்கம் செய்து 'நீடுவாழ்க' என அவனை வாழ்த்தியபின் மறுமொழி பகர்ந்தான், "இப்போதுதான் நான் மாதவியின் அழகிய புதல்வி மணிமேகலை மலர் வனத்துக்குச் செல்வதைக் காணநேர்ந்தது. பேழையில் அடைத்து வைக்கப்பெற்ற மலர்போலத் துறவியார் மடத்தின் காற்றுப்புகா அடைப்பிலுள்ள அவள் அழகு வாடி வதங்கியதுபோலத் தோற்றிற்று. அவள் தோற்றமும் அவள் தந்தையின் துன்பமிக்க முடி

வும் சேர்ந்து என் உள்ளக் கிளர்ச்சியைக் கெடுத்ததனால், யாழில் ஈடுபட முடியாமல் நான் துயரடைந்துள்ளேன்,'' என்றான்.

''அவ்வெழில் நங்கையை என்னுடன் தேரில் ஏற்றிக் கொண்டு இங்கே வருகிறேன்,'' என்று இளவரசன் மகிழ்வுடன் கூறியவண்ணம் மீண்டும் தேரிலேறி மலர்வனம் நோக்கிச் சென்றான்.

மலர்வனத்தின் வாயிலில் தேரையும் உழையரையும் நிறுத்திவிட்டு, அவன் கீழே குதித்து மலர் வனத்துக்குள் தனியாகச் சென்றான். அவன் கண்கள் மலர் வனத்தின் நிழலார்ந்த சோலைகளின் ஒவ்வொரு மூலைமுடுக்கையும் ஆர்வமாகத் துழாவிக்கொண்டே சென்றன.

இளவரசன் தேர் மலர் வனத்தை அணுகிய சமயம், அத்தேரின் மணியோசை கேட்டு, மணிமேகலை இனிய குரலில் சுதமதியிடம் சொல்லாடினாள். ''இளவரசன் உதய குமாரன் உள்ளம் என்மீது கனிவுற்றிருப்பதாகச் சித்திரா பதியும் வயந்தமாலையும் என் அன்னையிடம் கூறியது கேட்டிருக்கிறேன். ஆகவே, இப்போது நான் என்ன செய்வது?'' என்று கலங்கினாள். சுதமதியும் மிகவும் கலவரமடைந்தாள். அருகேயுள்ள பளிக்கு மண்டபத்திற்குள் நுழைந்து அதன் நடுக்கூடத்தில் மறைந்திருக்கும் படி அவள் மணிமேகலையிடம் கூறினாள். பின் அவள் மண்டபத்தினருகிலேயே சற்றுத் தொலைவில் நின்றாள்.

சிறிது நேரத்துக்குள் இளவரசன் அவளை அணுகினான். ''அம்மணி, நீ தனித்தே நின்றிருந்தாலும், நீ யார், ஏன் இங்கிருக்கிறாய் என்பவற்றை நான் நன்கு அறிவேன். மணிமேகலை துறவிமடத்தைவிட்டு ஏன் வெளிவந்திருக்கிறாள் என்பதைக் கூறு. காதல் எனும் உணர்ச்சி இன்னதென்றறியும் பருவத்தை அவள் அடைந்துவிட்டாளன்றோ?'' என்றான்.

''தன் இளமைக்கு நாணி, முதியவன் உருவமேற்கொண்டு நீதியுரைத்த மாண்புகழ் மன்னன் மரபில் வந்த



இளவரசே! பெண்ணாகிய நான் உமக்கு என்ன கூற முடியும்?'' என்று படபடக்கும் நெஞ்சுடன் சுதமதி பேசத் தொடங்கினாள். ''ஆயினும் வீர இளவரசே, உம்மிடம் பேசத் துணிகிறேன். நம் உடல் நம் முற்பிறப்பின் வினைப் பயனாய் நம்மை வந்தடைந்தது. இப்பிறப்பில் நம் செயல்களுக்குக் காரணமாய் அமைவதும் அதுவே. ஊனின் பொதியாதலால், அது காலத்தால் அழியும் தன்மையது. அது நோயின் இருப்பிடம். அவாக்களின் சூழ்வலை. தீமைகளின் கருவகம். சினத்தின் புகலிடம். அதில் வாழும் உள்ளமோ இன்னாமை, துன்பம், கையறவு, வெந்துயர் ஆகியவற்றின் தொல்லைகளுக்கு ஆளானது. இவற்றை எண்ணி, பீடுமிக்க இளவரசே, இவ்வுடலை மதியாது வெறுப்பீராக!'' என்றாள்.

சுதமதி பேசி முடிக்குமுன், இளமைப் பருவத்தினளாகிய மணிமேகலை உட்கூடத்திலிருந்து வெளிவந்து பளிங்கு மதில்களினுள்ளாகவே வந்து பவளத்தால் இயைந்த ஒரு சிலை நின்றாற்போல நின்றாள்.

பளிக்கு மதில்கள் மூலமே அவளைக் கண்ட இளவரசன் முதலில் அவளைப் பளிக்கு மண்டபத்தில் புதிதாக அமைத்த அழகிய சிலையோ என்று எண்ணினான், பின்னர் அதுவே மணிமேகலை என்று ஐயுற்று அதில் புக முனைந்தவனாய் நாற்புறமும் சுற்றிவந்தான். ஆனால், அதன் பளிக்குவாயில் உள்ளிருந்து தாழிடப்பட்டிருந்ததால், அவனால் புகமுடியவில்லை.

''இக் கட்டடத்தில் அழகிய சிலைகள்தான் இருக்கின்றன. உன் இளந்தோழி எங்கே ஒளிந்துகொண்டிருக்கிறாள்?'' என்று இளவரசன் வினவினான்.

நேரிடை மறுமொழி கொடுக்க விரும்பாத சுதமதி ''தேவன்போன்ற தம் உருவத்தைக்காண அவள் விரும்பவில்லையானால், அவள் ஒரு தவமுனியாகத்தான் இருக்க வேண்டும்,'' என்று கூறித் தட்டிக்கழிக்கலானாள்.

"புரண்டுவரும் வெள்ளத்தை யாரால் தடுக்க முடியும்? காதலை யாரால் வெல்ல முடியும்? அவள் என்னைக் காதலிப்பது உண்மையானால், அவள் என்னிடம் வரட்டும்!" என்று கூறிவிட்டு அவன் போக முனைந்தான். ஆயினும் போகாமல் அவன் மீண்டும் சுதமதியிடம் திரும்பி வந்து, "நீ யார், மணிமேகலையுடன் நீ மலர்வனம் வருவானேன்?" என்று கேட்டான்.

அவள் மறுமொழி கேட்டபின், அவன் "இன்னும் அவளை அடையும் வழி உண்டு, நான் அறிவேன். சித்திராபதி மூலம் முயல்வேன்," என்று கூறிக்கொண்டு வெளியே சென்றான்.

அவன் போனதுமே மணிமேகலை மண்டபத்தினுள் இருந்து வெளிவந்தாள். சுதமதியிடம் அவள் தன் உள்ளந் திறந்துரைத்தாள். "கற்பின் தன்மை யறியாது, குடி மதிப்பறியாது வாழும் எல்லாப் பொதுமகளிரையும்போல ஒரு பொதுமகளாகவே அவர் என்னையும் எளிமையாகக் கருதுவதாகத் தோற்றுகிறது அப்படியிருந்தும்கூட அவர் மீது என்னால் கோபங்கொள்ள முடியவில்லை. நேர்மாறாக முன்பின் தொடர்பற்ற அவர்பின் என் நெஞ்சம் செல்வது போலிருக்கிறது. இதுவே ஒருவேளை காதலின் தன்மையாய் இருக்கக்கூடுமோ?" என்று அவள் கேட்டாள்.

அவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கும் சமயத்தில் மணிமேகலை என்ற தெய்வம் நகரில் வாழும் ஒரு மாதினைப்போல வடிவங்கொண்டு மலர் வனத்தைப் பார்வையிட்டுக்கொண்டிருந்தாள். அதனிடையே புத்த பீடிகையைக் கண்டு புத்தபிரானை வணங்கியவண்ணம் பற்றூர்வத்துடன் அதை வலம் வந்துகொண்டிருந்தாள்.

அப்போது பொழுது சாய்ந்துவிட்டது முழுநிலாத் தன் ஒளிக்கலை முற்றிலும் விரித்து மலர்வனம் எங்கும் வெள்ளி மூலாம் பூசிற்று. அந் நிலாவொளியிலே தேவி சுதமதியையும் மணிமேகலையையும் கண்டு, "இரவு வந்த

1. மணிமேகலை, காதை, V.



பின்னும் இங்குத் தங்கவா போகிறீர்கள்?" என்று கேட்டாள். சுதமதி தனக்கும் உதயகுமாரனுக்கும் ஏற்பட்ட சந்திப்பைப்பற்றிக் கூறினாள்.

தேவி மறுமொழியாக அறிவுரை பகர்ந்தாள். "இளவரசன் மணிமேகலையிடம் ஆழ்ந்த காதல்கொண்டுள்ளான். புத்த அடியார்களுக்கென்று விடப்பட்டிருந்த மலர் வனத்தில் தன் கோரிக்கையை வற்புறுத்தக்கூடாதென்றே, அவன் உங்களைவிட்டுச் சென்றுவிட்டான். மலர் வனத்துக்கு வெளியேயுள்ள பொதுப்பாட்டையில் அவன் உங்களை வந்து காணாமலிருக்க முடியாது. இம்மலர் வனத்தின் மேற்கு மதில்சார்ந்த வாயில் வழியே நீங்கள் வெளியே சென்றால், அங்கே பொதுவியல் நன்காட்டருகே ஒரு மடத்தைக் காண்பீர்கள். அங்கே பல துறவிகள் வாழ்கின்றனர். நீங்கள் இரவு முழுவதும் அங்கே தங்க நேர்ந்தால்கூட, உங்களுக்கு அங்கே நல்ல பாதுகாப்பு இருக்கும்," என்றாள்.

சக்கரவாளக்கோட்டம் என்ற பெயரையுடைய அத் துறவியர் மடத்தைப்பற்றித் தேவி நீண்ட வரலாற்று விளக்கம் தந்தாள். விளக்கத்தினடுவிலேயே சுதமதி கண்ணயர்ந்துவிட்டாள். இத்தறுவாய்க்கே காத்துக்கொண்டிருந்த தேவி, மணிமேகலையைக் கைக்கொண்டு வானிடையே பறந்து சென்றாள். காவிரிப்பட்டினத்திலிருந்து 30 யோசனை தெற்கிலுள்ள மணிபல்லவமென்னும் தீவுக்கு அவளை இட்டுச் சென்றாள்.[1]

இதற்கிடையே மலர் வனத்திலிருந்து தன் அரண்மனைக்குத் திரும்பிய உதயகுமாரன் இரவு முழுவதும் மணிமேகலையையே நினைந்து நினைந்து உறக்கமில்லாமல் படுக்கையில் புரண்டுகொண்டிருந்தான். அவளை அடைவது எவ்வாறு என்று சிந்தித்துத் திட்டம் தீட்டிய வண்ணமே இரவைப் போக்கினான். அவன்முன் திடுமென மணிமேகலைத் தெய்வம் தோன்றியதே அவன் திடுக்கிட்டான். தேவி அவனை நோக்கி அன்புடன் பேசினாள்.

1. மணிமேகலை, காதை, VI.

E. BOOK ..By K.Rajalingam

"மன்னவன் மைந்தனே! மன்னன் தன் கடமையில் தவறினால், கோளினங்கள் தத்தம் கோன்நெறிகளில் செல்லமாட்டா. கோளினங்கள் தத்தம் நெறிபிறழ்ந்தால், வானம் நிலத்தின்மீது காலமறிந்து பெய்யமாட்டாது. மழை பெய்யாது காலந் தாழ்த்தால், பஞ்சத்தால் மக்கள் மடிவர். மன்பதை உயிரெலாம் மன்னவனுயிரே என்ற பழஞ்சொல் இதனால் மெய்ம்மையிழந்து போகும். ஆகவே சமய வினைக்குத் தன்னை ஒப்படைத்துவிட்ட ஒரு நங்கையின் வாழ்வைக் கெடுக்காதிருப்பாயாக," என்றாள்.

தேவி இதன்பின் மீண்டும் மலர்வனம் புகுந்து, சுதமதியைத் துயிலெழுப்பினாள். 'அஞ்சாதே,' என்று அவளைக் கையமர்த்திப் பேசினாள்.

"நான்தான் மணிமேகலைத் தெய்வம். இந்நகரில் இந்திர விழாவைக் காணுவதற்கே நான் வந்தேன். இப்போது உன் இளந்தோழி மணிமேகலை புத்தரடியாராகுங் காலம் அடுத்துவிட்டது. ஆகவே, நான் அவளை மணிபல்லவத் தீவுக்குக் கொண்டுசென்றிருக்கிறேன். தற்போது அங்கே அவள் நல்ல பாதுகாப்புடனேயே இருக்கிறாள். அங்கே அவள் தன் முன்னைப்பிறப்பை உணர்வாள். உணர்ந்தபின் இன்றைக்கு ஏழாம் நாளில் இந்நகர் வருவாள். இங்கே அவள் மாற்றுருவிலேயே வர இருக்கிறாளாதலும், அவள் உன்னைக் காணுதிருக்கமாட்டாள். அத்துடன் அவள் மீண்டும் வருஞ்சமயம் இந்நகரில் பல அருஞ்செய்திகள் நிகழும். அதற்கிடையே நீ மாதவியிடம் சென்று என் வரவையும் அவள் புதல்வி மணிமேகலையை நான் நல்வழியுய்த்த வகையையும் கூறு.

"மாதவி என்னை அறிவாள். நான்தான் கடலின் அணங்கு. கோவலன் விருப்பப்படி என் பெயர்தான் அவள் புதல்விக்கு இடப்பட்டுள்ளது. குழந்தை என் பெயரிட்டழைக்கட்ட அன்றே நான் மாதவிக்குக் கனவில் காட்சியளித்தேன். அவள் புதல்வி அழகில் மிக்க ஒரு நங்கையாவாளென்றும், அத்துடன் வாய்மை தவறாத தூய அறநங்கையாவாளென்றும் கூறியிருக்கிறேன்," என்றாள்.



இவ்வுரைகளுடன் தேவி வானிலெழுந்து கண்ணுக்கு மறைந்து சென்றுவிட்டாள்.

மணிமேகலை இவ்வாறு மாயமாய் மறைந்துவிட்ட துணர்ந்து மனமறுக்கமுற்றுச் சுதமதி எழுந்து மேலை வாயில் வழியாக மலர்வனத்தை விட்டகன்று, அடுத்துள்ள மடத்தின் அகல்வாயிலினுள் நுழைந்தாள். உட்புகுந்து அமர்ந்ததே, வாயிலில் செதுக்கிவைத்திருந்த ஓர் உருவம் பேசுவதுகேட்டு நெஞ்சந் துணுக்குற்றாள். அது அவளை நோக்கி உரையாடிற்று.

"மன்னன் துச்சயன் மனைவியும், இரவிவர்மன் மகளுமான வீரையே! உன் தங்கை தாரை இறந்ததுகேட்டு உடனிறந்த நங்கையே! தற்போது நீ சம்பைநகர்க் கௌசிகன் மகள் சுதமதியெனப் பிறந்து, மாருதவேகனுடன் இந்நகருக்கு வந்திருக்கிறாய். இன்றைய ஏழாம் நாள் உன் தங்கை இலக்குமி தன் முன்னைய பிறப்புணர்ந்தபின் நள்ளிரவில் இந் நகருக்கு வருவாள்," என்று அச்சிலை உரைத்தது.

அச்சத்தால் சுதமதி அரையுயிர் ஆயினாள். விடியற்காலமான உடனே மடத்தைவிட்டகன்று அவள் மாதவியின் மாளிகையடைந்து முன்னாளைய புதுமைவாய்ந்த நிகழ்ச்சிகள் யாவும் அவளிடம் கூறினாள். ஏற்கனவே மகள் பாதுகாப்பைப்பற்றி மிகவும் கலவரமடைந்திருந்த மாதவி இவற்றைக் கேட்டுத் துயரமேலிட்டுத் தன்னுணர்விழந்து சோர்ந்தாள்.[1]

மணிமேகலை மணிபல்லவத்தீவில் துயிலெழுந்தாள். முன்பின் அறியாத ஒரு கடற்கரையில் தான் தனித்து இருக்கக்கண்டு அவள் திகிலுற்றாள். கதிரவன் நீலவிரி கடலின்மீதெழுந்து தன் எண்ணற்ற செங்கதிர்களைப்

1. மணிமேகலை, காதை, VII.

பரப்பியிருந்தான். அவற்றால் தகதகவென்று மின்னிய கடலலைகள் மணலார்ந்த கடற்கரைமீது முத்துச்சங்குகளையும் பவளக்கொடிகளையும் வாரி இறைத்தன. அருகே ஆழ்ந்த நீர்த்தடங்களில் தாமரையும் காயாவும் தழைத்திருந்தன.

அது மலர்வனத்தின் ஒரு பகுதிதானா, அல்லது சுதமதி தான் தன்னை ஏமாற்றி முன்பின் அறியா இடத்துக்குக் கொண்டுவந்துவிட்டாளா என்று திகைத்து ஒன்றும் விளங்காமல் அவள் விழித்தாள். "சுதமதி, சுதமதி! இங்கேவா. எங்கிருந்தாலும் எனக்குக் குரல்கொடு" என்று அவள் கூவினாள். ஆனால் எதிர்குரல் எதுவுமில்லை. மனித உருவோ, மனிதர் உறைவிடமோ எதையும் அங்கே காணவுமில்லை. மணல் தேரிகளின்மீது அவள் நடந்து சென்றாள். எங்கும் அன்னங்கள், நாரைகள், கடல் தாராக்கள் ஆகியவற்றின் ஈட்டங்களே கழிநிலமெங்கும் நிறைந்திருக்கக் கண்டாள். போர்க்களத்தில் அணி வகுத்து நின்ற படைகள்போல அவை வரிசை வரிசையாய் நின்றன.

ஆளற்ற தீவில் விடப்பட்டுவிட்டோமே என்ற கருத்தினால் அவள் வெருட்சியடைந்து கண்ணீர் விட்டழலானாள். ஆனால், தன் துணையற்ற நிலையை எண்ணிப் புலம்பிக்கொண்டே கடற்கரைவழியே செல்லும்போது, பளபளப்பான பளிங்கினால் புனைந்தியற்றப்பட்ட ஒரு புத்த பீடிகை கண்ணில் தென்பட்டது.[1]

கோயிலைக் கண்ணுற்றதும் இளநங்கை அடைந்த மகிழ்வுக்கு எல்லையில்லை. கன்னங்களில் வழிந்த மகிழ்ச்சிக் கண்ணீருடனும், தலைமேற் கூப்பிய கைகளுடனும் அவள் பீடிகையை மும்முறை வலம்வந்து அதன் முன்னிலையில் விழுந்து வணங்கினாள். வணங்கி எழுமுன், முன்னைய பிறப்புப்பற்றிய நினைவுகள் மிகப் புதுமைவாய்ந்த உணர்ச்சிகளை எழுப்பியவண்ணம் அவள் உள்ளத்தில் புகுந்து அலைபாய்ந்தன.

1. மணிமேகலை, காதை, VIII.



அப்போது அவள் தனக்குள்ளாகக் கீழ்வருமாறு எண்ணமிடலானாள்:

"வருங்கால நிகழ்ச்சிகளை உணர்ந்த பிரமதருமனென்னும் பேரறிவ! காயங்கரை என்னும் ஆற்றின்கரையின்மேல் நீர் வருவது குறித்து உரைத்தவை அனைத்தும் நிகழக்கண்டேன். காந்தாரநாட்டின் பூர்வதேசத்தின் அரசனாகிய உம் உடன்பிறந்தார் அத்திபதிக்கு நீர் எச்சரிக்கை தந்தீர்! அன்றிலிருந்து ஏழாம்நாள் அவன் தலைநகரமாகிய இடவயத்தை அச்சந்தரும் நிலவதிர்ச்சி வந்தழித்துவிடும் என்றும், அதினின்று குடிகிளப்பிச் செல்லும்படியும் நீர் கூறினீர்.

"அதன்படி அரசன் தன் குடிகள் அத்தனை பேருக்கும் வரவிருந்த பேரிடரை முரசறைந்து தெரிவித்தான். கால்நடைகளுடன் நகரைவிட்டு மிகு விரைவுடன் வெளியேறிவிடும்படி ஆணையிட்டான். அவனும் தன் அரண்மனையைவிட்டுத், தன் முழுப்படைகளுடனும் தலைநகருக்கு வடக்கே வசந்திநகருக்குச் செல்லும் பாட்டையில் காயங்கரை ஆற்றோரமிருந்த ஒரு சோலையில் தாவளமடித்துத் தங்கினான்.

"நீர் குறித்தநாளில் நீர் முன்னறிந்து குறித்தபடியே நில அதிர்ச்சியினால் நகரம் அழிவுற்றது. நன்றியுணர்வுடைய மன்னனும் மக்களும் உம் திருவடிகளில் வணங்க வந்து குழுமியபோது, நீர் அவர்களுக்கு ஆன்ற அறம் உரைத்தீர்.

"அதுபோதிலே நான் அசோதர நாட்டரசனான இரவிவர்மனுக்கும் அவன் மனைவியாகிய அமுதபதிக்கும் புதல்வியாக இலக்குமி எனும் பெயருடன் பிறந்தேன். அத்திபதி என்ற அரசனுக்கும் அவன் மனைவி சித்திபுரத்தரசனான சீர்தரன் புதல்வியாகிய நீலபதிக்கும் மகனான இராகுலனை நான் மணந்தேன். நானும் இராகுலனும் மற்றவருடன் வந்து உம் திருவடிகளில் வணங்கினோம். அன்றிலிருந்து பதினாறாம் நாளில் இராகுலன் நச்சுப்பாம்

பால் கடியுண்டு அதன்விளைவால் மாள்வானென்றும், நானும் அவன் ஈமச்சிதையேறுவேனென்றும் நீர் முன்னறிந்துரைத்தீர்.

"பின் வருவனவும் நீரே குறித்தீர். நான் மீட்டும் காவிரிப்பட்டினத்தில் பிறப்பேனென்றும், ஆரிடரில் சிக்க இருக்கும் சமயத்தில் ஒரு தெய்வம் என்னை அந்நகரத்திலிருந்து அகற்றித் தென் திசைக்கண்ணுள்ள ஒரு தீவில் கொண்டுவிடுமென்றும் கூறியிருந்தீர். அங்கேயுள்ள புத்த பீடிகை ஒருகாலத்தில் புத்தர் அமர்ந்து ஆன்ற அறமுரைக்கப்பெறும் பெருமையுடையது. அதனை அடைய ஒருவருக்கொருவர் மூர்க்கமாகப் போருடற்றிய நாக அரசர்களில் இதயங்களை அதில் அமர்ந்தே புத்தர்பிரான் திருநிலைப்படுத்தினர். அத்தகைய பீடிகையை நான் வலஞ்செய்து வணங்குவேனென்றும் திருவாய் மலர்ந்தருளினீர்.

"என் அன்புக்குரிய கணவன் மறுபிறப்பு யாதாயிருக்குமெனத் தெரிந்துரைக்கும்படி அச்சமயம் நான் தேவரீரை மன்றாடினேன். என்னை இங்கே கொண்டுவந்தருளிய தெய்வம் அவரை எனக்குக் காட்டியருளும் என்றீர். அத்தெய்வம் இப்போது என்முன் காட்சியளிக்க அருள்கூருமா ?"[1]

மணிமேகலையின் உள்ளம் இவ்வாறு சிந்தித்தது.

தன் பெயர்கொண்ட நங்கை இப்போது புத்தர் பீடிகையினருகே இருந்து தன் முன்னைப்பிறப்பை அறிந்துகொண்டாளென்பது மணிமேகலைத் தெய்வத்துக்குத் தெரியவந்தது. அதன்பின்னர் அடையவேண்டும் பேறுகளை அடைவதற்குரிய பக்குவநிலையை அவள் எய்திவிட்டாள் என்பதும் விளங்கிற்று. ஆகவே அத்தெய்வ அணங்கு மணிமேகலையின் முன் காட்சியளித்து அவளுடன் சொல்லாடினள்.

1. மணிமேகலை, காதை, IX.



"உனது முன்பிறப்பில் நீ உன் கணவன் இராகுலனுடன் இன்பகரமான ஒரு சோலையில் அமர்ந்திருந்தாய். அப்போது சாதுசக்கரன் என்னும் புத்த முனிவன் இரத்தின தீவத்தில் அறவாழியை உருட்டியபின் திரும்பிவரும் வழியில் முகில்மண்டலத்திலிருந்து இறங்கி உன் முன் வந்தான். அவனுக்கு நீ உணவும் நீரும் அளித்து அருத்தினாய். அச்செய்கையின் நற்பயன்தான் உன்னை இனிப் பிறவா நிலைக்குக்கொண்டு உய்க்க விருக்கிறது. உன் முன்னைய கணவனான இராகுலன் தான் உதயகுமாரனாக மீண்டும் பிறந்துள்ளான்.

"முன் பிறப்பில் உன் தமக்கையரான தாரையும் வீரையும் இரண்டுபேருமே அங்கதேசத்தின் மன்னனாகிய துச்சயனுக்கு மணம் செய்விக்கப்பட்டிருந்தார்கள். அவர்கள் தங்கள் கணவனுடன் கங்கையாற்றங்கரையில் உட்கார்ந்திருக்கும்போது, ஒரு புத்த துறவி அவர்களைச் சென்றுகண்டான். அவர் அறிவுரைமீது அவர்கள் முன்பு புத்தர் நின்று அறம் உரைத்த குன்றின்மீதுள்ள அவர் திருவடிகளை வழிபட்டார்கள். இந் நல்வினைப் பயனாலேயே அவர்கள் மாதவியாகவும் சுதமதியாகவும் பிறந்துள்ளார்கள்.

"மெய்யறத்தில் நீ பயில்வதற்குமுன், மற்றச் சமயங்களின் கோட்பாடுகளை நீ உணரவேண்டும். ஆனால், நீ இளம்பெண்ணாயிருப்பதனால் ஏனைய சமயாசிரியர்கள் உனக்கு அறிவுரை தரமாட்டார்கள். ஆகவே நீ விரும்பும் எவ்வடிவும் மேற்கொள்வதற்கும், நீ விரும்பும் எந்த இடத்துக்கும் விசும்பூடாகப் பறந்து செல்வதற்கும் உரிய மந்திரங்களை உனக்கு ஓதித் தருகிறேன். இதன்பின் எப்படியும் புத்தநெறியினரின் திருநிலைமிக்க நாளிலேயே நீ புத்தரின் மெய்யறிவைப் பெறுவாய் என்று நான் உறுதி கூறுகிறேன்," என்று தேவி கூறிமுடித்தாள்.

முடித்தபின், தேவி தான் கூறியபடியே மந்திரங்களை மணிமேகலைக்கு ஓதுவித்துவிட்டு, வானில் எழுந்து சென்றாள். ஆனால், சிறிது சென்றபின் அவள் மீட்டும் நிலத்துக்கே இறங்கிவந்து மேலும் பேசினாள் :

"உனக்கு இன்னும் ஒரு செய்திபற்றிக் கூற மறந்து விட்டேன். அழிதக்க இவ்வுடம்பு உணவினுல் நிலைபெறுவது. ஆகவே உணவின்றி உயிர் தாங்குதற்குரிய மந்திரத்தையும் நீ கற்றுக்கொள்ளுதல் நன்று," என்ருள். பின் அவள் இந்த மூன்றும் மந்திரத்தையும் மணிமேகலைக்கு அறிவுறுத்திவிட்டுக் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து விண்ணகம் மேவினுள்.[1]

தேவி அகன்றதன்பின் மணிமேகலை தீவைச்சுற்றி உலவினுள். மணல் குன்றுகளையும் பூஞ்சோலைகளையும் பளிங்குபோன்ற நீர்த்தடங்களையும் கண்டு மகிழ்ந்தவண்ணம் சென்ருள். ஒருகாவ்தம் தொலைசெல்வதற்குள் அவள் முன் ஒரு புத்த அறநங்கை எதிர்ப்பட்டாள். அறநங்கை மணிமேகலையை நோக்கி, "நங்கையே, நீயார்? இத்தீவில் கப்பலுடைந்து தங்கிவிட்டவள்போலக் காணப்படுகிருயே!" என்று கேட்டாள்.

"எனது எப்பிறப்பைக் குறித்துக் கேட்கிறீர்கள், அன்னையே" என்ற எதிர்வினுவுடன் மணிமேகலை மறுமொழி கூறத்தொடங்கினுள். "என் முன்னைய பிறப்பில் நான் இராகுலன் என்ற இளவரசனின் மனைவியாகிய இலக்குமியாயிருந்தேன். இப்பிறப்பில் ஆடல்நங்கைமாதவி மகளாகிய மணிமேகலையாயிருக்கிறேன். என் பெயர் கொண்ட தேவி என்னை இங்கே கொண்டுவந்துவிட்டாள். புத்தபீடிகையை வணங்கி நான் என் பழம்பிறப்பை உணர்ந்தேன்.

"இது என் வரலாறு. இப்போது நான் உங்கள் விவரம் அறியலாமா?" என்று மணிமேகலை கேட்டாள்.

அறநங்கை மறுமொழி பகர்ந்தாள்.

"இத்தீவினருகே இரத்தினதீவத்தில் சமந்தம் என்ற உயர்மலை ஒன்று இருக்கிறது. அதன் உச்சியில் புத்தர் திருவடித்தடங்கள் உள்ளன. அதை வணங்குபவர்கள் பிறப்புச் சக்கரத்திலிருந்து விடுபடுவர். அத்திருவடிகளை வணங்கிவிட்டு நான் அங்கிருந்து திரும்பிவருகிறேன்.

"நான் வானவர்வேந்தனுகிய இந்திரன் ஆணைமீது இத்தீவிலுள்ள புத்த பீடிகையைக் காத்துவருபவள். என் பெயர் தீவதிலகை.

"புத்தபீடிகையின் எதிரே இருப்பது கோமுகி என்ற நீராழி. அதில் ஆண்டுதோறும் புத்தர்பிரான் பிறந்த நாளன்று அதாவது இடவமாதம்[1] 14ஆவது நாண்மீனின்போது[2] ஓர் உண்கலம் நீர்ப்பரப்புக்கு வரும். அது ஒரு காலத்தில் ஆபுத்திரன் என்பானின் கலமாயிருந்தது. அந்த நன்னுள் இந்நாளே. அந்தக்கலம் நீ எடுத்துப் பயன்படுத்துவதற்கென்றே வருகின்றது என்று நினைக்கிறேன்.

"அவ்வுண்கலத்திலிருந்து உன் முன்னுல் வரும் இரவலர் எத்தனை பேரானுலும் நீ அவர்களுக்கெல்லாம் உணவளிக்கலாம். அது எப்போதும் நிரம்பியதாகவே இருக்கும். உன் வாழ்வக நகரத்திலுள்ள புத்தமடத் தலைவர் உனக்கு அதுபற்றிய விவரம் முழுவதும் சொல்வார்," என்று அறநங்கை கூறினுள்.

மணிமேகலை மகிழ்வோடு தீவதிலகையுடன் கோமுகி யென்னும் நீராழிக்குச் சென்ருள். மதிப்பார்வத்துடன் அதைச்சுற்றி வலம்வந்து நீர்க்கரையை அடைந்ததும், உண்கலம் நீரினின்று எழுந்து அவள் கையகம் வந்தமர்ந்தது. இவ்வருஞ்செயல் கண்டு அகமகிழ்வுற்று மணிமேகலை நீராழியினருகே போதிநீழலில் பிறங்கிய புத்தர் திருவடிகளை வழிபட்டாள். பின் தீவதிலகையுடன் விடைபெற்றுக்கொண்டு அவள் தீவைவிட்டகன்ருள்.

1. மணிமேகலை, காதை, X.

1. இடப இராசி அல்லது காளைவான்மனையில் ஞாயிறு நிலவும் காலம் வைகாசி மாதம்.

2. நாள்மீன் என்பது திங்களஞ் செல்வன் நாள் மீனில் நிலவும் காலம் அதாவது ஒரு நாள்.

வானில் எழுந்து பறந்து அவள் காவிரிப்பட்டினத்தில் இறங்கினாள். மகளை விட்டுப் பிரிந்திருக்கும்நாட்களை எண்ணிக்கொண்டே அவள் தாய் மாதவி அவள் வருகைக்காகக் காத்திருந்தாள். மணிமேகலை தாய் முன்னிலையில் வந்திறங்கி, தாய்க்கும் சுதமதிக்கும் வணக்கம் தெரிவித்தாள். அவர்கள் அவளை மனமகிழ்ச்சியுடன் வரவேற்றனர். அவள் தன் புத்தனுபவங்களை அவர்களுக்குக் கூறினாள்.

முடிவில் அவள் அவர்களை மீட்டும் வணங்கினாள். "நம் முன்பிறப்பில் நாம் இரவிவர்மன் புதல்வியும் துச்சய மன்னன் மனைவியுமான அமுதபதியின் புதல்வியர்களாயிருந்தோம். நீங்கள் அவ்வகையில் என் தமக்கையர்களாயிருந்தீர்கள். இந்நகரின் மாண்டகு மடத்துத்தலைவர் துணையுடன் நீங்கள் திருவாய்ந்த வாழ்வுடையவர்களாயிருப்பீர்கள்," என்றாள். அதன்பின் மாதவியையும் சுதமதியையும் உடன்கொண்டு அவள் புத்தமடத்துத் தலைவரிடம் சென்றாள்.[1]

மடத்துத் தலைவர் நரைத்தலையுடைய முதியவர். மணிமேகலை அவரை அணுகி அவர் திருவடிகளை மும்முறை வணங்கினாள். பின் மலர்வனத்தில் தான் உதயகுமாரனைக் கண்டதுமுதல், மணிபல்லவத்திலிருந்து தான் திரும்பிவந்ததுவரையுள்ள எல்லா விவரங்களையும் எடுத்துரைத்தாள். அவர் சுரித்த முகம் ஒளிபூத்தது. உள்ளத்தில் எழுந்த களிப்பை அவரால் அடக்கமுடியவில்லை. தழு தழுத்த குரலில் அவர் பேசினார் :

"புத்தர்பெருமானின் திருமலைக்குச் செல்லும்வழியில் நான் துச்சயனை மீட்டுமொருமுறை கண்டு வந்திருக்கிறேன். அப்போது அவன் அரசத் துணைவியரைப்பற்றி நலமுசாவினேன். அவன் கண்ணீர் தாரையாக வார்த்து அரற்றினான். புதிதாகப் பிடிபட்ட ஒரு காட்டு யானைமுன் வீரை சென்றதாகவும் அவ்விலங்கு அவளைக் கொன்றுவிடவே, தங்கையை உயிருக்குயிராக நேசித்திருந்த தாரை

1. மணிமேகலை, காதை XI.



அவள் பிரிவை ஆற்றமாட்டாமல் உயர்ந்த மாடியிலிருந்து விழுந்து உயிர்நீத்ததாகவும் கூறிப் புலம்பினான்.

"என்ன வியப்பு! உடைமாற்றி அரங்கத்தில் மீட்டும் புதிய ஆட்களாகத் தோற்றும் நடிகர்களைப்போல, நீங்கள் மீட்டும் பிறந்து உங்கள் தற்காலப் புதிய உடலுடன் என்முன் காட்சியளிக்கிறீர்கள்"[1] என்று அவர் கூறி வியந்தார்.

அவர் மேலும் தொடர்ந்து பேசினார் :

"கேளுங்கள் நங்கையர்களே! உங்கள் கைவசம் உள்ள உண்கலத்துக்கு உரியவனான ஆபுத்திரன் கதையைக் கேளுங்கள்.

"வாரணசியில் அபஞ்சிகன் என்ற திருமுறை ஓதுவான் ஒருவன் இருந்தான். அவன் மனைவி சாலி உண்மை நெறிதவறி நடந்துவிட்டாள். தண்டனைக்கு அஞ்சிக் குமரிதீர்த்தத்துக்குச் செல்லும் புண்ணிய யாத்திரிகர் குழாத்துடன் சென்றாள். குமரியிலிருந்து மீண்டு வரும் சமயம் ஒரு குழந்தையைப்பெற்று, அதை இருண்டடர்ந்த காடொன்றில் விட்டுச்சென்றாள். குழந்தையின் அழுகுரல் கேட்டு ஓர் ஆவினம் அதை அணுகி நாவால் தடவிக் கொடுத்து அதற்கு ஏழுநாள்வரை பாலூட்டிற்று. வயணங்கோட்டிலிருந்து அக்காட்டு வழியே தன் மனைவியுடன் சென்ற ஒரு பார்ப்பனன் குழந்தை அழுகுரல் கேட்டு, அதைத் தேடிக் கண்டெடுத்தான். அதன் துணையற்ற நிலைக்கு இரங்கி அவனும் அவன் மனைவியும் அதைத் தம் இல்லத்துக்குக் கொண்டு சென்றனர்.

"பார்ப்பனன் பிள்ளையைத் தன் மகனாகவே வளர்த்து அவனுக்குத் திருமறைகளையும் பிற திருநூல்களையும் ஓதுவித்தான்.

"சிறுவன் இளைஞனாக வளர்ந்த சமயம் அவன் அண்டையிலுள்ள ஒரு பார்ப்பனன் இல்லத்துக்குச்

1. மணிமேகலை, காதை XII.

சென்றான். அங்கே ஓர் ஆவினம் கட்டுத்தறி ஒன்றில் சேர்த்துக் கட்டப்பட்டிருந்தது. வேடன் வலையில் பட்ட மான்போல் அது கரைந்து புலம்பிக்கொண்டிருந்தது. அதற்கு மலர்கள் அணியப்பட்டிருந்ததனால், அது மறு நாள் காலையிலே யாகத்தில் பலியிடப்பட இருந்ததென்று அறிந்தான். ஆவினத்துக்கு நேரவிருந்த கொடிய இடர் கண்டு கலங்கி, இளைஞன் அதை எப்படியாவது காப் பாற்றுவதென்று உறுதிகொண்டான். ஆகவே நள்ளிர வில் அவன் அதைத் திருடிக்கொண்டு ஊருக்கு வெளியே சென்றான்.

"திருட்டு எப்படியோ கண்டுபிடிக்கப்பட்டது பார்ப் பனர்அவனைத் துரத்திப் பிடித்து நையப் புடைத்தனர். 'ஆவினத்தை ஏன் திருடினாய்?' என்றும் கேட்டனர். இதற்கிடையே அவ்விலங்கு தன்னைப் பிடித்தவரிடமிருந்து திமிறித் தப்பிக்கொண்டு, யாகத்தலைவனைக் குத்திக் கிழித்து விட்டுக் காட்டுக்கோடிற்று.

"இளைஞன் தன்னை அடிக்கவேண்டாமென்று பார்ப் பனரிடம் மன்றாடினான். 'பிறந்த நாள்முதலே யாருக்கும் எந்தத் தீங்கும் இழைத்தறியாது புல்வெளியில் பசும் புல்லைக் கறித்து மனிதனுக்கு இனிய பாலைத்தரும் நற் பண்புடைய ஓர் ஆவினத்தை நீங்கள் ஏன் கொல்லத் துணியவேண்டும்,' என்றும் வாதாடினான்.

"நான்முகனால் எமக்கு நேரில் அருளப்பட்ட திரு நூல்களை அறியாதவனாதலால் எம்மை நீ தூற்றினாய்' என்று அவர்கள் சீறினர். 'நீ விலங்கின் மரபினனேயன்றி வேறன்று' என்றனர்.

"இளைஞன் எதிர்வாதிட்டான்.

"'அசலன் ஒரு மான் மகன். சிரிங்கி ஓர் ஆன்மகன். விரிஞ்சி புலிமகன். கேசகம்பளன் நரிமகன். இவர்களெல் லாம் உங்கள் முனிவர்கள். அப்படியிருக்க என்னை விலங் கின் மகன் என்கின்றீர்? இது எவ்வகையில் பொருந்தும்?' என்றான்.



"பார்ப்பனர்களில் ஒருவன் கடுஞ்சினங்கொண்டு எதிர்மொழி கூறினான். 'இச்சிறுவன் பிறப்பை யான் அறிவேன். இவன் வாரணாசியிலுள்ள ஒரு திருமறை ஓதுவான் மனைவியாகிய சாலியின் மகன். பார்ப்பன மாதுக்குத் தகாத முறையில் நடந்துகொண்டதன்றி, தண்டனைக்கஞ்சி அவள் குமரித்தீர்த்தமாடவரும் புண்ணிய யாத்திரிகருடன் வந்து ஆயர்பாடி யருகில் பிள்ளை ஈன்று அதைக் கைவிட்டுச் சென்றாள். இச்சிறுவனே அக் குழந்தை. அவனைத் தீண்டாதேயுங்கள். அவன் பொது மகன்' என்றான்.

"சிறுவன் ஏளனச் சிரிப்புச் சிரித்தான். 'பார்ப்பனர் பிறப்பைப்பற்றிய விவரம் உங்களுக்குத் தெரியாது. கூறு கிறேன், கேளுங்கள். உங்கள் முதலிரு குலமுதற் குரவர் கள் வானகத்து ஆடல்நங்கையிடம் நான்முகனுக்குப் பிறந்தவர்களேயல்லவா? இது உண்மையா, அன்றா? அப்படியிருக்கச், சாலியைப்பற்றி அவதூறாக நீங்கள் எப் படிப் பேசமுடியும்?' என்றான்.

"அவனை வளர்த்த வளர்ப்புத் தந்தை இச்சொற் களைக் கேட்டுத் திடுக்கிட்டான். அவனை மீட்டும் வீட்டி லேற்ற மறுத்தான். பார்ப்பனர் ஆவினம் திருடிய திருடன் என்று குற்றஞ்சாட்டி அவனைத் துரத்திக் கூக் குரலிட்டனர். இந்நிலையில் சிறுவன் பார்ப்பனச்சேரியை விட்டகன்று தென்மதுரைமா நகருக்கு வந்தான். வீடு வீடாக வாயில்தோறும் சென்று இரந்து உணவுபெற்றான். ஆனால், அங்ஙனம் பெற்ற உணவைக்கொண்டு, அவன் குருடரையும் நொண்டிகளையும், முதியவர்களையும் ஏலா தவர்களையும் உண்பித்து, மிச்சத்தைத் தான் உண்டான். இரவில் அவன் சிந்தாதேவிகோயிலின் வெளிக்கூடத்தில், இரந்துண்ணும் திருஓட்டைத் தலைக்கு வைத்துக்கொண்டு உறங்கினான். மற்றெல்லா வகையினும் இரவலனாயினும், உயிரினங்களிடத்துக் கொண்ட அன்பின் மிகுதியால் அவன் எல்லையற்ற வண்மையுடையவனாயிருந்தான்.[1]

1. மணிமேகலை, காதை XIII.

''ஒருநாளிரவு மழையும் இருட்டும் மிகுதியாய் இருந்தது. அவன் சிந்தாதேவியின் கோயிலில் அயர்ந்து உறங்கினான். பயணம்செய்து அலுத்த சில இரவலர்கள் அப்போது அங்கே வந்தார்கள். பசிநோய் பொறுக்க முடியாமல் அவர்கள் அவனை எழுப்பி உணவு வேண்டினார்கள். இரக்கநெஞ்சுடைய சிறுவனிடம் உணவு இல்லாமையால் உளைவுற்றான். ஆகவே, சிந்தாதேவி என்னும் தெய்வம் அவன்முன் தோன்றி, ஒரு கலத்தை அவன் கையில் தந்தாள். 'துயருறவேண்டா, மகனே! இந்தக் கலத்தைப் பெற்றுக்கொள். நாடு முழுதுமே பஞ்சமடைந்தால்கூட, இதனை ஒருபோதும் நீ வெறுமையாகக் காணமாட்டாய்' என்றாள்.

''இளைஞன் தேவியை மனமாரப் புகழ்ந்து போற்றினான். உண்கலத்தைப் பெற்று வழிநடந்தவர்களுக்கு அதனின்றும் உணவெடுத்து உண்பித்தான். அச்சமயம் பாண்டிநாட்டில் பஞ்சம் பரவியிருந்ததால், நாள்தோறும் ஆயிரம் பதினாயிரக்கணக்கான ஏழைமக்கள் அவனைச் சூழ்ந்து குழுமி அவனிடமிருந்து உணவுபெற்றார்கள். அத்தனை பேருக்கும் உணவளித்தும் அம்மாய உண்கலம் ஒருபோதும் குறைவுற்று வெறுமையானதில்லை.

''பருவ மாறுதல்கள் விரைவில் நன்னிலை அடைந்தன. ஆபுத்திரனிடம் உணவுபெற வருபவர் யாருமிலராயினர். அவன் மதுரையைவிட்டகன்று, ஏழைகளையும் பட்டினி கிடக்கும் பஞ்சைகளையும் தேடிப் பிற நகரங்களுக்குச் சென்றான். அச்சமயம் கடல்வழியாகப் பயணம் செய்து வந்த வணிகர் சிலர் மூலம் சாவகநாட்டில் மழை பொய்த்ததால், மக்கள் உணவின்றி மடிந்து வருகின்றனர் என்று கேள்வியுற்றான். ஆகவே சாவகம் சென்று அந்நாட்டு மக்கள் துன்பந் தவிர்க்கும் துணிவுடன், அவன் அந்நாடு செல்லும் கப்பலொன்றில் ஏறினான்.

''பயணத்திடையே புயலொன்று வந்தது. கப்பல் மணிபல்லவத்தில் நங்கூரமிட்டுத் தங்கிற்று. ஆபுத்திரன் கரையிலிறங்கித் தீவுக்குள் சென்றான். ஆனால், இரவுக்குள்



ளாகவே சாதகமான காற்றுவீசத் தொடங்கிற்று. ஆபுத்திரன் இன்னும் தீவிலேயே இருந்தான் என்பதை அறியாமல் கப்பலின் மீகான் பாய்விரித்துக் கப்பலைச் செலுத்தினான். ஆபுத்திரன் திரும்பிவந்து கப்பல் போய்விட்டதறிந்தான். தீவும் ஆளற்றதென்பது கண்டு மிகவும் வருந்தினான்.

''மாய உண்கலம் தன் கையில் பயனில்லாமலே இருந்ததுணர்ந்த அவன் மனநைவுற்று அதனைக் கோமுகிப் பொய்கையில் எறிந்தான். ஆனால் எறியும் சமயம், அது ஆண்டுதோறும் ஒருதடவை நீர்ப்பரப்புக்கு வர வேண்டுமென்றும், தூய உள்ளமும் அறச்சிந்தையும் உள்ளவர் கைக்கே செல்லவேண்டுமென்றும் வேண்டிக்கொண்டான். இங்ஙனம் ஆயிரக்கணக்கானவர்களுக்கு உணவளித்த கலத்திலிருந்து தான் தனியாக உணவு பெற மறுத்து அவன் பட்டினி கிடந்து சாகும் உறுதி கொண்டான்.

''நான் அச்சமயம் மணிபல்லவத்துக்குச் செல்ல நேர்ந்தது. ஆபுத்திரனிடமிருந்து நேரே அவன் வாய்மொழியாலேயே துயரமிக்க இக்கதையை நான் கேட்டேன்.[1]

''ஆபுத்திரன் மீண்டும் சாவகத்தில் மண்முகன் என்ற அறிவரின் குடியில் பிறந்தான். அந்நாட்டின் அரசன் குழந்தையற்றவனாயிருந்ததனால் குழந்தையை மண்முகனிடத்திலிருந்து பெற்று அவனைத் தன் அரசிருக்கைக்குரிய உரிமையாளனாக வளர்த்தான். நாளடைவில் ஆபுத்திரன் தந்தையின் பின்னுரிமையாளனாய், இப்போது சாவக நாட்டுக்கு அரசனாயிருக்கிறான்.

''அவன் மாயக்கலம் உன் கையில் பயனின்றி வெறிதேயிருக்கக்கூடாது. ஆகவே நீ இதிலிருந்து இந்நகரத்தின் இரவலர்களுக்கு உணவளிக்க வேண்டும். ஏனெனில் ஏழைகளுக்கு உணவளிப்பதைவிட, உயர்ந்த அறம் வேறில்லை.''

1. மணிமேகலை, காதை XIV.

இங்ஙனம் கூறிமுடித்த மடத்துத் தலைவரிடமிருந்து மணிமேகலை வணக்கமுடன் விடைபெற்று, அவர் விரும்பியபடி உடன்தானே தன் அறப்பணியைத் தொடங்க எண்ணினாள். இரவலர் ஓட்டுடன் சமயத்துறவு பூண்ட ஆண்டியின் கோலத்தில் அவள் தெருவில் தோன்றியதே, தெருவில் சென்றுகொண்டிருந்த மக்களெல்லாம் அவளைச் சூழ்ந்து கும்பு சேர்ந்தனர். மன்னன் மகனால் விரும்பப்பட்ட ஒரு நங்கை இவ்வாறு ஆண்டி உடை அணிந்திருப்பது ஏன் என்று அவர்கள் வியப்புற்றார்கள்.[1]

இரத்தலை மேற்கொண்ட ஆண்டி என்ற முறையில், முதலில் ஒரு வாழ்வரசியிடமிருந்தே ஐயமேற்பது தகுதி என்று மணிமேகலை கருதினாள். ஒரு வணிகன் மனைவியான ஆதிரை இல்லமடைந்து, மாயக்கலத்திலே அவளிடமிருந்து ஐயமேற்றாள்.[2]

இதன்பின் அவள் கலத்திலிருந்து உணவு எடுத்து வழங்கத் தொடங்கினாள். முதல் முதல் உணவேற்றது ஒரு வித்தியாதரன் மனைவியான காயசண்டிகை என்பவளே. ஆராப் பசி யுண்டுபண்ணிய ஒரு நோயால் அவள் அல்லலுற்று வந்தாள். கலத்திலிருந்து வழங்கப்பட்ட உணவை உண்டதும் அவள் மாயநோய் நீங்குதலுற்றுக் குணம் ஏற்பட்டது. அவள் ஆர்வமீக்கூர மணிமேகலையை வாழ்த்தினாள். அத்துடன் அருகிலுள்ள புத்தமடத்திற்குச் சென்று, அங்கே பெருந்தொகையாகக் குழுமிநின்ற ஏழைகளுக்கு உணவளிக்கும்படி அவள் மணிமேகலையைக் கனிவுடன் வேண்டினாள்.[3]

மணிமேகலை ஒரு பிக்குணி அல்லது ஆண்டிச்சி உடையில் புத்தமடத்திற்கு வந்திருக்கிறாள் என்று கேட்டதே, அவள் பாட்டி சித்திராபதி கடுஞ்சினம் கொண்டாள். உதயகுமாரனைத் தூண்டி அவளை அவன் பொற்றேரில்

1. மணிமேகலை, காதை XV
2. மணிமேகலை, காதை XVI
3. மணிமேகலை, காதை XVII



கொணர்விப்பேனென்று சூளுரைத்து, அவள் ஒரு சில பணியாட்களை உடன்கொண்டு இளவரசன் அரண்மனைக்கு விரைந்தாள். அரண்மனையில் நுழைவுற்று இளவரசன் முன்னிலையில் சென்றசமயம், அவன் ஒளிமிக்க அரிமான்கள் தாங்கிய இருக்கையில், இருபுறமும் நின்ற பணிப்பெண்கள் கவரி வீச, இனிதமர்ந்திருந்தான். அவன் காலடியில் வந்து வணங்கிய சித்திராபதியை நோக்கி அவன் புன்முறுவல் பூத்தான்.

“மாதவியும் மணிமேகலையும் இன்னும் மடத்தில் இருக்கவே விரும்புகிறார்களோ?” என்று கேட்டான்.

“வீரமிக்க இளவரசனே! நீ நீடு வாழ்வாயாக!” என்று வாழ்த்திச், சித்திராபதி பேசத்தொடங்கினாள். “மணிமேகலை இப்போது நகர்ப்புறத்திலுள்ள மடத்தைச் சேர்ந்த பொதுக்கூட்டத்தில் இருக்கிறாள். நீ அவளை உன்னுடன் இட்டுக்கொண்டுவந்து அவள் நடிப்புத்திறத்தைக் கண்டுகளிக்க வேண்டுமென்பது என் விருப்பம்,” என்றாள்.

“நான் முன்பு அவளைப் பளிக்கு மண்டபத்தில் கண்டபோது, அவள் தன் கைகளை மார்பில் குவித்துவைத்துக்கொண்டிருந்தாள். அவள் கருவிழிகள் காதலால் கனிவுற்றனபோல விளங்கின. அவள் பவள இதழ்கள் அவள் முத்துப் பற்களின் ஒளிகாட்டி நின்றன. அவள் புன்முறுவல் என்மேனியெங்கும் மின்போல் பாய்ந்தது. அவ்வினிய முறுவலும் அத்தெய்விக எழில் வடிவும் என் நெஞ்சிற் புகுந்து மீளா இடம்பெற்றுவிட்டன. ஆயினும் எனக்கு வியப்புத் தருவது என்னவெனில், ஒரு தெய்வமாது என் முன் தோன்றி, அவளை எண்ணவேண்டாம் என்று எச்சரித்துச் சென்றதே. என்னை அவ்வாறு அறமுறை நின்று எச்சரித்தது உண்மையில் ஒரு தெய்வந்தானா அல்லது என் கற்பனையில் தோன்றிய உருவெளித் தோற்றமா?” என்று இளவரசன் வினவினான்.

“இத்தகைய ஐயப்பாடுகள் எதுவும் உனக்குத் தேவையில்லை” என்று சித்திராபதி அவனைத் தேற்றி

னாள். "மணிமேகலை மணவினையில் பிறந்த பெண்ணானால், நீ எச்சரிக்கை கொள்ளவேண்டியதுதான். ஆனால் பொது அரங்கமேடையில் தன் அழகு நலங்காட்டிச் செல்வர்களை மயக்கி ஆட்கொள்வதற்குரிய பயிற்சிபெற்ற ஆடல் நங்கை அவள். பிறந்த தொழிலுக்கு அவளை மீட்டுக் கொண்டுவருவது அரசனின் கடமை என்பதை நான் உனக்கு நினைவூட்டத் தேவையிராது என்று எண்ணுகிறேன்," என்றாள்.

சித்திராபதியின் ஊக்குதல்பெற்று, உதயகுமாரன் தேர் ஏறி, அதிற்பூட்டிய குதிரைகளைத் தூண்டி விரைவில் மடம் வந்து சேர்ந்தான். அவ்விடத்துக்குரிய தெய்வதமோ என்னும்படி வியத்தக்க எழிலுடன் அவள் அவன் முன் தோன்றி, கையிலிருந்த உண்கலத்தினுதவியால் தன்னைச் சுற்றிக் குழுமிய ஏழைகளை உண்பிக்கத் தொடங்கினாள். அப்போது அவளிடம் அவன் கொண்ட காதல் முழுவதும் சென்று ஒருசேர அவன் உள்ளத்திற் புகுந்து அதைப் பொருமவைப்பதுபோன்றிருந்தது.

அவளை அணுகி, உணர்ச்சிபொங்கக் காதலார்வத்துடன் அவன் பேசினான். "ஆ, என் உள்ளம் கொள்ளை கொண்ட அழகாரணங்கே! நீ ஏன் நோன்பாற்றி உன்னைக் கொன்று கொள்ளவேண்டும், ஓர் ஆண்டிச்சி வாழ்வு வாழவேண்டும்? அன்புக்குரிய நங்கையே! நீ ஒரு மடத்துப் பெண்துறவியாக விரும்புவதற்குக் காரணமென்ன?" என்று கேட்டான்.

முற்பிறப்பில் தன் அருமை இராகுலனாயிருந்தவன் அவன் என்பதை மணிமேகலை தெரிந்திருந்தாள். அவனிடம் தான்கொண்டிருந்த காதல் தன் வலிமைக்கேடு காரணமாக எங்கே வெளிப்பட்டுத் தன்னைக் காட்டிக் கொடுத்துவிடுமோ என்று அவள் நடுங்கினாள். இவ்வாறு நடுங்கியவண்ணமே அவள் பேசத்தொடங்கினாள்:

"என் விளக்கம் கூறுகிறேன். நல்லறிவாளர் உரைகளினால் நீங்கள் பயன் அடைந்துள்ளீராதலின், கூறுகிறேன். கவனித்துக் கேட்பீராக.



"இந்த உடம்பு துன்பத்தின் இருப்பிடம். அது துன்பத்தில் பிறந்தது. நோயாலும் முதுமையாலும் துன்புற்றுத், துன்பத்திலேயே மாள்கிறது. இதை உணர்ந்து நான் பெண் துறவியர் வாழ்வை அணைந்துள்ளேன்.

"தம்போன்ற வீரமிக்க ஓர் இளவரசருக்கு இதற்கு மேல் நான் என்ன கூறமுடியும்?

"என் சொற்களின் மெய்ம்மை கண்டீரானால் பின் உம் நெஞ்சம் காட்டும் வழியைக் கடைப்பிடிப்பீராக," என்றாள்.

இதன்பின் அவள் சம்பாதி என்ற தெய்வந் தங்கியிருந்த குடிலில் புகுந்து, உருமாறும் மந்திரத்தை உருச்செய்து காயசண்டிகையின் உருவம் பெற்று இளவரசனிடம் திரும்பிவந்தாள். மணிமேகலை மறைந்ததுகண்டு அவன் மலைப்புற்றான். குடிலுக்குட் சென்று தேடி அவளைக் காணாமையினால் ஏமாற்றமடைந்தான். இன்னுரையாலும் மட்டற்ற அழகாலும் தன்னை வசப்படுத்திவிட்ட அந்நங்கையைப் பெறாது அவ்விடத்தை விட்டகல்வதில்லை உன்று அவன் சூளுறுதி கொண்டான்.[1]

அக்கோட்டத்தின் சிலைகளில் ஒன்றிலிருந்து எழுந்த குரல் ஒன்று, 'வீணே சூளுரைபுகலாதே' என்று அவனை எச்சரித்தது. உதயகுமாரன் திகைப்படைந்தான். மணிமேகலையைப் பெறத் தான் வேறு என்னதான் செய்ய முடியும் என்று அவனுக்கு விளங்கவில்லை. பொழுது சாய்ந்துவிட்டது. மாலையின் அரையிருள் அடர்ந்துகொண்டிருந்தது. மணிமேகலையைப் பெறும் முயற்சி வெற்றி பெறவில்லையே என்ற வருத்தத்துடன் அவன் அக்கோட்டத்தை விட்டகன்றான்.

தன் வடிவத்தை மீட்டும் மேற்கொண்டால், இளவரசன் தன்னை விட்டகலமாட்டான் என்ற எண்ணத்தில், மணிமேகலை காயசண்டிகை உருவிலேயே மாறாதிருக்கத்

1. மணிமேகலை, காதை XVIII.

துணிந்தாள். அறச் செயலைத் தொடர்ந்து நடத்தவும் அவள் விரும்பினாள். ஏழைகள் தன்னை நாடிவரும்வரை காத்திருக்க அவள் விரும்பவில்லை. தானே சென்று அவர்கள் துயர் துடைக்க எண்ணினாள். ஆகவே நகரில் குற்றவாளிகள் சிறைப்படுத்திவைக்கப்பட்டிருந்த காவற் கூடத்தை அவள் அணுகினாள்.

துயரத்துக்குரிய சிறைப்பட்ட மக்கள் போதிய நல்ல உணவின்றிப் பசியால் வாடினர். மணிமேகலை மகிழ்வுடன் அவர்களிடம் சென்று, அவர்களுக்கு வயிறார உணவளித்தாள். அவள் கையில் ஒரு சிறுகலம் மட்டுமே இருந்தும் அவள் அது ஒன்றிலிருந்தே உணவெடுத்து நூற்றுக் கணக்கானவர்கள் பசியாற்றுவது கண்டு சிறைகாவலர் வியப்புற்றனர். வியத்தக்க இந்நிகழ்ச்சியைத் தம் அரசனுக்குத் தெரிவிப்பது தம் கடனெனக் கருதி அரண்மனைக்குச் சென்றனர்.

சோழ அரசன் மாவண்கிள்ளி அச்சமயம் தன் அரசி சீர்த்தியுடன் பூங்காவில் உலவச் சென்றிருந்தான். அரசி சீர்த்தி மாவலி மரபில் வந்த ஓர் அரசன் புதல்வி. அவள் பணிப்பெண்கள் பின்வர, அரசியும் அரசனும் அழகிய திட்டமுடன் வகுத்தமைக்கப்பட்ட பூங்காவின் வனப்பு மிக்க காட்சிகளில் ஈடுபட்டு மகிழ்ந்திருந்தனர்.

குளிர் நறுந்தடமொன்றில் புல்தளத்தின்மீது ஒருமா மயில் ஒய்யாரமாகத் தன் பல்வண்ணத் தோகையை விரித்து ஆடிக்கொண்டிருந்தது. குயில்கள் கூவிக்கொண்டிருந்தன. மேலே வளைந்துளாவிய கொம்புகளில் தேனீக்கள் பொம்மென்றினிது இரைந்தன. அடர்ந்த கொடிப் பந்தரொன்றில் மந்திப்பெண் கொடியிலிருந்து ஊசலாட, கடுவனுண் அதை ஊக்கி ஊசலாட்டிக்கொண்டிருந்தது. இதைக் கண்ட அரசனும் அரசியும் நகைப்பை அடக்க முடியாது சிரித்தனர். அச்சிரிப்பொலி பூங்காவெங்கும் கலகலப்பாக்கிற்று.



அரசனும் அரசியும் மானையும் மலையாட்டையும் தம் அருகே வரும்படி அழைத்தனர். அவர்கள் அருகே சென்றபோது காடையும் முயலும் செடிகொடிகளில் விழுந்தடித்து ஓடின. அவற்றின் அச்சத்தை அரசன் அரசிக்குச் சுட்டிக் காட்டினான். அவர்கள் செய்குன்றுகளில் ஏறி அதிலுள்ள செயற்கை அருவிகளைப் பார்வையிட்டனர். குளிர்ச்சிபொருந்திய முழைஞ்சுகள், புத்தார்வம் தூண்டும் நீரூற்றுக்கள் ஆகியவற்றினூடாக மெல்லென வீசும் இன் மணமிக்க தென்றலைப் பருகியவாறு பூங்காவின் பின்னல் வளைவுகளினிடையே அவர்கள் உலவினார்கள்.

உலாவினால் களைப்புற்று அரசகுழாத்தினர் அரண்மனை நோக்கித் திரும்பிவந்தனர். அரசன் அரசிருக்கை மண்டபத்தை அடைந்தான். சிறைகாவலர் வந்து திருமுன் காட்சிக்குக் காத்துக்கொண்டிருக்கின்றனர் என்பதைக் காவலர் தெரிவித்தனர். அவர்களை அரசன் வந்து காணும்படி பணித்தான். அவர்கள் வந்து தொலைவில் நின்று தாழ்ந்து தலைவணங்கியவாறு செய்தி தெரிவித்தனர்.

'வலிமைமிக்க மன்னன் மாவண்கிள்ளியே! நீடு வாழ்வீராக! காரியாற்றுப்போரில் தம் புதல்வன் தலைமையில் பாண்டியர் சேரர்படைகளை முறியடித்த தானைக்குரிய தகைசால் அரசே! இந்நகரில் அலைந்து திரிந்து வருகிற ஒரு நங்கை தற்போது சிறைக்கூடத்துக்கு வந்து, ஒரே ஒரு கலத்திலிருந்து உணவெடுத்து எண்ணற்ற மக்களுக்கு ஊட்டி வருகிறாள்! இதை அறிவீராக! தம் சீர்சால் ஆட்சி நின்று நீடுக!'' என்றனர்

அத்தகைய நங்கையைக் காணும் ஆர்வம் அரசனுக்கு ஏற்பட்டது. "அவள் இங்கே வரட்டும். அவளை மகிழ்வுடன் காண்பேன்,'' என்று அவன் சிறைகாவலரிடம் சொல்லியனுப்பினான். சிறைகாவலர் மணிமேகலையை அழைத்துவந்து திருமுன் விட்டனர்.

"அறிவுமிக்க அரசனே! உன்னிடம் என்றும் அன்பறம் சிறக்க,'' என்று வாழ்த்தினாள் மணிமேகலை,

"சமயப்பற்றுர்வமிக்க நங்கையே! நீ யார்? வியத்தக்க இக்கலம் உனக்கு எங்கிருந்து கிடைத்தது?" என்று அரசன் கேட்டான்.

"நான் ஒரு விஞ்சையர் நங்கை. சிலகாலமாக இந்நகரில் வாழ்கிறேன். இத்திருக்கலம் எனக்கு ஒரு தெய்வத்தால் அருளப்பட்டது. இதற்கு வியத்தகு பண்புகள் உண்டு. ஆருப்பசியை இது ஆற்றியுள்ளது. அத்துடன் எத்தனை பேருக்கு வேண்டுமானாலும் இதனால் உணவளிக்க முடியும். அரசுத்திருவுளம் நீடிய நிறைவாழ்வு பெறுக!" என்றாள் மணிமேகலை.

அவள் பண்புநயம் கண்டுமகிழ்ந்த அரசன் 'இந்நங்கைக்கு நான் என்னசெய்ய முடியும்?' என்று உழையரைக் கேட்டான்.

அரசன் கனிவிணக்கமான உசாவலால் ஊக்கங்கொண்டு மணிமேகலை வேண்டுதல்விடுத்தாள். "நகரச் சிறைக்கூடம் ஒரு பொது அறக்கூடம் ஆக்கப்படட்டும், அரசே! அரசத் திருவுளம் நீடு வாழ்க!" என்றாள்.

மன்னன் அருள்நலத்துடன் அவ்வேண்டுகோளுக்கு இசைவளித்தான்.[1] சிறைப்பட்டவர் விடுதலைபெற்றனர். புத்தத்துறவிகள் அதில் வந்து தங்கி அதை ஓர் அறக்கூடமாகவும், மருந்துச்சாலையாகவும் மாற்றினர்.

இச்செய்திகள் விரைவில் உதயகுமாரன் காதுகளுக்கு எட்டின. மணிமேகலை பற்றிய காதல் மயக்கம் அவனை இன்னும் விட்டபாடில்லை. மடத்துக்கு வெளியே அவளை எங்கே கண்டாலும் அவளைக் கைப்பற்றி அவளைத் தன் தேரில் அரண்மனைக்குக் கொண்டுவருவது என்று அவன் உறுதிகொண்டிருந்தான். இந்த எண்ணத்துடன் அவன் மடத்தில் நுழைந்தான்.

இதற்கிடையில் காயசண்டிகையின் கணவனாகிய காஞ்சனன் தன் மனைவியைத்தேடிப் புகார் நகருக்கு வந்தான். காயசண்டிகை உருவிலிருந்த மணிமேகலையைக் கண்டு அவன் அவளை அணுகி, அன்புக்கனிவுடன் அவள் நோய் அகன்றுவிட்டதா என்று உசாவினான். அத்துடன் வியத்தக்க அந்தக் கலத்தை எந்தத் தெய்வம் அவளுக்கு அளித்ததோ என்றும் ஆர்வத்துடன் கேட்டான்.

மணிமேகலை அவனுடன் பேச மனங்கொள்ளவில்லை. ஆயினும் உதயகுமாரனை அவள் கண்டாள். அவனுக்கு அவள் சில அறிவுரைகள் புகன்றாள். "முதுமை வாய்ந்த இந்த மாதரைப்பாரும் இளவரசே!" என்று அவள் அருகிலிருந்த ஒரு கிழவியைக் காட்டினாள். "ஒரு காலத்தில் மைக்கறுப்பாயிருந்த இவள் கூந்தல் இப்போது நரைத்துவிட்டது. பளபளப்பான இவள் நெற்றி இப்போது சுரிப்பு விழுந்துள்ளது. வில்லென வளைந்த இவள் புருவங்கள் செத்த நண்டின் கொடுக்குகள்போல் இருக்கின்றன. தாமரைபுரையும் செவ்வரிக்கண்கள் இப்போது பீளை தள்ளி ஒளி மழுங்கியுள்ளன. முத்துப்பற்கள் பொலிவிழந்து கருகித்தேய்ந்துள்ளன. பவள இதழ்கள் நிறம் வெளிறி அழகிழந்துள்ளன. வெண்மையின் அழகு இருந்தவாறு இது!" என்றாள்.

இவ்வகையில் பேசி உலக அவாக்களிலிருந்து இளவரசன் எண்ணங்களை மாற்றி உயிர்க்குறுதியான நிலையான மெய்ம்மைகளில் அவன் கருத்தைச்செலுத்த அவள் எண்ணினாள். ஆனால், அவளைத் தொடர்ந்து காயசண்டிகையின் கணவன் வந்துகொண்டிருந்தான். பொறாமை அவன் உள்ளத்தில் கொழுந்துவிட்டெரிந்து கொண்டிருந்தது. தன் மனைவி தன்னிடம் பாராமுகமாயிருந்ததுடன் இளவரசன் கருத்தைக்கவர முனைந்ததுகாண அவன் கொதித்தான். ஆகவே, அவள் நடத்தையை மேலும் கவனிக்க எண்ணி அவன் கோட்டத்தின் ஓர் ஒதுங்கிய மூலையில் பதுங்கியிருந்தான்.

மணிமேகலையே காயசண்டிகை உருவில் இருந்தாளென்பதை இப்போது உதயகுமாரன் உணர்ந்துகொண்டான். ஆனால், காஞ்சனன் ஏன் அவளைப் பின்தொடர்ந்

[1] மணிமேகலை, காதை XIX.



E. BOOK ..By K.Rajalingam

தான் என்பதை அவனால் உணரமுடியவில்லை. அவனும் இரவில் அவள் நடத்தையைக் கூர்ந்து கவனிக்கத் தீர்மானித்தான். ஆகவே அமைதியாக அவன் அரண்மனைக்குத் திரும்பிச்சென்று, நள்ளிரவில் தனியே புறப்பட்டுக் கோட்டத்துக்குள் நுழைந்தான். ஆயினும் இளவரசன் திருமேனியைச் சூழ்ந்த நன்மணம் எங்கும் பரவியதால் விழித்திருந்த காஞ்சனன் அவன் வரவை அறிய முடிந்தது.

அந்த நள்ளிருளில் தனியே வந்தவன் இளவரசன் என்பதுகாண, அவன் உள்ளத்தில் மனைவியின் நடத்தை பற்றி எழுந்த ஐயம் உறுதிப்பட்டது. பொறுமையால் கண் கால் தெரியாத நிலையில் அவன் வாளையுருவி அந்த இடத்திலேயே இளவரசனை வெட்டி வீழ்த்தினான். அதன் பின் அவன் மணிமேகலை துயின்ற அறையில் நுழைய முயன்றான். ஆனால், அங்கிருந்த சிலைகளில் ஒன்றிலிருந்து எழுந்த குரல்,'உள்ளே நுழையாதே' என்று எச்சரித்தது. அது மேலும் பேசிற்று:

"உன் மனைவி காயசண்டிகை நோய் குணமடையப் பெற்று, உன்னைத் தேடிச்சென்று விந்தியமலையில் உயிர் நீத்தாள். இப்போது உதயகுமாரன் தன் பழவினைப் பயன்கள் காரணமாகவே உயிர் நீத்தாலும், அவனைக் கொலை செய்ததனால் நீ ஒரு பெரும்பழி செய்திருக்கிறாய். இது உன்னை விடாது," என்றது.

இச் சொற்களைக் கேட்டுக் காஞ்சனன் மனமுடைந்து துயருடன் கோட்டத்தை விட்டகன்றான்.[1]

இதற்குள் மணிமேகலை துயில் விழித்துக்கொண்டாள். சிலையின் ஆவிக்குரல் கூறியதைக்கேட்ட அவள் அறையைவிட்டு விரைந்தோடி வந்தாள். உதயகுமாரன் நிலைகண்டு அவள் வெந்துயரப்பட்டுப் புலம்பினாள். "ஆ, என் அன்புக்குரியவரே! முற்பிறப்பில் பாம்புக்கடியால் நீர் இறந்தபோது உமக்காக நான் ஈமச்சிதை ஏறினேனே! மலர்வனத்தில் உம்மைக் கண்டபோதே என் உள்ளம்

1 மணிமேகலை, காதை, XX.



உம்மீது தாவிற்றே! உமக்கு நல்லறிவு கொளுத்தி மெய்யறப்பாதையில் உம்மைத் திருப்புவதற்காகவன்றோ நான் காயசண்டிகை உரு ஏற்றேன்! அந்தோ, விஞ்சையன் பொறாமைக்கிலக்காய், அவன் வாளுக்கு இரையானீரே!" என்று அவள் கதறினாள்.

இங்ஙனம் அரற்றியவண்ணம் அவள் காதலன் உடலைத் தீண்ட எழுந்தாள். அப்போது குரலாவி அவளைத் தடுத்தது. "அருகே செல்லாதே! அருகே செல்ல வேண்டாம்! இள நங்கையே! நீ அவன் மனைவியாகவும் அவன் உன் கணவனாகவும் பல முன்னைப் பிறவிகளில் இருந்தது உண்மைதான். ஆயினும் பிறப்பிறப்புச்சுழலின் சிறைக் கூடமாம் இந்த உடலிலிருந்து விடுதலைபெற விரும்பும் நீ, உன் உணர்ச்சி வேகத்துக்கு இடம்கொடுக்கக் கூடாது," என்றது.

மணிமேகலை அறிவார்ந்த அவ்வாவிக் குரலுக்குத் தலை வணங்கினாள். "அறிவிற் சிறந்த ஆவியே! இவர் முன்னைப் பிறப்பில் பாம்புக்கடிக்கு ஆளானதும், இப்போது விஞ்சையன் வாளுக்கு இரையானதும் எதனால் என்பதை அறிவாயா? அறிந்தால் துன்புறும் இந்த நெஞ்சத்துக்கு ஆறுதலளிக்கும்படி அதைக் கூறமாட்டாயா?" என்றாள்.

ஆவி விளக்கம் அளித்தது:

"சொல்லுகிறேன், கேள்! நங்கையே!

உன் முன் பிறப்பில் பிரமதருமர் அறமுரைத்துக் கொண்டிருக்கும் போது, நீ அவருக்கு ஒரு குறிப்பிட்ட நாளில் விருந்தளிக்க விரும்பி, உன் சமையற்காரனைப் புலர் காலையிலே ஆயத்தமாயிருக்கும்படி ஆணையிட்டிருந்தாய். ஆனால், அவன் காலையில் வந்தபோது, அவன் உணவுக் கலங்கள் மீது தடுக்கி விழுந்து அவற்றை உடைத்து விட்டான். அவன் கவனக்குறைவுகண்டு சீறியெழுந்த உன் கணவன் அச்சமையற்காரனைக் கொன்றுவிட்டான். இந்தப்பழிதான் உன்னைக்கூட இன்னும் சுற்றியலைக்கிறது.

"இப்போது உனக்கு இனி நடக்க இருப்பதைக் கூறுகிறேன். தன் மகன் கொலைகேட்டு, அரசன் உன்னைச் சிறைக்கூடத்தில் தள்ளுவான். ஆனால் அரசி உனக்காகத் தலையிட்டுச் சிறையிலிருந்து விடுதலைசெய்வித்துத் தன்னிடம் வைத்துக்கொள்வாள். மாட்சிமை தங்கிய புத்தமடத்துத்துறவி அதன்பின் உனக்காக அரசியிடம் இடையிட்டுப்பேசி உன்னை விடுவிப்பார்.

"அதன்பின் நீ தற்போது சாவகமன்னனாயிருக்கும் ஆபுத்திரனிடம் செல்வாய். அவனுடன் நீ மீட்டும் மணிபல்லவம் அடைவாய். அத்தீவைவிட்டு வந்தபின் நீ துறவி யுருவில் வஞ்சிசென்று, அங்கே மற்றச் சமயங்களின் கோட்பாடுகளைப் பயில்வாய். இதனையடுத்து நீ காஞ்சிக்குச் சென்று அங்கே பஞ்சம் நிலவும் சமயம் ஏழைகளுக்கு உணவளிப்பாய்.

"அவ்விடத்திலேயே நீ புத்தமடத் தலைவரைக் கண்டு அவரிடமிருந்து புத்தக் கோட்பாடுகளறிந்து துறவி நங்கையாவாய்.

"வரும் பிறவிகளில் நீ உத்தரமகதத்தில் ஆடவனாகப் பிறந்து, நாளடைவில் புத்தரின் அன்புக்குரிய தலைசிறந்த மாணவனாவாய்!"

தன் எதிர்காலம்பற்றிய செய்திகளறிந்தபின், மணிமேகலை பெரிதும் மன ஆறுதல் பெற்றாள். ஆவியிடம் அவள் தன் ஆழ்ந்த நன்றியறிதலைத் தெரிவித்தாள்.[1]

மறுநாள் காலை சம்பாபதி கோயிலுக்கு வந்தவர்கள் உதயகுமாரன் இறந்த உடலைக்கண்டு அச்செய்தியைச் சக்கரவாளக்கோட்டத்திலுள்ள துறவியர்களுக்குத் தெரிவித்தனர். அவர்கள் மணிமேகலையை உசாவி அவளிடமிருந்து அவன் எப்படி யாரால் கொலையுண்டான் என்ற செய்தியை உணர்ந்துகொண்டனர். பின் அவர்கள் உடலை ஓர் அறையில் பாதுகாப்பாக வைத்துவிட்டு அரண்மனை

1. மணிமேகலை, காதை, XXI.



சென்றார்கள். காவலர்வாயிலாக இசைவுபெற்று, வானவர் வேந்தன்போல அரியணைமீது வீறுடன் அமர்ந்திருந்த அரசன் திருமுன் நின்றார்கள். துறவிகளில் ஒருவர் அரசனிடம் செய்தி கூறத் தொடங்கினார்.

"வாழி அரசே! தம் ஆட்சிவளம் ஓங்குக! தம் நாட்கள் இன்ப நீடுக! முன்காலங்களில்கூடப் பல மனிதர்கள் தாம் காதலித்த பெண்களுக்காக உயிர்விட்டிருக்கின்றனர். பண்டை நாட்களில் சம்புத்தீவத்திலுள்ள எல்லா அரசரையும் பரசுராமன் கொலைசெய்யத் தொடங்கிய நாளில், புகார்நகரத்தை ஆண்ட காந்தன் என்ற அரசன் மறைந்து ஒதுங்க எண்ணித் தன் காதற்கிழமை மைந்தனான ககந்தனிடம் நாட்டை ஒப்படைத்துவிட்டுச் செல்ல எண்ணினான். ஏனெனில், ககந்தன் ஓர் ஆடல் நங்கையின் புதல்வனாகையால், ஆட்சிக்கு உரிமைப்படாதவனென்று கருதிப் பரசுராமன் அவனை எதிர்க்கமாட்டான் என்று அவன் கருதினான். ககந்தன் மகன் காவிரியில் குளித்துவிட்டுத் தனியே நகர்வாயில்வழியாக வந்துகொண்டிருந்த ஒரு பார்ப்பனன் மனைவியைக்கண்டு அவளிடம் தகாத கோரிக்கை செய்ததனால், ககந்தன் அவனைக் கொன்றுவிட்டான். அரசனின் மற்றொரு மகனும் அதுபோலவே கற்புடன் அழகுவாய்ந்த ஒரு வணிகன் மகளை அவமதித்ததனால், தந்தையால் கொலைசெய்யப்பட்டான்," என்று கூறித் துறவி தயங்கினான்.

மன்னன் இடையிட்டுப் பேசினான். "இப்போது ஏதாவது அவ்வகைத் தகாநிகழ்ச்சி நடந்துள்ளதா?" என்று கேட்டான்.

இளவரசன் உதயகுமாரன் பெண் துறவியாய்விட்ட மணிமேகலையிடம் அணிமையில் காதல்கொண்டு தொடர்ந்ததையும், அவன் கண்ணிலிருந்து தப்ப அவள் காயசண்டிகையின் உருவம் மேற்கொண்டதையும், அதன்பின் இளவரசன் நள்ளிரவில் தன் மனைவியறைக்கு வந்தானென்ற ஐயத்துடன் காஞ்சனன் பொறாமையால் கொன்றுவிட்டதையும் துறவி எடுத்துரைத்தான்.

தன் புதல்வன் துயர முடிவுகேட்டு மன்னன் திடுக்கிட்டு உளம் இடிவுற்றான். முதலமைச்சனான சோழிய ஏனாதியை அழைத்தான் "என் நெறிநிறம்பிய புதல்வனுக்கு நான் அளிக்கவேண்டிய தண்டனையைக் காஞ்சனன் அளித்துவிட்டான். இளவரசன் உடலை எரியூட்ட உடனே ஏற்பாடு செய்வதுடன், அவ்வாடல் நங்கையின் புதல்வியையும் காவலில் வைப்பீராக,"[1] என்று பணித்தான்.

அரசமாதேவி தன் அரும்புதல்வனை இழந்து ஆறாத் துயரடைந்தாள். மகன் மாள்வுக்குக் காரணமாயிருந்த மணிமேகலையிடம் அவள் பழிவாங்க எண்ணினாள். ஆனால் அவள் இவ்வெண்ணத்தை மறைத்து, மணிமேகலையைப் போல அறிவும் சமயப்பற்றார்வமுமிக்க ஒரு நங்கையைச் சிறையிலடைத்துவைப்பது நேர்மையாகாது என்று அரசனிடம் சென்று வாதாடினாள். அரசன் மணிமேகலையை விடுவிக்க இணங்கி அவளை அரசியின் அரண்மனைக்கே அனுப்பிவைத்தான்.

மணிமேகலையைப் பழிக்குள்ளாக்க எண்ணிய அரசி, தந்தையறியா இளைஞனொருவனை அழைத்துக் கைந்நிறையப் பொன்கொடுத்து, மணிமேகலையைக் கற்பழிக்கும்படி ஏவினாள். இதற்கு உடந்தையாக அவளே மயக்க மருந்துமூலம் மணிமேகலை உணர்விழக்கும்படி செய்ய முயன்றாள். ஆனால், மயக்க மருந்து மணிமேகலையை மயக்கும் ஆற்றலற்றதாயிற்று. அத்துடன் இளைஞன் தன்னிடம் வந்தபோது, மணிமேகலை ஓர் ஆடவன் உருவத்தை மேற்கொண்டு விட்டாள். அரசி தன்னை ஏதோ ஆரிடர் நிறைந்த சூழ்ச்சியில் சிக்கவைக்கப் பார்க்கிறாள் என்று ஐயுற்ற இளைஞன் நகரைவிட்டே ஓடிவிட்டான்.

இதன்பின் மணிமேகலைக்கு உடல்நலமில்லை என்ற பொய்ச்சாக்கின்பேரில், அரசி அவளை ஓர் அறையில் அடைத்துப் பூட்டினாள். உணவு இல்லாமல் அவளைப்

[1] மணிமேகலை, காதை, XXII.



பட்டினியிட்டுக் கொல்லத் திட்டமிட்டாள். மணிமேகலையோ தன்னைப் பசியிலிருந்து காக்கும் மந்திரத்தை உருவிட்டு, எப்போதும்போல ஊக்கம் தளராமலே இருந்தாள்.

தன் முயற்சிகள் யாவிலும் தோல்வியுற்ற அரசி, பட்டினியால் மணிமேகலை சிறிதும் வாட்டமடையாதது கண்டு வியப்புற்று, அவள் ஒழுக்கமும் திருநிலையும் வாய்ந்தவள் என்பதைத் தெள்ளிதில் உணர்ந்து கொண்டாள் மணிமேகலையிடம் சென்று, தன் மகன் சாவுக்கு அவள் காரணம் என்ற எண்ணத்தால் பல்வகையில் அவள்மீது பழிகள் சூழ்ந்ததற்காக அவளிடம் மன்னிப்புக் கோரினாள்.

மணிமேகலை மனமாரவே மன்னிக்கத் தயங்கவில்லை. "அம்மணி! முற்பிறப்பில் நீ அரசி நீலபதியாய் இருந்தபோது, நச்சுப்பாம்பு கடித்து உன் மகன் இராகுலன் இறந்தான். அப்போது அவன் மனைவியாயிருந்த நான் அவன் ஈமத்தீயில் என் உயிரை விட்டேன். ஆனால், அம் முற்பிறப்பில் உன் மகன் ஒரு கோபவெறியில் தன் சமையற்காரனைக் கொன்றுவிட்டான். அத் தீவினையின் பயனே இப்போது அவனைத் தாக்கிஅவனை விஞ்சயனால் கொல்வித்தது," என்றாள். அத்துடன், தான் மலர்வனத்தில் உதயகுமாரனைக் கண்டதுமுதல் நடந்த செய்திகள் யாவும் அவள் அரசியிடம் கூறினாள். அரசி எத்தனை கேடு சூழ்ந்தும் கடல்தெய்வம் தனக்குக் கற்பித்திருந்த மந்திரம் எவ்வாறு தன் உயிரைக் காக்க உதவிற்று என்பதையும் அவள் தெரிவித்தாள்.

அவள் மேலும் பேசினாள்: "என் வசமுள்ள மந்திரங்களின் ஆற்றலினாலேயே நான் சிறையிலிருந்து வெளியேறியிருக்கமுடியும். ஆனால், அவ்வாறு நான் செய்ய விரும்பவில்லை. நான் பின் தங்கியிருந்து உங்களுக்கு ஆறுதலளிக்கவே விரும்பினேன். ஏனெனில் தாங்கள் மாண்டஎன் காதலனின் அன்னை. அறிவுடைய எல்லா உயிர்களிலும் மாறா அன்புகொண்டவர்களே உண்மையான இன்பத்தைப்பெற முடியும்," என்று கூறினாள்.

அரசி இச்சொற்களினால் பெரிதும் ஆறுதலடைந்தாள். அடைந்து மணிமேகலையை வணங்க எழுந்தாள். ஆனால், மணிமேகலை அவளைத் தடுத்தாள். "அம்மணி, முற்பிறப்பில் நீங்கள் என் கணவனைப்பெற்ற அன்னை. அத்துடன் இந்நாட்டின் பேரரசனுக்குரிய அரசி நீங்கள். எனவே நீங்கள் என்னை வணங்கத் தகாது," என்று கூறித் தான் அவளுக்குத் தலை தாழ்த்தி வணக்கம் தெரிவித்தாள்.[1]

இளவரன் உதயகுமாரன் கொலைபற்றிய செய்தியையும், தன் பேர்த்தி மணிமேகலை சிறைசெய்யப்பட்ட செய்தியையும், அதன் பின்னால் விடுவிக்கப்பட்ட செய்தியையும் கேட்ட சித்திராபதி அரண்மனைக்கு ஓடோடி வந்து அரசி காலடியில் விழுந்தாள். தனக்கு நேர்ந்த இடர்களையெல்லாம் எடுத்துக்கூறி, மணிமேகலையைத் தன்னிடமே திரும்பவும் ஒப்படைக்கும்படி மன்றாடினாள். ஆனால், மணிமேகலை ஆடல்நங்கையர் வாழ்வை முழுதும் வெறுத்துவிட்டதனால் இனிச் சித்திராபதியுடன் வாழ ஒருப்படமாட்டாள் என்று அரசி அவளிடம் தெரிவித்தாள்.

இதற்கிடையே மாதவி புத்தமடத்துத் தலைவருடன் வந்து அரசியின் திருமுன் காட்சி கோரினர். மாண்புமிக்க மடத்துத் தலைவரைக் கண்டதும் அரசி தன் பாங்கியர் சுற்றம்சூழ எழுந்து முன்சென்று அவரை வரவேற்றாள். அத்துடன் முறைப்படி அவருக்கு வணக்கம் தெரிவித்து இருக்கையளித்து, திருவடிகளை நீரால் அலம்பினாள். பின், பணிவுநயம்பட அவரிடம் பேசினாள்.

"தாங்கள் என்னைக் காணவந்தது என் நற்பேறு. ஆயினும் இச்சிறுநடை முதியவராகிய தங்கள் திருவடிக்கு மிகுந்த நோவு உண்டுபண்ணி யிருக்கவேண்டும். இன்னும் பல்லாண்டு தாங்கள் உடல் நலத்துடன் வாழ்வீராக!" என்றாள்.

"அரசியே! நான் கூறுவதைக் கேட்பீர்களாக. என் வாழ்நாள் முழுவதும் சமயத்துக்கே ஒப்படைக்கப்பட்டு

1 மணிமேகலை, காதை, XXIII.



விட்டாலும், நான் இப்போது விழுஞாயிற்றின் நிலையில் இருக்கிறேன்," என்று மடத்துத் தலைவர் தம் பேச்சைத் தொடங்கினார்.

பிறப்பு, அறியாமை, நல்வினை தீவினை ஆகிய இருவினைகளின் விளைவுகள் ஆகியவைபற்றிய புத்தர்பிரான் அறிவுரைகளைத் தலைவர் சொல்வளம்பட விளக்க முனைந்தார். அரசியையும் அவருடன் கேட்டிருந்தோரனைவரையும் நோக்கி நல்லறவழியையே கடைப்பிடிக்கும்படி கூறினார். பின் மணிமேகலை பக்கம் திரும்பி அவர் பேசினார்:

"முற்பிறப்பறிந்த இளநங்கையே! நீ முதலில் மற்றச் சமயங்களின் கோட்பாடுகளைக் கற்றுணரவேண்டும். அதன்பின்னர் நான் புத்தசமய தத்துவங்களை உனக்குப் போதிப்பேன்," என்றார்.

அவர் போக எழுந்ததும், மணிமேகலை அவர் காலில் விழுந்து வணங்கித் தன் கருத்தைத் தெரிவித்தாள்:

"இந்நகரில் நான் இன்னும் சிறிது தங்கினாலும், மன்னன் மகன் மாள்வுக்குக் காரணமாயிருந்தவள் என்று என்னை எல்லாரும் தூற்றுவார்கள். ஆகவே நான் ஆபுத்திரன் நாட்டுக்குச் செல்வேன். அங்கிருந்து மணிபல்லவத்துக்கும் பின் வஞ்சிக்கும் போவேன். வஞ்சியில் கண்ணகிக்கு ஒரு கோயில் எழுப்பப்பட்டிருக்கிறது என்று கேள்விப்படுகிறேன்," என்றாள்.

அன்னையையும் பாட்டியையும் நோக்கி, "என் அருமை உறவினர்களே! என் பாதுகாப்பைப்பற்றி இனி நீங்கள் கவலை கொள்ளவேண்டாம்." என்று கூறிவிட்டுப் புறப்பட்டாள்.

சம்பாபதி கோவிலுக்குச் சென்று, மணிமேகலை தேவியை வணங்கினாள். பின் வானில் எழுந்து பறந்து சாவகத்தில் ஒரு சோலையில் இறங்கினாள்.[1] அச்சோலை

1 சாவகம் அல்லது சாவகத்தீவம் என்பது சுமாத்ரா தீவு ஆகும். சுமாத்ரா அரசன் சாவா தீவையும் சுமாத்ரா அடுத்த சிறு தீவுகளையும் ஒரு

மன்னன் தலைநகருக்கு வெளியே இருந்தது. அம்மன்னன் இந்திரன் மரபினன் என்று அந்நாளில் கருதப்பட்டது.

மணிமேகலை அச்சோலையிலிருந்த ஒரு துறவியை அணுகி வணங்கிச் செய்தி உசாவினாள். "இந்நகரின் பெயர் என்ன ? இதனை ஆள்பவன் யார் ?" என்று கேட்டாள். துறவி மறுமொழி பகர்ந்தான். "இது நாகபுரம் இதை ஆளும் மன்னன் பூமிசந்திரன் புதல்வன் புண்ணியராசன். இவ்வரசன் பிறந்தநாள் முதல், மழை பொய்த்ததில்லை. பயிர்வளம் மிகுதி. நாட்டில் நோய் நொடி எதுவும் இல்லை." என்றான்.[1]

இதனையடுத்து அரசன் அறவுரை கோரித் தன் குடும்பத்துடன் தர்மசிராவகரைப் பார்க்கச்சென்றிருந்தான். துறவியருகே அழகிய ஓர் இளமங்கை அமர்ந்திருப்பது கண்டு அவன் வியப்படைந்தான். "ஆண்டிபோன்ற தோற்றத்துடன் புத்தர் அருளறம் கேட்க வந்திருக்கும் ஒப்புயர்வற்ற இவ்வழகி யார்?" என்று கேட்டான். மன்னர் பணியாளருள் ஒருவர் விளக்கம் தந்தார். "இந்தச் சம்புத்தீவத்தில் இந்நங்கைக்கு இணையாவார் யாரும் இல்லை. நான் காவிரிப்பட்டினத்துக்குச் சோழ அரசன் கிள்ளிவளவனைக் காணச் சென்றிருந்தேன். அப்போது

---

சேர ஆண்டானென்று தோற்றுகிறது. சுமாத்ராவையும் சாவாவையும் குறிப்பிடும்போது டாலமி, பெருஞ்சாவகம், சிறு சாவகம் என்று கூறுகிறார். தற்போது சுமாத்ராவைப்பற்றி மிகுதியான செய்திகள் எதுவும் தெரியவரவில்லையாதலால், நாகபுரம் எதுவென்று என்னால் அடையாளமறிந்து கூற முடியவில்லை. முன்னாட்களில் சோழமண்டலக்கரையுடன் வாணிகம் நடத்திய அதன் கீழ்க்கரையிலுள்ள மிக முக்கிய துறைமுகம் சீர் இந்திரபுரம் ஆகும். அது ஓர் அரசின் தலைநகரம்: ஜே. அண்டர்சனின் அசீன், சுமத்ராக்கரை (J. Anderson's Acheen and Coast of Sumatra) பக்கம் 395-396 பார்க்க: புத்த சமயமும் பார்ப்பன சமயமும் சுமத்ராவுக்ும் சாவாவுக்கும் மிக முற்பட்ட காலத்திலேயே சென்று பரந்தன என்பது இத்தீவுகளிலுள்ள பண்டைக் கோயில்கள் சிற்பங்களின் எச்சமிச்சங்களால் ஐயத்துக்கிடமில்லா நிலையில் தெளிவுபடுகின்றன.

1 மணிமேகலை, காதை, XXIV.



ஒரு கப்பலில் பயணம் செய்துகொண்டிருந்தபோது இப்பெண்ணைப்பற்றிக் கேள்விப்பட்டேன். அப்போது புத்தத்துறவி என்னிடம் இந் நங்கைபற்றிய எல்லாச் செய்திகளையும் கூறினார். இப்போது அவள் அந்நகரத்திலிருந்துதான் வருகிறாள்," என்றான்.

"ஒரு காலத்தில் உமதாயிருந்த உண்கலம் இப்போது என் கையிலுள்ளது," என்று மணிமேகலை கூறியதும், அரசன் மலைப்புற்றான். அவள் மேலும் பேசினாள். "உங்கள் முன்னைப் பிறப்பையும் நீங்கள் அறியவில்லை. இந்தப் பிறப்பைக்கூட அறியமாட்டீர்கள். மணிபல்லவத்திலுள்ள புத்தபீடிகையைச் சென்று பூசித்தாலல்லது இந்தப் பிறப்பிறப்பு என்னும் மாயச் சிறைக்கோட்டத்தை நீங்கள் உணர்ந்துகொள்ள முடியாது அங்கே வரும்படி உமக்கு அறிவுரை கூற விரும்புகிறேன்" என்றாள். இவ்வாறு சொல்லியதும் அவள் வானில் எழுந்து மணிபல்லவம் சென்றாள்.

மன்னன் மீண்டும் அரண்மனைக்குச் சென்று, தன் வளர்ப்புத்தாயாகிய அரசி அமரசுந்தரியிடமிருந்து, தான் அவள் புதல்வனல்லனென்பதையும், புத்தத் துறவியின் மடத்தில் பிறந்து முன்னாள் அரசன் பூமிசந்திரனால் எடுத்து அவன் புதல்வனாகவே வளர்க்கப்பட்டவன் என்பதையும் உணர்ந்தான். மணிமேகலை வாய்மொழியின் மெய்ம்மையை இவ்வாறு அறிந்து, அவன் முடிதுறக்கவும் துறவிவாழ்வு மேற்கொள்ளவும் விரையார்வம் உடையவனானான்.

இக்கருத்தை அவன் தன் அமைச்சன் சனமித்திரனுக்குக் கூறியபோது, அவன் மன்னன் உள்ளத்தில் திடுமெனப்புகுந்த இம்மாறுதல் கண்டு திகில் கொண்டான். "எம் அரசே! நீர் நீடு வாழ்வீராக! நீங்கள் பிறக்குமுன் இந்த அரசு பன்னிரண்டு ஆண்டு நீடித்த பஞ்சத்தால் வாடுதலுற்றது. தாய்மார் தங்கள் தங்கள் குழந்தைகளையே துறக்கும்படி நேர்ந்தது. ஆயிரப் பதினாயிரக் கணக்கில் மக்கள் பட்டினியால் மாண்டார்கள். வாடும்

கோடையினிடையே பெய்த மழைபோல் நீங்கள் பிறந்தீர்கள். அதுமுதல் பருவந்தவறாமல் மழைபெய்கிறது. பயிர்கள் வளங்கண்டுள்ளன. பசிப்பிணியுற்றவர் யாருமில்லை. நீங்கள் இந்நாட்டை விட்டகன்றால், எங்கள் நல்வாழ்வு மறையுமென்றும், மீண்டும் பஞ்சம் புகுந்துவிடும் என்றும் அஞ்சுகிறோம். பிற உயிர்களுக்கு இரக்கம் காட்டுவதே புத்தர்பிரானால் போதிக்கப்பட்ட முதற் கடமை. உங்கள் குடிகளிடம் உங்களுக்குள்ள இக்கடமையை நீங்கள் மறந்தீர்கள் போலும்!'' என்றான்.

"எப்படியும் நான் மணிபல்லவம் சென்று காண ஆர்வம் கொண்டுவிட்டேன். அங்கே போகாமல் என்மனம் ஆறப்போவதில்லை. ஒருமாதக் காலமாவது நீ ஆட்சியையும் அரண்மனையையும் பார்த்துக்கொள்ளவேண்டும்,'' என்று அரசன் கூறினான். தன் கடற்பயணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யும்படியும் கட்டளையிட்டான்.

கப்பல் ஒருங்குவிக்கப்பட்டதும் அரசன் கப்பலேறிச், சார்தகவுடைய காற்றுடன் மணிபல்லவத்தில் வந்திறங்கினான். மணிமேகலை மனமார்ந்த மகிழ்ச்சியுடன் அரசனை வரவேற்று அவனைப் புத்த பீடிகைக்கு இட்டுச்சென்றாள். மன்னன் பற்றார்வத்துடன் பீடிகையைச் சுற்றி வலம்வந்து வணங்கினான். உடனே நிலைக்கண்ணாடியின் நிழற் படிவம் போலத் தெளிவாக அவன் முன்னைப் பிறப்பு அவன் உணர்வுமுன் தோன்றிற்று.

அவன் உள்ளத்தின் உணர்ச்சிகள் உடனே பீறிட்டெழுந்தன.

"தமிழகத்தில் தென்மதுரையகத்துக் கல்விக்கிறைவியே! இதோ என் முற்பிறப்பறிந்தேன்; என் கவலைகளகன்றேன். உன் கோயிலின்கண்ணே ஒருநாள் மழைக்கால இரவின்போது பெருந்திரளான இரவலர் என்னிடம் வந்து உணவு கோரிய சமயம், அவர்களுக்கு அளிக்க உணவில்லாமல் திகைத்து நின்றபோது, எத்தனைபேருக்கு வேண்டுமானாலும் உணவு பரிமாற உதவத்தக்க தெய்விக ஆற்றலுடைய ஓர் உண்கலத்தை நீ என் கையில் தந்தருளினாய்? சென்றகாலத்தில் உன்னை வணங்கியது போலவே வருங்காலத்திலும் நான் வழிபடுவேன்,'' என்றான்.



பீடிகையிடம் விடைபெற்று மணிமேகலையுடன் அவன் ஒரு புன்னைமர நிழலில் அமர்ந்தான். பீடிகையின் காவல் தெய்வமான தீவதிலகை அவர்கள் முன்வந்து அரசனை நோக்கி வாய்மொழி பகர்ந்தாள்.

"தெய்விக உண்கலத்துடன் இத்தீவுக்கு வந்து இங்கே இறந்த அருளன்புடைய நல்லீர்! உமக்கு நல்வரவு கூறி வரவேற்கிறேன். அதோ இருக்கும் மரத்தடியில், கடலின் அலைகள் கொண்டுகுவித்த மணற்குன்றினடியிலே, உம் பழைய உடலின் எலும்புக்கூடு கிடப்பதனைப் பாரீர்!' என்று கூறினாள்.

பின் அவள் மணிமேகலையை நோக்கிப் பேசினாள்:

"தெய்விகக் கலத்தைத் தற்போது கையிலேந்திய நன்னங்கையே! கடலெழுச்சியால் உன் பிறப்பிடமான நகரம் அழிக்கப்பட்டுவிட்டது. அப்பேரழிவுக்குக் காரணமான நிகழ்ச்சியைக் கூறுகிறேன்; கேள்.

"நாகநாட்டரசன் மகளாகிய பீலிவளை தன் மகனுடன் இந்திரனால் காக்கப்படும் இந்தத் தீவுக்குப் புத்தர் பீடிகையைக் காணவந்தாள். அவள் இங்கே தங்கியிருக்கும்போது காவிரிப்பட்டினத்தில் ஒரு வணிகனுக்கு உரிமையான ஒரு கப்பல் இத்தீவில் நங்கூரமிட்டுத் தங்கநேர்ந்தது. கப்பல் காவிரிப்பட்டினத்துக்குப் போக இருக்கிறது என்பதை உணர்ந்த இளவரசி, தன் மகனை வணிகன் வசம் ஒப்புவித்து அவன் தந்தையாகிய சோழ அரசன் கிள்ளிவளவனிடம் அனுப்புவித்தாள்.

"வணிகன் இளவரசனை மனமகிழ்வுடன் தன் கப்பலில் ஏற்றிக்கொண்டு உடன்தானே கப்பல்பாய் விரித்தகன்றான். ஆனால், நள்ளிரவில் வன்புயல்காற்று எழுந்து கப்பலை அடுத்துள்ள ஒரு கடற்கரையில் மோதி உடைத்

தது. தப்பிப்பிழைத்த வணிகனும் சில கப்பலோடிகளும் அரசனிடம் சென்று இத்துயரச் செய்தியைக் கூறினர்.

"கிள்ளிவளவன் தன் புதல்வனைத் தேடிச் சென்றதால் இந்திரனுக்குரிய விழாவை ஆற்றும் கடமையை மறந்துவிட்டான். வானவர் வேந்தனுக்குச் செய்த அவமதிப்பால் கொதித்தெழுந்த கடல்தெய்வம் ஒருமா பெரிய கடலலையை அனுப்பிக் காவிரிப்பட்டினத்தைத் கடலுளாழ்த்திற்று.

"மாட்சிமைதங்கிய புத்தமடத்துத் தலைவர் சுதமதியுடனும் மாதவியுடனும் வஞ்சிக்குச் சென்றுள்ளனர். நீயும் அங்கே சென்று அவர்களைச் சந்திக்க," என்று கூறிவிட்டுத் தேவி அகன்றாள்.

தன் முன்னைப் பிறவிக்குரிய உடலைக்காணும் அவாவுடன் மன்னன் தேவி சுட்டிக்காட்டிய இடத்தில் மணலைக் கிளறினன். எலும்புக்கூடு சிறிதும் கெடாது முழுவடிவுடன் கிடக்கக்கண்டான். இவ்வெலும்புக் கூட்டைக் கண்டதும் மன்னன் திகைப்புற்றுத் தன்னுணர்விழந்தான்.

மணிமேகலை அரசனுக்கு ஆறுதல் கூறினள். "அரசே! முன்னைப் பிறப்பை உணர்ந்தால், நீங்கள் ஒரு முன்மாதிரியான நல்ல சமயப்பற்றுர்வமுடைய அரசனாய், நீங்கள் ஆளும் பல தீவுகளின்மீதும் உங்கள் புகழ் பரப்புவீர்கள் என்ற நல்லவாவுடனேயே நான் உங்கள் நகருக்குவந்து, இத்தீவுக்கும் உங்களை வரவழைத்தேன். மன்னர்களே துறவிகளாக விரும்பினல், ஏழைமக்களைக் காப்பாற்றுவர் யார்? உண்மையான அறம் என்பது உயிர்களுக்கு உணவும் உடையும் உறையுளும் கொடுத்துதவுவதே என்பதை மறவாதேயுங்கள்," என்றாள்.

"என் நாட்டிலாயினும் சரி, பிறநாடுகளிலாயினும் சரி, நீங்கள் சுட்டிக்காட்டிய அறநெறியின்படியே நடப்பேன். என்பழம் பிறப்புக்களை உணர்த்தி நீங்கள் என்னைச் சீர்திருத்தியுள்ளீர்கள். என்னிடம் இவ்வளவு அருளன்பு



காட்டிய தங்களைவிட்டு எவ்வாறு பிரிவேன்?" என்று மன்னன் மொழிந்தான்.

"இப்பிரிவுக்கு வருந்தற்க. உங்கள் நாடு உங்களை அழைக்கிறது. உங்கள் வாழ்வு அதற்குத் தேவைப்படுகிறது. ஆகவே உங்கள் கப்பலில் உடன்தானே திரும்பிச் செல்லுங்கள். நானும் வஞ்சிக்குச் செல்கிறேன்," என்று கூறி மணிமேகலை வானில் எழுந்து சென்றாள்.[1]

அவள் வஞ்சிசென்று அவள் தந்தை கோவலன், உரிமைத்தாய் கண்ணகி ஆகியவருக்கு எடுப்பிக்கப்பட்ட கோயிலைக்கண்டாள்.[2] அவர்களை வணங்கி வழிபட்டு, ஆண் துறவியின் உருவம்மேற்கொண்டு, சமயப்பற்றுர்வம் கொண்டுள்ள மக்கள் திரண்டிருந்த இடந்தோறும் சென்று, ஒவ்வொரு கோயிலையும் கூடத்தையும் மேடையையும் பார்வையிட்டாள். வேதசமயம், சைவசமயம், வைணவசமயம், ஆசீவகசமயம், நிகண்டசமயம், சாங்கியநெறி, வைசேடிகநெறி, உலோகாயதநெறி[3] ஆகிய பல்வேறு சமய நெறிகளின் பேராசிரியர்களை அடுத்து அறவுரை நாடினள்.

புத்த துறவியாயிருந்த கோவலன் தந்தையை அவள் கண்டு, அவன் மூலமாகப் புகார் நகரத்திலுள்ள புத்த மடத்துத்தலைவர் வஞ்சிநகர் விடுத்துக் காஞ்சிநகர் சென்றதாகக் கேள்வியுற்றாள். அவள் பாட்டனரான அவர் அவளைக் காஞ்சிக்குச்சென்று அந்நகரின் ஏழைமக்களுக்கு உணவளிக்குமாறு அறிவுரை கூறினர். ஏனெனில் அங்கே அப்போது பஞ்சம் தலைவிரித்தாடிக்கொண்டிருந்தது. தெய்வீகத் திருக்கலத்தைக் கையிலெடுத்துக்கொண்டு அவள் வான்வழியாகக் காஞ்சிக்குவந்து, கிள்ளிவளவன் தம்பியாகிய கிள்ளி அரசனல் அங்கே கட்டப்பட்டிருந்த புத்தகோயிலை அடைந்தாள்.

---

1 மணிமேகலை, காதை, XXV.
2 ,, ,, XXVI.
3 ,, ,, XXVII.

பணியாளர் மூலமாக அவள் வரவறிந்த மன்னன் அமைச்சர்புடைசூழ அவளைச் சென்று கண்டான் "அறவுணர்வுடைய நங்கையே! என் அரசு மிகக்கடுமையான பஞ்சத்தால் வாடுகிறது. ஆகவே இத் தெய்வக்கலத்துடன் தாங்கள் வந்ததுபற்றி மகிழ்வுறுகிறேன். மணிபல்லவத்திலுள்ளதுபோலவே ஒரு குளமும் சோலையும் நான் கட்டமைத்துள்ளேன்,'' என்றுகூறி அவ்விடத்தையும் சுட்டிக் காட்டினான்,

மணிமேகலையின் வேண்டுகோளின்பேரில் மன்னன் அங்கே புத்தபிரானுக்கு ஒரு கோயிலும் தீவதிலகை, மணிமேகலை ஆகிய தெய்வங்களுக்குக் கோயில்களும் கட்டினான்.

அதன்பின் மணிமேகலை தன்னிடம் வந்த எல்லா ஏழை எளியவர்களுக்கும், கூன் குருடு முதலிய உடற் குறையாளர்களுக்கும் உணவூட்டினாள்

புத்தமடத்துத் தலைவர் சிலநாட்களில் மாதவியுடனும் அவள் தோழி சுதமதியுடனும் அவ்விடம் வந்து சேர்ந்தார். சுதமதி அவரைப் பலவகை நன்மதிப்புக்களுடனும் வரவேற்று விருந்து செய்வித்தாள்.[1] அதன்பின் அவள் மாண்புமிக்க மடத்துத் தலைவர் திருவடிகளின்பக்கல் அமர்ந்து புத்தர் அருள்நெறியினைச் செவிமடுத்தாள்.[2]

புத்த அறநெறியின் உண்மையை முற்றிலும் மனச்செறிவுற்று புத்தம், தருமம், சங்கம் ஆகிய மும்மணிகளில் சரண்கொள்ள ஒருங்கியபின், மடத்துத் தலைவர் பெண் துறவியர் நெறிமுறையில் அவளுக்குத் தீக்கை செய்வித்து அவளை முறைப்படி வினைமுறையாற்றி, பேரொளி விளக்கங்கள்பூண்ட விழாக் காட்சிகளுடன் அந்நெறிமுறைக் குழுவில் அவளைச் சேர்த்துக்கொண்டார்.[3]

— — —

1 மணிமேகலை, காதை, XXVIII.

2 ,, ,, XXIX.

3 ,, ,, XXX.

# 13. தமிழ்க் கவிஞர்களும் கவிதைகளும்

அந்நாளின் கவிதை நூல்களில் தனிப்படக் குறிப்பிடத்தக்க மற்றொரு நூல் கலித்தொகை.[1] அது கலிப்பாவால் இயன்ற 150 காதற் பாடல்கள் அடங்கியது. மதுரைக் கழகத்தின் பேராசிரியர்களுள் ஒருவரான நல்லந்துவனரால் அது தொகுக்கப்பட்டதென்று கூறப்படுகிறது. பாடல்களின் ஆசிரியர் பெயர்கள் பதிவு செய்யப்படவில்லை. ஆனால், பாடல்களின் வேறுவேறு நடையையும் அவற்றில் விரித்துரைக்கப்பட்ட வேறுவேறு காட்சிகளையும் காண, அவையனைத்தும் ஒரே ஆசிரியரின் புனைவுகளல்ல என்று மதிக்கலாம்.

பாடல்கள் பெரும்பாலும் உரையாடல் வடிவில் அமைந்துள்ளன. உரையர்டுபவர் பெரிதும் காதலி, அவள் தோழி, அவள் காதலன் ஆகியவர்களே. அவற்றினூடாக நாம் காணும் உயர்பண்பமைந்த சுவை நலமும் விழுமிய வீறுநயம்சான்ற காதற்பண்பும் பிற்காலத் தமிழ்க்காதல் பாடல்களில் நிரம்பிக் காணப்படும் சிற்றின்பச் சுவைகட்குக் குறிப்பிடத்தக்கவகையில் மாறுபட்டவை. அவற்றில் காணப்படும் காதல் காட்சிகள் இருபாலாரிடையிலும் அந்நாளைய சமுதாயத்திலிருந்து வந்த இணக்க இணைவையும் காதல் மரபு முறைகளையும்

1 கலித்தொகை 1887 இல் இராய்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளையால் வெளியிடப்பட்டது.

தமிழருக்கே சிறப்புரிமையாயமைந்த மணமுறையினையும் மிக விளக்கமாக எடுத்துக்காட்டுகின்றன.

அக்காட்சிகளில் சிலவற்றின் மாதிரி வருமாறு :

வேட்டையாடச் செல்லும் ஒருவன் தற்செயலாக ஒரு நங்கையைக் கண்ணுறுகிறான். அவள் நிழலார்ந்த பசுஞ் சோலையொன்றில் ஊசலாடிக்கொண்டிருக்கலாம். அல்லது ஆற்றில் குளித்துக்கொண்டிருக்கலாம். தினைப்புனத்தில் பரண்மேல் நின்று தினை கவரவரும் புள்ளினங்களைக் கவணெறிந்து ஓச்சிக்கொண்டிருக்கலாம். அவள் அழகில் மையலுற்று, வேட்டையைப் பின்தொடர்ந்து வரும் சாக்கில் அவன் அப்பக்கம் 'அடிக்கடி வருகிறான்.

பெண்ணணங்கின் கண்களில் அவன்மீது கவர்ச்சி ஏற்பட்டால், அவள் அவனைத் தன் வீட்டில்வந்து தன்னைக் காணும்படி இசைவளிக்கிறாள். சிலசமயம் அவனுடன் அவள் நெடிது உலாவச் செல்கிறாள். சிலசமயம் அவன் அவளைத் தன்னுடன் ஆற்றுக்கு அழைத்துச் செல்கிறாள். சிலசமயம் அவனே தன் ஒப்பனை திருத்தும்படி இசைவளிக்கிறாள்.[1] இறுதியில் அவன் அவளை மணக்கிறான்.

பெண்ணணங்கு மிகுதியான நாணத்தால் பேச மறுத்து அவன் காதல்வேண்டுதலைச் செவியேற்காதிருந்தால், அவள் தோழியை அடுத்து, அவள் தலைவியின் பேரழகைப் புகழ்ந்து அவளுடன் வாயில் நேர்ந்துதவுமாறு வேண்டுகிறான். தோழி தலைவியிடம் மெல்லச் செய்தி கூறுகிறாள்.[2] அவன் அழகின் கவர்ச்சியில் ஈடுபட்ட அழகிய பருவநலம்வாய்ந்த இளைஞனின் பெருமிதத் தோற்றத்தை அவள் சிறிது பெருமைப்பட்டவண்ணமே எடுத்துரைக்கிறாள்.

காதலி வாழும் ஊர்ப்புறத்துள்ள சோலையில் தொடக்கத்தில் பகலிலும், சின்னாட்கழித்து இரவில் ஒளித்தும்

1 கலித்தொகை 76. 2 கலித்தொகை 47.
3 கலித்தொகை 49.



காதலர் சந்திக்கின்றனர். காதலன் காதலியின் தந்தையிடம் அவன் மகளை வேண்டிக்கேட்டு மணமுடிக்க விரும்புகிறான். அல்லது, தொலைநாடு செல்லவேண்டியிருப்பதால், ஒரு சிலநாளாவது தாம் பிரிந்திருக்கவேண்டுமென்று காதலியிடம் தெரிவிப்பான்.

தோழி போகாதிருக்கும்படி அவனை நயமாக வற்புறுத்துகிறாள். கொடு விலங்குகளும், கொடு விலங்குகளினும் கொடிய கள்வர்களும் நிறைந்த பாதையின் ஆரிடர்கள்பற்றி எச்சரிக்கிறாள். இளமை விரைவது, போனபின் திரும்பவாராதது, வாழ்வின் இன்பங்களை நுகரும் பொழுது அதுதான் என்ற மெய்ம்மைகளை யெல்லாம் அவள் அவனுக்கு நினைவூட்டுகிறாள். குறியிடத்துக்கு ஒருநாள் வராவிட்டால்கூடத் தலைவி படும் துயரத்தை அவள் விரித்துரைத்து, காதலன் விட்டுப்பிரிவதானால் அவள் இறக்கக்கூடும் என்ற தன் அச்சத்தை அவனுக்குத் தெரிவிக்கிறாள்.

இவற்றின்பின்னும் போகவே அவன் துணிவு கொண்டானானால், பெண் தன்னையும் உடன்கொண்டேகும்படி வேண்டுகிறாள். ஆனால் மெல்லியல்வாய்ந்த அவ்விள நங்கையால், அவ்வளவு நீண்ட கடும்பயணத்தை மேற்கொள்ள முடியாதென்று அவன் வாதிடுகிறான். அப்போதும் அவள், காட்டில் மான் கலையைப் பின்தொடர்வதைச் சுட்டிக்காட்டுகிறாள்.

"நீங்கள் போனபின், உங்களையே நினைந்து நினைந்திருந்து, உணவு நீர் வெறுத்து நான் இறந்துவிடுவேன். என் உள்ளம் இப்போது உங்கள் நெஞ்சில் சிறைப்பட்டுக் கிடக்கிறது. அதை நீங்களே வைத்துப்பேணாமல் என்னிடமே அனுப்பினால் எனக்குத் துயர் உண்டாவது உறுதி. நீங்களே அதை வைத்திருங்கள்," என்று அவள் மல்லாடுகிறாள்.[1] இதுகேட்டுக் காதலன் செயலற்றவனாகிறான். காதலி காதலனுடனே உடன்போக்கு நிகழ்த்துகிறாள்.

1 கலித்தொகை, 23.

இளநங்கையின் தாய் மகளைத் தேடப்புறப்பட்டு, வழியில் கண்ணுறும் வழிப்போக்கரிடமெல்லாம் ஓர் இளைஞனைத் தொடர்ந்து ஓர் இளநங்கை செல்லுவதைக் கண்டதுண்டா என்று உசாவுகிறாள். தன்னைக் காதலித்த இளைஞனுடன் சென்றதில் அணங்குசெய்த தகாச்செயல் எதுவுமில்லை என்று அறிவுரைகூறி வழிப்போக்கர் அவளுக்கு ஆறுதல் கூறுகின்றனர். அவர்கள் அறிவுரை வருமாறு:

"கடலில் பிறக்கும் முத்தினால், கடலுக்கு என்ன பயன்? மலையிலே வளரும் சந்தனத்தினால், மலைக்கு என்ன பயன்? பவளப் பாறையிலே உருவாகும் பவளத்தினால், அந்தப்பாறைக்கு என்ன பயன்? அவ்வவற்றை அணிபவர்க்குத்தான் அவை பயன்படக்கூடும், இவ்வகையிலேயே உங்கள் புதல்வியும் தான் விரும்பிய ஆடவனுடன் சென்றிருக்கிறாள்."[1]

சிலநாள் துறந்திருந்தபின், நங்கை தன் காதலனை உடன்கொண்டு தன் வீட்டுக்குத் திரும்பிவருகிறாள். இளந்துணைவர் வழக்கமான வினைமுறைகளுடன் திருமணம் செய்விக்கப்பெறுகிறார்கள்.

காதலன் மன்னன் பணியைமுன்னிட்டு, திடுமெனப் பிரிய நேர்ந்தால், அணங்கு உளம் நைவுறுகிறாள். அவள் தன் பாங்கியர் கூட்டுறவைத் துறக்கிறாள். தன் உணர்விழந்தவள்போல் அவள் அடிக்கடி சிரிக்கிறாள், அழுகிறாள் தன்னைச் சூழ்ந்திருக்கிற உயிரில்லாப் பொருள்கள் கூடத் தன் துயரில் பங்குகொள்கின்றன என்று அவள் எண்ணுகிறாள். கடல் இரங்குகிறது. மணல் குன்றுகள் நடுக்குறுகின்றன. மரங்களின் இலைகள் சோர்கின்றன, கடல் நடுவே கப்பல் உடைந்துவிட்ட சமயம் பிழைக்கும்வழி காணாதலைவுறும் கடலோடிபோல அவள் அலமருகிறாள்.[2]

அவள் கண்முன்னே இலவு தன் செம்மலர்களை விரிக்கின்றது. கோங்கு தன் பொன்மலர்களுடன் பொலி

1 கலித்தொகை, 9   2 கலித்தொகை, 134.



கின்றது. ஆற்றங்கரையிலுள்ள மரங்கள் யாவும் பூ விரித்துள்ளன. குயில் கூவுகிறது. இயற்கையில் யாவும் களிப்பில் ஆழ்ந்துள்ளன. காதலனில்லாத காரணத்தால் அவள் மட்டுமே துயரத்துக்கு இலக்காயிருக்கிறாள்.[1]

தன் காதலன் தன்னிடம் மீண்டும் வந்துவிட்டதாகவும், அவள் துயரார்ந்த தோற்றம்கண்டு அவள் காலடியில் படிந்து மன்னிப்புக்கோருவதாகவும், தான் விளையாட்டாகத் தன் பூமாலையால் அவனை அடிப்பதாகவும், நான் என்ன குற்றம் செய்தேன் என்று நடுங்கும் கனிவுடைய குரலில் அவன் மன்றாடியதாகவும் அணங்கு கனவு காண்கிறாள். இக்காரணத்தினால் விரைவில் காதலனைக் காண்பேனென்ற நம்பிக்கையுடன் அவள் மறுநாள் காலை களிப்புடையவளாயிருக்கிறாள்.[2] அத்துடன் அவள் காதலனது உயர்பண்புகளை இச்சமயம் அவள் தோழி அவளுக்கு நினைவூட்டுகிறாள். அவன் என்றும் அவளைக் கைவிடமாட்டான் என்று உறுதி கூறுகிறாள்.[3]

அந்நாளைய பாடல்களில் சற்றுப்பெரிதான நான்கின் பொழிப்புக்கள் மேலே தரப்பட்டன. அவையே முப்பால், சிலப்பதிகாரம், மணிமேகலை, கலித்தொகை என்பன. சிறிய பாடல்களை அவற்றின் ஆசிரியர் பெயர்கள் வாரியாகக் கவனிப்பதே அமைவுடையது. காலவரிசை முறையில் அவற்றைக் கீழே தருகிறோம்.

**கழாத்தலை (கி. பி. 30-60):** இவர் சேர அரசன் அவைசார்ந்த ஒரு போர்த்துறைக் கவிஞர். சேரல் ஆதனும் சோழன் கிள்ளியும் இருசார் அரசரும் வீழ்ந்துபட்ட போரில் அவர் உடனிருந்தார். இதன்பின் இன்னொரு சேரலாதன் கரிகால சோழனால் முறியடிக்கப்பட்ட வெண்ணிப் போரிலும் அவர் உடனிருந்தார். புலவர் கபிலர் அவரைத் தம்மினும் மூத்த ஒரு புலவராகக் குறிப்பிடுவதுடன், இருங்கோவேள் கழாத்தலையை மதிக்காததாலேயே அவன் நகராகிய அரையம் அழிக்கப்பட்ட

1 கலித்தொகை, 36.   2 கலித்தொகை, 128.
3 கலித்தொகை, 150.

தென்றும் தெரிவிக்கிறார். புறநானூற்றில் இவர் இயற்றிய ஆறு பாடல்கள் மக்குப் பேணித் தரப்பட்டுள்ளன.[1]

உருத்திரங்கண்ணனார் (கி. பி. 40–70) : இவர் பெரும்பாணாற்றுப்படை, பட்டினப்பாலை ஆகியஇரு பாடல்களின் ஆசிரியர். முந்தியது கிட்டத்தட்ட கி.பி. 50 இல், காஞ்சி அரசன் திரையன் சோழ அரசுக்குரியவனாய் இருக்கும் போது பாடப்பட்டது. மேலீடாக, அதுமன்னன் திரையனின் புகழுரையாயினும், அது பெரிதும் ஒரு முல்லைநில வாழ்க்கை ஓவியத்தின் பண்புடனேயே இயங்குகின்றது.

உமணர் தம் குடும்பத்துடன் மாட்டுவண்டிகளில் சாரிசாரியாகப் பயணம் செய்வது; மிளகுமூட்டை ஏற்றிய வண்ணம் பொதி கழுதைகள் கும்புகும்பாகக் கடப்பது, வேட்டுவர், ஆயர், உழவர் உறைவிடங்களாகிய சிற்றூர்களின் வாழ்வு; துறைமுகங்களில் கப்பல்கள் நெருக்கமாக இறங்கி நிற்பது; தலைநகரம் காஞ்சி ஆகிய மன்னன் நாட்டின் பல்வேறு காட்சிகளை விரைத்துரைக்கிறது.

பட்டினப்பாலை ஏறத்தாழ கி. பி. 70 இல், கரிகால் சோழன் அரசிருக்கை ஏறிப், பல குழந்தைகளின் தந்தையாய் இருந்தசமயத்தில் இயற்றப்பட்டது. அது கரிகாலன் தலைநகரான காவிரிப்பட்டினத்தின் புகழ் பாடுகின்றது. காவிரியால் வளமுறுத்தப்பெறும் செழுங்கழனிகள், நகரைச் சூழ்ந்த வயல்கள், சோலைகள், கடல் துறைமுகம், அதிலுள்ள இடமகன்ற கப்பல் தங்குதுறைகள், சந்தைக்களம், அதன் அகலச்சாலைகள், நகரின் கோட்டைகொத்தளங்கள், திருமாவளவன் அல்லது கரிகால் சோழனின் வீரதீர வெற்றிகள் ஆகியவற்றை அது நீள விரித்துரைக்கிறது.

முடத்தாமக்கண்ணியார் (கி. பி. 60-90) : இவர் கரிகால் சோழனைப் பராவிப் பொருநராற்றுப்படை பாடினார். இளமையிலே கரிகாலன் சிறையிலிருந்து தப்பியது பற்றி அவர் குறிப்பிடுகிறார். அவன் வெண்ணிப் போர்

1 புறநானூறு: 62, 65, 270, 288, 289, 368.



வெற்றிபற்றியும் அவன் அவைக்குவந்த பாணர்புலவர்களை அவன் வள்ளன்மையுடனும் பண்புடனும் நடாத்தியது பற்றியும் அவர் குறிப்பிடுகிறார்.

கபிலர் (கி. பி. 90–130): இவர் பிறப்பில் பார்ப்பனர். தொழிலால் புலவர். கரிகாலசோழன் மகளை மணந்த சேர அரசன் ஆதன் அரசவையில் இவர் சிலகாலம் இருந்தார். அரசன் அவர்மீது மிகவும் உவப்புற்று அவருக்குப் பல ஊர்களை இறையிலிக் கொடையாகக் கொடுத்தான்.[1]

புலவர்களுக்கு வழங்கும் வண்மையில் பேர்போன பாரியின் புகழால் கவரப்பட்டு, அவர் அவனைப் பார்க்கச் சென்று, விரைவில் அவன் அவைப்புலவராகவும் மாறா நட்பினராகவும் அமர்ந்தார். புகழுரைக்கலையில் துறைபோனவராதலால், எங்கே சென்றாலும் அவர் சிறப்பே பெற்றார். தம் புலவர்களைப் புகழ்ந்து அவர் பாடிய பாட்டுக்களிலிருந்து அவர் சொல்நயமும் கருத்து நுட்பமும் உடையவரென்று தோற்றுகிறது. புரவலர் வீரத்தையும் வண்மையையும் புகழ்வதில் அவர் சொல் திறம் வியக்கத்தக்கது. இவ்வுரைகள் மிகையுயர்வு நவிற்சியாகவே இருந்தாலும்கூட, சொல்லளவில் முழு வாய்மையாகவும் அமைந்திருந்தன.

பாரி இறந்தபின் அவர் பாரியின் புதல்வியரைவிச்சிக்கோன், இருங்கோவேள் ஆகிய வேளிரிடம் கொண்டு சென்று மணஞ்செய்விக்க முயன்றார். இந்நோக்கத்தில் வெற்றியடையாததால் அவர் பெண்களைப் பார்ப்பனருக்குக் கொடுத்துவிட்டுப் பட்டினிகிடந்து உயிர்விட்டார்.[2]

பெருங்குறிஞ்சி என்ற அவர் பாடல் தமிழகத்து மலங்குடியினரின் காதற்கதை ஒன்றைவிரித்துரைக்கிறது ஆரிய அரசன் பிருகத்தனுக்குத்[3] தமிழ் அறிவுறுத்தும்படி அது இயற்றப்பட்டதாகக் கூறப்படுகிறது.

1 பதிற்றுப்பத்து, 61–70.
2 புறநானூறு, 200, 201, 202, 236.
3 Prahasta.

அவரால் இயற்றப்பட்ட மற்றொரு பாடல் இன்னா நாற்பது. ஒவ்வொரு பாட்டிலும் நான்கு தீங்குகளை உள்ளடக்கிய 40 பாட்டுக்களையுடைய அறநூல் இது.

இந்நூலின் மாதிரிக்காக, அதன் மூன்று பாட்டுக்களின் கருத்துக்கள் கீழே தரப்பட்டுள்ளன.

முக்கட்கடவுள் (சிவபெருமான்) திருவடிகளை வணங்காதவர்களுக்கு (உரித்தான) வாழ்வு துன்பமுடையது. பனைமரத்தின் பொற்சின்னம் பொறித்த கொடியை உடைய வெண்ணிறக் கடவுள் (பலதேவன்) திருவுருவை வணங்காதிருப்பது நன்றன்று. ஆழிப்படையை இயக்கும் கடவுளை (திருமாலை) மறப்பது துயர்தருவது. அதுபோலவே வேலைத்தாங்கிய கடவுளை (முருகனை) வணங்காதவர்களுக்கும் (வாழ்வு) தீமையாகும். (பாட்டு 1.)

நண்பன் துயர் காண்பது விரும்பத்தக்கதன்று. பகைவன் பெருமைகாண்டல் துன்பம் தருவது. அரண் காவலில்லா நகரத்தில் வாழ்வது இடர் உடையது. சூதாடுதலும் துயரார்ந்தது. (பாட்டு 26.)

பிறன்மனை இன்பம் நயத்தல் தீது. போர்க்களத்தில் கோழையான அரசன் நடத்தை மிகவும் வருந்தத்தக்கது. கடிவாளமின்றி மூர்க்கமான குதிரை யூர்வது ஆரிடர் உடையது. அதுபோலவே மடிமையுடையவன் மேற்கொண்ட வேலை வீணானது. (பாட்டு 39.)

அவரால் இயற்றப்பட்ட ஒரு நூறு பாட்டுக்கள் ஐங்குறுநூற்றில் ஒரு பகுதியாகும். சேரல் ஆதனைப் பாடிய அவருடைய பத்துப்பாட்டுக்கள் பதிற்றுப்பத்தில் இடம்பெறுகின்றன. திருவள்ளுவர் முதல் முதல் தம் முப்பாலை அரங்கேற்றியபோது அவர் மதுரையில் உக்கிர பாண்டியன் அவைக்களத்துப் புலவர் கழகத்திலிருந்தவர். அந்நூலை ஆர்வத்துடன் வரவேற்றவர்.

அவர் முள்ளூர் சென்று மலையமான்காரியைக் கண்டார்.[1] பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்கிழார்

1 புறநானூறு, 121 முதல் 124 வரை.



என்னும் புலவர்களுடன் அவர் நள்ளியையும் அக்காலத்தே புலவர்களைப்புரந்த பெரும்புகழுடைய ஆவியர்கோவாகிய பேகனையும் சென்று கண்டார்.[1]

அவர் புகழ்ப்பாடல்களுக்கு மாதிரி எடுத்துக்காட்டாக, பாரி, சேரலாதன் என்ற இரு புரவலர்களையும் அவர் புகழ்ந்துபாடிய பாடல்கள் கீழே தரப்படுகின்றன :

"வண்மையிற் சிறந்த பாரி! முரசங்கள்போன்ற பாரிய பலாப்பழங்கள் குரங்குகளினால் பிளக்கப்பட்டுக் குறவேடர் உணவாகின்ற மலைகளுக்குரிய அரசனே! நீ என்னைப் பல்லாண்டுகாலம் • ஆதரித்தாய். ஆயினும் ஆதரித்த காலமுழுதும் நீ எனக்கு நண்பனாயில்லை. பகைவனாகவே இருந்தாய். ஏனெனில் உன்னிடம் கொண்ட அளவிறந்த அன்பால் மகிழ்வுடன் உன்னுடனேயே இறக்க விரும்பிய என்னை நீ தடுத்தாய். இங்ஙனம் உன்னைக் கடந்து வாழ்ந்ததனால், நான் உன்னிடம் கடமை தவறியவனாய் விட்டேன். ஆயினும் இவ்வுலகில் உன் நட்பை நான் நுகர்ந்ததுபோல, மறு உலகிலும் நான் முடிவிலா நின் நட்பைப்பெற அருள வேண்டுமென்று வேண்டுகிறேன்."[2]

"நீ அந்தணரையன்றி வேறு யாரையும் வணங்கினாயில்லை. துணிகரமான வீரத்துக்குப் பேர்போன நின் நண்பரைப் புண்படுத்துவதற்குத் தவிர வேறெதற்கும் அஞ்சுவாயில்லை. வில் நிலைத்துத் தங்கிய உன் நெஞ்சம் அழகிய பெண்டிரைக்கண்டு அதிர்வதன்றி, வேறு எப்போதும் அதிர்வதில்லை. நிலவுலகம் மேல் கீழாய்த் திரிந்தாலும் நீ கூறிய சொல் பிறழ்வதில்லை. மலைகளை வேருறப்பிளக்கும் இடியையொத்த நடுக்கந்தரும் விரைவுடன் உன் தமிழ் வீரருடன் சென்று நீ உன் எதிரரசர்இருவர் படைகளையும் அதிரடிக்கவைத்து வீரவாகை யணிந்துள்ளாய். அந்த வெற்றிகளுடன் வெற்றியாக என் வறுமையை வென்றுள்ளாய். செல்வக் கடுங்கோவே! சேரலர் தோன்றல்!

1 புறநானூறு, 143 முதல் 147 வரை.
2 ,, 236.

ஆற்றல்மிக்க கடலால் சூழப்பட்ட இந் நிலவுலகத்தில் நற்செயல்களுக்குத் தக்க நலங்களுண்டெனில், ஆதனே! நீ எண்ணற்ற ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வாழவேண்டும்! உன் செயல்கள் யாவிலும் வெற்றிபெற வேண்டும்!''[1]

இவர் நயம்பட்ட கவிதை யியற்றவல்லவர். நாத் திறம்படப் புகழும் அவைக்களக் கலைப் புகழாளர். தம் புரவலர்களாலும் தம் உடன்புலவர்களாலும் ஒருங்கே விரும்பிப் போற்றப்பட்டவர். திருவள்ளுவர் ஒருவர் நீங்கலாக, அந்நாளைய புலவர் எவரும் இவரளவு மக்கட் பேராதரவு பெற்றவரல்லர். அவர்காலப் புலவர்களில் மிகப்பலர் அவரைப்பற்றிக் கூறிய கூற்றுக்கள் இதனை மெய்ப்பிக்கவல்லன.

'உலகெங்கும் போற்றப்படுகிற சொல்வன்மைமிக்க புகழ் பெற்ற கபிலன்' என்று நக்கீரர் அவரைப்பற்றிப் பாடுகிறார்.[2] 'பொருளாழமுடைய நயமிக்க பாக்களை யுடைய கற்றறிந்த புகழ்க் கபிலன்' என்று பொருந்தில் இளங்கீரனும்,[3] மலையமான்காரியைப் புகழுமிடத்திலே மாறோகத்து நப்பசலையார் 'திருநிலைவாய்ந்த உள்ளத்தினனாகிய அந்தணன் உன்னைப்பற்றி அத்தனை முழு நிறைவாகப் புகழ்ந்துவிட்டதனாலே மற்றப் புலவர்களுக்குப் புகழும்படி எதுவும் மிச்சமில்லாமல் போய்விட்டது' என்றும்[4] இவரைப்பற்றிப் புகழ்ந்துள்ளார்கள்.

நக்கீரர் (கி. பி. 100–130): இவர் மதுரையிலுள்ள ஒரு பள்ளியாசிரியர் புதல்வர். அவர் தம் பாடல்களில் சோழ அரசர் கரிகால்வளவனையும் கிள்ளிவளவனையும் பாண்டிய அரசன் நெடுஞ்செழியனையும், சேர அரசன் வானவரம்பன் என்ற ஆதனையும் குறிப்பிட்டுள்ளார். அவர் பாடியவற்றுள் இரண்டு பாடல்கள்தாம் இப்போது கிடைத்துள்ளன. அவை திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை ஆகியவையே.

1 பதிற்றுப்பத்து, 63
2 அகநானூறு, 78.
5 புறநானூறு, 53.
4 புறநானூறு, 126.



முன்னதாகிய திருமுருகாற்றுப்படையில் அவர் பரங்குன்று, அலைவாய், ஆவினன்குடி, ஏரகம்,பழமுதிர்சோலை என்ற இடங்களில் வணங்கப்படும் ஆறு தலையும் பன்னிரு கைகளும் வாய்ந்த போர்க்கடவுளான முருகனைப் புகழ்கிறார்.

பின்னதாகிய நெடுநல்வாடையில் மதுரை மாநகரின் நீண்ட குளிர்கால இரவு விரித்துரைக்கப்படுகிறது. கூதல் வாடை கமுகின் சோலைவழியாக மதுரையின் அகன்ற தெருக்களில் வீசுகின்றது. கூதல்காற்றைத் தடுக்கும் முறையில் எங்கும் வாயில்களும் பலகணிகளும் பொருந்தச் சார்த்தித் தாளிடப்பட்டுள்ளன. படுக்கை யறைகளில் தணப்புத் தீ கனன்று கொண்டிருக்கிறது.

பாண்டியன் அரண்மனையில் அரசி தன் படுக்கையில் உறங்காத கண்களுடன் புரண்டுகொண்டிருக்கிறாள். அயலரசருடன் போரிடும்படி படையுடன் சென்ற அரசனையே அவள் நினைந்து வருந்துகிறாள் கண்களில் நீர் ததும்பிக் கன்னங்களின் வழியாக ஒழுகுகின்றன. அதேசமயம் பகைப்புலத்தில் கூடாரமிட்டுத்தங்கியுள்ள பாண்டிய அரசனும் உறக்கமில்லா நிலையில்தான் இருக்கிறான். ஆயினும் அவன் அரசியை நினைத்துக்கொண்டிருக்கவில்லை. அவன் போரில் புண்பட்டவர்களைப் பார்வையிட்டும் அவர்கள் புண்ணாற்றுவதற்காகவும் கூடாரத்தின் பாதுகாப்புக்காகவும் கட்டளைகளிட்டு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதில் மிகவும் ஈடுபட்டிருக்கிறான்.

இரண்டு பாடல்களும் நல் திறம்வாய்ந்த கருத்து வளமும் சீரிய சொல்நயமும் வாய்ந்தவை.

இவை தவிர அவர் இயற்றிய பல தனிச்செய்யுட்களும் புறநானூறு, அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை ஆகிய தொகை நூல்களில் காணப்படுகின்றன.

நக்கீரர் பாடல்களில் அவர்காலத்திய நிகழ்ச்சிகள் பற்றிய பல குறிப்புக்கள் நிரம்பியவை. தம் புரவலரைப் புகழ்ந்து மகிழ்விப்பது ஒன்றையே நோக்கமாகக்கொண்ட

பொதுநிலைப் புலவர் அல்லர் அவர் என்பதை அப் பாடல்கள் காட்டுகின்றன. அத்துடன் அவர் அகன்ற புலமையையும் அவை விளக்குகின்றன. அப்புலமைத் திறத்துக்கு மாளா நினைவுச்சின்னங்களாகவே அவர் அப்பாடல்களைப் படைத்துள்ளார் என்பதும் தெற்றெனத் தெரிகிறது.

நக்கீரர் பாடல்களிலிருந்துமட்டுமே நாம் தெரியவரும் செய்திகள் பல. இவற்றில் சில வருமாறு:

நாடோடிகளான குறும்பர்களைச் சோழன் கரிகாலன் குடிவாழ்நர் ஆக்கினான்.[1] பாண்டியன் நெடுஞ்செழியனால் ஏழு அரசர் தலையாலங்கானத்தில் முறியடிக்கப்பட்டனர். அவர்கள் பெயர்களும் குறிக்கப்பட்டுள்ளன.[2] அதே பாண்டிய அரசன் சேர நாட்டின்மீது படையெடுத்து மேல் கடற்கரையிலுள்ள முசிறி (டாலமியின் முஸிரிஸ்)வரை சென்றான்.[3] பாண்டிநாட்டின்மீது படையெடுத்த சோழன் கிள்ளிவளவனின் பெரும்படையை மதுரைமதிலினருகே பழையன்மாறன் முறியடித்தான்.[4]

சொற்களைத் தேர்ந்தெடுத்துத் தம் கருத்துக்களுக் கேற்ற தகுதிவாய்ந்த தொடர்களை வழங்குவதில் அவர் தனித்திறம் உடையவர். அவர் நடை எப்போதும் வீறும் நயமும் உடையதாகவே உள்ளது. ஆயினும் தம் கல்வி யகலத்தைப் பகட்டாகக் காட்டுவதில்அவர் ஆர்வமுடைய வர். இப்புலமை அடிக்கடி காழ்க்கொண்ட புலமைத் தருக்கின் அளவுக்குச் சென்றுவிடுகிறது.

திருமுருகாற்றுப்படை யல்லாமலும் சைவத்திருமுறை களில் பதினோராவது திருமுறையில் வேறும் ஒன்பது சிறு நூல்கள் நக்கீரருக்குரியனவாகக் குறிக்கப்பட்டுள்ளன. ஆயினும் அவற்றின் மொழிநடை மிகப் பிற்காலத்ததாகத் தோற்றுவதனால், அவற்றை நக்கீரப்போலிகளென ஒதுக்க எந்த ஆராய்ச்சியாளரும் தயங்கமாட்டார் என்னலாம்.[1]

1 அகம், 140. 2 அகம், 36.

3 அகம், 57. 4 அகம், 345.



இப்பாடல்களின் பிறப்புப் பற்றிய பழங்கதை மதுரைச் சிவன்கோயில் பற்றிய சமஸ்கிருதக் காலமுறை வரலாறான ஹாலாசிய மகாத்மியத்தில் குறிக்கப்படுகிறது. சமயப் பற்றார்வமிக்க இதன் ஆசிரியர் கி.பி. 11 ஆம் நூற்றாண்டிலே வாழ்ந்ததாகத் தெரிகிறது. பண்டைத் தமிழிலக்கியம்பற்றி அவர் கிட்டத்தட்ட எதுவுமே தெரியாதவர் என்று கூறிவிடலாம்.[2]

1 காலஞ்சென்ற பேராசிரியர் சுந்தரம்பிள்ளை, எம். ஏ. இக்கருத்தே உடையவர். கிறித்தவக் கல்லூரி மாத இதழ் (Christian College Magazine) 1891 ஆகஸ்டு பக்கம் 127 பார்க்க. இவ்வொன்பது பாடல் களின் பெயர் வருமாறு

1. கயிலைபாதி காளத்திபாதி யந்தாதி; 2 ஈங்கோய்மலை எழுபது; 3. வலஞ்சுழி மும்மணிக்கோவை; 4. எழுகூற்றிருக்கை; 5. பெருந் தேவபாணி; 6. கோபப்பிரசாதம்; 7. காரெட்டு; 8 போற்றிக் கலிவெண்பா; 9. கண்ணப்பதேவர் திருமறம்.

2 இந்நூலின்படி பாண்டிய அரசன் வங்கியசேகரன் காலத்தில் காசியி லிருந்து 48 பண்டிதர்கள் தெற்கு நோக்கிவந்து, பாண்டியன் ஆதரவில் மதுரையில் வந்து குடியேறினார்கள். அவன் பின் வந்த வங்கிய சூடாமணி என்ற செண்பகமாறன் ஒருநாள் அரண்மனைப் பூங்காவில் தன் அரசியுடன் அமர்ந்திருந்தான். அச்சமயம் அரசியின் கூந்தலிலிருந்துவரும் நறு மணத்தை நுகர்ந்து அதில் ஈடுபட்டு அம்மணம் இயல்பானதாயிருக்கக் கூடுமா சேர்க்கை மணமாகத்தானிருக்கக்கூடுமா என்று வியந்து தன்னைத் தானே கேட்டுக்கொண்டான் களிமிதப்புடைய உள்ளப்பாங்குடன் அவன் தன் அவைக்களத்திலுள்ள புலவர்களை வருவித்து, தன் மனத்திலுள்ள ஐயப்பாட்டை உய்த்தறிந்து அதை விளக்குபவர்களுக்கு ஆயிரம் பொன் அளிப்பதாகக் கூறினான். பிறர் கருத்தறிந்து கூறமுடியாதவர்களாய்ப் புலவர்களெல்லாம் தம் புரவலாளன் கோரிக்கை நிறைவேற்றவியலாது குழம்பினர்.

-ரிசுத்தொகையின் அளவைக்கேட்ட ஓர் ஏழைப் பார்ப்பான் தன் செல்வம் பெருக்க இது ஒரு நல்ல வாய்ப்பாகுமென்று கருதிச், சிவபெருமான் கோயிலினுட் புகுந்து தெய்வத் திருவுருவின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, பரிசைப்பெறும்படி தனக்கு உதவியருள வேண்டுமென்று வேண்டினான். அவன் வேண்டுகோளுக்கிரங்கிக் கடவுள் ஒரு பாட்டெழுதிய ஓலை நறுக்கை

மாமூலனார் (கி. பி. 100-130) : இவரால் பாடப்பட்ட பல பாடல்கள் அகநானூற்றிலும் ஒரு சில குறுந்தொகையிலும்நற்றிணையிலும்காணப்படுகின்றன. இவற்றிலிருந்து அவர் எங்கும் பயணம் செய்த ஒருவர் என்று தெரிகிறது.

---

அவனுக்குத் தந்தார். பார்ப்பனன் அதை மகிழ்வுடன் பெற்றுப் புலவர் கூடத்துக்கு விரைந்து அதை நீட்டினான்.

அது முத்தான பாடலாயிருந்தது. ஒவ்வொருவரும் அது நடையிலும் கருத்திலும் ஒப்பற்ற அழகுவாய்ந்ததென்று பாராட்டினர். அரசனிடம் அதைக் கொண்டுபோன போது அவன் அதை வாசித்து மகிழ்வுற்று, பொன்னின்கிழி ஒன்றைப் பார்ப்பனனுக்கு அளிக்கும்படி உத்தரவிட்டான். பார்ப்பனன் பரிசைப்பெறும்படி மீண்டும் புலவர் கூட்டத்திற்குச் சென்றான். ஆனால், நக்கீரர் பாட்டில் ஒருகுறை உண்டென்றும், ஆகவே பரிசு அளிக்கப் படக் கூடாதென்றும் கூறினார்.

மனம் இடிவுற்ற பார்ப்பனன் சிவபெருமான் கோயிலுக்கே திரும்பவும் சென்று சிவன் திருவுருவின் முன் பினனும் ஒருமுறை விழுந்து வணங்கி அவர் அருள் வேண்டினான்.

தன் பாட்டிலேயே குறைகண்ட நக்கீரரின் மேலாண்மைத் தனத்தைக் கண்டு சீறியவராய், கடவுள் ஒரு புலவர் வடிவம்கொண்டு, புலவர் பேரவைக்கு வந்து தன் பாட்டில் குற்றங் கண்டவன் யார் என்று கேட்டார். நான்தான்' என்று நக்கீரர் முன்வந்தார். அத்துடன் பெண்கள் கூந்தல் இயல்பாக மணமுடையது என்று கூறப்பட்ட கருத்தே தவறு, ஏனெனில் அது இருக்க முடியாத ஒன்று' என்றார்.

'பெண்களில் உயர்பண்புடைய பதுமினிப் பெண்களுக்குக் கூடக் கூந்தலின் இயல்மணம் கிடையாதா?' என்று கடவுள் கேட்க, நக்கீரர் அதையும் உறுதியாக மறுத்தார். ''வானவர் அணங்குகள் கூந்தலைப்பற்றிக் கடவுள் கடுஞ்சினத்துடன் கேட்டார். 'அவர்கள் கூந்தலிலுள்ள தெய்வமந்தார மலரின் மணமன்றி அவர்கள் கூந்தலுக்கும் வேறு மணம் கிடையாது' என்று அவர் குறித்தார். 'நீர் வணங்கும் தேவி பார்வதியின் கூந்தலும் இயல்மணம உடையதல்லவா?' என்று கிளர்ந்தெழும் சினத்துடன் கடவுள் கேட்டார். பிடிவாதமாக, நக்கீரர் 'கிடையாது' என்றார்.

'கடவுளின் கோபம் இப்போது அடக்க முடியாததாயிற்று. அவர் நெற்றி நடுவிலுள்ள கண்திறந்து அதினின்று தணல் பறந்தது. ''ஆயிரம் கண் திறந்தாலும் தவறு தவறுதான்'' என்றார் அஞ்சாத நெஞ்சினராய் நக்கீரர். நேர்மையை நிலைநாட்டும் ஆர்வத்தில் அவர் திசைதெரியாது பாய்ந்து சென்றார். அதன்மீது தெய்விக விழியிலிருந்து நக்கீரர்மீது ஓர்



அவர் சேர சோழ பாண்டியநாடுகளிலும் பாணன்நாடு (வைநாடு), துளுநாடு (தென்கன்னட மாவட்டம்) எருமைநாடு (மைசூர் அரசு) ஆகியவற்றிலும் சுற்றித்திரிந்ததாகத் தெரிகிறது.[1]

விழாவயரும் செல்வச் செழுநகராகிய வேங்கடத்தைப்பற்றி (தற்காலத் திருப்பதியைப்பற்றி)யும் அதனையாண்ட வள்ளன்மையுடைய புல்லியைப்பற்றியும் அடிக்கடி குறிப்பிடுகிறார். அவரும் அவர் புரவலன் என்று தோற்றுகிறது [2]

இன்னும் மிகப்பல பண்டைய அரசர்களைப்பற்றியும் அவர் குறிப்பிடுகிறார். அவர்கள் பெயர்கள் வருமாறு : பெருஞ்சோற்றுதியன் சேரல்;[3] கடல்வழிப்போர் ஆற்றிக் கடம்பெறிந்த சேரலாதன்;[4] கரிகாலசோழனால் வெண்ணிப் போரில் முறியடிக்கப்பட்ட சேரலாதன்;[5] மோகூர் கோசருக்குக் கீழ்ப்படிய மறுத்தபோது, பொதியமலைவரை படைசெலுத்திய வம்பமோரியர்.[6]

---

ஒண்கதிர் பாய்ந்தது. அதன் வெப்பில் கருகி நக்கீரர் உடனடியாகத் தம் இருக்கையிலிருந்து பொற்றாமரைக் குளத்தில் விழுந்தார். கடவுளும் மறைந்தார். இதன்பின் மனமிரங்கிப் பணிதலுடன் நக்கீரர் கடவுள் கோபம் தணிக்கு முறையில் மேற் குறிப்பிட்ட ஒன்பது பாடல்களையும் பாடினர்.

மேற்குறிப்பிட்ட மகாத்மியம் கபிலரும் பரணரும் நக்கீரருடன் சமகாலத்தவராகச் செண்பகமாறன் காலத்திலிருந்ததாகக் குறிக்கிறது.

கதையின் தொடர்ச்சியாக, செண்பகமாறனுக்குப் பின் பதினான்கு அரசர் ஆண்டனர். பதினைந்தாவது பாண்டியனாகிய குலேசபாண்டியன் ஆட்சியில் அதாவது ஒரு நூற்றாண்டுக்குப்பின் மீட்டும் கபிலரும் அவர் நண்பராகிய இடைக்காடரும் வாழ்ந்ததாக மகாத்மியம் சற்றும் பொருந்தா வகையில் குறிக்கிறது.

இத்துடன் திருவிளையாடற் புராணம் படலங்கள் 51, 53, 56 பார்க்க.

1 அகம், 15, 114  2 அகம், 61, 204, 310, 393.
3 அகம், 233.  4 அகம், 346, 126.
5 அகம், 55.  6 அகம், 250.

கல்லாடனார் (கி. பி. 100-130): இவர் வேங்கடத்திற் பிறந்தவர் என்று தோற்றுகிறது. ஒரு கடும்பஞ்சத்தின் போது அவர் குடும்பத்துடன் அந்நகரைவிட்டு வெளிவந்ததாகக் கூறுகிறார்.[1] அவர் தென்முகமாகப் பயணம்செய்து காவிரியின் கரையிலுள்ள வளமிக்க நாட்டில் ஆதரவுபெற்றார். இங்கே பொறையாற்றுத் தலைவனும் அம்பர்த் தலைவனும் அவரை வரவேற்று நாடுசூழ்புலவருக்குரிய எல்லா மதிப்புக்களும் நல்கினர்.[2]

ஆலங்கானப்போரில் அவர் பாண்டியப்படையுடன் சென்று வெற்றி வேந்தனான நெடுஞ்செழியனைப் பாடிப் புகழ்ந்து அவன் வெற்றித்திருவில் பங்குபெற்றார்.[3] கொல்லிமலை ஏரியை முள்ளூர்த்தலைவன் காரி முறியடித்துக்கொன்ற போரைப்பற்றி அவர் தம் பாடல்களில் குறிப்பிடுகிறார்.[4] களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் நன்னனை முறியடித்த போரைப்பற்றியும் குறிப்பிடுகிறார்.[5]

தமிழ் இலக்கணமாகிய தொல்காப்பியத்துக்கு அவரால் ஓர் உரை இயற்றப்பட்டதாகக் கூறப்படுகிறது. ஆனால், அது இப்போது கிட்டவில்லை.

மதுரையில் சிவபெருமான் நிகழ்த்திய திருவிளையாடல்களை விரித்துரைக்கும கல்லாடம்[6] என்ற நூலும் அவரால் இயற்றப்பட்டதாகக் கூறப்படுகிறது. ஆனால் மொழியின் நடையும் பிற்கால நிகழ்ச்சிகள் மிகப் பல அதில் குறிக்கப்பட்டிருப்பதும் நோக்க, அது போலிப் பெயரேற்ற நூல் என்றே தோற்றுகிறது.

மாங்குடிமருதனார் (கி. பி. 90-130): மாங்குடியைச் சேர்ந்த மருதனார் என்பது பெயரின் பொருள். தமிழிலக்

1 புறம், 391. 2 புறம், 385. 3 புறம், 371.

4 அகம், 208. 5 அகம், 198.

6 மயிலேறும் பெருமாள் பிள்ளையால் முதல் 37 பாடல்களுக்கும் சுப்பராய முதலியாரால் 62 பாடல்களுக்கும் வரையப்பட்ட உரையுடன் இந் நூல் சில ஆண்டுகளுக்குமுன் வெளியிடப்பட்டுள்ளது.



கியத்தில் குறிப்பிடப்பட்ட முதல் முதல் அரசவைப்புலவர்[1] இவரே. ஆலங்கானத்துவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் தன் அரசவைப் புலவரில் தலைவராக அவரைக் குறிப்பிடுகிறான். அவரால் இயற்றப்பட்ட சில பாடல்கள் புறநானூற்றில் காணப்படுகின்றன. ஆனால், அவர் நீடித்த புகழ் நினைவுக்குரிய தலைசிறந்த பாடல் மதுரைக் காஞ்சியேயாகும்.[2] இது பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாடுவது. அது ஓர் அறவுரைப்பாடல். ஆசிரியர் இதில் அறிவுரையாளராகவும் ஆசானாகவும் காட்சியளிக்கிறார். ஆனால், அது அவர் புரவலனாயிருந்ததனாலும், வெற்றி எக்களிப்பும் போர்த்துடிப்பும் மற வீரமும்மிக்க ஒருவனை நோக்கிப்பாடப்பட்ட காரணத்தாலும், மன்னனைப்பற்றிய தாராளமான புகழுரையும் அவன் திருவார்ந்த ஆட்சி பற்றிய பாராட்டுரையும் கலந்து மனத்துக்கு இணக்கமான முறையிலேயே அமைந்துள்ளது.

பாடலின் தொடக்கத்தில் பாண்டியர் மரபின் நடுநேர்மை, அறிவுத்திறம், போர் வெற்றிப்புகழ் ஆகியவற்றின் பாராட்டடங்கிய சொல்வளமிக்க வாழ்த்து இடம் பெறுகிறது. பின் பகட்டான சொற்களில் மன்னன் தன் ஆட்சியாற்றலைப் பெருக்கி இசையை வளர்த்த வீரச் செயல்களை அது குறிக்கிறது. இதன்பின் மன்னன் தனிப்பட்ட நற்பண்புகள் பாராட்டப்பெறுகின்றன. அவன் மெய்ம்மையும் நேர்மையும் விரும்புபவன் நட்பில் உறுதியானவன். போரில் அஞ்சா நெஞ்சுறுதியுடையவன் மிக உயரிய தன்மான உணர்வும் வரம்பிலா வண்மையும் உடையவன்.

அரசனுக்குமுன் பாண்டியர் தவிசை அணிசெய்த மன்னர் பெரியோராகவும் நல்லோராகவும் இருந்தனர். ஆனால், அவர்களில் ஒருவர்கூட அன்று உயிருடனில்லை என்பதைக் கவிஞர் மன்னனுக்கு நினைவூட்டுகிறார்!

1. Poet Laureate.

2 பத்துப்பாட்டில் ஆறும் பாட்டு: தமிழ்ப்புலவர் வி. சுவாமிநாதய்யரால் 1889இல் வெளியிடப்பட்டது.

இதனையடுத்துப் பாண்டியன் ஆணையைமேற்கொண்ட கடல் போன்ற பெரும்பரப்பின் எல்லையை ஆசிரியர் பலபட விளக்கமாக விவரித்துக் கூறுகின்றார். அதில் செழுங் கழனிகள், புல் நிலங்கள், பாலைப்பரப்புக்கள், மலைகள் நிரம்பியுள்ளன. அதன் கடற்கரையில் மிகப்பல துறைமுகங்கள் உள்ளன. அவற்றில் மீன்படவர், உமணர், சங்கறுப்பவர், முத்துக் குளிப்பவர் ஆகியோர் எப்போதும் நெருங்கினவராய்த் தத்தம் தொழில்களை இடையறாது இயக்கிவந்தனர்.

பீடும் செல்வவளமும்மிக்க மதுரையை அது மிக விரிவிளக்கமாக வருணிக்கிறது. தெருக்காட்சிகளும் அரண்மனைக்காட்சிகளும் பாண்டியன் திருத்தோற்றமும் அவையோரை அவன் வரவேற்றுப் பரிசளிக்கும் முறைகளும் சுவைபடத் தீட்டப்பட்டுள்ளன.

மன்னன் தன் முன்னோர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி வேள்விகள் செய்யவேண்டுமென்றும், குடிமக்கள் நலம்பேணி அவர்கள் மெய்யன்பைப்பெற்று, தெய்வங்கள் அளிக்கும் நலங்களைக் குறைவறத் துய்க்கவேண்டும் என்றும் கூறிப் பாடல் முடிகிறது.

இப்பாடலிலிருந்து, ஆசிரியர் ஆர்வமிக்க இயற்கை ஈடுபாடுடையவர் என்பதும், மாந்தரும் அவர் வாழ்வும் வாழ்வுமுறையும் கூர்ந்துகாணும் திறமுடையவர் என்பதும் தெளிவாகக் காணப்படுகின்றன. அவர் சொல்லோவியங்கள் உயிரோவியங்களாய் உள்ளன. ஆனால் அவர் சொல்நடை நக்கீரரளவு நயமும் வீறும் உடையதாயில்லை.

திருவள்ளுவர் (கி. பி. 100–130): குறள் அல்லது முப்பால் என்ற நூலின் ஆசிரியர் என்ற முறையில் தமிழ் உயிருள்ள மொழியாய் நிலவும்காலம் வரையில் அவர் புகழும் நின்று நிலவும். இந்நூலின் ஒருமணிச் சுருக்கம் மேலே தரப்பட்டது. உக்கிரபாண்டியன் அரசவையிலுள்ள புலவர்களால் அது அவ்வளவு ஆர்வமாக வரவேற்கப்பட்டது என்பதும் மேலே விரித்துரைக்கப்பட்டுள்ளது.



சீத்தலைச்சாத்தனார்,[1] இளங்கோவடிகள்[2] போன்ற சமகால ஆசிரியர்களாலேயே அது மேற்கோளாக எடுத்தாளப்பட்டது காண, அதன் உடனடி மக்களாதரவு நன்கு விளக்கமுறுகின்றது. நூல் இயற்றி 1800 ஆண்டுகளானபின்பும் தமிழ்மக்களிடையே அதற்கு முதலிலிருந்த ஆதரவு இன்றளவும் ஒரு சிறிதும் குன்றவில்லை. கருத்து அடிப்படையிலும் சரி, மொழியடிப்படையிலும் சரி, தன்னைக் கடந்த மேற்கேள்விக்கு இடமற்ற தலைசிறந்த மேற்கோள் நூல்களிலும் அது இன்று முதலிடம் வாய்ந்ததாகவே கருதப்படுகிறது.

அதன்மீது பல்வேறு காலங்களில் பத்துக்குக் குறையாத உரைகள் இயற்றப்பட்டுள்ளன. ஆனால் இன்று மிகப் பெரும்பாலாகக் கற்கப்படும் உரை பரிமேலழகருடையதேயாகும்.[3]

---

1 மணிமேகலை, XXII, 208, 209. 2 சிலப்பதிகாரம், XXI 3, 4.

3 காலஞ்சென்ற ஆறுமுகநாவலரால் பதிப்பிக்கப்பட்டது. உரையாசிரியர்கள் பெயர்கள் வருமாறு: தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பருதி, பரிமேலழகர், திருமலையார், மல்லர், கவிப்பெருமாள், காளிங்கர் ஆகியவர்கள். கபிலர்கவல் என்ற நூல் போலிநூல் ஆகும். அதன்படி உப்பை, உறுவை, வள்ளி, ஒளவையார், அதிகமான், கபிலர், திருவள்ளுவர் ஆகியோர் பகவன் என்ற பார்ப்பனனுக்கும் ஆதி என்ற பறைக்குல மாதுக்கும் ஏற்பட்ட தகாமணத்தின் கான்முளைகள். தாய் தந்தையர் தமிழகத்தில் நாடோடிகளாகத் திரிந்து, ஒவ்வொரு குழந்தையும் பிறந்த பிறந்த உடனே கைவிட்டார்கள். இக்குழந்தைகள் அநாதிகளாக ஏதிலரால் வளர்க்கப்பட்டு, வளர்ந்தபின் புகழ்பெற்றவர்களாயினர்.

இக்கதை போலி என்பது வெளிப்படை. ஏனெனில் ஒவ்வொரு குழந்தையும் பிறந்தவுடன் கைவிடப்பட்டதனால், அவர்கள் பிறப்பொற்றுமை பின்னால் எப்படித் தெரியவந்ததென்று கதை விளக்கத் தவறிவிட்டது. இங்கிலையில் 'தமிழகத்தின் புளூட்டார்க்'கின் ஆசிரியரான திரு. சைமன் கேசிச் செட்டியும் (Mr. Simon casie Chetty, author of the Tamil Plutarch), 'தமிழ்ப்புலவர் உடுக்குலம்' என்ற நூலின் ஆசிரியர் திரு. ஜே ஆர். ஆர்னல்டும் (Mr. J. R. Arnold, author of the Galaxy of Tamil Poets) இக்கதையை உண்மை என்று ஏற்றார்கள் என்பது வியப்புக்குரிய செய்தியேயாகும்!

கோவூர்கிழார் (கி. பி. 100-130) : இவர் சோழ அரசர்களின் அவையில் மிகவும் செல்வாக்குடைய ஒரு போர்க்களப் புலவர். புறநானூற்றில் சேட்சென்னி நலங்கிள்ளி வளவனைப்புகழ்ந்து அவர் பாடிய பல பாடல்கள் உண்டு. நலங்கிள்ளியின் ஆட்சியில் அவனுக்கும் அவன் தம்பியருக்கும் இடையே நிகழ்ந்த உள்நாட்டுப் போர்களில் கோவூர்கிழார் நெடுங்கிள்ளியின் படைவீட்டிலேயே இருந்தார். நலங்கிள்ளி உறையூரையும் அதன்பின் அவன் அண்ணன் நெடுங்கிள்ளி தஞ்சம்புகுந்த ஆவூரையும் முற்றுகையிட்டபோதும், அவ்ர் அவ்விருவரையும் இணக்குவிக்க முயன்றார்.[1] ஒற்றனென்ற ஐயப்பாட்டின்மீது இளந்தத்தன் என்ற ஏழைப்புலவனை நெடுங்கிள்ளி கொல்ல இருந்தபோது, அவர் அப்புலவனைக் காப்பாற்றினார்.[2]

கிள்ளிவளவன் ஆட்சியின்போது, அவ்வரசன் மலையமான் புதல்வர்களைக் கைப்பற்றி அவர்களை ஆனைக்காலடியிலிட்டுக் கொல்லுவிக்கத் திட்டம்செய்த நற்செயல்களால் பழம்பாடற் பெருமைபெற்றவர்கள் என்பதை நினைவூட்டி அச்சிறுவர் உயிர்காத்தார்.[3] அம்மன்னன் சேரநாட்டின் மீது படையெடுத்துத் தலைநகர் கரூரை முற்றுகையிட்டபோது, இப்புலவர் ஆலத்தூர்கிழார், மாறோக்கத்து நப்பசலையார் ஆகிய இரண்டு புலவர்களுடனே சோழன் படைவீட்டில் தங்கியிருந்தார்.[4]

இப்புலவரால் அவர் புரவலனாகிய நலங்கிள்ளியை நோக்கிப் பாடப்பட்ட ஒரு பாடலின் கருத்து வருமாறு :

"தவழ்கின்ற பிடரிமயிரும் அணிமணி திகழும் சேணமும் உடைய குதிரைமீது இவர்ந்து கடல்போன்ற தானையை நடாத்திச்சென்று பகைவர் நாடுகளை அழிக்கும் சோழநாட்டின் வீர வெம்போர் வேந்தனின் பற்றுறுதி

1 புறம், 44, 45. 2 புறம், 47.
3 புறம், 46. 4 புறம், 36, 37.



யுடைய பாடற் புலவர் நாங்கள். பிறரைப் புகழ்ந்து பாடிப் பரிசில் நாடும் வழக்கம் எங்களுக்கு இல்லை. அவ்வரசன் ஒருவனையே நாங்கள் பாடி என்றென்றும் வாழ்க என வாழ்த்துவோம்.

"விரைநடைப் புரவிகளையுடைய வேந்தே ! நானும் என் இளம்பாணரும் என்றுமே பசி யறியாதவர்களாய், ஓயாது (உம் அரண்மனையில்) தித்திப்புப் பண்டங்களும் சோறும் நெய்யில் வறுத்த கறியும் உண்டிருப்பதால் உம் அருகிருந்து அகலமாட்டோம் !

"உங்கள் அமைதியான. வாழ்க்கையைத் துறந்து, படங்கொண்ட வெள்ளைநாகம் ஒளிமிக்க கண்களுடனும் பிளவுற்ற நாவுடனும் (எதிரிமீது பாய்வது) போலப் பாய்ந்தெழுங்கள் ! உம் வெற்றித்தேர் உம்மாற்றரசர் கோட்டைகளுக்கு எதிராகச் செல்லட்டும் ! கடல்சூழ்ந்த இந்த வையகமுழுவதும் உமதாவது உறுதி.

"கணகணவென்று ஒலிக்கும் மணிகள்கட்டிய குணிலால் நான் முரசை முழக்கும் ஒவ்வொரு தடவையும், உன் எதிரிகள் நடுநடுங்குகிறார்கள்."[1]

இறையனார் (கி. பி. 100 130). இவர் அகப்பொருள் சார்ந்த இலக்கணமாகிய இறையனார் அகப்பொருளின் ஆசிரியர். பின் நாட்களில் இவ்வாசிரியர் பெயர் சிவபெருமான் பெயருடன் ஒன்றுபடுத்திக் குழப்பப்பட்டு, அதன் பயனாக, 60 சூத்திரங்களடங்கிய அவரது சின்னஞ்சிறு நூல் சிவபிரானின் ஒப்புயர்வற்ற நூலாகக் கருதப்பட்டது ![2]

பரணன் (கி. பி. 100 –130). அக்காலப் புலவர் பலரையும்போல இருவர் சேர சோழ பாண்டிய நாடெங்கும் சுற்றி மன்னர் அவைகளையும் வேளிர் மாளிகைகளையும் பார்வை

1 புறம், 382.

2 இராவ்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளையால் நீலகண்டன் இயற்றிய உரையுடன் வெளியிடப்பட்டது.

யிட்டிருப்பதாகத் தெரிகிறது. ஏழு வேளிர்களின் கூட்டுக் குழுவினை எதிர்த்துக் கரிகாலன் அவர்கள் நாடுகளின் மீது பெரும்படையுடன் சென்று தாக்கி அவர்களை முறியடித்தான் என்று அவர் கூறுகின்றார் இந்த வேளிர்கள் பெரும்பாலும் குறும்பர்களாகவே இருக்கக்கூடும்.[1] கரிகால சோழனின் பேரனை செங்குட்டுவன் சேரனால் முறியடிக்கப்பட்ட ஆரிய அரசர்களைப்பற்றியும் அவர் குறிப்பிடுகிறார்[2]

உறையூர் மன்னன் திட்டனின் வீரவண்மைகளைப் பற்றியும்.[3] தங்கச் சுரங்கங்கள் வெட்டியெடுக்கப்படும் பாலிநாட்டுத் தலைவனை உதியனைபபற்றியும்,[4] கோசரை முறியடித்த பொதியமலைத்தலைவன் திதியனைப்பற்றியும்,[5] இதுபோலவே அவர் புகழ்ந்து பாடியுள்ளார். சேரன் செங்குட்டுவனைப் புகழ்ந்து அவர்பாடிய பத்துப்பாடல்கள் பதிற்றுப்பத்தில் இடம் பெற்றுள்ளன.

காரியின் தலைநகரான தற்காலக் கோவலூரை அதியர்கோமான் நெடுமான் அஞ்சி முற்றுகையிட்ட சமயம் அவர் உடனிருந்தாரென்றும், வெற்றிவீரன் புகழை அவர் பாடினாரென்றும் புலவர் அவ்வையார் குறிப்பிடுகிறார். ஆனால், அச்சமயம் அவர் பாடியபாடல் தற்போது கிட்டவில்லை.[6]

நீண்ட வெங்குருதிப்போரின் முடிவில் நெடுஞ்சேரலாதன், பெருவிறற்கிள்ளி என்ற இரண்டு திறத்து அரசர்களும் மாண்ட போர்க்களத்தைப்பற்றி அவர் பாடிய பாடலின் கருத்து வருமாறு :

"அம்புகளால் துளைக்கப்பட்ட யானைகள் என்றும் மீளாநிலை எய்தியுள்ளன. கண்கவர் வனப்புடைய போர்க் குதிரைகளெல்லாம் அவற்றில் இவர்ந்தோருடன் வெட்டிச் சாய்க்கப்பட்டன. தேர்மீது சென்ற படைத்தலைவர்கள் அனைவரும் இறந்தொழிந்தனர். அவர்கள் முகங்கள்

1 அகம், 124. 2 அகம், 396. 3 அகம்
4 அகம், 257. 5 அகம், 195. 6 புறம், 99.



அவர்கள் கேடயங்களிலே புதையுண்டன. முரசறைபவர் எவரும் உயிருடனில்லாததால் பாரிய இடிமுழங்கும் முரசங்கள் பாரிடத்தில் உருளுகின்றன.

"மணம்பொருந்திய மார்பகங்கள் நீண்ட வேல்களால் துளைக்கப்பட்டு போரின் இருதிறத்து அரசர்களுமே களத்தில் விழுந்துகிடக்கின்றனர்.

"அந்தோ! அல்லிக்காம்பால் வளைசெய்தணிந்து கொண்டு உழவரணங்குகள் குதித்தாடி விளையாடும் குளிர்ச்சி பொருந்திய ஆறுகளையுடைய அவர்கள் செழிப்பு வாய்ந்த நாடுகள் இனி என்னாவது?"[1]

பெருங்கௌசிகனார் (கி. பி. 100-130) : இவர் பெருங்குன்றூரில் பிறந்தவர். இவர் செங்கண்மாவின் தலைவன் நன்னன்மகன் நன்னனைப் புகழ்ந்து மலைபடுகடாம் என்ற பாடல் இயற்றியவர்.[2]

நவிரமலையின் விழுமிய தோற்றமிக்க காட்சிகள் ; பாறைகள்மீது வந்து விழும் அருவிகளின் கல்லென்ற இரைச்சலால் மலையின் பக்கங்களில் எழும் இடைவிடா முழக்கம்; யானை பயிற்றுவிப்போரது கூக்குரல்கள் ; தினையிடிக்கும் பெண்டிர் வள்ளைப்பாட்டுக்கள் ; கரும்பாலைகளின் இரைச்சல் ; தத்தம் பெண்டிருடன் குடித்தாடும் மயக்கவெறியிலுள்ள குறவரால் அடிக்கப்படும் முரசொலி; இறந்த வீரரின் நினைவுக்காக வீரச்செயல் எழுதப்பட்டு நிறுவப்பட்ட நடுகற்கள்; பாதைகளின் சந்திப்பில் செல்லும் இடங்களின் பெயர்கள் வரைந்த கைகாட்டி மரங்கள் ; குறவரின் வேளாண்மை ; மலையிலிருந்து குதிகொண்டு சுழித்தோடும் செய்யாற்றின் வேகமான பாய்ச்சல்; வாளும் வேலும் தாங்கிய வீரர்களால் காவல் செய்யப்பட்ட கோட்டைவாயில்கள் ஆகியவற்றை அவர் சொல்வளம்பட பாடுகிறார்.

1 புறம், 63. இப்பாடல் மிகப் பெரும்பாலும் முற்பட்ட வேறோர் கவிஞரால் பாடப்பட்டிருக்கலாம் என்று கருத இடமுண்டு.

2 பத்துப்பாட்டில் பத்தாம் பாட்டு.

பாடகர்களை நன்னன் வரவேற்கும் முறைபற்றிப் புலவர் புகழ்ந்துபாடுகிறார். அவன் அவர்களை நயமுடன் எதிர்கொண்டழைத்து, அவர்கள் வருந்தி மலையேற நேர்ந்ததே என்று கவலைதெரிவிப்பான். அத்துடன் அவர்கள் பாடி முடிப்பதுவரைகூடக் காத்திராமல், அவர்களுக்கு விருந்தளித்துப் பரிசுகளை ஏற்றி அனுப்பிவிடுவான்.

ஔவையார் (கி பி 100–130) : இவர் தமிழ்ப்பெண் பாற் கவிஞரில் தலைசிறந்த புகழ்வாய்ந்தவர். அவர் புகழ் திருவள்ளுவர் புகழைவிட 'மக்கட் பரப்புடையதென்னலாம். ஏனெனில் திருவள்ளுவர் குறளை மிக உயர்ந்த அறிஞர்களே பயில்கின்றனர். ஔவையார் பாடல்களையோ எழுத்து வாசிக்கத் தெரிந்தவுடன் ஒவ்வொரு தமிழ் மாணவரும் பயில்கின்றனர்.

தமிழ் நெடுங்கணக்கின் எழுத்துவரிசை முறையிலேயே ஆத்திசூடி, கொன்றைவேந்தன்[1] என்ற இரண்டு நீதிநூல்கள் அவரால் இயற்றப்பட்டுள்ளன. புலமை சான்ற பெஸ்கி இவற்றை "ஸெனக்காவுக்கு ஈடான தகுதி

1. ஆத்திசூடி கொன்றைவேந்தன் ஆகிய பள்ளி நூல்கள் எழுதிய ஔவையார் வேறு, சங்ககால ஔவையார் வேறு என்பதே கிட்டத்தட்ட இன்றைய அறிஞர் அனைவரின் முடிவு என்னலாம். அது கம்பர் காலத்தில் இருந்ததாகக் கொள்ளத்தக்க ஔவையாராகக் கூட இருக்கமுடியாது என்றே கூறத்தகும். அதற்கு முற்பட்டவரல்லர் என்பதை நல்வழியில்,

" தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒருவாசக மென்றுணர் "

என்ற வெண்பாவே காட்டவல்லது. மற்றும், 'ஙப்போல் வளை' என்ற ஆத்திசூடி வாசகம் நன்னூலார் விதியை நினைவூட்டுகிறது. நன்னூலார் காலம் 12ஆம் நூற்றாண்டு ஆகும். ஆகவே ஆத்திசூடி பாடிய ஔவையார் திண்ணைப் பள்ளிக்கூடங்கள் ஏற்படத் தொடங்கிய காலமான 16ஆம் நூற்றாண்டுக்கோ 14ஆம் நூற்றாண்டுக்கோ தான் உரியவராயிருத்தல் கூடும்.



சான்றவை"[1] என்று கருதினார்.[2] தமிழரின் 'பொன் நெடுங் கணக்கு'[3] என்ற பெயருக்கு அது மிகவும் பொருத்தமானது.[4]

தொழிலால் பாணராதலின், ஔவையார் இளமையிலேயே பாட்டியற்றுவதில் மிகப் பெருந்திறமை பெற்றார். விரிந்த கல்வியால் அவர் அதை மிகவும் செப்பப்படுத்தி, தம் காலத்தவர்களாலேயே தலைசிறந்த கவிஞர் என்று பெயர் பெற்றுவிட்டார்.

தன்னைப்பற்றியே அவர் வரைந்தது வருமாறு :

'ஒளிபொருந்திய நுதல், மைதீட்டிய கண்கள், இடுப்பில் மணிகள் பதித்த மேகலையுடையவர்.[5]

அவர் வாழ்வின் மிகச்சிறந்த பகுதி தகடூர்க்கோமான் அதியமான் அஞ்சியின் அவைக்களத்திலேயே கழிந்தது. அவன் அவரை மிகவும் உயர்வாக மதித்திருந்தான். 'அதியமான் அரண்மனையின் மாடகூடங்கள் பலநாள்

1 பாபிங்டனின் செந்தமிழ் இலக்கணம் (Babington's Chentamil grammar) முன்னுரை பக்கம் 11.

2 ஸெனெக்கா இலத்தீன்மொழியின் அறிவுரைக் கவிஞர். கவிதையில் நீதிநூல் யாத்தலில் வல்லவர். இத்துறை உலக இலக்கியத்தில் அருகலானது. ஸெனக்காவன்றி, தமிழ்க்கவிஞர்களும் பாரசிகமொழியில் ஹாவீஸும் சீனமொழியில் கன்ஃபூசியஸுமே இத்துறையின் முக்கிய கவிஞராவர். இச்சிலருள்ளும் நீதிச்சிறப்புடன் கவிதைச்சிறப்பும் ஒருங்கே அமையப்பெற்றவர் மிக அரியரே என்னலாம்.

3 'பொன் நெடுங்கணக்கு' (Golden Alphapet) என்ற ஆங்கில மரபின் வழக்குத்தொடரின் பொருள் நெடுங்கணக்கு வரிசையில் எழுத்துக்களைச் சொல் முதலாகக்கொண்ட அறிவுரைத் தொகுதி என்பதே ஆகும். ஆத்திசூடி கொன்றைவேந்தன் பாடிய ஔவையார் மிகப்பிற்கால ஔவையாரானால்கூட, அந்நூல்களே உலகின் மிகப் பழமையான 'பொன் நெடுங் கணக்கு' என்பதில் ஐயமில்லை.

4 ஆசிய புத்தாராய்வுகள் (Asiatic Researches) VII பக்கம் 350 (இலண்டன் பதிப்பு.)

5 புறம், 80.

தடாரிப்பறையுடன் இணைத்து நான் பாடிய பாடல்களுக்கு எதிரொலித்ததுண்டு" என்று அவர் கூறுகிறார்.[1]

அதியமானுடன் அவர் நெருயகிங் நட்பு அவராலேயே நயம்படக் கீழ்வருமாறு தீட்டபபட்டுள்ளது.

"பெரும! சிற்றூரில் சின்னஞ்சிறுவர் தம் வெள்ளிய தந்தங்களைத் தேய்த்துக்கழுவும்படி ஆற்றில் படுத்துக் கிடக்கும் பாரிய யானையைப்போல, நீ எமக்கு இனியவனாய் இருக்கின்றாய்! ஆனால், மதங்கொண்டகாலையில் அதே யானையைப்போல நீ உன் பகைவர்களுக்குக் கொடிய அச்சந்தருபவனாயிருக்கின்றாய்"[2] என்பதே அவர் கூற்று.

ஒருகால் நீண்ட வாழ்நாள் அளிக்கும் அருஞ்சிறப்புடைய அருநெல்லிக்கனி ஒன்று அதியமானுக்கு அரும் பரிசாகக் கிட்டிற்று. அதை அவன் தான் தின்ன விரும்பவில்லை. ஔவையாருக்கே கொடுத்தான். நன்றியுணர்வுடைய புலவர் இச்செயலுக்காக அவனுக்கு நன்றி தெரிவிக்கும் பாட்டு இது:

"அஞ்சியே! அதியர்கோவே! போரில் எதிரற்றவனே! கழுத்திலே பொன்மாலையுடனும் வலிமைமிக்க கையிலே வெற்றிவாளுடனும் ஒவ்வொரு போர்க்களத்திலும் சென்று உன் எதிரிகளை நீ கொல்கிறாய்! முடிமீது வெள்ளிக்கொடி போன்ற இளம்பிறை யணிந்த நீலமிடற்றையுடைய ஒப்பற்ற தெய்வம் (சிவபெருமான்) போல நீ என்றும் சிறப்பாயாக! ஏனெனில் மலையின் எட்டா உயரத்தில் இடுக்கண்மிக்க விடரில் வளர்ந்த இனிய நெல்லி மரத்தின் கனி என்னை மறலியிடமிருந்து காக்கட்டும் என்ற எண்ணத்துடன் நீ எனக்கே அளித்துவிட்டாய்!"[3]

அதியமான் ஔவையாரை ஒருதடவை காஞ்சி மன்னன் தொண்டைமானிடம் தூதராக அனுப்பினான். பெரும்பாலும் தன் பகைவர்களுக்கெதிராக அவன் உதவி நாடியே அவன் ஔவையாரை அனுப்பியிருக்கவேண்டும்

1 புறம் 390. 2 புறம் 94. 3 புறம் 91.



என்று தோற்றுகிறது.[1] இத்தூது வெற்றிகரமாக முடிந்ததா இல்லையா என்பது தெரியவில்லை. ஆனால் சில காலங்களுக்குள்ளாகவே அதியமான் ஒரு போரில் வீழ்ந்தான் அச்சமயம் ஔவையார் பாடிய பாட்டுக்கள் மிகவும் உருக்கமானவை.

"குடிவகை கொஞ்சமாக இருந்தால், அதை அவன் எமக்கே அளித்துப் பருகும்படி செய்தான்! அது மிகுதியாயிருந்தால், அதை எங்களுடன் பகிர்ந்துகொண்டு, எங்களைப் பாடச்சொல்லிக் கேட்டு மகிழ்ந்தான்!

"எளிய உணவாயினும் பெரு விருந்தாயினும், விருந்தினர் பலருடனிருந்தே அவன் உண்பான். எலும்பும் இறைச்சியும் மிகுந்த இடங்களிலெல்லாம் அவன் எங்களை அமர்வித்தான். அம்புகளும் ஈட்டிகளும் செறிந்து நீட்டப்பட்ட இடங்களிலெல்லாம் அவன் தானே தனியனாய்ச் சென்று நின்றான். மணப்பொருள் பூசிய தன் கைகளால் அவன் என் தலையை நீவுவான்.

"அந்தோ! அவன் மார்புக்கவசம் துளைத்த ஈட்டி அதேசமயம் அவன் பாணரின் உண்கலத்தையும் துளைத்துவிட்டது! ஏழைகளை உண்பித்துப் பேணிய கைகளைத் துளைத்தது! அவன் அவைக்களத்தின் புலவர் பெருமக்களின் நாவுகளையும் துளைத்துவிட்டது!

"அவனைச்சார்ந்தோர் கண்கள் அழுதழுது ஒளி மழுங்கியுள்ளன!"

"அந்தோ! எம் அன்புக்குரிய அக்கோமான் எங்கே!

"இனிப் பாடும் புலவரும் இல்லை! பாடுபவர்க்குக் கொடுக்கும் புரவலரும் இல்லை!"

"ஆறுகளின் குளிர்ந்த நீர்க்கரைகளில் உலகுக்குப் பயனின்றி வளரும் பகன்றைப்பூக்கள் எத்தனையோ

1 புறம், 95

உண்டு. அவற்றை யாரும் எடுத்தணிவதில்லை. அத்தகைய மனிதர் உலகில் எத்தனை பேர்? "[1]

தம் புரவலனாகிய அதியமான் அஞ்சி இறந்தபின் அவர் தொண்டைநாடெங்கும் பயணம்செய்து சில ஆண்டுகளில் தகடூருக்குத் திரும்பிவந்தார். அங்கே நெடுமான் அஞ்சியின் புதல்வன் எழினி அவரை அன்புடன் வரவேற்றான். இவ் வரவேற்புப்பற்றி அவர் கூறுவதாவது:[2]

"காலையில் பனி பெய்துகொண்டிருந்தது. இளநிலா மங்கலாக ஒளிவீசிக்கொண்டிருந்தது. அச்சமயம் நான் அதியர்கோமான் எழினியின் அரண்மனை வாயிலில்போய் நின்றேன், என் கையிலிருந்த பறையை அடித்தவண்ணம் 'வாழ்க எழினி! எதிரிகளின் கோட்டைகளை முற்றுகையிட்டு அவர்கள் செழுங்கழனிகளை அழிக்கின்ற அதியர் கோமான் வாழ்க' என்று பாடினேன்.

"உடனடியாக அவன் வெளிவந்து என்னை வரவேற்றான். மாசடைந்த என் ஆடைகளை உடனே மாற்றுவித்துப் பரிசிலாகப் புத்தாடை தந்து அணியச்செய்தான். பொற்கலத்தில் ஆற்றல்மிக்க பழந்தேறலளித்தான். அது என் குருதிநாளங்களிலோடி வெறியூட்டியபின், அரசுரிமைத் தகுதியுடன் விருந்தளித்தான்."

சோழ அரசன் பெருநற்கிள்ளி இயற்றிய பெருவேள்வியை அவர் சென்று பார்வையிட்டார். அச்சமயம் உக்கிரப் பெருவழுதி, பெருநற்கிள்ளி, சேரமான் மாரிவெண்கோ ஆகிய மூவரசரையும் காணும் பேறு அவருக்குக் கிட்டிற்று. மூவரையும் அவர் வாழ்த்தி வாழ்நாள் முழுதும் நன்றே செய்யுமாறும், அது ஒன்றே அவர்களுக்கு நல்ல வருங்கால வாழ்வு தருமென்றும் கட்டுரைத்தார்.[3]

அவர் பரப்பிய தூய உயர்கொள்கை, செயல்துறை அறிவு விளக்கம் சார்ந்த உரைகளுக்கு எடுத்துக்காட்டாக

1 புறம், 235. 2 புறம், 392. 3 புறம், 367.



ஆத்திசூடி என்ற அவர் பொன்நெடுங்கணக்கின்[1] முதல் எட்டடிகளின் கருத்தையும் கீழே தருகிறோம்.[2]

1. அறத்தைச் செய்ய ஆர்வம் கொள்க.
2. சினம் அடக்கப்படவேண்டிய ஒன்று.
3. உன்னால் இயன்ற அளவு உதவியைச் செய்யாமல் இராதே.
4. இரவலருக்குக் கொடுப்பதைத் தடுக்காதே.
5. உன்னிடம் இருப்பதை வெளிப்படுத்திக் கொள்ளாதே!
6. முயற்சியைத் தளரவிடாதே!
7. எண்ணெழுத்து ஆகியவற்றின் அறிவுவகையில் ஏளனமாயிராதே!
8. இரப்பது என்பது மிகவும் வெட்கக்கேடான செயல்.

சென்னை மாகாணத் தலைமைக் கல்லூரியின்[3] தமிழ்ப் பெரும்புலவர் வீரசாமிசெட்டியார் வினோதரசமஞ்சரியில் தொகுத்துத் தந்துள்ள சுவைகரமான கதைத் துணுக்குத் திரட்டுக்களுள், ஒளவையார் அடிக்கடி கி. பி 9 அல்லது 10ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சோழ அரசன் குலோத்

1 அடிக்குறிப்பு 2, பக்கம் 360 பார்க்க.

2 ஆத்திசூடியின் முதல் எட்டு வாசகங்களின் ஆங்கில மொழி பெயர்ப்பாக மூல நூலாசிரியர் தருபவை வருமாறு:

(I) Desire to do charity.
(2) Anger should be controlled.
(3) Fail not to render what help lies in your power.
(4) Prevent not the giving of alms.
(5) Reveal not what you possess.
(6) Slacken not exertion.
(7) Neglect not numbers and letters.
(8) Begging is shameful.

3. Presidency College, Madras.

துங்கன் காலத்தவர் என்றும், ஒட்டக்கூத்தர், கம்பர், புகழேந்தி ஆகிய புகழ்மிக்க புலவர்களுடன் சமகாலத்தவர் என்றும்[1] கூறப்பட்டுள்ளது.[2] தமிழ்ப்புலவர் எழுதிய மற்ற இந்நாளைய உரைகளிலும் சுந்தரர் என்ற சிவனடியார் காலத்திலும், அவர் நண்பரும் ஆதரவாளருமான கடைசிச் சேரனான சேரமான்பெருமாள் காலத்திலும் ஔவையார் இருந்ததாகக் குறிக்கப்படுகிறார். இக்கதைகள் மிக அணிமைக்காலத்துத் தோன்றியவையே. பண்டை நூல்களிலோ உரையாசிரியர்கள் உரைகளிலோ அவற்றுக்கு ஆதாரம் இல்லை. ஆகவே இவை நம்பகமற்றவை என்று தள்ளத்தக்கவையேயாகும்.

புறநானூறு, அகநானூறு ஆகிய ஔவையாரின் பாடல்களிலிருந்தே அவர் கி. பி. 2ஆம் நூற்றாண்டில் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி காலத்தில் வாழ்ந்தவர் என்பது தெளிவாகிறது. ஆகவே இடைக்காலத்தரசரான குலோத்துங்கசோழன் அல்லது சேரமான்பெருமாள் காலத்தவராக அவர் இருந்திருக்கமுடியாது. ஆனால் இயற்கைமீறிய அருமருட்சிகளில் ஆர்வமுடைய தமிழ்ப் புலவர் இங்கும் நுண்ணறிவுத்திறம் காட்டி அவர் இளமையில் உக்கிரபாண்டியன் காலத்தவராயிருந்திருக்கக்கூடுமென்றும், ஆனால் முதுமையில் ஏழு நூற்றாண்டுகளுக்குப் பின் வாழ்ந்த குலோத்துங்கசோழன் காலத்தவராகவும் இருக்கக்கூடுமென்றும் வலியுறுத்திக் கூறுகின்றனர்!

பந்தனந்தாதி, அசதிக்கோவை என்ற இரண்டு நூல்கள் ஔவையார் இயற்றியன என்றுகுறிக்கப்படுகின்றன ஆனால், அவற்றின் இக்கால மொழிநடையே அவை பிற்காலத்தவை என்பதை வெளிப்படக்காட்டி விடுகின்றன.[3]

இடைக்காடனார் (கி. பி. 100-130): இவர் ஊசிமுறி என்ற நூலின் ஆசிரியர், இது தற்போது நமக்குக்கிட்டவில்லை. ஆனால், யாப்பருங்கலத்துக்குக் குணசாகரர் இயற்றிய உரையில் அதிலிருந்து மேற்கோள் காட்டப்பட்டுள்ளது.[1] சோழ அரசன் கிள்ளிவளவன் சேரர் தலைநகராகிய கரூரை முற்றுகையிட்ட சமயம், அவர் சோழ அரசன் படைவீட்டில் அவனைக்காணச் சென்றிருந்தார்.

சீத்தலைச்சாத்தனார் (கி. பி. 100–140): இவர் மதுரையிலுள்ள ஒரு கூலவாணிகன் புதல்வர். அவர் புத்தசமயம் சார்ந்தவர். தருக்கநூலில் தலைசிறந்த வல்லுநர். பாண்டிய அரசன் நன்மாறனை அவர் பாடிய பாட்டு வருமாறு:

"நீண்ட ஆற்றல்சான்ற கைகளையும் விலையேறிய பன்மணிமாலை துளங்கும் மார்பினையுமுடைய மாண்புமிக்க வழுதி! இணக்கநயமும் பண்பும் வாய்ந்த செயல்களில் உன்னிலும் வல்லவன் கிடையாது. போலியான எதனையும் நீ ஏற்றமையமாட்டாய். உன் எதிரிகளுக்கு நீ கடலகத்தினின்றும் எழுந்த வெங்கதிர்போல்வாய். என் போன்ற உன் குடிமக்களுக்கு நீ இன்னலமிக்க மதியத்தை ஒத்தவன்."

அவர் புகழ் தமிழின் ஐம்பெருங்காவியங்களுள் முதலாவதான மணிமேகலையையே பெரிதும் சார்ந்தது. அதுவே அவர் இயற்றிய பெருநூல். அது நிறைவண்மை மிக்க ஒரு காவியம். அழகுசான்ற பல பாடற் பகுதிகள் அதில் உள்ளன. அதில் வழங்கப்படும் சொற்றொடர்களோ ஆழ்ந்தபொருளும் சொல்நயமும் வாய்ந்தவை. இயற்கைக் காட்சிகளைத் திறம்படத்தீட்டும் நயத்திலேயே அவர் தலைசிறந்து விளங்குகிறார்.

மணிமேகலையின் பண்போவியத்தை அவர் எழில் வண்ணம்படத் தீட்டுகிறார். இளையளாயினும் ஆடல் நங்கையின் புதல்வியாயினும், அவள் சமயப்பற்று மிக்கவளாகிப் புத்தப் பெண்துறவி வாழ்க்கையை மேற்கொள்கிறாள். கட்டழகுவாய்ந்த ஓர் இளவரசனால் அவள் காதலிக்கப்பெறுகிறாள். அவனே ஆளும் அரசனின் மகன். ஆனால் அவள் தான்மேற்கொண்ட நோன்பறத்தில்

1 அடிககுறிப்பு I, பக்கம் I2 பார்க்க.

2 விநோதரசமஞ்சரி பக்கம் 57.

3 விநோதரசமஞ்சரி.

1 யாப்பருங்கலக்காரிகை.

வழுவாமல் நிற்கிருள். அதேசமயம் அறச்செருக்கின்றி, பெண்மையின் மெய்யுணர்வுடன் அவனிடம் கனிவு கொள்கிருள். தசைசார்ந்த சிற்றின்பத்திலிருந்து உயரிய திருநிலை உயிரின்பத்துக்கு அவனை உயர்த்தவும் விழை கின்ருள்.

காப்பியத்தின் இறுதி நான்கு காதைகளிலும் அந் நாளில் பொதுவழக்காயிருந்த ஆறு தத்துவக் குழுக்களைப் பற்றி அவர் விரித்துரைக்கிருர். அதில் அவர் காலத்தில் கற்றறிந்தவர்கள் வாதங்களிடையே பயின்ற தருக்க நுட்பங்களையும் அகமுகப்பட்ட கருத்துக்களின் சிக்கல் வாய்ந்த இழைகளையும் தெளிவுபட எடுத்துரைப்பதில் அவர் கைதேர்ந்தவரென்பது விளங்குகிறது. மணி மேகலையை முடித்தபின், அவர் சேரனின் தலைநகரான கருருக்குச்சென்று, அங்கே சேரன் செங்குட்டுவன், அவர் புலமைசான்ற உடன்பிறந்தார் இளங்கோ அடிகள் ஆகி யோரின் விருந்தினராக நீண்டநாள் தங்கியிருந்தார்.

இளங்கோ அடிகள் (கி. பி. 110-140): இவர் சேர அரசன் ஆதன் மகன். சோழ அரசன் கரிகாலனுக்கு, அவன் புதல்வி சோணைமூலம் பெயரன். இளமையிலேயே அவர் வாழ்வு துறந்து நிகண்டத்துறவியாயினர். துறவி யாவதற்குரிய சூழ்நிலைக் காரணங்கள் வருமாறு:

இளங்கோவும் அவர் தமையன் செங்குட்டுவனும் ஒருநாள் அவர்கள் தந்தையாரின் அரசிருக்கையின் அருகே கொலுமன்றத்தில் வீற்றிருந்தனர். அப்போது ஒருமுனிவர் சேரலாதனைக் காணவந்தார். அரசனையும் அவன் இரு புதல்வர்களையும் சிறிதுநேரம் உற்று நோக்கிய பின், மக்கள் இருவருள் இளையவரே பெருமன்னனுவதற் குரிய எல்லா மெய்யிலக்கணங்களுமுடையவர் என்று கூறினர்.

இக்குறிச்சொல் கேட்டுச்செங்குட்டுவன் சீற்றமெய்தி யதுகண்ட அவன் இளவலாகிய இளங்கோ, உடன்தானே இளவரசருக்குரிய தன் ஆடையணிகளைக் களைந்து,



அரசுரிமையை அணையக்கூடிய எல்லா ஐயுறவும் அறவே ஒழியும்படி, நிகண்டத்துறவிக்குரிய நோன்பை மேற் கொண்டார். அதுமுதல் அவர் நகரின் கீழைவாயிலின் புறத்திருந்த கோட்டமொன்றில் தங்கினர்.

மன்னுரிமைக்குரிய பொறுப்புக்கள் அனைத்தினின் றும் நீங்கியதனுல், இவர்தம் ஓய்வுநேரத்தை யெல்லாம் இலக்கியமும் இசையும் பயில்வதில் செலவிட்டார்.

பல ஆண்டுகளுக்குப்பின், சீத்தலைச் சாத்தனுர் என் னும் புலவர் சேரர் அரசவைக்கு வருகைதந்து, அவர் இயற்றிய மணிமேகலைக் காவியத்தை அவரிடம் உரைத் தருளியபோது, அரசத்துறவியாகிய அடிகள் உள்ளத்தில் மணிமேகலையின் தாய் தந்தையராகிய கோவலன், கண்ணகி வாழ்க்கை வரலாறுகளை இன்னெரு காவியமாக இயற்றும், எண்ணம் எழுந்தது. இதன்பயனுக, சீத்தலைச் சாத்தனுர் முன்னிலையிலேயே, அவர் சிலப்பதிகாரத்தை இயற்றி உரைத்தருளினர்.

நடை நயத்திலே சிலப்பதிகாரம் மணிமேகலையின் சிறப்பை அணுகியுள்ளது. ஆனல், பல்வேறு வகைப் பட்ட காட்சி வருணனைவளங்களிலும், பல்வேறு வகைப் பட்ட சமுதாயப்பிரிவுகளைப் படம் பிடித்துக்காட்டும் ஓவிய வளத்திலும் பொதுவாசகருக்கும் மாணவருக்கும் அது எத்தனையோமடங்கு சுவை மிக்கது. ஆசிரியர் இசை நாடகம் ஆகிய கலையியல்கள்பற்றிய தம்பேரறிவு முழு வதையும் அதில் கையாண்டு காட்டுகிருர். பல்வகைப் பாவினங்களிலும் அமையப்பெற்ற காதல் கலைப்பாடல் களுடன் விரவிக் காவியத்தின் அழகைப் பல்வகையாகப் பெருக்கியுள்ளார்.

கதைத்தலைவன் தலைவியர் பண்போவியங்கள் நன்கு தீட்டப்பட்டுள்ளன.

செல்வவணிகன் புதல்வனுன கோவலன் இன்பநாட்ட முடைய,கருத்தாழமற்ற இளைஞன். மிகச்சிறுவயதிலேயே அவன் இன்னலமும் நற்குணமும் வாய்ந்த ஒரு பெண்

ணுக்கு வாழ்க்கைப்படுத்தப்படுகிருன். ஆனல் இசை நாடகச் சுவையார்வம் காரணமாக அவன் பொதுவரங்கு களில் மிகுதி ஊடாடுகிருன். இதன் பயனுக அந்நாளைய மிக அழகுவாய்ந்த ஆடலணங்கின் காதலில் சிக்குகிருன். தன் செல்வமனைத்தையும் அவன் அவள்மீது கொட்டு கிருன். தன் வாழ்க்கை முறைக்கு வெட்கி அவன் தன் இளமனைவியுடன் பிறந்த பொன்னகரம்விட்டு, மதுரைக் குச் செல்கிருன். இங்கே தந்தையின் நண்பர்களான வணிகர் உதவியை நாடுவதைவிட்டு, ஓர் ஆய நங்கையின் இல்லத்தில் தங்குகிருன். தன் மனைவியின் அணிமணி களில் ஒன்றை விற்க வெளியே சென்றவன், மன்னன் காவலர்களில் ஒருவனுல் கொல்லப்படுகிருன்.

கணவன் தன்னிடம் அன்புமாறினும், அவனிடமே மாருப்பற்றுக்கொண்டவள் அவள். தன் இன்னலம் காரண மாக, அவள் அவனிடம் ஒரு சுடுசொல்கூடச் சொல்ல வில்லை. அவன் சின்னஞ்சிறு குறிப்புக்களும் அறிந்து அவன் பணியிலேயே அவள் தன்னை முழுதும் இழந்து நின்ருள். கணவன் செல்வமுற்றும் வீணுக்கியபின், அவள் புதிய நகரத்துக்குச் செல்லும்போதும், அவள் அவனைப் பின்பற்றுகிருள். அங்கே திருட்டுக் குற்றம் சாட்டிஅவன் கொல்லப்படும் சமயம், அவள் துணிவுடன் மன்னன் முன் வந்து நின்று தன் கணவன் கள்வனல்லன் என்பதைத் தெளிவுபடுத்துகிருள். இதன்பின் அவள் உள்ளம் கரை காணுத்துயரில் கலங்குகிறது. சேரநாடு செல்லும்பாதை நெடுகிலும் சென்று திரிந்து, கணவன் இறந்தபதினன்காம் நாள் மனமுடைந்து மாள்கிருள்.

அரிசில்கிழார் (கி. பி. 110—140): இவர் அதியமான் எழினியின் தலைநகரான தகடூரை வென்று கைக்கொண்ட சேர அரசன் பெருஞ்சேரலிரும்பொறையைப் புகழ்ந்து பத்துப் பாட்டுக்கள் பாடியுள்ளார், அவர் பாடல்களில் பல தகடூர் யாத்திரையிலும் இடம் பெறுகின்றன.[1]

1 தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினுர்க்கினியர் உரை.



பொன்முடியார் (கி. பி. 110 – 140): இவர் ஒரு போர்ப்பாடகர். சேர அரசன் பெருஞ்சேரலிரும்பொறை தகடூருக்கெதிராகத் தண்டெடுத்துச்சென்றபோது, அவர் சேர அரசன் படையுடன் சென்ருர். அவர் பாடல்கள் போர் வீர உணர்ச்சி நிரம்பியவை. களப்போரின் மிக உக்கிரமான காட்சிகளையும் அவர் உயிர்த்திறம்பட்ட எழுச்சி ஓவியமாகத் திட்டியுள்ளார்.)[1]

பெருங்குன்றூர் கிழார் (கி.பி. 120–150) இவர் பெருஞ் சேரலிரும்பொறையைப் புகழ்ந்து பாடியுள்ள பத்துப் பாட்டுக்கள் பதிற்றுப்பத்தில் பேணப்பட்டுள்ளன.[2]

கீழ்வரும் பட்டியலில் கி. பி. 50க்கும், கி. பி. 150க் கும் இடைப்பட்ட காலத்தில் இயற்றப்பட்ட தமிழ்ப் பாடல்களின் பெயர்களையும் ஒவ்வொன்றன் வரிகளின் எண்ணிக்கைகளையும் காணலாம்.

| | | |
|---|---|---|
| முப்பால் அல்லது குறள் | 2,660 | அடிகள் |
| மணிமேகலை | 4,857 | ,, |
| சிலப்பதிகாரம் | 4,957 | ,, |
| கலித்தொகை | 4,304 | ,, |
| இன்னுநாற்பது | 160 | ,, |
| பெருங்குறிஞ்சி | 261 | ,, |
| குறிஞ்சி (ஐங்குறுநூற்றில் கபிலர் பாடிய பகுதி) | 100 | ,, |
| திருமுருகாற்றுப்படை | 317 | ,, |
| நெடுநல்வாடை | 188 | ,, |
| பொருநராற்றுப்படை | 248 | ,, |
| பெரும்பாணுற்றுப்படை | 500 | ,, |
| பட்டினப்பாலை | 201 | ,, |
| மதுரைக்காஞ்சி | 782 | ,, |
| மலைபடுகடாம் | 583 | ,, |

1 தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினுர்க்கினியர் உரை
2 பதிற்றுப்பத்து.

| | | | | |
|---|---|---|---|---|
| பதிற்றுப்பத்து | (41—50) | ஏறத்தாழ | 150 | அடிகள். |
| ,, | (61—70) | ,, | 150 | ,, |
| ,, | (71—80) | ,, | 150 | ,, |
| ,, | (81—90) | ,, | 150 | ,, |
| புறநானூறு, அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை ஆகியவற்றினவும் அக்காலத்துக்குரியனவாகக் கொள்ளத்தக்கனவுமான 300 பாடல்கள் | | | 4,000 | |
| ஆக மொத்தம் | | | 25,118 | |

மேற்கண்ட பட்டியலிலிருந்து, கி. பி. 50க்கும் கி. பி. 150க்கும் இடைப்பட்டகாலத்தில் வாழ்ந்த கவிஞர்களின் பாடல்களாக 25,000 அடிகளுக்குமேல் இன்றும் நம்மிடையே நிலவுகின்றன. பண்டைத் தமிழர் வரலாறும் நாகரிகங்களும் ஆய்ந்துணர இவை போதிய வாய்ப்பு வளங்கள் தருவன. அவர்கள் பழக்க வழக்கங்கள், அவர்கள் சமுதாய அரசியல் நிலைகள் ஆகியவற்றின் ஓவியங்களை அவை நமக்குப் பேணித்தருகின்றன. கல்லிலோ, பித்தளையிலோ உருவாக்கினால்கூட இத்தனை அழியாத ஓவியங்களாக அவை இருக்க முடியாது என்னலாம்.

வட இந்தியாவில் வாழ்ந்த ஆரிய இனங்களின் சமயம் வரலாறு ஆகியவற்றின்மீது பேரொளி விளக்கந்தரும் பல குறிப்புக்களும் பண்டை ஆரிய ஏடுகளைப்பற்றிய குறிப்புக்களும்கூட இவ்விலக்கியத்தில் ஏராளம். நான்கு வேதங்களும் பொதுவாக 'நான்மறை' அதாவது நான்கு மறைவடக்கமான ஏடுகள் என்றழைக்கப்பட்டன. இக்குறிப்பினால், பார்ப்பனர்கள் தமிழர்களிடமிருந்து வேதங்களைப்பற்றிய செய்திகளை முற்றிலும் மறைத்துவைத்திருந்தார்கள் என்பதை அறிகிறோம்.

பார்ப்பனர்கள் நான்குமறை நூல்களுக்குரியவர்கள் என்றும் ஆறு அறிவுத்துறைகளின் புலமையுடையவர்க



ளென்றும் குறிப்பிடப்படுகிறார்கள். ஆறு துறைகள் என்பது ஆறு அங்கங்களே.[1] அவை கற்பம், நிருக்தம், சந்தசு, சோதிடம், சிட்சை, வியாகரணம் ஆகியவை.

அந்நாளில் பார்ப்பனரால் பயிலப்பட்ட இலக்கணம் இந்திரவியாகரணம். அது இப்போது நமக்குக் கிட்டவில்லை. ஆனால் அதன் அறிவே அன்று மேம்பட்ட புலமைக்கு அறிகுறியாகக் கருதப்பட்டது. அத்துடன் தமிழர் அன்று இராமாயண மகாபாரதக் கதைகளை நன்கு உணர்ந்திருந்தார்கள். அவர்களுக்குப் புத்த பிடகங்களும் நிகண்ட •ஆகமங்களும் ஆசீவகசமயக் கிளையினரின் திருநூல்களும் நன்கு பழக்கப்பட்டவையாய் இருந்தன. மெய்யுணர்வுத்துறைகள் ஆறையுங்கூட அவர்கள் அறிந்திருந்தனர். ஆனால் பாணினியின் வியாகரணம்பற்றியோ பதஞ்சலியின் யோகத்துறை கோட்பாட்டைப் பற்றியோ அவர்கள் நூல்களில் குறிப்பு எதுவும் இல்லை என்பது வியப்புக்குரியதாகும். அவை தென்னிந்தியாவில் தெரியவரவில்லையென்றோ அல்லது வட இந்தியாவிலேயே மக்களிடையே நன்கு பரவவில்லை என்றோதான் கருத வேண்டும்.

E. BOOK ..By K.Rajalingam

1 கற்பம் என்பது திருவினைகளின் முறைகள். நிருத்தம் சொல் விளக்கம். சந்தசு யாப்பியல் சோதிடம் வானநூற் குறிப்புக்கள், சிட்சை ஒலியியல்: வியாகரணம் என்பது இலக்கணம்.

# 14. அறுவகை மெய்விளக்கக் கோட்பாடுகள்

மணிமேகலை என்னும் தமிழ்க்காப்பியம் தரும் அறுவகை மெய்விளக்கக் கோட்பாடுகளின் விவரம் மிகவும் சுவையார்வம் தூண்டத்தக்கது. இந்தியாவின் பண்டைய மெய்விளக்க முறைகளாக நமக்கு வந்தெட்டியுள்ளவற்றின் விளக்க விவரங்கள் பலவற்றினுள்ளும் அதுவே காலத்தால் முந்தியது. அதேசமயம் இன்று நாம் அறிந்துள்ள ஆறு முறைகளிலிருந்து பலவகைகளில் அது வேறுபட்டதாகும்.[1]

மணிமேகலை தரும் விளக்கங்களின் சுருக்க விவரம் வருமாறு!

பொருள்களின் மெய்யியல்பை உணரும் ஆர்வத்துடன் மணிமேகலை பல்வகை மெய்விளக்கத்துறை ஆய்வுரையாளரை அணுகினாள்.

முதலில் வேதவாதியை அணுகி, அவன் கொள்கைகளை விளக்கிக் கூறும்படி கேட்டாள்.

(i) வேதவாதி கூறியதாவது :[2]

பொருள்களின் சரிநுட்பமான அறிவு (அளவை அறிவு, பிரமாணம்)[3] பத்து வகைத்துறைகளால் (அளவைகளால்) பெறப்படும்.

---

1 மணிமேகலை XXVII.

2 ஔவை சு. துரைசாமி முதல் தலைப்பை வைதிக அளவைவாதி என்று குறிக்கிறார். வேதவாதி பின்னும் வருவதனால், இது அளவைவாதியே யென்னல் வேண்டும்.

3 அறிவு விளக்கத் துறைக்குரிய துறைச் சொற்கள் இங்கே ஆங்கில மூலநூலாசிரியரால் ஆங்கிலச்சொற்களின் மொழி பெயர்ப்பாகவே தரப்பட்டுள்ளன. இடைக்காலத்தில் வழங்கிய தமிழ் நூல்களின் துறைச்



பத்து அளவைகளாவன :

1. புலனறிவு (காட்சி, காண்டல்)[1]
2. உய்த்தறிவு (கருதல், கருத்து, அனுமானம்)
3. ஒப்புமை (உவமம்)[3]
4. மேற்கோள் (ஆகமம்)[4]
5. அவாய்நிலை (குறிப்பு, அருத்தாபத்தி)[5]
6. தகுதி (இயல்பு)[6]
7. உலகுரை (மன்னுரை, மரபுரை, ஐதிகம்)[7]
8. கூடாமை (இன்மை, அபாவம்)[8]
9. மறிநிலைமெய்மை (ஒழிபு, மீட்சி)[9]
10. தொடர்பியைவு (உள்ளநெறி, எய்தியுண்டாம் நெறி)[10]

---

சொற்கள் சில தனித்தமிழாகவும் சில சமஸ்கிருதச் சொற்களாகவும் உள்ளன. ஒரோவிடத்துத் தமிழ்ச் சொற்கள் கருத்தை எளிதில் புலப்படுத்துகின்றன. ஒரோவிடத்துச் சமஸ்கிருதச் சொற்கள் அவ்வாறு உணர்த்துகின்றன. ஆனால் இரண்டும் நீண்டகாலம் உயிர்த்துடிப்புடைய அறிவு மரபிழந்து, வெறும் சொற்காடாகி இயங்கி வந்துள்ள நிலையில், இன்று மூலநூலாசிரியர் தரும் ஆங்கிலச் சொற்களும் அவற்றின் கன்மொழி பெயர்ப்புகளுமே பகுத்தறிவு விளக்கம் தந்து புது உயிர்மரபு தோற்றுவிக்கத் தக்கவை என்று கருதியே அந்த ஆங்கிலச்சொற்களின் மொழிபெயர்ப்புகளுக்கு இத் தமிழாக்கத்தில் முதலிடம் தரப்படுவதுடன், ஆங்கிலச் சொற்களும் இதனைத் தொடர்ந்த அடிக்குறிப்புக்களில் தரப்படுகின்றன. ஆயினும் மணிமேகலை முதல் நூலும், அறிஞர் ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் உரையும், பிற தமிழ் அறிவுமரபு நூல்கள், உரைகள், சமஸ்கிருத நூல், உரைகள் ஆகியவற்றில் வழங்கும் சரிநேர் பதங்களையும் கூடியமட்டும் ஒப்புமையுணர்வு கருதித் தமிழாக்கத்திலேயே பகரக்குறி வளைவுகளுக்குள்ளாகத் தருகிறேம். சில மாற்றுத் தனித்தமிழ்ச் சொற்களும் இவற்றை இணைக்கும் முறையில் முன்னே தரப்பட்டுள்ளன.

1. Perception. 2. Inferrence. 3. Comparison.
4. Authority. 5. Implication. 6. Propriety.
7. Rumour. 8. Impossibility. 9. Reversion.
10. Association.

இவற்றுள் வேதவியாதர், கிருதகோடி, ஜைமினி ஆகிய ஆசிரியர்கள் முறையே பத்தும் எட்டும் ஆறும் கொண்டனர்.[1]

## முதல் அளவை : புலன் அறிவு

சரியான புலனறிவு (காட்சியளவை) ஐவகைப்படும். அவை கண்ணால் வண்ண உரு[2] அறிதலும்; செவியால் ஓசையறிதலும்; மூக்கால்மணம் அறிதலும்; நாவாற்சுவை யறிதலும்; மெய்யால் ஊறுணர்வறிதலும் ஆகும்.

இவற்றை உணர்வதில் (உணரும்)[3] உயிர்த்திறமும், (உணர் கருவிகளான) புலன் திறமும், (உணர்வை உண்ணின்றியக்கும் உட்கருவியான) மனத்திறமும் நன்னிலையில் இருத்தல் வேண்டும். (இது பின்னணிநிலை). ஒளியின் (ஞாயிறு, திங்கள், தீ போல்வனவற்றின்) துணைவேண்டும் (இது துணைநிலை). இடஅறிவு சார்ந்த இழுக்கு நேர்தல் கூடாது. அத்துடன் தப்பெண்ணம் (தவறான கருத்து, திரிபு, விபரீதம்),[1] பொருந்தாமை (இசைவின்மை, முரண்மாறுகோள்),[2] ஐயுறவு (கவர்க்கோடல்)[3] ஆகிய இழுக்குகளும் இருத்தல் கூடாது (இந்நான்கும் வழாநிலைகள்). இவற்றின் வழியாக இடம் (தேசம்),[4] பெயர் (நாமம்),[5] இனம் (சாதி),[6] பண்பு (குணம்),[7] செய்கை (கிரியை)[8] ஆகிய (ஐந்து) கூறுகளையும் வரையறுத்துப் பொருளையறியும் அறிவு காட்சியளவை யாகும்.[9]

## இரண்டாம் அளவை : உய்த்தறிவு

உய்த்தறிவு (கருத்தளவை, அனுமானம்) என்பது ஒரு பொருளின் இயல்பை நாம் அறிய உதவும் உள உணர்வுமுறை ஆகும்.[10]

---

1 தமிழ்ச் சைவ அறிவு விளக்க நூலாகிய சிவஞான சித்தியார் இப் பத்தையும் காட்சி, கருத்து, உரை (மேற்கோள்) என்ற மூன்றிலடக்கு கிறது. இம் மூன்றனுள்ளும் இறுதிக் கூறு சமயவாதிகள் அறிவு விளக்கத் துறைப் போர்வையுட் புகுந்து புகுத்தியதே என்பது தெளிவு. பண்டைத் தமிழர் மெய்விளக்கத் துறை, கீழ்த்திசை மெய்விளக்கத்துறை ஆகியவற்றின் உயிர் மரபைக் கொன்ற கூறும் இதுவே எனலாம்.

ஜைமினி கொண்ட ஆறில் விலக்கப்பட்ட நான்கின் பெயர்கள் சுபாவம் (இயல்பு), ஐதிகம் (உலகுரை), பாரிசேடம் (மறிநிலை மெய்ம்மை அல்லது ஒழிபு), சம்பவம் (தொடர்பியைபு அல்லது உள்ள நெறி) என்பன. கிருதகொடி கொண்ட எட்டனுள் கொண்டன எவை, விலக்கியன எவை என்பதோ, அவரைப் பற்றிய வேறு விவரமோ கிட்டவில்லை என்று அறிஞர் ஔவை. சு. துரைசாமி தெரிவிக்கிறார்.

2. Colour.

3. இவ்வியலில் பகரக்குறி வளைவில்லாது வளைகுறிக்குள் தரப்படுபவை எளிமை விளக்கம் கருதித் தமிழாக்கம் தருபவையே யாகும்.



1. Prejudice 2. Incongruity. 3. Doubt.
4. Place. 5. Name. 6. Class.
7. Quality. 8. Action.

9 இடம், பெயர், இனம், பண்பு, செய்கை ஆகிய ஐந்துடன் காணும் புலனறிவைப் பொது விலக்கணம் அல்லது சவிகற்பம் என்றும், அவையின்றிக் காணும் புலனறிவைச் சிறப்பிலக்கணம் அல்லது அவிகற்பமென்றும் பின்னூலார் குறிப்பதை மணிமேகலை ஔவை சு. துரைசாமியின் உரை, சிவஞானசித்தியார் உரை முதலிய உரைகள் எடுத்துக்காட்டியுள்ளன. முன்னையது மனித அறிவும் மொழியும் சார்ந்த சுட்டறிவு மட்டுமே என்பது கூர்ந்து நோக்கத்தக்கது.

10 கண்ட பொருளினடிப்படையாகக் காணாத ஒரு பொருளைக் கண்ட பொருளில் உணரப்படும் பொது உண்மை (ஏது) வாயிலாக உணர்தல் என்ற அழகிய விளக்கம் மணிமேகலையிலும் சிவஞானசித்தியார் போன்ற நூல்களிலும் தரப்படுகின்றன.

மணிமேகலை, XXVII, அடிகள் : 39—40

"மாண்ட உயிர்முதல் மாசின்றுகிக்
காண்டற் பொருளாய் கண்டிலதுணர்தல்"

என்பது காண்க

கிரேக்கர் வாய்வியல் நூல் (Logic) அடிப்படை வாத முறைகளும் இந்நாளைய மேலையுலக வாய்வியல் நூல்களின் அடிப்படை வாதமுறைகளில் ஒன்றுமான கொண்டுகூட்டு முறை (Syllogisin) இதுவேயாகும். இதில் பொது உண்மை (ஏது) வாசகப் பெருமெய்ம்மை (Major Premise) என்றும் கண்ட உண்மை அல்லது சிறப்புஉண்மை சிறுமெய்ம்மை (Minor Premise) என்றும், முடிவு புதுமெய்ம்மை (Inference) என்றும் கூறப்படும்.

அது மூவகைப் பட்டது.

அவையாவன :

1. உடனிகழ்வு (பொது, சாமானியானுமானம்)[1]
2. பயன் (எச்சம், காரியானுமானம்)[2]
3. முதல்நிலை (முதல், காரணானுமானம்)[3]

உடனிகழ்வு அல்லது பொதுநிலை அளவையால் பொருளின் இயல்பை உணர்த்தலாவது : காட்டில் (யானை காணாதே) யானையின் பிளிறல் கேட்டுயானை உண்டென்று கொள்வதாகும்.

பயன் அல்லது எச்சநிலைமூலம் பொருளின் இயல்பு உணர்தலாவது : (மழை காணாது) வெள்ளம் கண்டு (வேறிடத்தில் சற்றுமுன்) மழை பெய்திருக்க வேண்டும் என்று உணர்வதாகும்.

முதல்நிலை அல்லது காரணமூலம் பொருளின் இயல்பு உணர்தலாவது : (மழை காணாமல்) கருமுகிலைக் கண்டு இனி மழை பெய்யும் என்று துணிதலாகும்.

காரண காரியங்கள் இறந்தகாலத்தவை, நிகழ் காலத்தவை, வருங்காலத்தவை என முக்காலத்தில் எதனில் நிகழ்ந்தாலும் அவற்றுள் காணப்படாத ஒன்றனைக் காணப்படும் ஒன்றின்வாயிலாகத்தப்பெண்ணத்துக்கு இடமின்றி (ஐயந்திரிபின்றி) உய்த்துணர்தல் உய்த்தறிவு அல்லது கருத்தளவை ஆகும்.

## மூன்றாம் அளவை முதல் பத்தாம் அளவை வரை : ஒப்புமை, மேற்கோள், அவாய்நிலை, தகுதி, உலகுரை, கூடாமை, மறிநிலைமெய்ம்மை, தொடர்பியைவு

ஒப்புமை அல்லது உவம அளவை யாவது : ஆமா (கவயமா அல்லது காட்டுமாடு) என்னும் விலங்கு ஆவைப்

1. (Inference by) Coexistence.
2. (Inference by) Effect.
3. (Inference by) Cause.



போன்றது என்றவாறு ஒப்புமையால் ஒரு பொருளை உணர்த்துதல் ஆகும்.

மேற்கோள் அல்லது ஆகம அளவையாவது : மேலுலகம், கீழுலகம் ஆகியன சான்றோர் நூலில்கூறப்பட்டிருத்தலால் உளவெனக்கொள்ளுதல் ஆகும்.

அவாய்நிலை அல்லது குறிப்பளவை (அருத்தாபத்தி) யாவது : ஆய்க்குடி என்னும் ஊர் கங்கைமீதுளது என்றபோது, அது கங்கைக்கரையில்தான் உளது (நீருக்குள் அல்ல) என்று உணர்வதாம்.

தகுதி அல்லது இயல்பளவையாவது : யானைமீதமர்ந்த ஒருவன் ஒருபொருள் (கோல்) கொடு என்று கேட்டால், (தோட்டியினையே கேட்கிறான் என்பதுணர்ந்து வேறெதுவும் தராமல் தோட்டியே தருவதாகும்.

உலகுரை அல்லது மரபளவை (ஐதிகம்) ஆவது : மக்கள் பொதுவாக (வரன் முறையாக) வழங்குவதை (நம்பி) ஏற்பது.

கூடாமை அல்லது இன்மையளவை (அபாவம் ஆவது ஒரு பொருள் இருக்கக்கூடாதென்பதறிந்து இல்லையென்று முடிவு செய்வதாம்.

மறிநிலை மெய்ம்மைஅல்லது ஒழிபளவை( மீட்சி) ஆவது இராமன் வென்றானென்றபோது மாற்றானை இராவணன் தோற்றான் என்பது உணர்வது.

தொடர்பியைபு அல்லதுஎய்தியுண்டாம் நெறியளவை (உள்ளநெறியாவது) : இரும்பின் பண்புத் திரிபால் அது காந்தமாயிற்று என்பது உணர்வது.

## அளவைவாயில் வழூக்கள் எட்டு

அளவை வாயில் வழுக்கள் (பிரமாணாபாசங்கள்)[1] எட்டு வகைப்படும்.

1. Fallacious mediums.

அவையாவன ?

1. முற்கோள்வழு (சுட்டுணர்வு)[1]
2. திரிபு (திரியக்கோடல்)[2]
3. ஐயுறவு (ஐயம்)[3]
4. தேராமுடிபு (தேராது தெளிதல்)[4]
5. கெடுபுலனுணர்வு (கண்டுணராமை)[5]
6. போலி நம்பிக்கை (இல் வழக்கு)[6]
7. உணர்ச்சி முடிபு (உணர்ந்ததை உணர்தல், மறித் துணர்வு)[7]
8. புனைவு மரபு (நினைப்பு)[8]

முற்கோள்வழு என்பது (முதற் புலனுணர்வு முடி பின்படியே) பொருளின் இயல்பு பற்றி முடிவு செய்து விடுவது.[9]

திரிபு என்பது ஒரு பொருளை மற்றொரு பொருளாகக் கொள்வது. சிப்பியை வெள்ளி என்று கொள்வது இதற்குச் சான்று

ஐயுறவு என்பது ஒரு பொருளின் இயல்பு துணிய முடியாத தயக்கநிலை. (இருளில்) காணப்படும் உரு மனிதனு குற்றிக்கட்டையா என்று துணியமாட்டாத நிலை இதற்குச் சான்று.

1. Prejudice. 2. Misconception. 3. Doubt.
4. Decision without examination.
5. Failure of perception. 6. False belief.
7. Belief in what is felt. 8. Imagination.

9 மணிமேகலை: பொருண்மை மாத்திரை காண்டல்: உரை: பொருண்மை மாத்திரம் காணும் சுட்டுணர்வு, அவற்றின் உண்மை மாத்திரம் கண்டொழிதல்: குற்றியோ மகனோ கண்ட வழி குற்றிமகன் (கட்டை அல்லது மனித உரு என்ற துணிவுணர்வு) சாணுது தோற்றமே பற்றி உளதென்னும் உண்மை மாத்திரமே கண்டொழிதல். பிற்காலத்து இது நிருவிகற்பக் காட்சி யெனப்படுவதாயிற்று.



தேராமுடிவு என்பது செண்டு, வெளியில் நிறுவப் பட்ட குத்துக்கட்டையை மனிதனென்றே துணிவது போன்றது.

கெடுபுலனுணர்வு என்பது கொடும் புலி வரவு கண்டும் அணுகல் (இடர் அறியாமை).

போலி நம்பிக்கையாவது கேள்வியடிப்படையாக உணரப்பட்ட முயற்கொம்பு போன்ற இல்பொருள் நம்பிக்கை.

உணர்ச்சி முடிபு என்பது குளிர்காய்ச்சலுக்குத் தீக் காய்தல் சுகம் தரும் என்று ஆர்வமாக நம்புவது போன்றது.

புனைவு மரபு என்பது பிறர் சொலக்கேட்டு ஒருவரை யும் ஒருத்தியையும் தந்தை தாயாரென ஏற்றமைவது போன்றது.

## அறுவகை அறிவுத்துறைகளும் அவற்றின் முதல்வர்களும்

பல்வேறு வகைப்பட்ட மெய்விளக்கத் துறைகள் ஆவன: உலோகாயதம், பௌத்தம், சாங்கியம், நையா யிகம், வைசேடிகம், மீமாம்சகம் என்பன. அவற்றின் மூலமுதல்வர்கள் முறையே பிருகற்பதி, ஜினன், கபிலர், அக்கபாதர், கணுதர், ஜைமினி ஆகியவர். இவர்களனை வரும் மேலே குறிப்பிட்ட அறிவு வகைத்துறை (அளவை) களில் பத்தில் ஆறையே கொள்வர்.

மணிமேகலை இதன்பின் (இயற்கையின்) இறைவன் ஈசனே என்று கூறும் சைவவாதியைச் சந்தித்து, அவ னிடம் அவன் தெய்வத்தின் இயல்பினை விளக்கும்படி கோரினுள்.

## சைவவாதி, வைணவவாதி, வேதப்பார்ப்பனவாதி

(ii) சைவவாதி கூறியதாவது:

“ சிவபெருமான் (வெங்கதிரோன், தண்கதிரோன் என்ற) இரண்டு ஒளி மணிகளையும் உயிர்களையும் ஐம்

பூதங்களையும் இயக்கி ஆளுகின்றார். உடலுடன் உயிரைக் கூட்டுவிப்பவரும் இந்த உலகைத் தம் திருவிளையாட்டாக ஆக்கி இயக்குபவரும் அவரே அவர் உருவம் ஒளிக்கதிர்களாலானது. அழித்தொழிக்கும் திறத்தால் துன்பங்கள் யாவற்றையும் அகற்றும் வல்லமையுடையவர் அவர். அவரன்றி எதுவும் இல்லை. அவரே எம் கடவுள்" என்றான் சைவவாதி.

(iii) பிரமவாதி கூறியதாவது:

" இயலுலகமுழுவதும் ஒரு தெய்வம் இட்ட முட்டையாகும்."

(iv) திருமால் நெறியினர் கூறியதாவது:[1]

"உலக முழுவதையும் பேணிக்காப்பவர் நாராயணர்"

(v) வேதப் பார்ப்பான் உரைத்ததாவது:

" வேதம் கற்பத்தைக் கைகளாகவும், சந்தசைக்கால்களாகவும், சோதிடத்தைக் கண்களாகவும், நிருத்தத்தைக் காதுகளாகவும், சிட்சையை மூக்காகவும், வியாகரணத்தை முகமாகவும் கொண்டது. அது தானே தோன்றிய தன்மையையுடையது. அது ஆதியும் அந்தமும் அற்றது."

## ஆசீவக சமயம்

இக் கூற்றுக்களில் உண்மையில்லை என்பதையும், உண்மையென்று உலகம் ஏற்றுக்கொள்ளவில்லை என்பதையும் மணிமேகலை கண்டாள். அவள் இதன்பின் ஆசீவக சமய ஆய்வுரையாளரை அடுத்து, அவர் தெய்வம் பற்றியும் அவர் திருநூல்கள் கூறும் மெய்யுரைகள் பற்றியும் கூறும்படி கேட்டாள்.

(vi) ஆசீவகவாதி கூறியதாவது:

எல்லையற்ற இயலுலகில் எப்பொருளுடனும் என்றும் இடைவிடாது இணைந்து நிற்கின்ற முதற் பேரறிவுப் பொருளே கடவுள்.

1. இந்நூல் பக். 373 அடிக்குறிப்பு 1 பார்க்க.



எம் திருநூல் கூறுகிறபடி, மூலக்கூறுகள் ஐந்து.

அவையாவன:

உயிர்நிலை (ஆன்மா). முக்காலத்திலும் இயலும் நால்வகை அணுக்கள் ஆகியவை.

இவ்வணுக்கள் ஒன்றுடனொன்று கூடுவன, ஒன்றிலிருந்து ஒன்று பிரிவன ஆன்மா இவற்றைக் காண்பதும் உணர்வதும் இதனாலேயே.

நால்வகை அணுக்களாவன:

நிலம், புனல், அனல், உலவை.

இவையே திரட்சியுற்று மலைகளாகின்றன. மரங்களாகின்றன. உயிர்களின் உடல்களாகின்றன.

இவையே பிரிந்து நெகிழ்வுற்று விரிந்து அகலிடமாகப் பரவுகின்றன.

இவற்றைக் கண்டுணர்வது ஆன்மா.

நில அணுக்கள் திரண்டுருண்டு திட்பமுற்று நிலவுலகமாகின்றன. நீரணுக்கள் பளுவுடையன. குளிர் அடைந்து நிலத்தின் மீது படிகின்றன. உலவையின் அணுக்கள் விரிந்து பரந்து இயங்குகின்றன.

தனிச் சூழல் நிலைகளிடையே இவை வேறு வேறு நிகழ்ச்சியுருக்களாகத் திரிபுறலாம்.

என்றுமுள்ளனவாகிய இந்த அணுக்கள் ஒருபோதும் அழிவதில்லை. ஒருபோதும் புதிதாகப் பிறப்பதும் இல்லை. அதுமட்டுமன்றி, ஓர் அணு மற்றோர் அணுவுக்குள் புகுவது என்பதும் இல்லை.

ஒரு நீரணு நிலவணுவாக மாறமுடியாது. ஓர் அணு இரண்டாகப் பிளவு படவும் முடியாது. உருமாறித் தட்டையாகவும் முடியாது.

அவற்றின் மாறுதலெல்லாம், இயக்கம், உயர்தல், தாழ்தல் ஆகியவையே.

செறிவுற்றபோது அவை பாரிய மலையாகலாம். பிரிவுற்றபோது அவை அணுக்களாக அகலிடத்தில் பரவலாம். வயிரமாக அவை திண் செறிவுறலாம். மூங்கில் போல உள்ளே பொள்ளலாகலாம்.

பேரளவான உருக்களாக அவை திரளும்போது, அவை (ஒன்றுடனொன்று) கூடுதல் குறைவீதமாகவோ, சமமாகவோ இருக்கலாம். அல்லது ஒன்றே முழுமையாகவோ, ஒன்றுடனொன்று முக்கால், அரை, கால் என்ற வீதமாகவோ அமையலாம். ஒவ்வொரு பொருள் திரளும் அதில் அதில் அடங்கியுள்ள மிகப் பெரும்பான்மை அணு வகைகளை ஒட்டிப் பெயர் அடைகின்றன.

இப்பண்புகள் அவற்றினிடம் இல்லையென்றால் அவை நிலம்போலத் திட்பமாகவும், நீர்போல ஒழுகலாகவும், அனல் போல எரிவதாகவும், உலவைபோல உலவுவதாகவும் இயங்க முடியாது.

தெய்விக ஆற்றல்வாய்ந்த கண்கள் உடையவரன்றி வேறு எவரும் தனியணுக்களைக் காணமுடியாது. அரை யிருளில் மக்கள் ஒரு தனி மயிரைக் காணமுடியாது. ஆயினும் அந்நிலையிலும் ஒரு மயிர்க்கற்றையைக்காணமுடியும். அதுபோலவே பருவுடலுடையோர் தனியணுவைக் காண முடியாது. (அணுத்திரளையே காணமுடியும்.)

ஆன்மாக்கள் ஆறு வண்ணங்களுடைய உடம்புகளில் பிறக்கின்றன. அவ் வண்ணங்கள் கருமை, நீலம், பசுமை, செம்மை, பொன்மை, வெண்மை என்பன. தூய வெண்ணிற உடலில் பிறந்தபோதே ஆன்மாக்கள் விடுதலை பெற்றுப் பேரின்பம் எய்தமுடியும் விடுதலை பெறாத உயிர்கள் சக்கரத்தில் சுழலும் பகுதிகள் போலப் பிறப்பின் படிமுறைகளில் கீழிறங்கி ஏறி உழலும்.

ஆதாயம் அடைவது, இழப்புறுவது; தோல்வியடைவது, வெற்றி பெறுவது; இன்ப துன்பங்கள் உணர்வது; கூடுவது, கூட்டிற் பிரிவது; பிறப்பது, இறப்பது



ஆகிய இத்தனையும் உடல் கருக்கொண்டபோதே ஊழ்த் திற உரிமைப்பட்டுவிடுகின்றன.

இன்பமும் துன்பமும்கூட என்றுமுள்ள அணுக்களே என்று கொள்ளப்படவேண்டியவை. அவை பிற்பட உணரப்பட்ட முற்பட்ட செயல்களின் விளைவுகளன்றி வேறன்று.

'மற்கலி'யின் திருநூல் விளக்கிக் கூறுபவை இவை.

இச்சொற் குளறுபடியை விட்டகன்று மணிமேகலை நிகண்டவாதியை அணுகி, அவன் கடவுள் யார், அவன் திருநூல்களில் கூறப்படுபவை யாவை, பொருள்கள் இயங்குவது, தோற்றுவது, அழிவது பற்றிய அவர்களுடைய சரியான விளக்கம் எது என்று கேட்டாள்

(vii) நிகண்டவாதி கூறியதாவது:

இந்திரர் வணங்கும் கடவுள் எம் கடவுள்.

அவர் அருளிச் செய்த திருநூல்கள் கீழ்வருவனவற்றை விளக்குகின்றன.

அற ஆழி;[1] அற ஆழியின் ஆரம்;[2] காலம்; விசும்பு; ஆன்மா; என்றுமுள்ள அணுக்கள்; நல்வினை; தீவினை; இரு வினைகளால் ஏற்படும் கட்டு; அக் கட்டுக்களிலிருந்து விடுவிப்பளிக்கும் விடுதலை ஆகியவை.

பொருள்கள் தங்கள் இயல் தன்மையினாலோ, தம்முடன்தொடக்குடைய பிறபொருள்களின் தன்மைகாரணமாகவோ, நிலையற்ற தன்மையுடையன அல்லது நிலைபேறுடையனவாகின்றன. அவை கணம் (நொடி) என்னும் மிகக் குறுகிய காலக்கூற்றுக்குள்ளாக, தோற்றம், நிலை, ஒடுக்கமெனும் விலக்கமுடியாத முந்நிலைகளையும் எய்த

1. The Wheel of Law. இது மணிமேகலை மூலத்தின் தன்மாத்திகாயத்துக்குச் சரியான பொருள்.
2. The Axle of Law. இது மணிமேகலை மூலத்தின் அதன்மாத்திகாயந்துக்குச் சரியான பொருள்.

லாம். வேம்பு முளைத்து வளர்கிறது என்பது என்று முள்ளது ஆகும். அப் பண்பு அதற்கு இன்மை நிலையற்றது. பயறு மற்றப் பொருள்களுடன் கூடிக் கும்மாயமாவதனால் அது தன் இயல்பிழத்தலில்லை; ஆனால் அது அவ் வடிவம் இழக்கின்றது.

அறவாழி எங்கும் நிறைந்தது; எல்லாப் பொருள்களையும் ஒழுங்குபட இயக்குவது. இடைவிடாது என்றும் இயங்குவது.

இதுபோலவே அறவாழி ஆரம் எல்லாவற்றையும் பேணுவது (அழிவு தடுப்பது).

காலம் என்பது கணங்களாக வகுக்கப்படக்கூடியது; ஊழிகளாக நீளக் கூடியது.

விசும்பு விரிவுற்று எல்லாவற்றுக்கும் இடமளிப்பது.

உடலுட்புகுந்துள்ள ஆன்மா ஐம்பொறிகள்மூலம் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற உணர்வுகள் பெறும்.

அணு ஓர் உடலும் ஆகலாம். வேறு வடிவங்களும் மேற்கொள்ளலாகும்.

வீடு அல்லது விடுதலை அதாவது பெருநிலை[1] என்பது நல்வினை, தீவினைகளின் தோற்றம் அறுத்து, சென்றகால வினைப்பயன் அடைந்தபின் அதன் மூலம் எல்லாக் கட்டுக்களிலிருந்தும் அறுபட்டு அடையும் விடுதலையேயாகும்.

(viii) இதன்பின் சாங்கியமுறையின் ஆய்வுரையாளர் கூறியதாவது :

சாங்கிய முறைக் கோட்பாடு

மூல முதற்பொருள் மூலப்பிரகிருதி என்பது.

அது அறியப்படாதது, மனத்தால் சிறிதும் பாதிக்கப் படாதது; வீறுமிக்கது; எங்கும் அடங்கிய முக்குணங்

1. Salvation.



களை[1] உடையது. எல்லாப் பொருள்களின் மூலமுதல் அதுவே.

இம்மூலப் பிரகிருதியிலிருந்து உணர்வு[2] பிறக்கிறது. அதனின்று விசும்பும், அதனின்று உலவையும், அதனின்று அனலும், அதனின்று புனலும், அதனின்று நிலமும், இவற்றின் இணைவால் மனமும் பிறக்கின்றன. மற்றும் விசும்பிலிருந்து செவிவழி ஓசையுணர்வும்; மெய்வழி உலவையிலிருந்து ஊறுணர்வும்; அனலிலிருந்து விழிவழி ஒளி உணர்வும், புனலிலிருந்து வாய்வழி சுவையுணர்வும்: நிலத்திலிருந்து மூக்குவழி மண உணர்வும் பிறக்கின்றன. மேலும் (பருநிலைப்) பூதங்களின் கூட்டுறவிலிருந்து மலைகள், மரங்கள் முதலான உலகப் பொருள்கள் உண்டாகின்றன.

உலக வாழ்வில், இவை தோன்றும்; ஒடுங்கும். கடைப் பேரூழிவரை அவை அகல்வெளியில் தொடர்ந்து பெருக்கமடையும்.

ஆன்மா (புருஷன்) அறிதற்கெளிதானவன். புலனுணர்வாற்றலும் உணர்வும் உடையவன். ஆனால் முக்குணமற்றவன், புலனுணர்வுப் பொறிகள் அற்றவன். தானே எதுவும் உண்டுபண்ணுதற்கியலாதவன்.

தத்துவங்கள் 21. அவை யாவன; நிலம், புனல், அனல், உலவை, விசும்பு, மெய், வாய், விழி, மூக்கு, செவி, சுவை, ஒளி, ஊறு, ஓசை, மணம், நா, கை, குதம்,[3] குய்யம்[4]; மனம்,[5] அறிவு,[6] சித்தம்,[7] மூவப்பிரகிருதி,[8] ஆன்மா[9]

1 முக்குணங்களாவன : தூய்மை அல்லது நலம் (சத்துவம்); உணர்வெழுச்சி அல்லது செயல் (ரஜஸ்); இருள் அல்லது மௌட்டிய நிலை (தமஸ்).

2. Intelligence, புத்தி.
3. Anus.
4. Genitals.
5. Mind.
6. Intelligence.
7. Self consciousness.
8. Original Producer.
9. Soul.

(சாங்கிய முறையின்) குற்றமற்ற இவ்விளக்கம் கேட்ட பின் மணிமேகலை, வைசேடிக ஆய்வுரையாளனை அணுகி அவன் விளக்கம் கோரினாள்.

(ix) வைசேடிகன் உரைத்ததாவது:

(பொருள் இனங்கள்) ஆறு வகைப்படும்.

அவை யாவன :

1. முதற் பொருள் (திரவியம்)
2. குணம்.
3. தொழில்.
4. பொதுவகை (சாமானியம்).
5. தனித்தன்மை (சிறப்பு, விசேடம்)
6. செறிவு (கூட்டம், சமவாயம்)

இவற்றுள் முதற்பொருளே குணமும் தொழிலும் உடையதாய், பொருள்கள் எல்லாவற்றுக்கும் மூலமாயுள்ளது.

அது ஒன்பது வகைப்படும்.

அவையாவன :

1. நிலம்.
2. புனல்.
3. அனல்.
4. உலவை.
5. விசும்பு.
6. இடம்.
7. காலம்.
8. ஆன்மா.
9. மனம்.

இவற்றுள் நிலத்துக்கு ஐந்து குணங்கள் உண்டு. ஓசை, ஊறு, நிறம், சுவை, நாற்றம். மற்ற நான்குக்கும்



(புனல், அனல், உலவை, விசும்பு) ஆகியவற்றுக்கு (வரிசை முறையே ஒன்றன்பின் ஒன்றாக) ஒவ்வொரு பண்பு குறைபடும்.[1] அதாவது, புனலுக்கு ஓசை, ஊறு நிறம், சுவை ஆகிய நான்கும்; அனலுக்கு ஓசை, ஊறு, நிறம் ஆகிய மூன்றும்; உலவைக்கு ஓசை, ஊறு ஆகிய இரண்டும்; விசும்புக்கு ஓசை என்ற ஒன்றுமட்டும் உண்டு.

இவற்றின் கூட்டுத் திரளான பொருள்களுக்கு ஓசை, ஊறு, நிறம், மணம், சுவை, பெருமை, சிறுமை, கடுமை, மென்மை, நன்மை, கயமை, உருவம், இடம் ஆகிய பல்வகைப் பண்புகள் உண்டு.

தொழில் பொருளாலும் பொருளின் பண்புகளாலும் உண்டாகிறது.

வகை தொகைகளில் உச்சத்தொகுதி உண்மை அல்லது மெய்ந்நிலை ஆகும்.

அசைவும் ஓய்வும் பொருள்களின் பொதுப் பண்புகளாதலால், இருப்பும் அழிவும் பொருள்களுக்கு இயல்பாம்.

தனித்தன்மை அணுக்களில் அமைந்துள்ளது. செறிவு என்பது பொருளுக்கும் குணத்துக்கும் இடையேயுள்ள தொடர்பு ஆகும்.

மணிமேகலை இதனையடுத்துப் பூதவாதியை அணுகி அவன் விளக்கம் கேட்டாள்.

## பூதவாதம்

(X) பூதவாதி கூறியதாவது:

வெல்லத்தையும் தாதகிப்பூவையும்[2] வேறுசில சரக்குகளுடன் சேர்ப்பதால் மதுவெறி உண்டாதல் போல,

---

1. அவ்வை குறளின் குறட்பா ஒன்று இக்கருத்தைக் குறிக்கிறது.
'நிலமைந்து, நீர்நான்கு, நீடங்கி மூன்றே
உலவை இரண்டு, ஒன்று விண்.'

2. Bauhinia - Racemosa என்ற மேலை அறிவியல் துறைப் பெயர் உடைய செடிவகை.

மூலப்பொருள்கள் (பூதங்கள்)[1] கலக்கும்போது (உடலாக உருவாகும்போது) உயிருணர்வு[2] உண்டாகிறது. முரசு உடைந்தபோது அதன் ஓசையும் அழிவது போலவே (உடம்பில் அடங்கிய) மூலப்பொருள்கள் பிரிவுற்றபோது உயிருணர்வும் அழிகிறது. உயிருடன் இணைந்திருக்கும் போது உணர்வுடைய பூதங்கள், உயிரிலிருந்து பிரிக்கப் பட்டபோது உணர்வு இல்லாதனவாகின்றன. தத்தமக் குரிய பூதங்களுடன் அவை இணைகின்றன. இது உண்மைக் கோட்பாடாகும்.

உலோகாயதரின் கொள்கையும் சிறுசிறு வேறுபாடு களுடன் இதுவேயாகும்.

புலன்களால் காணப்படுவது தவிர, மனத்தால் காணப்படுவன எவையும் இல்லாதனவேயாகும்.

உலகமும் அதன் காரணகாரியங்களும் இந்த உலகில் உள்ளனவே. நம் வினைகளின் பயனை இன்னொரு உலகில் நுகர்கிறோம் என்பது பொய் ஆகும்.

இங்ஙனம் (I) வேதஅளவைவாதம் அல்லது மீமாம்சை, (II) ஆசீவகம், நிகண்டவாதம் என்ற மறுப்புச் சமயக் கிளைகளை [3] உள்ளிட்ட நையாயிகம்; (III) சாங்கியம்; (IV) வைசேடிகம்; (V) பூதவாதம் அல்லது உலோகாயதம் ஆகிய மெய்விளக்கத் துறைகள் ஐந்தின் ஆய்வுரை ஆசான்களிடமும் விளக்கங் கேட்டபின், பௌத்தநெறிக் கொள்கையையும் உணரும் ஆர்வத்துடன் மாண்புடைய புத்தத் துறவியரிடம் சென்றாள்.

## புத்தவாத விளக்கம்

புத்த துறவியிடம் மணிமேகலை கூறியதாவது:

"நான் மெய்விளக்கத் துறைகள் ஐந்தும் கேட்டேன். அவற்றுள் எதுவும் பிழையற்றதென்று எனக்குத் தோற்றவில்லை. அவற்றுள் எதனிலும் என்மனம் பற்ற

1. Elements. 2. Coniscousness. 3. Schisms.



வில்லை. ஆகவே, மாட்சிமையுடைய துறவுப் பெரியீர், மெய்ந்நெறியை எனக்குப் போதித்தருளும்படி கோரு கிறேன்," என்றாள்.

"அப்படியே கற்பிக்கிறேன். கவனமுடன் கேட்க!" என்று கூறித் துறவி தமது விளக்கம் தொடங்கினார்.

## இரண்டு வாயில்கள் (அளவைகள்)

"ஆதி சினேந்திரன் அருளியபடி, மெய்ப்பொரு ளறிவதற்குரிய வாயில் (அளவை)கள் இரண்டே. அவை நற்புலனுணர்வு (நற்காட்சி, உய்த்துணர்வு (கருத்து) ஆகியவை.

## உய்த்துணர் விலக்கணம்

புலனுணர்வு என்பது (புலன்கள் வாயிலாகக் காணப் படும்) அறிவுணர்வு என விளக்கப்படுகிறது. (பொருளின்) பெயர், இனம், குணம், தொழில் முதலியன உய்த்துணர் வால் (உணரப்பட்டு) எழுவன. காரண காரியங்களை அறுதி செய்வதிலோ, பொது உய்த்துணர்வு முடிவுகள் செய்வதிலோ நாம் பிழைபடலாம். ஆனால் தீயினின்று புகை என்பதுபோலப் பயனை உய்த்துணர்வது பிழையற்ற முடிபே. மெய் அறிவு பெறுதற்குரிய மற்ற எல்லா வாயில் களும் உண்மையில் ஒழுங்குமுறை வழுவிய உய்த்துணர்வு முறைகளே.

## உய்த்துணர்வுக்குரிய ஐந்து உறுப்புகள்

உய்த்துணர்வு வாதம்[1] ஒவ்வொன்றிலும் ஐந்து உறுப்புக்கள் உண்டு. அவையாவன:

1. முனைபுரை (ஒருதலையுரை, பக்கம், மேற்கோள்)[2]
2. காரணம் (ஏது)[3]
3. சான்றுரை (எடுத்துக்காட்டு, திட்டாந்தம்)[4]

1. Inference or Syllogism. 2. Assertion.
3. Reason. 4. Example.

4. ஒப்புமை (உபநயம்)[1]

5. தேற்றம் (தரவு, உய்த்துணர் முடிவு, நிகமனம்)[2]

'இம்மலை தீயுடையது'—இது முனைபுரை.

'புகையுடைத்தாதலினால்!'—இது காரணம்.

'அட்டிலின் நெருப்புப்போல'—இது சான்றுரை.

'இம்மலையும் புகையுடைத்து'—இது ஒப்புமை

'புகையுடையதாதலினால், இது நெருப்புடையதே'—இது தேற்றம்.

## காரணத் தொடர்பு இலக்கணம்

முனைபுரையில் மறிநிலையும்[3] உண்டு. 'தீயுடையது அல்லாத எதுவும் புகையுடையதா யிராது' என்பது அதற்கு எடுத்துக்காட்டு.

ஒரு காரியத்தின் காரணம் சரியானதா என்பதைக் கூர்ந்தாயும் வகை வருமாறு:

'ஓசை என்று முள்ளதன்று' என்பது ஒரு முனைபுரை.

'அது உண்டுபண்ணப்படுவது' என்பது காரணம்.

'குடம்போல உண்டுபண்ணப்படுவது எதுவும் என்று முள்ளதாகாது' என்பது சான்றுரை.

## தவறான காரணத் தொடர்பு

சரியான காரணமில்லாத தேற்ற முடிவுக்கு எடுத்துக்காட்டு வருமாறு:

'இவ்வகல்வெளியில் குடம் (எதுவும்) இல்லை'—இது முனைபுரை.

'அது காணப்படாததனால்!'—இது காரணம்.

1. Comparison. 2. Deduction. 3. Negative.



'முயலுக்குக் கொம்பில்லாததால், நாம் அதைப் பார்ப்பதில்லை'—இது சான்றுரை.

'உள்ளது எதுவும், உள்ளங்கை நெல்லிக்கனிபோலக் காணத்தக்கதாகவே இருக்கும்' இது மறிநிலைச் சான்றுக்கு[1] எடுத்துக்காட்டு.

## புத்தசமயக் கோட்பாடுகளின் அடிப்படை.

காரணம் இம்மாதிரி நிலைநாட்டக் கூடியதாக இருத்தல் இன்றியமையாதது. புலமையாற் சான்றுபட்டது யாதெனக் கேள்வி எழுப்பப்பட்டால், அதற்குரிய விடை இதுவே: 'புகையுள்ளவிடத்துத் தீ உண்டு' என்ற தொடர்புடன் இணைவாகவே[2] 'புகையில்லாத விடத்துத் தீயுமில்லை' என்ற மறிநிலைச் சான்றும் பெறப்படுதலால், புகையெழுச்சி இவ்விடத்தில் கட்டாயக் காரணமான தீயைத் தேற்றுவிக்கிறது. புகையின் மேலெழுச்சியும் சுழற்சியும் தீயின் பயனையாகும். இதனாலேயே கரும் புகை எழுச்சி (அதன் காரணமான) தீயைக் குறித்துக் காட்டுவதா யமைகிறது.

இங்ஙனம் காரண அறுதியில்லாத இடத்திய வெற்றுத் தொடர்பிணைவு ஒரு மெய்ம்மையைத் தேற்றுவிப்பதாகக் கொள்ளமுடியாது. எடுத்துக்காட்டாக ஒருவன் ஓரிடத்தில் ஒரு சமயத்தில் ஒரு கழுதையையும் கணிகையையும் ஒன்றாகக் காண்பதனால் மட்டுமே இன்னொரு தறுவாயில் ஒரு கழுதையைமட்டும் கண்டு, கணிகையும் உள்ளாள் என்று உய்த்துணர்தல் தகாது. இது பிழைபாடு என்பது வெளிப்படை

இதுபோலவே 'தீயில்லாதவிடத்துப் புகையும் இல்லை' என்ற மாற்றுமறிநிலை மட்டும் இருந்தால் கூட மெய்த்தேற்றம் தோன்றாது. எடுத்துக்காட்டாக இவ் வாதத்தைக் கூறலாம். கழுதையின் பின்புறம் நாய் வாலில்லை. அதுபோலவே நரிவாலும் இல்லை. இதனை

1. Negative example. 2. By the Concomitance.

அடிப்படையாகக் கொண்டு பிறிதோரிடத்து நிரிவா விருப்பக் கண்டு நாய்வாலும் வருவித்தல் தவறு ஆதல் காணலாம்.

## மணிமேகலை ஆசிரியர் ஏற்ற உறுப்பு மூன்றே

ஒப்புமையும் தேற்றமும் சான்றுக்கு உட்பட்டவையே யாகும்.[1] அத்துடன் முனைபுரை, காரணம், சான்று ஆகிய மூன்றும்கூடப் பிழையற்றனவாகவும் அமையலாம். பிழை பட்டனவாகவும் அமையலாம்.

## முனைபுரை இலக்கணம்

(வாசகங்களில் குறித்த அல்லது சுட்டிய பொருளை விளக்க விரித்து அல்லது சார்த்திக் கூறும்) சார்த்துரை[2]

---

1. ஔவை துரைசாமி அவர்களின் விளக்கவுரைப் பகுதி இவ்விடத்தில் தெளிவு தருவதாகும். "இந் நூலாசிரியர் காலத்தே அளவை நூலார் பக்கம் (= முனைபுரை) முதலிய ஐந்தனையும் மேற்கொண்டொழுகினரென் றும்; அவற்றுள் உபநயமும் நிகமனமும் (= ஒப்புமையும் தேற்றமும்) திட்டாந்தத்தில் (= சான்றுரையில்) அடங்குமென்றும்; எனவேதாம் மேற் கொள்வன பக்கம் முதலிய மூன்றுமே என்றும் இதுகாறும் கூறியவாற்ருற் பெறப்படும்" என்றவாறு காண்க. மேலும் மணிமேகலை நூலுரையே சமஸ் கிருதத்தில் திங்நாகர் முதலிய தருக்க நூலார் இக் கருத்தை மேற்கொள்ளு தற்கு மூலகாரணமாய் இருந்ததென்பதையும் உரைகாரராகிய ஔவை துரை சாமி யவர்கள் தெற்றென எடுத்துக் காட்டியுள்ளனர். (அவர் விளக்கவுரை, மணிமேகலை XXIX, அடிகள் 109-110இன் கீழ்க் காண்க.

2. குறித்துரை அல்லது சுட்டு (Subject) என்பது கூற்றுக்கு முதலாக அமைந்த சுட்டுப்பொருள். இது இலக்கணத்தில் எழுவாயாகப் பெரிதும் அமைவதனால், அது ஆங்கில வழக்கில் எழுவாய் என்ற சொல்லாலேயே குறிக்கப்படும். இப்பொருள் பற்றி வாசகம் கூறும் சார்த்துரையும் இதற்கியையப் பயனிலை (Predicate) என்ற சொல்லால் குறிக்கப்பெறு கின்றது. சமஸ்கிருத தருக்க நூலார் இதனை அறிபொருள் அல்லது அறியப் படுவது (சுட்டு, ஞேயம்) அறிவு (சார்த்துரை, ஞானம்) என இரண்டாக்கி, இரண்டையும் அறியும் உயிரை அறிபவர் (ஞாதுரு) என வழங்கினர்.



திட்பமும்[1] வரையறையும்[2] உடையதாய் இருத்தல் (சரியான உய்த்துணர்வுக்கு) இன்றியமையாதது.

எடுத்துக்காட்டாக, ஓசை என்றுமுள்ளது அல்லது என்றுமுள்ளதல்லாதது, என்றவிடத்தில், குறித்துரை அல்லது சுட்டு[3] 'ஓசை' என்பதே. 'என்றுமுள்ளது அல்லது என்று முள்ளது அல்லாதது' என்பதே சார்த்துரை.[4]

## காரண இலக்கணம்

சரியான காரணம் மூவகைப்பட்டது. அது முனைபுரை சார்ந்து அதனை அடிப்படையாகக் கொண்டு இயங்கலாம். இரண்டாவதாக, அது இணைவுரை[5] சார்ந்ததாகலாம். அல்லது மறிநிலையுரை[6] சார்ந்ததாகலாம். அது இணைவுரை சார்ந்ததாயின், இணைவு முழுநிறை தொடர்பிணைவு[7] உடையதாதல் வேண்டும்.

எடுத்துக்காட்டாக, 'ஓசை என்றுமுள்ள தல்லாதது' என்ற வாசகத்தை முனைபுரைப்படுத்துவதாக வைத்துக் கொள்வோம். (இணைவுரை மூலமான காரணத் தொடர்பு) குடம்போல என்றுமுள்ள தல்லாதது என்னலாம். அது

---

1. Distinct. 2. Well-defined.

3. Subject (குறித்துரை, சுட்டு); இது மணிமேகலை நூலிலும் உரையிலும் 'தன்மி' என்று குறிக்கப்படுகிறது. தன்மம் (தர்மம்) என்பது குணம், இயல்பு (ஒ. நோ தமிழ் : தன்மை) தன்மத்தையுடையதாகக் குறிக்கப்படும் குறித்துரைக்கு இது வழங்கப்பட்டது.

4. Predicate (சார்த்துரை): இது மணிமேகலை நூலில் சாத்திய தன்மம் என்று குறிக்கப்படுகிறது. உரை சாதித்தற்குப் பொருந்திய தன்மம் என இதை விளக்குகிறது.

5. Analogy (இணைவுரை): முனைபுரை மணிமேகலையில் பக்கம் என்றும் இது சபக்கம் என்றுங் கூறப்பட்டது.

6. Negative (மறிநிலை : முனைபுரை மணிமேகலையில் பக்கம் என்றும் இணைவுரை சபக்கம் என்றுங் கூறப்பட்டதற்கிணங்க, இது விபக்கம் எனப்பட்டது

7. Perfect similitude.

ஒரு மறிநிலை வாசகம் சார்ந்ததானால், வாசகம் இவ்வாறாகலாம். 'என்றுமுள்ள பொருள் எதுவும், விசும்பைப்போல, இயற்றப்படாத ஒன்று ஆகும்.' செய்யப்படுவது, செய்யப்படும்போது புதிதாகத் தோற்றுவது என்பது என்றுமுள்ளதல்லாத தன்மைக்குரிய நேரான காரணம் ஆகும். இது முனைபுரை, இணைவுரை, மறிநிலை ஆகிய மூன்றுக்குமே பொருந்தும்

## ஒப்புமை இலக்கணம்

சரியான ஒப்புமை இருவகைப்படும். அது நேர்நிலையாய்[1] இருக்கலாம். மறிநிலையாய்[2] இருக்கலாம்.' நேர்நிலை வகைக்கு எடுத்துக்காட்டு, "என்றுமுள்ளதல்லாத பண்பு எப்போதும் குடம் போன்றவற்றுடன் இணைவுடையது" என்பது. மறிநிலைவகை காரணம் (ஏது) இல்லாதபோது பயன் (பயனிலை அல்லது குறித்துரை) என்பதும் கிடையாது என்று காட்டுவதாகும். (வாதங்களில்) இவை பிழையற்ற முன்கூற்று வாசகங்கள்[3] ஆகும்.[4]

பொருள்களின் இயல்பு பற்றிய சரியான அறிவு கைவரப்பெறும் வகைதுறைகளை விளக்கியபின், புத்த மடத்துத் தலைவர் புத்தர் பெருமானின் கோட்பாடுகளை விரித்துரைக்கத் தொடங்கினார்.

புத்தர்பெருமானின் கோட்பாடுகள் வருமாறு :

முன்னொருகால்,(இவ்வுலகில்)புலனறிவுடைய உயிர்களிடையே மெய்யறிவுத்திறம் முற்றிலும் இல்லாதிருந்த சமயத்தில் மணிமுடியணிந்த தேவர் வேண்டுகோள்களுக்கிணங்கி (அழகுடையோனாகிய) வாமன் (உயர் மண்டலங்களிலுள்ள) துஷித லோகத்திலிருந்து (இந்த உலகுக்கு)

1. Positive. 2. Negative. 3. Premises.

4 பிழைபாடான முனைபுரை, காரணம். பிழைபட்ட சான்றுகள் ஆகியவற்றை மணிமேகலை இன்னும் விளக்க விரிவாக எடுத்துரைக்கிறது. அவை தனி நுணுக்கத்துறை சார்ந்தவையாதலால் பொது வாசகருக்குச் சுவைபட்டனவாகா என்று கருதி அவை இங்கே விடப்பட்டுள்ளன. (மணிமேகலை XXIX. 143-473 காண்க).



வந்தார். போதி மரத்தடியிலமர்ந்த வண்ணம் (மருட்சியூட்டும் தீயோனாகிய) மாரனை வென்று, குற்ற மூன்றும் அகற்றி, அதன்பின் (சென்ற ஊழிகளில்) எண்ணற்ற புத்தர்களால் நிறையருளுடன் எடுத்துரைக்கப்பட்ட வீட்டுநெறி பற்றிய மெய்ம்மைகளை ஓதினார்.

பன்னிரண்டு காரணங்கள் (நிதானங்கள்)[1] (பிறப்புச்சுழலுக்கு வழி வகுக்கின்றன. அவை ஒன்றினின்று ஒன்று தோன்றி, முறையே ஒன்றன்பின் ஒன்றாக ஒடுங்குபவை. தோன்றியபடியே அவை ஒடுங்கும் தன்மையுடையவை. ஒன்று மறைய அதன் முன்னுள்ளதும் மறையும். ஒன்று தோன்ற அதன்பின்னதும் தோன்றும்.

(சங்கிலித்தொடர் போன்ற) இத்தொடரில் (மண்டலம்)[2] நான்கு கோவைகள் (கண்டங்கள்)[3] உண்டு. மூன்று இணைப்புக்கள் (சந்தி)[4] உண்டு அது மூவகைப்பிறப்புக்கு வழி வகுக்கிறது. அப்பிறப்புக்களுக்கு இசைவாகக் காலத்தின் மூன்று பிரிவுகளும்[5] உண்டு. இந்த(ச் சங்கிலி)த் தொடரிலிருந்தே நம் குற்றங்கள்,[6] செயல்கள், செயல் விளைவுகள்[7] உண்டாகின்றன.

இச் சுழல் எப்போதும் இயங்கிக்கொண்டேயிருப்பது என்பதையும்; இது நன்மை எதையும் தருவதில்லை, துன்பத்துக்கே கொண்டு செல்வது என்பதையும் நாம் உணர்ந்துகொண்டால், நமக்கு உய்தி (வீடுபேறு)[8] உறுதி.

நான்கு உண்மைகள் (வாய்மைகள்)[9] அது சார்ந்து இயல்கின்றன, அந்நான்கும் நான்கு கூட்டுக்களை(ஸ்கந்தங்கள்)[10] அடிப்படையாகக் கொண்டவை. அதனை அறுவகைக் கூற்றுமுறையாக (வழக்கு முகம்)[11] வகுக்கலாம்.

1. Causes. 2. Cycles. 3. Parts.
4. Links. 5. Division of time.
6. Defects 7. Results of deeds.
8. Salvation. 9. Truths. 10. Aggregates.
11. Modes of expression.

அதனால் விளையும் நற்பயன்கள் (பயன்கள்)[1] நான்கு. இந் நற்பயன்கள் உண்டாவதற்குக் கருவியான (மனத்தின்) நற்பண்புகள் (நயங்கள்)[2] நான்கு. அதுபற்றிய விளக்கம் நாடும் கேள்விகளும் நான்கு வகைப்பட்டவையே.

அது தொடக்கமும் (நின்மிதி)[3] முடிவும் (ஊழ்பாடு)[4] இல்லாதது. தொடர்ச்சியாக நடைபெறுவது, இடையறுதது. அதைப் படைப்பவருமில்லை, அது எக்காலத்திலேனும் படைக்கப்பட்டதும் அல்ல. அதில் 'நான்', 'எனது' என்ற எக்கருத்தும் இல்லை. அதில் மிகையும் இழப்பதும் எதுவும் கிடையாது. அது தானாக முடிவுறுவதுமன்று, முடிவுக்கு (யாராலும் அல்லது எதனாலும்) கொண்டுவரப்படுவதுமன்று. எல்லாச் செயல்களும் செயல் விளைவுகளும்; பிறப்பும் விடுதலையும்; எவ்வகைப்பட்ட (மாறுதல்கள்) யாவும் அது தானாகவே இயக்குபவை ஆகும்.

## காரணங்கள் பன்னிரண்டு

மடமை (பேதைமை),[5] செயல் (செய்கை),[6] தன்னுணர்வு (உணர்வு),[7] பெயருரு, (அருவுரு),[8] புலன்கள் (வாயில்கள்),[9] தொடர்பு (ஊறு),[10] புலனுணர்வு (நுகர்வு),[11] அவா(வேட்கை),[12] பற்று,[13] வாழ்வு(பவம்)[14] பிறப்பு (தோற்றம்), செயல்[15] விளைவு [வினைப்பயன்],[16] இவையே பன்னிரண்டு காரண அமைதிகள் [நிதானங்கள்],[17] பிறப்புற்றவர்கள் அல்லது மாந்தர் (இப் பன்னிரண்டையும்) உணர்ந்தால், அவர்கள் பேரின்பம்

1. Benefits. 2. Excellent Qualities.
3. Beginning. 4. End. 5. Ignorance.
6. Action. 7. Consciousness.
8. Name and from. 9. The sensse. 10. Contact.
11. Sensation 12. Desire. 13. Attachment.
14. Existence. 15. Birth.
16. Result of Deeds. 17. Causes.



பெறுவார்கள். (அவற்றை) உணராவிடில், கீழ் உலகங்களில் சென்று பெருந்துயர் உறுவார்கள்.

## முதற் காரணம் : மடமை

மேற்கூறியவற்றை (பன்னிரண்டு காரணங்களை) அறியாதிருத்தலும்; அந்த மனமயக்கத்தால் புலன்கள் மூலம் காணத்தக்க இயற்கை நிலைகளை மறந்து செயலாற்றுதலும்; முயற்கொம்பு முதலியவற்றை (இது போன்ற பொய்ப்புனைவுகளை)க் கேள்வியால் நம்பி உளங்கொள்ளுதலும் ஆகிய இவையே மடமை ஆகும்.

## இரண்டாம் காரணம் : செயல்

மூவுலகிலுள்ள எண்ணற்ற உயிரினங்கள் ஆறு வகைகளுட்படுவன.

அவையே மனிதர் [மக்கள்],[1] தேவர்[2], நல்தெய்வங்கள் [பிரமர்],[3] நரகர்,[4] விலங்குகள்,[5] பேய்கள்[6] ஆகியவை.

அவ்வவற்றின் நல்வினை தீவினைகளுக்கேற்ப இவை பிறக்கின்றன. கருவிலுருவான காலமுதல் அவை உரிய காலத்தில் இன்பதுன்பங்கள் நுகர்கின்றன. இந்நுகர்வு அவை முன் சேமித்து வைத்துள்ள அவற்றவற்றின் வினைப்பயனின் (கர்மத்தின்) தொகுதிக்கு இணங்கியதாய் இருக்கும்.

தீவினை என்றால் என்ன ?

தேர்ந்தெடுத்த வளையணிந்த நங்கையே (மணிமேகலையே), கேட்பாயாக !

கொலை,[7] களவு[8] காமம்[9] ஆகிய மூன்றும் அமைதியற்ற இவ் வுடல் சார்ந்த தீவினைகள் ஆகும்.

1. Men. 2. Gods. 3. Good spirits.
4. Infernal beings. 5. Beasts. 6. Ghosts.
7. Killing. 8. Theft. 9. Adultery.

பொய்,[1] இகழுரை [குறளை][2] வசவு [கடுஞ்சொல்][3], வீணுரையாடல் [பயனில்லா சொல்][4] ஆகிய நான்கும் வாய்மொழியினால் [சொல்லினால்][5] ஏற்படும் தீவினைகள் ஆகும்.

ஆவல் [வெஃகல்],[6] வன்மம் [வெகுளல்],[7] ஓவா ஐயுறவு [பொல்லாக் காட்சி, குற்றம்பட உணர்தல்][8] ஆகியவை உளம் சார்ந்த தீவினைகள்.

(வினைப்பயனை அறியும்) அறிவுடைய நல்லோர்கள் இந்தப் பத்துத்தீவினைகளையும் விலக்குவார்கள். இவற்றை விலக்காதவர்கள் விலங்குகளாகவும், பேய்களாவும், நாகர்களாகவும் பிறந்து துயருழப்பார்கள்.

நல்வினைகள் என்பவை யாவை ?

அவை வருமாறு :

மேற்கூறிய பத்துத் தீவினைகளையும் விலக்குதல்;[9] தூநலங்களை [சீலங்களை]ப் பின்பற்றுதல்;[10] ஈகையறம் நோற்றல் [தானம் தலைநிற்றல்].[11]

இந்த நல்வினைகளைச் செய்பவர்கள் தேவர், மக்கள், பிரமர் என்ற மூவகை உயர் பிறவிகளில் பிறந்து தத்தம் நல்வினைகளுக்கேற்றபடி இன்பங்களை நுகர்வர்.

### மூன்றும் காரணம் : உணர்வு

தன்னுணர்வு உறங்குபவர் உள்ளத்தின் கருத்து நிலையில் உள்ளது. அது பொறிகளால் பாதிக்கப்படாதது.

---

1. Lying. 2. Slander. 3. Abuse.
4. Vain Conversation. 5. Speech.
6. Covetousness. 7. Malice.
8. Scepticism. 9. To avoid the 10 sins.
10. To observe the rules of purity.
11. To practise charity.



### நான்காம் காரணம் : பெயர்உரு

பெயரும் உருவும் [அருவுரு] அத்தன்னுணர்வு நிலையில் ஒருவர் உடலுயிர்களின் கருத்திலிருந்து எழுவன.

### ஆறும் காரணம் : வாயில்கள் ஆறு

வாயில்கள் ஆறு,[1] என்பன உணர்வு மீது புறப் பொருள்களின் செய்தி அறிவிக்கும் புலனுறுப்புக்கள் ஆகும்.

### பிற காரணங்கள்

தொடர்பு [ஊறு][2] என்பது புலன்வழியாக உணர்வு புறப்பொருள்களை அணுகுதல் ஆகும்.

புலனுணர்வு [நுகர்வு][3] என்பது புறப்பொருள்களால் உணர்வுமீது ஏற்படும் உணர்ச்சிச் சுவடு.[4]

வேட்கை என்பது[5] (ஒரு குறிப்பிட்ட) புலனூற்றில் இன்னும் மிகுதியான அளவு வேண்டுமென்ற அவா.

பற்று என்பது[6] வேட்கையினால் உண்டாகும் பிணிப்பு [பசைவு; பசையிய அறிவு][7] ஆகும்.

வாழ்வு [பவம், பிறவி][8] எனப்படுவது நாம் நடத்தும் வாழ்க்கை. அது பற்றினால் கவர்ச்சியுறப் பெற்ற[9] நம் உணர்வில் எழும் செய்கைகளின் மொத்தத் தொகுதி[10] ஆகும்.

பிறப்பு[11] என்பது முன்வினைப்பயனாக[12] உறுப்புணர்வோடு கூடிய உடம்பின் தோற்றம்[13] ஆகும்.

---

1. Gates or senses. 2. Contact. 3. Sensation.
4. Feeling created in consciousness. 5. Desire.
6. Attachment. 7. Bond. 8. Existence.
9. Drawn by attachment.
10. Being the sum of our deeds of consciousness.
11. Birth. 12. As effect of former deeds.
13. Appearance in an organised body.

## 12ஆம் காரணம் செயல் விளைவு

பிணி[1] எனப்படுவது உடலின் இயற்கை நிலை அல்லது உடல் நலம் தளர்வுற்று, உடலில் நோவு உண்டாவது. மூப்பு என்பது நீண்ட வாழ்நாளின் பின் உடலில் எழும் தளர்ச்சி; சாக்காடு என்பது பெயரும் உருவும் தாங்கிய உடலின் கூட்டுக் கலைவுடன்[2] ஞாயிறு படுவது போல அது மறையும் நிலை ஆகும்.

மடமையினின்று செயல் தோன்றுகிறது.
செயலினின்று உணர்வு பிறக்கிறது.
உணர்வினின்று பெயர், உருத் தோன்றுகின்றன.
பெயர், உருவினின்று பொறிபுலன்கள் எழுகின்றன.
பொறிபுலன்களிலிருந்து தொடர்பு உண்டாகிறது.
தொடர்பிலிருந்து புலனுணர்வு உண்டாகிறது.
புலனுணர்விலிருந்து வேட்கை தோன்றுகிறது.
வேட்கையிலிருந்து பற்று எழுகிறது,
பற்றிலிருந்து வாழ்வு உண்டாகிறது.
வாழ்விலிருந்து பிறப்பிறப்புத் தொடர் சுழல்
ஏற்படுகிறது.

பிறப்பிலிருந்து மூப்பு, பிணி, சாக்காடு, துன்பம் [அவலம்], அழுகை [அரற்று], கவலை, மனமுறிவு [கையாறு] ஆகியவை தொடரும்.

இம் முறையே பற்று ஓயாது சுழற்சியுறும் செயல் (எதிர்செயல்) வட்டத்தை இயக்கிவிடுகின்றது.

மடமை அழிய, செயல் ஓயும்.
செயல் ஓய, உணர்வு அவியும்.
உணர்வு அவிய, பெயர், உருக் கெடும்.
பெயர், உருக் கெட, பொறிபுலன் மாயும்.
பொறிபுலன் மாய, தொடர்பு சாயும்.

1. Diseases.
2. Dissolution.



தொடர்பு சாய, புலனுணர்வு அழியும்.
புலனுணர்வு அழிய, வேட்கை அறும்.
வேட்கை அற, பற்று இலதாகும்.
பற்று இலதாக, வாழ்வு நீங்கும்.
வாழ்வு நீங்க, பிறப்புத் தொடர்பறும்.

பிறப்புத் தொடர்பற, பிணி, மூப்பு, சாக்காடு, துன்பம், அழுகை, கவலை, மனமுறிவு முதலிய முடிவுறுந் துன்பங்கள் ஒழியும்,

இம் முறையே உய்தி[1]. [மீட்சி].[2]

மடமையும் செயலும் மீந்தவற்றின் காரணமாதலின் இவை முதற்கோவை (கண்டம்)[3] ஆகின்றன.

உணர்வு, பெயருரு, பொறிபுலன், தொடர்பு, புலனுணர்வு ஆகியவை முந்தியவற்றின் உடனடி விளைவுகளாதலால், இவை இரண்டாவது கோவை ஆகின்றன

வேட்கை, பற்று, வாழ்வு ஆகியன புலனுணர்வின் தீயவிளைவுகளாதலால், இவை மூன்றாவது கோவை ஆகும்.

பிறப்புடன் அதனைத் தொடரும் பிணி மூப்புச் சாக்காடு ஆகியவையே நான்காவது கோவை ஆகும்.

செயலும் உணர்வும் முதல் இணைப்பு [சந்தி] ஆகும். சரியானபடி உணரப்பட்டால், புலனுணர்வும் வேட்கையுமே இரண்டாம் இணைப்பு. நல்வினை தீவினைகள் (அதாவது வாழ்வு) தொடங்கிப் பிறப்பிறப்புக்கள் வரை மூன்றாவது இணைப்பு ஆகும்.

பிறப்பு மூவகைப்படும்.

அவையாவன:

1. Salvation.
2 இதனுடன் மகாவக்க (Mahavagga) I: 1, 2 கீழ்த்திசைத் திரு ஏடுகள் (Sacred Books of the East) ஏடு XIII ஒப்பிட்டு நோக்குக.
3. Khanda or Section.

உணர்வுடைய, ஆனால் (புற) உருவற்ற பிறப்பு; உணர்வு அற்ற, ஆனால் உருவுடைய பிறப்பு; உணர்வும் உருவும் ஒருங்கே உடைய பிறப்பு. இவையே முறையே மனிதப் பிறப்பு. தெய்வப் பிறப்பு, விலங்குப் பிறப்பு என்பன ஆகும்.

## காலம் மூன்று

காலத்தின் முக்கூறுகளாவன:

இறந்தகாலம்: இது மடமை, செயல் (என்ற படிகளை) உட்கொண்டதென்று கூறலாம்.

நிகழ்காலம்: இது உணர்வு, பெயருரு, பொறிபுலன்கள், தொடர்பு, புலனுணர்வு, வேட்கை, பற்று, வாழ்வு, பிறப்பு ஆகியவற்றை உள்ளடக்கியதென்று கூறலாம்.

எதிர்காலம்: இது பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு, துன்பம், அழுகை, கவலை, மனமுறிவு ஆகியவற்றை உள்ளடக்கியதென்று கூறலாம்.

## குற்றங்கள் முதலியன

குற்றங்களாவன: வேட்கை, பற்று, மடமை.

செய்கையும் வாழ்வும் நம் (நல்வினை, தீவினை ஆகிய) செயல்களின் தொகுதி ஆகும்.

உணர்வு, பெயருரு, பொறிபுலன்கள், தொடர்பு, புலனுணர்வு, பிறப்பு, பிணி மூப்புச் சாக்காடு ஆகியவை (நம் செயல்களின்) இயல்பான வினைப்பயன்கள் ஆகும்.

மேற்கூறப்பட்ட குற்றங்கள், செயல்கள், வினைப் பயன்கள் ஆகியவற்றுக்கு ஆட்பட்டு அவலமுறும் உணர்வுடைய உயிர்கள் நிலையிலாதன[1] ஆகும். எந்த உயிரும் அழியா)[2] உயிர்நிலை (ஆன்மா)[3] உடையது அன்று.[4]

1. Temporary. 2. Immortal. 3. Soul.

4. அழியா உயிர்நிலை என்பதே ஆன்மா. 'எப் பொருளுக்கும் ஆன்மா இல்லை' என்பதே இந்த வாசகத்திற்கீடான மணிமேகலை வரி (மணிமேகலை XXX, அடி 177).



இவற்றை உணர்தல் (இவற்றின் செயலுணர்வு பெறல்) உய்தி ஆகும்.

## நோய், நோய்க் காரணம்

நோய்கள் நான்காவன; உணர்வு, பெயர்உரு, பொறிபுலன்கள், தொடர்பு, புலனுணர்வு, பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு, துன்பம், அழுகை, கவலை, மனமுறிவு என்பன.

இந் நோய்களுக்கான காரணங்கள் மடமை, செயல், வேட்கை, பற்று, வாழ்வு என்பன.

## நான்கு மெய்ம்மைகள்

பிறப்புத் துன்பமயமானது. பற்று அதன் காரணம். வீடு (உய்தி) இன்பமயமானது. பற்றின்மை அதன் காரணம். இவையே நான்கு மெய்ம்மைகள்.

## ஐங்கந்தங்கள்

உருவம் [உறுப்பமைவுடைய உடல்], புலனுணர்வு [நுகர்ச்சி], புலன்குறிப்பு [குறிப்பு],[1] பகுப்புணர்வு [பாவனை],[2] உணர்வு [உள்ள அறிவு][3] இவையே ஐங் தொகுதிகள் [கந்தங்கள், ஸ்கந்தங்கள்][4] ஆகும்.

## அறுவகை வழக்கு

அறுவகை உரைகள் [வழக்கு][5] கீழ்வருமாறு விளக்கப்படலாகும்.

சொற்கள் தொகுதி [தொகை],[6] தொடர்ச்சி,[7] பண்பு மிகை [தன்மை மிகுத்துரை],[8] பகுப்பு [இயைந்துரை].[9]

அவை உள்ளனவும் இல்லாதனவும் குறிப்பன.

1. Perception. 2. Discrimination.
3. Consciousness. 4. The Five Aggregates (Skandhas)
5. Modes of Expression. 6. Collection.
7. Continuance. 8. Excess of Quality.
9. Division.

உள்ளனவற்றைப் பற்றிய வாய்மை, இல்லாதன வற்றைப் பற்றிய பொய்ம்மை; உள்ளனவற்றைப் பற்றிய பொய்ம்மை, இல்லாதனவற்றைப் பற்றிய மெய்ம்மை என அவை நால்வகை.

உடம்பு, நீர், நாடு என்பன (போன்ற சொற்கள்) தொகுதி உணர்த்துவன.

நெல் (என்ற சொல்) அதன் தானியம், கதிர், தாள் முதலியவற்றுக்கு வழங்குவது ஒரு தொடர் நிகழ்வுப் பொருளை உணர்த்துவதாகும்.

ஓய்வு, தோற்றம், வளர்ச்சி (ஆகிய சொற்கள்) (ஒரு பொருளில் பல வளர்ச்சிப் படிகளில் உள்ள) பண்பு மிகுதியைக் குறிக்கின்றன.

பல எழுத்துக்கள் (தொகுதியாக) ஒரு சொல் என்று குறிக்கப்படும்பொழுதோ, பல நாட்களை ஒரு மாதமாகக் குறிக்கப்படும்போதோ பகுப்புப்பொருள் சுட்டப்படுகிறது.

உணர்வுரை யாவது இருப்பது.

இன்மை அல்லது இல்லாமை முயற்கொம்பு போல்வது

உணர்வு உளஞ்சார்ந்தது என்ற வாசகத்தில் இருப்பது பற்றிய உண்மை உரை. மனம் மின்னல் வெட்டுப்போலப் பாய்ந்து உண்டாகின்றது என்பது இருப்பது பற்றிய பொய்யுரை. காரணமறியாமல் ஒரு பொருள் இருப்பதாக மட்டும் கூறுவது இல்லாதது பற்றிய உண்மையுரை. முயலுக்குக் கொம்பு இல்லாததனாலேயே அது காணப்படவில்லை என்ற கூற்று இல்லாதது பற்றிய உண்மையுரை ஆகும்.

மனஞ்சார்ந்த நான்கு நற்கூறுகள் [நயங்கள்],[1] உண்டு. அவை மனத்தால் உணரப்படும். இசைவு

1. Four Excellent Faculties of the Mind.



[ஒற்றுமை],[1] இசைவின்மை [வேற்றுமை],[2] செயலின்மை [புரிவின்மை],[3] செயல் [இயல்பு][4] என்பன.

பொருள்களின் காரண காரியங்களின் இசைவை உணர்வது இசைவு. அவற்றைத் தனித்தனியாக உணர்வது இசைவின்மை. நிலையான பொருள்களிலும் நிலையற்ற பொருள்களிலும் பயன் விளைவிக்கும் முதற் காரணத்தை மனம் உணரமுடியாதென்று கூறுவது செயலின்மை ஆகும். அரிசியின் முளை அரிசியிலிருந்து தோற்றுகிறது என்றல் செயல் காண்டலாகும்.

## நற்பேறுகள் நான்கு

“நற்பேறுகள் [கொள்பயன்கள்][5] ஆவன!

i. உலகம் பல பொருள்களின் தொகுதி[6] யல்லது வேறன்று என்று அறிவது.

ii. அவற்றில் பற்றுக்கொள்வது நன்றன்றென உணர்வது.

iii. உலகுக்குப் படைப்பவனுடன் எத்தகைய தொடர்பும் கிடையாதென்றறிவது.

iv. ஒரு காரியம் அதன் உடனடிக் காரணத்தி லிருந்து [எய்து காரணத்திலிருந்து] தோற்றுகிறதென்றுணர்வது.

## வினு விடை நான்கு

“வினுக்களுக்கு நான்கு வகையாக விடையிறுக்கப் படலாகும்:

i. துணிந்து விடைபகரல்;

ii. கூறுபடுத்தி விடைபகரல்;

iii. எதிர்வினு விடுத்தல்;

iv. வாளாதிருத்தல்.

1. Agreement.
2. Non-agreement.
3. Non-action.
4. Action.
5. Four Benefits.
6. Concretion.

'தோற்றுகின்ற ஒரு பொருள் மறையுமா மறையாதா?'' என்ற கேள்விக்கு, துணிந்த விடை 'மறையும்' என்பது. 'மாண்ட மனிதன் மீண்டும் பிறப்பானா?' என்ற கேள்விக்கு, 'அவன் பற்று முழுவதும் விடுத்து விட்டானா, இல்லையா?'' என்பது விடையாகும் (அவன் பற்றற்றவனானால் திரும்பிப் பிறக்கமாட்டானென்பதும், பற்றுடையவனானால் பிறப்பானென்பதும் குறிப்பு]. 'எது முந்தியது, முட்டையா பனையா?'' என்று கேட்கப்பட்டால், 'எப்பனைக்கு எம்முட்டை,' என்று விடையிறுக்கப்பட வேண்டும் 'வானத்து மலர் (கற்பனைப் போலி') பழையதா, புதியதா!' என்று கேட்கப்படின் விடைதரப்பட வேண்டியதில்லை.[1]

''பற்று, வீடு ஆகியவற்றின் முதற்காரணத்தை விளக்கும் தகுதி யாருக்கும் கிடையாது. (நாம் அறிந்த வரை) மேற்குறிப்பிட்ட எல்லாவற்றின் உடனடிக் காரணம் இன்ப அவா, சீற்றம், மனமருட்சி ஆகியவையே.

''நம் உடல் நிலையற்றது, துன்பமுடையது, ஆன்மா அற்றது, மாசுடையது என்றுணர்வதாலேயே இன்ப அவாவை அகற்றமுடியும். சீற்றம் இதுபோல் முற்றிலும் அடக்கப்பட வேண்டுமானால் அன்பு, அருள், இரக்கம் ஆகியவை பேணப்படல் வேண்டும்.

''(அறவுரைகளைக்) கவனமாகக் கேள். ஆர்வத்துடன் அவற்றை ஆழ்ந்து நினை. உணர்ச்சியுடன் அவற்றை நடைமுறைப்படுத்து, எல்லா மருட்சியும் அகலும்படியாக அவற்றின் உண்மையை உணர். (மேற்குறிப்பிட்ட) நான்கு வழிகளிலும் உன் உள்ளத்தில் ஒளியூட்டு.''

இந்தியாவின் மெய்விளக்க முறைகளின் முழு விளக்கங்களுள்ளும் தற்போது மிகவும் மக்களிடையே

1 ''மலுங்கன் புத்தரிடம், 'உலகத் தோற்றம் நிலவரமானதா, நிலையற்றதா?' என்று கேட்டபோது, புத்தர் விடை ஏதும் தரவில்லை. ஆனால் இதற்குக் காரணம் இவ் வாதம் பயனற்றதென்று அறமுதல்வர் நினைத்ததேயாகும்.''

ஹார்டி : புத்த சமயக் கையேடு. மலுங்க சுத்த : பக். 375.



வழங்குவது சர்வதர்சன சங்கிரகமே. இதன் ஆசிரியர் சமயச் சீர்திருத்தப் பெரியாரான மாத்துவாச்சாரியார் அது 14 ஆம் நூற்றாண்டில், புத்த உலோகாயத முறைகள் இந்தியாவில் கிட்டத்தட்டத் தடமற்றுப் போனபின் இயற்றப்பட்டது. ஆகவே அது ஆறு மெய்விளக்க முறைகளைக் கீழ்வருமாறு குறிக்கிறது.

i. பூர்வமீமாம்சை,
ii. உத்தரமீமாம்சை அல்லது வேதாந்தம்.
iii. சாங்கியம்.
iv. யோகம்.
v. நியாயம்.
vi. வைசேடிகம்.

ஐரோப்பாவிலுள்ள கீழைக் கலையாராய்ச்சியாளர் இந்தச் சர்வ தர்சன சங்கிரகத்தைப் பின்பற்றிப் புத்த நெறியையும் உலோகாயதத்தையும் இந்து சமயத்திற்குப் புறம்பான முறைகளாக[1] ஒதுக்கியுள்ளனர்.[2] ஆனால் மணிமேகலை மேற்கோளுடன் தரப்பட்ட மேற்கண்ட சுருக்க விளக்கத்திலிருந்து கிறிஸ்துவ ஆண்டு முறையின் தொடக்க நூற்றாண்டுகளில் இந்தியாவில் நடப்பில் இருந்த ஆறு மெய்விளக்க முறைகள் உலோகாயதம், பௌத்தம், சாங்கியம், நியாயம், வைசேடிகம், மீமாம்சம் என்பவையே என்று காண்டல் கூடும். இவையே ஆறு முறைகளாகத் தொடக்கத்தில் வகுத்துணரப்பட்டவை.

ஆயினும் மேற்கண்ட ஆறுமுறைகளின் கோட்பாடுகளையும் சுருக்கமாகக் கூறுமிடத்தில் மணிமேகலை நியாயம் பற்றி எதுவும் கூறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அதனிடமாக அது ஆஜீவக, நிகண்ட முறைகளையே தருகின்றது. பழைய நியாயமுறைக்கு அந்நாளைய பெயருரிமையுடையவையாக அவையே இயங்கியிருக்கக்கூடும்

1. Non-Hindu Systems.
2 இந்துமதம் : ஸர் மானியர் வில்லியம்ஸ்.

என்று கருதலாம். ஆசீவகரும் நிகண்டரும் மகதப் பேரரசன் அசோகன் ஆட்சியில் பெருக்கமாக இருந்திருக்க வேண்டும். ஏனென்றால் அவர் செதுக்கிய தூணங்களில் அவர்கள் குறிக்கப்பட்டுள்ளார்கள்.

தற்போது ஐரோப்பாவில் நடப்பிலிருக்கிற எல்லா மெய்விளக்கத்துறை ஆராய்ச்சி முறைகளின் கூறுகளுக்கும் சரியிணையான கூறுகள் பண்டை இந்திய மெய்விளக்கத் துறைகளில் காணப்படுவது வரலாற்று மாணவர்களுக்கு வியப்பூட்டும் செய்தியேயாகும். உயிர் என்பது பருப்பொருளின் ஒரு குறிப்பிட்ட விழுக்காட்டிணைவே என்றும், ஆன்மா என்ற ஒன்றோ (மாள்வுக்குப் பின்னைய) எதிர்கால வாழ்வு என்ற ஒன்றோ இல்லை என்றும், தற்போதைய வாழ்வுக்குப் புறம்பாக எவரும் எதைப்பற்றியும் கவலைப்பட வேண்டியதில்லை என்றும் வற்புறுத்திக் கூறும் உலோகாயதம் தற்காலப் பொருளியல்வாதியின்[1] 'அறிவியல் கோட்பாட்'[2]டுடன் முற்றிலும் பொருந்துவதாகும்.

முதற்காரணத்தை[3] விளக்கும் தகுதியுடையவர் எவருமில்லையென்றும், வாழ்க்கை என்பது இடையறுத் துன்பமென்றும் போதிக்கும் புத்தநெறி தற்கால மறைபொருள் மறுப்புவாதம்,[4] துன்பவாதம்[5] ஆகியவற்றின் இணைவே.

பொருள் முதலாகிய ஒரு முதற்காரணத்தை ஏற்று, படைப்புக்குரிய அறிவுடை முதற்பொருள் மறுக்கும் சாங்கியம் தற்காலத்திய கடவுள் மறுப்புக் கோட்பாட்டுடன் மிகவும் பொருந்துவதாகும்.

பருப்பொருள், உயிர்நிலை, கடவுள் ஆகிய மூன்றும் நிலைபெறு மெய்ம்மைகள் என்று கூறும் நியாயம் கிட்டத்தட்டத் தற்காலக் கடவுள் வாதத்துடன் ஒப்பானதாகும்.

1. Materialism.
2. Scientific Creed.
3. First Cause.
4. Agnosticism.
5. Pessimism.



கடவுளைப்பற்றிக் குறிப்பிடாமல், இயலுலகு நிலைபேறுடைய அணுக்களாலும் முக்காலத்துக்குமுரிய எங்கும் நிறைந்த ஓர் ஆன்மாவினாலும் ஆக்கப்பட்டுள்ளது என்று கூறும் வைசேடிகம் தற்கால இயற்கைவாதம், அணுவாதம் ஆகியவற்றின் கூட்டிணைவு ஆகும்.

மீமாம்சையில் மெய்விளக்க ஆராய்ச்சி மிகச்சிறிதே. அது வேதங்களின் மேற்கோளையே வலியுறுத்துகிறது. இது விவிலிய நூலில் பற்றுறுதிகொண்டு அஃது ஒன்றே அருள்வெளிப்பட்ட சமயம் என்றுகொள்ளும் கிறிஸ்துவக் கோவிலிடத்தின் மெய்விளக்கத் துறை கோட்பாட்டுடன் ஒப்புடையதாகும்.

இந்திய ஆராய்ச்சி வாதமுறைக்கு எடுத்துக் காட்டாக மேலே தரப்பட்ட வாதமுறையிலிருந்து, இந்தியரில் படித்த வகுப்பினரிடையே இத் துறையில் எவ்வளவு கருத்துச் செலுத்தப்பட்டிருந்தது என்று காணலாம். ஆயினும் நாம் ஆராய்ச்சிக்கெடுத்துக் கொள்ளும் காலத்தில் அது ஒரு கலப்பற்ற தனித்துறையாகக் கற்கப்படவில்லை. மெய்விளக்க ஆராய்ச்சியில் பிழையற்ற வாதத்துக்குரிய ஒரு வகைமுறையாக மட்டுமே அது பின்பற்றப்பட்டது.

அரிஸ்டாட்டிலிய முக்கூற்றுவாத முறையைவிட இந்தியரின் ஐங்கூற்றுவாத முறை முழுநிறைவு மிக்கதேயாகும். பெருமெய்ம்மை வாசகத்தை அவர்கள் வகுத்த முறையில் அவர்கள் பொது வாசக முறைமையை முற்றிலுமே விளக்கினர். எடுத்துக்காட்டாக, 'எல்லாப் புகைநிகழ்ச்சிகளும் தீயுடன் தொடர்புடையவை' என்பதனிடமாக அது, 'எங்கெங்கு புகையோ, அங்கங்குத் தீ' என்று கூறிற்று. இங்கே வாதம் நேரடியாகச் சிறப்பு நிகழ்ச்சியிலிருந்து சிறப்புநிகழ்ச்சிக்குத் தாவுகிறது.[1]

1 ஆங்கில வாதஇயலார் அணிமையில் இக்கோட்பாடே கொண்டுள்ளனர். சிறப்பு நிகழ்விலிருந்து சிறப்பு நிகழ்வுககே நாம் செல்லக்கூடுமென்று திரு. மில் (வாத இயல்முறை Mill System of Logic ஏடு II இயல் 3) வலியுறுத்துவதும் திரு ஃவௌலர் அதை ஓரளவு ஏற்பதும் (சிறப்பியல் வாத

இக் காரணத்திலேதான் வாதமுறையின் பலவகைகள் குறித்து இந்திய நூல்களில் எதுவும் கூறப்படவில்லை. மேலைஐரோப்பிய வாதமுறை நூல்களில் மிகுதி இடம் நிரப்பும் பகுதி இவ் வாதமுறை வகைகளே என்பது கருதத்தக்கது.

முறை Inductive Logic) காண்கிறேம். பேராசிரியர் பெயினும் (Prof. Bain) இதே கருத்தாராய்வு கொண்டுள்ளார். முப்படிவாத முறையின் விலங்குப் பிடியிலிருந்து மில் நம்மை விடுவித்து, வாத முறையில் ஒரு புரட்சியை உண்டுபண்ணியுள்ளார் என்று அவர் கருதுகிறர். சிறப்பு நிகழ் விலிருந்து சிறப்பு நிகழ்வுக்கு வாத முறையில் செல்வது இயல்பான, தெளிவான, நேரடியான முறை மட்டுமல்ல; உண்மை அறிவாராய்ச்சிப் போக்கை வெளிப்படுத்தும் முறையும் அதுவே என்று அவர் கொள்கிறர். (பொதுவியல் வாத முறை: பக். 208-209). பேராசிரியர் ஜெவன்ஸ் கூறுவதாவது: மெய்ம்மைப்படி நிலைகளின் நிறைவளவுகளைக் கவனித்து ஏற்பதால் நம் ஆய்வு முறையின் பொதுவிளைவு இது என்பதில் ஐயமில்லை (இயல்நூல் முறைகள் பக். 227).

# 15. சமய வாழ்வு

பண்டை நாட்களிலும் சரி, தற்காலத்திலும் சரி அறிவாராய்ச்சிக் கோட்பாடுகள் வகையில் நாம் ஒரு பொது உண்மையைக் காண்கிறேம். பொதுமக்கள் நம்பிக்கைகள், வினைமுறைகள் ஆகியவற்றுடன் அவை தொடர்பற்றவையாகவே இருந்து வந்துள்ளன. தமிழர் அறிவாராய்ச்சிக் கோட்பாடு வகையில் நாம் காண்பது இதுவே.

எல்லாக் காலங்களிலுமே அறிவுத்திறமுடையோரின் ஆர்வம் சென்றகால அறிவுத் தொகுதியைக் கிளறி வருங்காலத்தைப் பற்றிச் சிந்திக்கவோ அல்லது மனம், இயற்பொருள் ஆகியவற்றின் தன்மைகள் பற்றி ஆழ்ந்தாராயவோ முற்பட்டுள்ளது. ஆனால் அறிவாராய்ச்சியார்வமும் புத்தாராய்ச்சித் திறனும் உடைய கற்றறிந்த மிகு சிலர் இவ்வாறு இயலுலகின் காரண காரியங்கள் பற்றிய மெய்ம்மையை உணர முயன்றாலும், பொதுவாக மக்கள் திரளின் கல்லா உள்ளங்கள் இயற்கையை ஒரு முழு மெய்ம்மையாகக் கருதவே முடிந்ததில்லை. வாழ்க்கை பற்றிய மிகத் தாழ்ந்தபடியான புலனறி முடிபையே அவர்கள் மேற்கொண்டு, இயற்கையின் மாறுபாடுகளுக்கு வேறு வேறு தனித்தனி காரணங்களால் பல தெய்வத் தொகுதியில் நம்பிக்கை கொண்டிருந்தனர். தங்களுக்கு நேர்ந்த இடையூறுகள் யாவும் அத்தெய்வங்களாலே நேர்ந்தவை என்றே அவர்கள் நினைத்தார்கள்.

இத் தெய்வங்களை வணங்கிய பல்வேறுன மக்கள் ...ரின் பண்புகளையே அத்தெய்வங்களும் ஏறத்

தாழ மேற்கொண்டன. போரிலும் குருதிக்களரியிலுடீ ஈடுபட்ட அரை நாகரிக முரட்டு வகுப்பினர்களிடையே தெய்வங்களும் முரட்டுத் தெய்வங்களாக இருந்தன. அத் தெய்வங்களின் பலிபீடங்கள் உயிர்க் கொலைகளுக்குரிய குருதிக்காடாய் இருந்தன. அவர்களைவிட நாகரிகத்தில் ஒருபடி முன்னேறி அமைதித்துறைக் கலைகளை வளர்த்த இனங்கள் சற்றுப் பண்பமைதி மிக்க தெய்வங்களை வணங்கினார்கள். இத்தெய்வங்கள் பழம், பூ, நறும்புகை ஆகியவற்றைப் பெற்று மனநிறைவடைந்தன.

முனைத்த முன்னேற்றமுடைய வகுப்பினரின் பண்பு தேர்ந்த உள்ளமுடையவர்கள் அறத்தின் ஆட்சி, இயற்கையின் ஒருமைப்பாடு ஆகிய கருத்தியல் படிவங்களை உணரும் ஆற்றல் உடையவர்களாய்த், தம் வாழ்க்கை முறைகளையும் அந்த அறப் படிவங்களுடன் இசைவிக்க முயன்றார்கள். இத்தகையவர்கள் இயற்கைப் பரப்பை இயக்கி ஆட்கொள்ளும் ஒரு தனி முதலை நோக்கித் தங்கள் வணக்க வழிபாடுகளை ஆற்றி வந்தனர்.

தொல் முதல் குடிகளான வில்லவரும் மீனவரும் எத்தகைய தெய்வங்களையும் வணங்கினதாகத் தெரிய வில்லை. தமிழகத்தில் வாழ்ந்த, தொல் பழங்குடியினரை வென்ற முதல் இனத்தவரான நாகர்கள் அச்சந்தரும் பெண் தெய்வமாகிய காளியை வணங்கினார்கள். அவள் கோயிலில் எருமைகள் பலவற்றைப் பலி தந்தார்கள்.

காளி உருவம் மிகவும் நடுக்கந்தரும் முறையில் ஒப்பனை செய்யப்பட்டிருந்தது. அவள் சடைமுடிகள் அணிமுடி போலத் தலையுச்சியில் சுற்றப்பட்டு, ஓர் இள நாகத்தின் பளபளப்பான தோலால் வரிந்து கட்டப்பட்டிருந்தன. பன்றியேற்றின் வளைந்த தந்தம் அவள் தலைமுடியின்மீது ஒரு பிறைபோலச் செருகப்பட்டது. புலிப்பல் மாலை ஒன்று அவள் கழுத்தை அணி செய்தது. வரிப் புலியின் தோல் அவள் அரையைச் சுற்றிய ஆடையாயிற்று.



வலிமை வாய்ந்த வில்லொன்று எய்யும் நிலையில் வளைக்கப்பட்டுத் தேவியின் கையில் வைக்கப்பட்டது. கவர்க்கொம்புகளையுடைய ஒரு நெட்டையான கலைமான் மீது அவள் அமர்ந்திருந்தாள்.

அவள் உருவத்தின்முன் பறைகள் கொட்டப்பட்டன. காளங்கள் இரைந்தன. இவற்றின் ஆரவாரத்திடையே கொடுந் தோற்றமுடைய நாகர்கள் அவள் பலி பீடத்தின் முன் எருமைகளைப் பலியிட்டனர். பலி விலங்குகளின் உடலிலிருந்து குருதி கொட்டும் சமயம் தெய்வமகள் வெறிகொண்டு நடுக்கும் உடலுடன் ஆடுகிறாள். அவள்மீது காளி வெளிப்பட்டுக் கூக்குரலிடுகிறாள்: “சூழ்ந்திருக்கும் ஊர்களிலுள்ள தொழுவங்களிலெல்லாம் எருதுகள் நிரம்ப உள்ளன. ஆயினும் எயினரின் முற்றங்கள் வெறுமையாகக் கிடக்கின்றன. திருட்டு, கொள்ளை ஆகியவற்றால் வாழவேண்டிய எயினர் ஊர்வாழ் மக்கள் போல அமைந்த வாழ்க்கையுடையவர்களாகி விட்டார்கள். கலைமான் ஏறிவரும் காளிக்குரிய பலிகளை நீங்கள் கொடுக்காவிட்டால், அவள் உங்கள் விற்களுக்கு வெற்றி உண்டு பண்ணித் தரமாட்டாள்!” என்று கூறுகிறாள்.

காளி பெண் தெய்வமாதலால், அவள் அடியார்கள் அவளுக்குத் தமிழ்ப் பெண்டிர் வைத்து விளையாடிய பந்துகள், பொம்மைகள், பச்சைக்கிளிகள், கானங்கோழிகள், மயில்கள் ஆகியவற்றை வழங்கினார்கள்; மணச் சாந்தும் மணத்துகளும், நறுஞ் சந்தனமும், அவித்த மொச்சை வகை, கூல வகைகள், குருதியும் கறியும் கலந்த சோறு ஆகியவையும் அவள் கோயில்களில் படையல் செய்யப்பட்டன.[1]

தமிழரசர்களால் நாகர்களே பெரும்பாலும் படை வீரர்களாய் அமர்வு பெற்றதனால், அவர்கள் தெய்வமாகிய காளியே நாளடைவில் வீர வகுப்பினரின் காவல் தெய்வம் ஆயினாள். படை வீரர் மட்டுமன்றிப் படைப்பணித் துறை

1 சிலப்பதிகாரம், XII, 22 முதல் 39 வரை.

வரும் மன்னரும் படை நடவடிக்கை எதிலும் ஈடுபடுவதன் முன் அவளுக்குப் படையல் வழங்குவதிலும் அவள் தயவை எதிர்பார்ப்பதிலும் ஒன்றுபட்டு முனைந்தனர். பற்றார்வ வெறியில் படைவீரரில் சிலர் மன்னர் படைகளுக்குக் கட்டாய வெற்றி தரும் எண்ணத்துடன் தம் உயிர்களையே அவள் பலி பீடத்தில் படையலாக்கத் துணிந்தனர்.

தமிழில் காளி ஐயை என்றும் அழைக்கப்படுகிறாள். ஏழு உடன்பிறந்த நங்கையருள் அவளே கடைசி நங்கை என்று கருதப்படுகிறாள். அவள் சிவபெருமானை ஆடற் போட்டிக்கு அழைத்தாளென்றும், தாரகன் என்ற அரக்கன் வலிமை வாய்ந்த உடலை இரு கூறாகப் பிளந்தாளென்றும் கூறப்படுகிறது.

நடுக்கந் தரும் தோற்றமுடைய இத் தேவியிடம் மக்கள் கொண்டிருந்த பேரச்சத்திற்கு ஒரு சான்றுஉண்டு. ஒருக்கால் அவள் கோயிலின் கதவுகள் திறவாதிருந்தன. திறக்க முடியவில்லை. அது அவள் வெறுப்புக்கு அறிகுறி என்று கருதிய பாண்டியன் கோயிலின்முன் நெடுஞ்சாண் கிடையாகக் கிடந்து அவள் தயவுக்கு மன்றாடினான். அவள் சினந் தணிக்கும்படி, செழிப்பான இரண்டு ஊர்களின் வரி வருவாயை அவள் பூசனைக்காக வழங்கினான்.[1]

தாழ்ந்த வகுப்பினரில் சிலரும் நாகரும் கல்தூண்களும் நீருற்றுக்களும் தெய்விக ஆற்றலுடையவை என்று நம்பி அவற்றையும் வணங்கி வழிபட்டனர். எடுத்துக்காட்டாக, காவிரிப்பட்டினத்தில் ஒரு சதுக்க வெளியில் ஓர் உயர்ந்த தூண் நிறுவப்பட்டிருந்தது. நஞ்சு, சூனியம், நச்சு உயிர்க்கடிவகை ஆகியவற்றால் துன்புற்றவர்கள் இங்கே வந்து குழுமினார்கள். அவர்கள் திரும்பவும் உடல் நலம்பெறும் நம்பிக்கையார்வத்துடன் அதனை நெஞ்சார வணங்கி வலம் வந்தனர். தவிர, செவிடு, ஊமை, குள்ளத் தன்மை, குட்டம், கூன் ஆகியவற்றைச் சீர்படுத்தும் திறமுடைய சுனை ஒன்றும் இருந்தது. அதில் அத்தகையோர்

1 சிலப்பதிகாரம், XX, 37-40; XXIII, 113-127.



குளித்து அதைச் சுற்றி வந்து அதன் சீராற்றலை அருளும்படி அதை வணங்கி வேண்டினர்.[1]

வேடர் அல்லது மலங்குறவர் வீரத் தெய்வமாகிய முருகனை வழிபட்டனர். இத் தெய்வத்துக்கு ஆறுமுகங்களும் பன்னிரண்டு கைகளும் இருந்தன. அவர் கோயில்கள் பொதுவாக உயர்மலை உச்சிகளிலோ அடர்ந்த காட்டு நடுவிலோ கட்டப்பட்டிருந்தன. இப் போர்த் தெய்வத்தின் குருக்கள் அத் தெய்வத்தின் விருப்புக்குரிய படைக்கலமான வேலை ஏந்திச் சென்றான். அவன் வேல் தாங்கியவன் என்ற முறையில் வேலன் என்று அழைக்கப்பட்டான்.

இத் தெய்வத்துக்குப் பலியாட்டு நிகழ்ந்தபோது, ஒரு கொட்டகை இடப்பட்டது. அது மலர்மாலைகளால் ஒப்பனை செய்யப்பட்டது. கொட்டகையின் உச்சிமீது சேவற் சின்னம் கொண்ட முருகனின் கொடி உயர்த்தப்பட்டது. தெய்வப் பணியில் நிற்கும் நோன்பு எடுத்துக்கொண்டதற் கறிகுறியாக, வேலன் தன் மணிக்கட்டைச் சுற்றி ஒரு சிவந்த நூலைக் கட்டிக்கொண்டான். அவன் மந்திரங்களும் வணக்கங்களும் முணுமுணுத்த வண்ணம் நாலாபக்கமும் பூவும் பொறியும் சிதறினான். அதன்பின் அவன் ஓர் எருதுப் பலியிட்டு, அதன் வெங்குருதியால் சோற்றைப் பிசைந்து, தெய்வத்துக்குப் படையலிட்டான். படையலிடும் சமயம் காளங்கள் விண்ணைப் பிளந்தன. குழலும் மணிகளும் முரசுகளும் இயம்பின. பூம்மணமும் புகைமணமும் எங்கும் பரவின.

அடியார்கள் தெய்வத்தின்மீது போற்றிப் பாடல்கள் பாடினர். வேலன் வெறியாடிக் குதியாட்டமிட்டும்சீறியும் அடியார்களின் வருங்காலம்பற்றிய முன்னறிவிப்புரைகள் வழங்கினான்.

இத் தெய்வத்தைப் பற்றிய பல செய்திகளிலிருந்து, அவன் முற்றிலும் கற்பனை உருவமல்ல, மாள்வின்பின்

1 சிலப்பதிகாரம், V. IX, 118-127.

தெய்வமாகக் கொண்டாடப்பட்ட அரசனே என்றுதெரிய வருகிறது. அவர் கங்கையின் தலைப்பினருகேயுள்ள சரவணம் என்ற பொய்கையில் பிறந்து, ஆறு செவிலியரால் வளர்க்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. அசுரர்கள் அல்லது நரகர்களுடன் போரிடும் சமயம் அவனே தேவர்களின் படைத்தலைவனாய் இருந்ததாகத் தோற்றுகிறது, அவன் இலங்கையைப் படையெடுத்து அதன் மன்னன் சூரனை வென்றான்.

இத் தெய்வம் தங்கள் குலப்பெண்ணொருத்தியை மணந்துகொண்டதாகக் குறவீர் மரபு குறிக்கிறது.[1]

ஆயரினத்தவர் தம் 'இனவீரனான கண்ணனையும் அவன் தமையன் பலராமனையும் வணங்கினர். அவன் வாழ்க்கையின் முக்கிய நிகழ்ச்சிகளைக் குறித்துக்காட்டி ஆயநங்கையர் தங்கள் இல்லங்களில் நடித்துப் பொழுது போக்கினர். அந் நிகழ்ச்சிகளில் சில வருமாறு: பிள்ளைமைக் குறும்பு விளையாட்டாக அவன் வெண்ணெய் திருடியது, யமுனையாற்றில் குளித்து விளையாடிக்கொண்டிருந்த ஆயநங்கையர் ஆடைகளை ஒளித்து வைத்தது, மாடுகளை மேய்க்கும்போது அழகாகக் குழல் வாசித்தது, ஆயநங்கையாகிய பின்னையுடன் அவன் காதலாடியது, சூழ்ச்சிமிக்க கஞ்சனை வென்றது, பாண்டவர்களுக்காகத் துரியோதனனிடம் தூது சென்றது ஆகியவை.

பொதுவழக்கில் கண்ணன் மாயவன் அதாவது சூதுக்காரன் என்று வழங்கப்பட்டான். மகாபாரதக் காவியத்தில் தீட்டப்பட்ட அவன் பண்போவியத்துடன் இந்தப் பெயர் முற்றிலும் பொருந்துகிறது. அவன் அண்ணன் பலராமன் பாரிய உடல்வலிமைக்குப் பேர் போனவன்.[2]

தமிழரில் உயர்வகுப்பினரிடையே போற்றப்பட்ட தெய்வம் சிவபெருமான். செஞ்சடையும் செந்நிறமும்

1 திருமுருகாற்றுப்படை.
2 சிலப்பதிகாரம், XVII.



உடையவராக இவர் கற்பிக்கப்படுகிறார். அவருக்குக் கண்கள் மூன்று. அவர் புலித்தோலாடையுடுத்து, மழுப்படை ஏந்தி எருதுமீது இவர்ந்து செல்கிறார். முக்கண் நீங்கலான மற்றக் கூறுகளில் நாகரிக முதிராக் காலத்திலுள்ள இமயமலைப்பகுதி வாணர் தோற்றத்துடன் அவர் தோற்றம் முற்றிலும் பொருந்தியதே. ஏனெனில், இப் பகுதியிலுள்ள மக்களும் செவ்வண்ணமும் செந்தலைமுடியும் உடையவர்கள். மலைப்பகுதிகளில் பயணம் செல்லும்போது அவர்கள் எருதுகளிலேயே ஏறிப் போகின்றார்கள்.

அவீர் உறைவிடம் பனிமூடிய கயிலைமலை. அது இமயமலைக்கு வடக்கே, இந்து கங்கை பிரமபுத்திராத்தலையூற்றுக்களுக்கு அருகில் உள்ளது. அவர் மிகப்பெரு வீரச்செயல் திரிபுரம் அல்லது முப்புரங்களை அழித்ததே. தேவர்களுக்கு மிகுந்த தொல்லைகள் தந்த அசுரர்களின் அரண்களாக அவை விளங்கின.

இத் தெய்வம் மலையரசன் மகள் பார்வதியை மணந்தார்.

தமிழகத்தில் குடியேறிய பார்ப்பனர் இயற்கைப் பொருள்களின் வணக்கத்தை அப்போதும் விட்டுவிடவில்லை. அவர்களில் சிலர் அந்நாளிலும் வேதகாலத்தைப் போலவே தம் இல்லங்களில் திருமுத்தீப் பேணிவந்தார்கள். வேள்விகள் அல்லது சமயப் பலியீடுகள் ஆற்றுவதற்கு அவர்கள் முதல் முக்கியத்துவம் தந்தனர். அவை மிகப்பாரிய அளவில், பொதுவாக அரசன் ஆதரவில் நடைபெற்றன. அகல்விரிவுடைய திருவினைகளுடன் குதிரைகளோ பசுக்களோ பலியிடப்பட்டன. அவை மிகுந்த மறைவடக்கத்துடன் அகன்ற கண்டிப்பான கடிகாவலுடைய பெரு வளைவுகளுக்குள் நடைபெற்றன. பலியிட்ட உயிரினங்களின் தசைகளைப் பார்ப்பனர் தின்றனர்.

வேதத் திருவினை முறைகளில் தனிப் பயிற்சியுடைய தனிப்பட்ட குருமாரே வேள்விகளைச் செய்தனர். அதற்

கான செலவுகளை ஏற்று வேள்வியில் தலைமை தாங்கிய மன்னர்களுக்கு மாள்வின்பின் உயர்உலகப் பேரின்பம் பரிசாக உறுதியளிக்கப்பட்டது. ஆயினும் வேதங்களைப் பார்ப்பனர் பொதுமக்களுக்குத் தெரியாமல் மூடிவைத்தே பேணினர். இதுகாரணமாக, வேதங்களில் கூறப்பட்ட இயற்கைப் பொருள்களின் வணக்கமுறை ஆரியரல்லாத பொதுமக்களின் ஆதரவைப் பெறவில்லை. எனவேதான் அயலினங்களின் மீது தம் ஆதிக்கத்தைப் பரப்ப அவர்கள் அயலினத் தெய்வங்களை மேற்கொள்ள வேண்டியதாயிற்று.

சிவபிரானும் காளியுமே ஆரியரல்லாதார் தெய்வங்களிடையே மக்கட் பேராதரவுடையவர்கள். அவர்களே பார்ப்பனத் தெய்வத்தின் தொகுதியில் முதலில் சேர்க்கப்பட்டனர். ஆயரினத்தின் வீரர்களான பலராமனும் கண்ணனும் இதுபோலவே திருமாலின் திருப்பிறவிகளாக வணங்கப்பட்டனர். இதுபோலவே வேடமரபினரின் வழிபடுதெய்வமான முருகன் சிவபெருமான் புதல்வனாக வணங்கப்பட்டான்.

தமிழகத்தில் பார்ப்பனர் ஊழியம் செய்த பெருங்கோயில்களெல்லாவற்றிலும் சிவபெருமான், கண்ணன், பலராமன், முருகன் ஆகிய நான்கு தெய்வங்களின் திருவுருவங்கள் நிறுவப்பட்டன.[1] ஆயினும் நாற்பெருந்தெய்வங்களிலும் சிவபெருமானே தனி முதல் தெய்வமாகக் கருதப்பட்டார். அவர் கோயில்களே மிகப் பாரிய அளவுடைய மிகப் பகட்டான கட்டடங்களாயிருந்தன. காளி சிவபெருமான் துணைவியான பார்வதியின் ஒரு மறுவடிவமாகக் கருதப்பட்டாள். வானவர் வேந்தனை இந்திரனுக்கும், காதற்கடவுள்காமனுக்கும், இயற்கை ஒளிப்பொருள்களான கதிரவனாகிய சூரியனுக்கும், நிலாச் செல்வனை சோமனுக்கும் தனித்தனி கோயில்களிருந்தன.

சாதி வருண வேறுபாட்டுக்கருத்தை மக்கள் உள்ளங்களில் பதியவைப்பதற்காக, பார்ப்பனர் நான்கு வருணங்

1 சிலப்பதிகாரம், XIV. 7—10.



களையும் குறித்த பாரிய உருவங்கள் அல்லது பூதங்களின் வழிபாட்டைப் புகுத்தினர்கள்.[1] முதற்பூதம் வெண்ணிலாப் போன்ற வெண்பொன்னிறமுடையது. முத்தீப் பேணும் பார்ப்பனரைப் போலவே உடையுடுத்து, வேத வேள்விக்குரிய கருவிகளைக் கைக்கொண்டிருந்தது. இரண்டாவது பூதம் செங்கழுநீர் வண்ணமுடையதாய், அரசனைப் போல வேல்கைக் கொண்டு, அரசனைப் போலவே முரசம், கவரி, கொடி, குடை புடைசூழச் சென்றது. மூன்ருவது பூதம் பொன்னிறமானது. கைகளில் ஒரு கலப்பையும் ஒரு நிறைகோலும் தாங்கிற்று. இவை உழவுத்தொழிலும் வாணிபத்தொழிலும் குறித்தன. நான்காவது கருநிறமுடையது. கரிய ஆடை உடுத்தது பாணர்கள், கூத்தர்கள், முரசறைவோர், இசைவாணர் ஆகியோரைக் குறித்த பல இசைக் கருவிகளை இது கைக்கொண்டிருந்தது.

பார்ப்பனீயக் கோயில்களின் வழிபாட்டு முறைமையில், திருவுருவங்களைக் காலையில் குளிப்பாட்டல், ஆடையணிதல், அணிமணி மலர்மாலை சூட்டுதல், நாள்தோறும் இரண்டு அல்லது மூன்று தடவை பழம், இனிய பண்டம் சமைத்த சோறு வழங்குதல், ஒவ்வொரு தடவையிலும் தெய்வத்தின் பெயர்களையும் புகழையும் ஒரு குறிப்பிட்ட எண்ணளவு உருச்செய்தல் ஆகியவை அடங்கியிருந்தன. வழிபாட்டுமுறையில் கண் கூசவைக்கும் ஆரவாரம், புலன்களுக்கு அது தந்த கவர்ச்சி ஆகியவை எங்கும் பொதுவாகவும், பெருங்கோயில்களில் சிறப்பாகவும் கல்லா மக்களின் உள்ளத்தை ஈர்ப்பதாயமைந்தன. ஆனல், அவற்ருல் அறிவார்ந்த தூயபக்தி உணர்ச்சி ஏற்படுவதற்குரிய சூழல் ஏற்படவில்லை.

பார்ப்பன எதிர்ப்புச் சமயங்களில் தமிழரிடையே மிகவும் செல்வாக்குப் பெற்றவை நிகண்ட நெறியும் புத்த நெறியுமே யாகும். இவ் விரண்டு சமயங்களும் வேதத் திருவினைகளையும் வினைமுறைகளையும் பயனற்றபாடெனக் கொண்டன. பார்ப்பனர் வலிந்து தாமே மேற்கொண்ட

1 சிலப்பதிகாரம், XXII, 16—12.

சிறப்புரிமைகள் முற்றிலும் போலியான தற்செருக்கெண்ணம் ஆகும் என்று கூறினர்.

நிகண்டநெறி புத்தநெறியைவிடப் பழமை வாய்ந்தது. நிகண்டர்கள் புத்தர்களைப் பாசண்டர்கள் அதாவது சமயப் பகைவர் என்றழைத்தனர். இந் நிகண்டர்கள் அருகனை வணங்கினர். இயற்கையை ஆளும் மூலமுதலறிவுப்பொருள் அவனே என்று கொண்டனர். அவர் திருவுருவம் பொதுவாக ஒரு முக்குடை நீழலில் ஒரு அசோகமரத்தின் கீழ் உட்கார்ந்த அல்லது நின்ற நிலையிலுள்ள ஒரு ஆடையற்ற மனித உருவமாய் இருந்தது.[1]

அவர்கள் இரண்டு தலையான உறுதிமொழிகளை மேற்கொண்டிருந்தனர். ஒன்று பொய்யுரை கூறக்கூடாதென்பது. மற்றொன்று உயிர்ப்பொருளெதுவும் கொல்லக்கூடாதென்பது. பொறாமை, பேரவா, சினம், தீயுரை ஆகியவற்றை விலக்குவதற்கு அவர்கள் தங்கள் உள்ளங்களைப் பயிற்றுவித்தார்கள்.

அவர்கள் சமுதாயம் இரு கூறுகளாகப் பிரிவுற்றிருந்தது. முதற்கூறு சிராவகர் (கேட்போர்) அல்லது பொதுநிலை மக்கள். மற்றது சமயவாணர். சமயவாணர்களிடையேயும் ஐந்து பிரிவினர் இருந்தனர். அவர்கள் பஞ்சபரமேஷ்டிகள் எனப்பட்டனர். அவர்கள் முறையே அருகர் அல்லது திருநிறை மாந்தர்; சித்தர் அதாவது இயற்கை மீறிய ஆற்றல் பெற்றவர்கள்; உபாத்தியாயர் அல்லது சமய போதகர்; ஆசாரியார் அல்லது குருமார்; சாதுக்கள் அல்லது சமயப்பற்றார்வ மிக்க மக்கள்.[2]

அவர்கள் கோயில்களின் அருகிலும், பொது வீதிகள் குறுக்கிட்டுச் செல்லும் திறந்த சதுக்க வெளிகளிலும் உரை மேடைகள் அமைத்து அவற்றிலிருந்து அச் சமயத் துறவியர் மக்களுக்குத் தங்கள் சமயம் பற்றி அறிவுரை தந்தனர். ஆடவர், பெண்டிர் இருவருமே துறவு நோன்பு

1 சிலப்பதிகாரம், X, *1—11.*
2 சிலப்பதிகாரம், X, *15—25.*



மேற்கொண்டு மட அமைப்பில் புக இசைவளிக்கப்பட்டனர். ஆண் பெண் துறவியர் இருசாராரும் ஒரு கொள்கலம், நீர்க்கலம் தொங்கவிட்ட ஒரு நூல் கயிற்றுறி, இருக்குமிடத்திலும் படுக்குமிடத்திலும் ஊரக்கூடிய நுண்ணுயிர்களைக் கொல்லாமல் அப்புறப்படுத்திக் காப்பதற்குரிய ஒரு மயிற்பீலிக் கொத்து ஆகியவற்றைக் கைக்கொண்டிருந்தனர்.

பஞ்ச மந்திரம் என்ற பொருடைய ஐந்தெழுத்துக் கொண்ட ஒரு வழிபாட்டு வாசகத்தை அவர்கள் ஓயாது உருவிட்டு வந்தனர்.[1]

புத்தர்பிரானுடைய உருவங்கள் அந்நாளில் வழக்குக்கு வரவில்லை. ஆனால், அவர் திருவடிகளின் தடம் கல்லில் செதுக்கப்பட்டது. அத்துடன் புத்தபிரான் அமர்ந்து அறவுரை கூறிய பீடிகை போன்ற மேடைகள் கல்லில் செதுக்கப்பட்டு, அது புத்தர்களின் வணக்கப் பொருளாயிருந்தது. சமயப்பற்றார்வமிக்க புத்தர் தம் வலப்புறம் அதனருகே இருக்கும்படியாகச் சுற்றி வந்து பூசனைக்கறிகுறியாகத் தலைதாழ்த்தினர். அதன் முன் கூப்பிய கையுடன் நின்று புத்தநெறியினர் கீழ்வருமாறு புத்தரைப் போற்றினர்.

"உம்மை எவ்வாறு புகழ்வேன்? 'சமய நோன்புகளில் வழுவாத பெருஞ்சிறப்பையுடைய' திருநிலையுற்ற ஒழுக்கம் வாய்ந்த அறிவுரைத் தலைவரே! மாரனை வென்று, சினத்துடன் எல்லாத் தீய உணர்ச்சிகளையும் நீர் அடக்கியுள்ளீர். தனியுயர் அறிவில் சிறந்தவர் நீர். மனித இனத்துக்குத் தஞ்சம் நீர். தம் திருவடிகளில் ஆயிரம் நற்சின்னங்களிருக்க, அவற்றின் பொலிவினைப்பாட எனக்கு ஆயிர நாவுகள் இல்லையே!"

புத்த விகாரங்கள் அல்லது மடங்களில், கற்றறிந்த துறவிகள் கேட்போர் கண்களுக்கு மறைவாக உள்ள ஓரிடத்திலிருந்து தங்கள் அறவுரைகளை ஆற்றினர்.[2]

1 சிலப்பதிகாரம், X, *98—101.*
2 சிலப்பதிகாரம், X, *11—14.*

அவர்கள் அறிவுரையிலும் செயல் வாழ்விலும் முதலிடம் வகித்த பண்பு ஈகையேயாகும். ''உணவு கொடுப்பவர் உயிர்கொடுப்பவரே!'' என்பது அவர்களிடையே வழங்கிய ஒரு பொதுவுரை. தன்னடக்கம், மெய்யறிவு, பொது அருளறம் ஆகியவையே மனிதனுடைய மிகப் பெரும் பேரின்பம் என்று கருதப்பட்டது.

தமிழகத்தில் புத்த துறவிகள் மிகப் பெருந்தொகையினர் இருந்தனர் என்று தெரிகிறது காவிரிப்பட்டினத்தின் ஏழு விகாரங்களைச் சார்ந்தவர்களாக மட்டும் ஆயிரம் துறவிகள் இருந்தனர் என்ற செய்தியிலிருந்து இதை உய்த்துணரலாம்.

புத்தர்கள் சாதிவேறுபாடுகளைச் சிறிதும் ஏற்கவில்லை. எல்லா மக்களையும் ஒரே சரிசம நிலையில் வந்து கூடும்படி அழைத்தனர்.

பண்டைத் தமிழர் சமுதாயத்தின் மிகப் பெருமைக்குரிய பண்புகளில் ஒன்று சமய சமரசம் ஆகும். தங்குதடையற்ற ஆராய்ச்சியும் மனித உணர்வின் முழுச்சுதந்திரமும் அதன் கூறுகள். அரசர்களே வெளிப்படையாகச் சமயச் சொற்போர்களுக்கு ஆதரவு தந்தனர். பொதுக்கூடங்களுக்கு ஒவ்வொரு சமய ஆசாரியரையும் அழைத்து விழாக் காலங்களிலும் மற்றச் சிறப்பு நாட்களிலும் மக்களுக்குத் தம் கோட்பாடுகளை விளக்கும்படி கோரினர். அத்துடன் எல்லாச் சமயங்களின் கோயில்களுக்கும் மடங்களுக்கும் அவர்கள் ஒரு சார்பின்றிச் சரிசமப் பாதுகாப்புத் தந்தனர். தனிப்பட்ட முறையில் அவர்களும் ஒரு சமயத்தின் பக்கமாகச் சாய்வுடையவர்களாய் இருந்த போதிலும், அந்தச் சமயத்திற்கே வழிபாட்டிடம் முதலியன அமைத்துக் கொடுத்தாலும், மற்ற எதிர்தரப்புச் சமயங்களின் வினைமுறைகளில் தலையிடாமல் விழிப்புடன் நடந்து வந்தனர்.

இந்தச் சமய சுதந்தரம் தமிழரின் அறிவுத் துறை, அறத்துறை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவிற்று.



உணர்ச்சிகளையும் நடையையும் இசைத்திணக்குவித்த முறையில் இந்தச் சமுதாய நிலைக்குப் புத்த சமயம் பேரளவில் உதவிற்று.

நிகண்டரும் புத்தரும் உயர்ந்த அறநிலைக்குறிக்கோள் உடையவர்களாயிருந்தனர். நேர்மை, அன்பு, எல்லா உயிர்களிடத்தும் அருளறம், வாய்மைப் பற்று முதலியவை, அவர்கள் தங்கள் அறிவுரையாலும் முன் மாதிரி வாழ்க்கையாலும் மக்களுக்குப் போதித்த நற்பண்புகளாகும். இந்த இருசமயங்களும் இங்ஙனம் அற ஒழுக்கத்தையும் அறிவொழுக்கத்தையும் வளர்க்கவும், பொது மக்களிடையே நல்லுணர்விணக்கம் உண்டு பண்ணவும் பெரிதும் காரணமாயிருந்திருத்தல் வேண்டும்.

தமிழர் உருவாக்கிய தூய உயர் ஒழுக்கம் அவர்கள் நாகரிகத்தின் அடிப்படை ஆகும். அற உணர்வும் சமயமுமே தமிழர் உள்ளத்தில் மேம்பட்டிருந்தன என்பதை அவர்கள் பண்டை இலக்கியம் தெளிவாகக் காட்டுகிறது. நூலாசிரியர்கள் பற்றூர்வம், ஈகை, வாய்மை, உயிர்களிடத்து அருளிரக்கம் ஆகிய பண்புகளைப் போற்றினர். பொருளியல் உலகின் அழிதன்மை வாய்ந்த கூறுகளை அவர்கள் ஏளனமாகக் கருதினர்.

இந்தத் தூய உயர் கருத்துக்கள் சிறுபிள்ளைத் தனம் வாய்ந்த புனைவியல் தன்மையுடைய பிற கருத்துக்களுடன் இணைந்து குளறுபடியாகாமலில்லை. அவை நாகரிகத் தொடக்கப் படிகளில் இயல்பாக நிகழக் கூடிய கருத்துக் குழப்பத்தின் விளைவேயாகும். எடுத்துக்காட்டாக அவர்கள் உயிர்களின் மறுபிறப்புக் கொள்கையில் நம்பிக்கை வைத்திருந்தனர். அவாக்களை அடக்க வேண்டுமென்று அவர்களுக்குப் போதிக்கப்பட்டது. ஏனெனில் அவையே பிறப்பு இறப்புச் சூழலுக்குக் காரணம் என்று கருதப்பட்டது. அவர்களில் அறிவிற் சிறந்த மக்கள்கூட அறிவாராய்ச்சிக்கும் கற்பனைக் கோட்டைக்கும் உள்ள அறிதற்குக் கடுமையான எல்லை வேறுபாட்டை உணரவில்லை. அவர்கள் புற உலகின் காட்சியாராய்ச்சி, புற

நிகழ்ச்சிகளின் நுண்ணாய்வு ஆகியவற்றின் மூலமன்றி; நுண்ணிய தன்னாய்வு மூலமே புற இயற்கை பற்றியும், அதன் அறிதற்கரிய மூல முழுமுதல் பற்றியும் அறிய முனைந்தனர். அவர்கள் அறிஞர்களோ, மாள்வுக்குப் பின்னுள்ள வாழ்வைப் பற்றிய பகட்டொளி மிக்க வற்றல் கானற் கனவுகளில் தங்கள் நேரத்தை வீணாக்கினர்.

வருங்காலம் பற்றிய அவர்கள் சிந்தனையின் மட்டற்ற ஆழமே தம் நிகழ்கால நிலைபற்றிச் சிந்திக்காதபடி அவர்களைத் தடுத்தன. உண்மையில் வறுமை பற்றியும் முழு நிறை துறவு பற்றியுமே அவர்கள் பெருமை கொண்டனர். ஏனெனில் இவற்றின் மூலமே ஒருவன் அவாவை அடக்கவும் அதன் மூலம் பிறப்பிறப்பு என்னும் புயலார்ந்த கடலிலிருந்து மீளவும் முடியுமென்று அவர்கள் நம்பினர்.

தமிழர் தேசிய நலிவின் விதைகளை நாம் இங்கே காண்கிறோம். அவை தமிழரையும் மற்ற எல்லா இந்து இன மக்களையும் வீழ்த்தி, வருகிற வருகிற படையெடுப்பாளர்களுக்கெல்லாம் எளிதில் இரைகளாகும்படி செய்துள்ளன.

# 16. முடிவுரை

ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழரின் மேற்கண்ட வரலாற்றிலிருந்து, அவர்கள் இந்தியத் தீவக் குறையின் தென்கோடியில் வாழ்ந்தவர்கள் என்பதும், நாகரிகமும் செல்வ வளமும் மிக்க ஒரு நாட்டினத்தவர் என்பதும் உணரப்படும். அவர்கள் நாடு முத்திசைகளிலும் கடலால் சூழப்பட்டு, வடதிசையில் அவர்களிலும் நாகரிகத்தில் குன்றிய கொங்கணர், கலிங்கர், இரட்டர் முதலிய இனத்தவர்களை எல்லைப்புறத்தவராகக் கொண்டிருந்தனர்.

இந்த இனத்தவர்கள் குறைந்த நாகரிகம் உடையவர்களென்பதை, அவர்களுக்குரிய தனியிலக்கியம் இல்லாமையினாலேயே உணரலாம். இது காரணமாகவே தமிழர் பெருமித வீறுடன் தம் மொழியைத் தென்மொழி என்றும் ஆரியத்தை வடமொழி என்றும் கூறிக்கொண்டனர்.

கங்கைக் கரையிலிருந்து பெருத்த துறைமுகப்பட்டினமான தாமிலித்தி (தாம்ரலிப்தி) யிலிருந்து அவர்கள் குடிகிளம்பி வந்ததினாலேயே பெரும்பாலும் அவர்கள் தமிழர் என்ற பெயரைக் கொண்டவர்களாக இருத்தல் சாலும்.[1]

அவர்கள் அரசர்களும் வேளிர்களும் தாம் மங்கோலிய மரபிலிருந்து தோன்றியவர்கள் என்பதை மறவாது நினை

1 இது தற்போது கல்கத்தாவுக்கு 35 கல் தென்மேற்கில் ஹூக்ளியின் கிளை ஆருன ரூப்நாராயணின் கரையிலுள்ள 'தமிழக்' என்னும் இடமேயாகும். மச்ச, விஷ்ணு புராணங்களும் பிற புராணங்களும தாழ்நில வங்காளத்தில் தாமிலத்திகள் அல்லது தாம்ரலிப்தர்கள் என்ற தனி இனத்தவர் வாழ்ந்து வந்ததாகக் குறிக்கின்றன.

விற் கொண்டேயிருந்தனர். ஏனெனில் அவர்கள் தம்மை வானவர் அல்லது வானுலக மரபினர் என்று கூறிக் கொண்டனர். அவர்கள் நாட்டைப் பண்டைய நாகரிகக் குடிகளிடமிருந்து வென்று கைப்பற்றினர், நாகர்களை அவர்கள் வறண்ட பாலைப் பகுதிகளுக்குத் துரத்திவிட்டு, இளவெயிலெறிக்கும் வளமிக்க நற்பகுதிகளையெல்லாம் தாமே ஆட்கொண்டனர்.

நாட்டை வென்று கைப்பற்றியவர்கள் என்ற முறையிலும், தம்மினத்தவரையே ஆட்சியாளராகப் பெற்ற முறையிலும் அவர்கள் இனப்பற்றும் இனப் பெருமையும் இறுமாப்பும் உடையவர்களாயிருந்தனர். அவர்கள் தேசியத் தன்மதிப்பும் உயர்வுடையதாயிருந்தது. உழவாலும், தொழில் வளத்தாலும், வாணிகத்தாலும் அவர்கள் பெருஞ்செல்வ வளங்கண்டனர். அத்துடன் கோட்டை கொத்தளப் பாதுகாப்புடைய நகரங்களில் வாழ்ந்ததனால் அவர்களுக்கு உயிர் பற்றியோ உடைமை பற்றியோ அச்சம் இல்லாதிருந்தது. இக் காரணத்தால் அவர்கள் ஒளிவு மறைவின்றிப் பகட்டுடைகளையும், விலையேறிய அணி மணிகளையும் புனையத் தயங்கவில்லை.

அவர்கள் கவலையற்ற இன்ப வாழ்வுடையவர்கள். நயநாகரிக மிக்கவர்கள். இசையிலும் மலர்களிலும் கவிதையிலும் அவர்கள் விருப்பார்வமிக்கவர்களாயிருந்தார்கள். நிலப் போர்க்களங்களிலும் கடற் போர்க்களங்களிலும் நாடு கைக்கொண்டு வென்ற அவர்கள் முன்னோர்களின் வீர மறச்செயல்களை அவர்களின் பாணரும் புலவரும் பாடிப் புகழ் பரப்பினர். தத்தம் மன்னர்களுக்கு வாய்மை தவறாது தொண்டாற்றுவதிலும், ஏழை எளியவர் துணையற்றவர்களின் நலங்களைப் பாதுகாப்பதிலும், சிறப்பாக வாய்மையையும் நேர்மையையும் பேணுவதிலும் தெய்வங்களைப் பூசிப்பதிலும் இப் பாடல்கள் அவர்கள் உயர் அவா ஆர்வத்தைத் தட்டி எழுப்பின.

வருணனைக்குரிய அந்தக் காலத்திலிருந்து இன்று வரை அறுபது தலைமுறைகளுக்குமேல் சென்றுள்ளன. இக்



கால எல்லைக்குள் நிகழ்ந்துள்ள மாற்றங்கள் எத்தனையோ! பல நாட்டெல்லைகள் விரிவு பெற்றுள்ளன.[1] ஆறுகள் போக்கு மாறியுள்ளன. பண்டைப் பெருநகரங்கள் மறைந்துள்ளன. பண்டைத் தமிழ் மக்களில் பல பகுதியினரின் தாய்மொழி மாற்றம் கண்டுள்ளது. பருவ மழைக் காலங்களில் பெரிய ஆறுகளின் வாய்முகங்களில் படிந்து திரண்ட வண்டல் நிலத்தால் கடற்கரையில் மாறுதல்கள் ஏற்பட்டன.

இம்மாறுதல்களின் போக்கைக் கோதாவரி, கிருஷ்ணை, வைகை, தாம்பிரவர்ணி ஆகிய ஆற்று வாய்முகங்களில் கடலகத்துக்குள் முனைப்பாக வளைந்த நிலப்பகுதிகள் காட்டுகின்றன. மேல் கடற்கரையில் கொல்லத்திலிருந்து கொச்சி வரை பரந்துகிடக்கும் காயல் நாம் விரித்துரைக்கும் அக்காலத்தின் பின்னர் இவ்வாறு உருவானதேயாகும். தமிழகத்தின் பண்டை நில இயல்பை விரித்துரைத்த இடத்தில் இது முன்னரே குறிக்கப்பட்டுள்ளது. கீழ் கடற்கரையிலும் முன்பு தழைத்தோங்கிய துறைமுகமாயிருந்த கொற்கையருகே கடல் தீரம் ஆறு கல் தொலை கிழக்காக முன்னேறியுள்ளது. வடக்கிலும் குண்டூர் அருகே கடற்கரை பல கல்தொலை விலகிச் சென்றுள்ளது. ஏறத்தாழ முப்பது கல் தொலைவுக்குப் பழைய கடற்கரையை இங்கே நாம் இன்னும் காண்கிறோம்.

ஆறுகளில் சில இயற்கை சார்ந்த அல்லது செயற்கையான காரணங்களால் போக்கு மாறியுள்ளன. தற்காலக் கொடுத்தலையாற்றின் படுகை வழியாகவே முன்பு ஓடிக்கொண்டிருந்த பாலாறு, அப்பழைய நெறியைத் திருவல்லத்தருகிலே[2] விட்டு விலகி இப்போது தென்கிழக்காகத்

---

1. நிலக் குறுக்கமும் மொழி எல்லைக் குறுக்கமும்தான் பெரிதும் ஏற்பட்டுள்ளன. மூல ஆசிரியர் இங்கே குறிக்கும் நாட்டு விரிவு கரிகாலன் கால முதல் காடு வெட்டி நாடு திருத்தியதையும், பாசன வசதிகளால் வாழ்விடம் பரப்பியதையும் ஆற்று வண்டல் நிலம் கடற்கரையில் மேடிட்டுப் புது நிலம் கண்டதையுமே பற்றியதென்று தோற்றுகிறது.

2. Tiruvallum.

திரும்பி, முன்னைய வாய்முகத்திலிருந்து தெற்காக 60 கல் தொலைவில் சென்று கடலுடன் கலக்கிறது. இன்றும் கொடுத்தலையாற்றுடன் அதன் படுகையை இணைக்கும் பகுதி பழைய பாலாறு (அல்லது விருத்த க்ஷீர நதி) என்றே வழங்குகிறது.

காவிரிப்பட்டினத்தருகே காவிரியாறு அகலமாகவும் கப்பல் போக்குவரத்துக் குகந்ததாகவும் இருந்ததாக அறிகிறோம். ஆனால் அத் திசையில் இப்போது காவிரியைக் காணவே முடியவில்லை. பல நூற்றாண்டுகளுக்கு முன் காவிரியில் திருச்சிராப்பள்ளியருகே ஆற்றின் குறுக்கே ஓர் அணை கட்டப்பட்டதன் பின்னர் ஆறு கரையுடைத்துச் சென்றுள்ளதென்றும், அதன் பயனாகக் கொள்ளிடம் என்ற புதிய கிளை தோன்றிற்றென்றும் தோற்றுகிறது. அணையின் கிழக்கிலுள்ள பழைய காவிரியின் நீர் நூற்றுக்கு மேற்பட்ட கால்வாய்களில் பரவிப் பாய்ந்து பல்லாயிரக் கணக்கான சதுரக்கல் அளவுள்ள நெல் வயல்களுக்கு வளமூட்டுகிறது. பண்டைப் பேராறு இக் காரணத்தால் அடங்கிச் சுருங்கிக் காவிரிப்பட்டினத்துக்கு 10 கல் தொலைவு மேற்கிலுள்ள மாயவரத்துக்கு வருவதற்குள் ஒரு தனி வளைவுள்ள சிறு பாலத்தால் கடக்கப்படத்தக்க அளவில் ஒரு சின்னஞ்சிறு கால்வாய் ஆகிவிடுகிறது.

மலபார்க் கரையில் அகலப்புழை மூலமாகத் தொண்டித் துறைமுகத்தருகே கடலுக்குச் சென்றுகொண்டிருந்த கொத்தாறு[1] இப்போது தொண்டிக்கு எட்டுக்கல் வடக்கேயுள்ள ஓர் இடத்திலே கடலில் கலக்கிறது. தொண்டியருகிலுள்ள பழைய படுகை இப்போது தூர்ந்து விட்டது.

சேர சோழ பாண்டிய அரசரின் பண்டைத் தலைநகரங்கள் யாவுமே இப்போது பாழ்பட்ட நிலையில் உள்ளன. அவை இருந்த இடத்தின் தடங்களும் மறைக்கப்பட்டுப் போயின. சேர அரசன் தலைமை நகரமான கரூர் அல்லது வஞ்சிக்குச் சான்றாக இன்றிருப்பது பாழ்பட்டுப் பொடிந்து பாசிபடிந்த மதில் இடிபாடுகள், அவற்றின் திண்ணிய கூடைகால்கள் ஆகியவற்றின் சிதறிய பகுதிகளே யாகும். ஆனால் அதன் அழிநிலையில் அவற்றிடையே நிலவும் ஆழ்ந்த அமைதி வாய்ந்த பாழ்ந்தனிமையைக் குலைக்கப் பகலில் கழுகின் கிறீச்சென்ற கூவிளிகளும் இரவில் நடுக்குறுத்தும் நரியின் ஊளைகளும் தவிர வேறு எதுவும் கிடையாது.

1. Kotta River.



சோழர்களின் தலைநகரமாயிருந்த மக்கள் பெருந்திரளும் செல்வ வளமும் மிக்க காவிரிப்பட்டினம் இப்போது பல அடுக்கான மணல் மேடுகளில் புதையுண்டு கிடக்கிறது. அதனிடையே கட்டுக்கிடைக் கழிநீர் தங்கியுள்ளது. அக் கழிகளில் அவ்வப்போது ஒரு கொக்குத்தான் தனிமையில் தவளை மீன்களுக்காகப் பதிவிருப்பதைக் காண்கிறோம்.

பீடுமிக்க பாண்டியன் உயர் தவிசமர்ந்து அறிவார்ந்த அமைச்சர் குழாம் புடைசூழ வீரருடனும் புலவர் பெருமக்களுடனும் வீற்றிருந்த பழைய மதுரை அமைந்திருந்த இடத்தில், இப்போது சில ஆயர்கள்தாம் தம் ஆனிரைகளை மேய்க்கின்றனர்.

உயர்ந்த மலைத் தொடர்களால் ஏனைத் தமிழகப் பகுதிகளிலிருந்து பிரிக்கப்பட்டு வாழ்ந்த மேற்குக் கரையிலுள்ள தமிழர்களும் மைசூர் மேட்டுநிலத் தமிழர்களும் நாளடைவில் மற்றத் தலைநிலப் பகுதியிலுள்ள தமிழர்களிடமிருந்து பேச்சு முறையில் மிகுதி மாறுபாடடைந்து அதன் பயனாக அவர்கள் மொழி தமிழின் தனிப்பட்ட கிளைகளாயின. தற்கால மலையாள மொழியும் கன்னடமொழியும் உருவான வகை இதுவே. இம் மாறுதல்களால் தமிழகத்தின் எல்லையும் முன்னிருந்ததைவிடச் சுருக்கமடைந்தது.

தற்போதைய தமிழகம் மேற்குத் தொடருக்குக் கிழக்கில் திருப்பதிக்கும் கன்னியாகுமரிக்கும் இடைப்பட்ட

தாழ்நிலம் என்று வரையறுத்துக் கூறலாம். சென்ற எட்டு நூற்றாண்டுகளாகத் தமிழர்கள் குடியேறியுள்ள இலங்கையின் வடபகுதியும்[1] தமிழகத்தின் ஒரு பகுதியாகவே கருதப்பட இடமுண்டு.

இந்தக் குறுகிய எல்லைக்குள்ளும் கூடத் தமிழினம் அடிக்கடி அயலினங்களின் பெருவரவால் முற்றிலும் அழிந்துவிடும் இடர்நிலை வாய்ந்த நெருக்கடிகளுக்கு ஆளானதுண்டு. ஆனால் புடையெழுந்த அயலினங்கள் நாட்டை முற்றிலும் நிரப்புவதற்கு முன் இறையருள் முன்னின்று அவ்வெழுச்சிகளைத் தடுத்தாட்கொண்டுள்ளது என்னல் வேண்டும். தெக்கணத்திலிருந்து கன்னடியர், முகலாயர், தெலுங்கு நாயக்க மரபினர், மராட்டியர், மற்ற முசல்மானிய அரசியல் வேட்டத்தார் ஆகியோர் சென்ற ஆறு நூற்றாண்டுகளில் ஒருவர் பின் ஒருவராகத் தமிழகத்துக்குட் புகுந்து தமிழர் தடத்தையே அழித்துவிடும் அளவு நெருக்கடிகளை உண்டு பண்ணியுள்ளனர்.

1. இலங்கைத் தமிழகம் பற்றித் தமிழரிடையே பரப்பப்பட்டு வந்துள்ள தவறான கருத்து இலங்கைத் தமிழரும் பேரறிஞருமான ஆசிரியர் கூற்றில் கூடப் புலப்படுகிறது. எட்டு நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்துதான் தமிழர் அங்குக் குடியேறியுள்ளனர் என்பதும் வரலாற்றுக்கியைந்த உண்மையாகத் தோற்றவில்லை. ஆசிரியர் விரித்துரைக்கும் 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட கடைச்சங்க காலப் பிற்பகுதிக்கு நீண்டநாள் முற்பட்டே, கி. மு. 2 ஆம் நூற்றாண்டில் ஏலாரா என்ற தமிழரசன் இலங்கை முழுதும் ஆண்டான். முதற் சிங்கள அரசன் காலத்திலேயே தமிழக மன்னர்க்கும் மக்களுக்கும் இலங்கை மன்னர்க்கும் மக்களுக்கும் திருமணத் தொடர்பும் அரசியல் தொடர்பும் இருந்தன. இராவணன் தமிழரசன் என்றும், தமிழகப் பகுதியில் ஆண்டதாக மரபுரை குறிக்கிற மாவலியுடன் அவன் தொடர்புடையவன் என்றும் கருதப்படுகிறது. தவிர, கடலுள் ஆழ்ந்த தமிழகப் பகுதி இலங்கையை முன்னே, பின்னே உட்கொண்டிருந்திருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை. தற்போதைய சிங்களப் பகுதிகளிலே முன்பு தமிழர் வாழ்ந்ததற்குரிய மொழித்தடங்களும் பண்பாட்டுச் சுவடுகளும் இன்றும் உள்ளன. இலங்கை அறிஞராகிய முதனூலாசிரியர் இவற்றைக் கவனிக்காதது வியப்புக்குரியதே. ஆனால் தமிழகத்தைத் தம் தாயகம் என்று கருதுவதில் ஈழத் தமிழர் கொண்டுள்ள ஆர்வமே எல்லாத் தமிழரும் குடியேறிய தமிழர் என்ற தவறான கருத்தைப் பரப்பி வந்துள்ளது.

வரலாற்றுக்கு எதிராக, திருவாங்கூர்த் தமிழரும் பிரிட்டிஷ் ஆட்சியின் போது தம்மைப் பழங்குடியேற்றத்தார் என்று கருதி வந்ததுண்டு. தமிழகம் தாழ்ந்த காலத்திய சூழல்களின் பண்புச் சின்னங்களே இக் கருத்துக்கள் என்று கருத இடமுண்டு.



இறுதியில் மேம்பட்ட உரம்வாய்ந்த வெளிறிய முகம் படைத்த ஓரினத்தவர் வானகத்திலிருந்து திடுமெனவந்ததுபோல வந்து சேர்ந்து, தமிழரையும் இந்தியாவிலுள்ள பிற இனத்தவர்களையும் அரசியல் குழப்ப நிலைகளிலிருந்தும் ஆட்சிக் குளறுபடிகளிலிருந்தும் காத்து ஆண்டுள்ளனர். தொலைதூரத்திலுள்ள ஒரு தீவிலிருந்து அவர்கள் ஆரிடர் மிக்க மாகடல்கள் கடந்து தம் வாணிக வளர்ச்சிக்குரிய புதிய வாணிகக் களங்கள் நாடி வந்தனர். அமைதி வாய்ந்த வணிகராக வந்து காலூன்றிய அவர்கள் தங்கள் ஒற்றுமை, ஊக்கம், அறிவுத்திறம் ஆகியவற்றால் இங்கே மொகலாயரோ, மகதப்பேரரசரோ ஆண்ட பேரரசுகளை விடப் பாரிய பெரும் பேரரசை நிறுவினர். ஆங்கில நாட்டின் இக் "காவலின்கீழ்த் தமிழர் இன்று தங்குதடையற்ற ஆழ்ந்த" வாழ்வமைதி பெற்றுள்ளனர்.[1]

இக் காரணத்தாலேயே தமிழர் வாழ்வில் இன்று உலகெங்கணும் காணமுடியாத தனிப்பட்ட ஒரு பண்பைக் காண்கிறோம். சென்ற இரண்டாயிர ஆண்டுகளுக்கு மேலாகத் தங்கள் மொழியையோ நாகரிகத்தையோ கிட்டத்தட்ட மாறாநிலையில் வைத்துக் காத்துள்ள உலகின் ஒரே இனம் தமிழினமே.

ஆயினும் சமுதாயத் துறையிலும் அரசியல்துறையிலும் அக்காலத் தமிழருக்கும் இக்காலத் தமிழருக்கும் உள்ள உயர்வு தாழ்வின் அளவு மனச்சோர்வளிக்கும் அளவேயாகும்[2]

1. பிரிட்டிஷ் ஆட்சி நடுவில் எழுதப்பட்ட முதனூலின் மூல ஆசிரியர் ஆங்கில ஆட்சிபற்றிக் கூறிய செய்திகள் அடிப்படையில் சரியானவையே. தமிழரைப் பற்றிய மட்டில் விடுதலைபெற்ற இந்தியாவில் தமிழர் பிரிட்டிஷ் ஆட்சியில் பெற்ற பண்பாட்டு வளர்ச்சி வாய்ப்பை வளர்த்துள்ளனர் என்று கூறமுடியாது. ஆயினும் ஆசிரியர் ஆங்கில ஆட்சியார்வம் சற்று மிகைப்பட்டதேயாகும். தாய்மொழி என்ற வகையில் தமிழின் நிலைமை சற்று மேம்பட்டாலும், தமிழின் பீடும் பெருமைகளும் சமஸ்கிருதத்தளவு பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்திலோ, அதன் பின்னரோ கூட விளக்கம் பெற வாய்ப்பளிக்கப்படவில்லை என்பதில் ஐயமில்லை.

மொகலாயப் பேரரசும் மகதப் பேரரசும் போலவே பாண்டிய பல்லவ, சோழப் பேரரசுகளும் ஆந்திரப் பேரரசும் நிலவியதையும் மூலஆசிரியர் காலம் உணரவில்லை. விசயநகரப் பேரரசின் வரலாறுகூட அவர்காலத்துக்குப் பின்னரே வரலாற்று விளக்கம் கண்டுள்ளது.

2. வாசகத்தின் அச்சு முனைப்புத் தமிழாக்கஞ் சார்ந்ததே.

இன்று தமிழர் ஆட்சியுரிமை இழந்த ஓர் ஆளப்படும் இனம், பல நூற்றாண்டுகளுக்கு முன்பே அவர்கள் பண்டை ஆட்சிக் குடிகளின் மரபுகள் கால்வழித் தடமற்று அழிந்துவிட்டன. குருமார், கணிகள், அமைச்சர், படைத்துறைப் பணியாளர், மருத்துவர் ஆகியோர் அடங்கிய ஐம்பெருங் குழுவினர் கூடி மன்னுரிமை ஆட்சியாளருக்கு அறிவுரை வழங்கி ஆட்சி நடாத்தும் காலம் மலையேறிப்போய் விட்டது. வெற்றிவிழாக்களிலும் விருந்துகளிலும் தமிழ்ப் பாணர்குலம் யாழ்மீட்டித் தங்கள் மூதாதையர் வீரப்புகழ் பாடும் காட்சியை நாம் இன்று கனவு காணக்கூட முடியாது. உயர்ந்த நேரியல் ஆடைகளையும் தமிழகத் தொழிலாளர் செய்த பிற பொருள்களையும் வாங்கத் தொலை அயல்நாட்டுக் கப்பல்கள் நம் துறைமுகங்களில் வந்து காத்திருந்த காலத்தின் நினைவு கனவில்கூடத் தொலைவாகிவிட்டது.

ஒரு தேசீய இனம் என்ற முறையில் தமிழர் உயிர்த்துடிப்பு ஆறி அடங்கிவிட்டது என்பதுகூட இன்றைய முழு அவலநிலையைச் சித்திரித்துவிடவில்லை. அவர்கள் தொழில்கள் அழிந்துவிட்டன. கலைகள் மடிந்துவிட்டன. அவர்கள் பழந் தெய்வங்கள்கூட உயிர்ப்பிழந்து போயின.

இந்திரனும் பலராமனும் இன்று வணங்கப்படவில்லை. மாயோன் வணக்கம் இன்று இராமன், கிருஷ்ணன் வணக்கம் ஆகியுள்ளது. சிவன் கோயில்களில்கூட, சிவன் திருவுருவல்ல இன்று வணங்கப்படுவது; இலிங்கம் அல்லது கந்துருவே![1]

தமிழர் தனிப் பழம்பண்புகளில் சில இன்னும் மீந்துள்ளன என்பது 'ஆறுதல் தரும்' ஒரு செய்தியே

1. இலிங்கம் அல்லது கந்துரு பண்டைத் தமிழர் வழிபாட்டு மரபே என்றும் தமிழினத்தினிடமிருந்தே பண்டைப் பேருலகெங்கும் பரவியிருந்த தென்றும் பல உலக அறிஞரும் ஆசிரியர் மறைமலையடிகளும் விளக்கியுள்ளனர். சிந்துவெளிப் பழம்பொருளாராய்ச்சிகளும் இதற்குப் பேராதரவளிக்கின்றன.



யாகும். இன்றும் இதே பரப்புள்ள உலகின் வேறெந்தப் பகுதியிலும் காணப்படுவதைவிட மிகப் பலவான கோயில்களும் வழித்தங்கல் விடுதிகளும் தமிழகத்தில் உள்ளன! எல்லையற்ற பொறுப்புடனும் உழைப்புடனும் இழைத்துருவாக்கப்பட்டவை அக் கோயில்கள். வழித்தங்கலிடங்கள் தனிமனிதர் அறச்செயல்களாலேயே உருவாக்கிப் பேணப்படுகின்றன. ஏழையும் சரி, செல்வரும் சரி, எல்லாக் காலங்களிலும் பருவங்களிலும்இவற்றில் தங்குதடையின்றி இடம்பெற்று ஆதரவுகாண இடம் உண்டு.

" தமிழர் இன்றும் நட்பில் உறுதியுடையவர்கள், மாதரிடம் நன்மதிப் பண்புடையவர்கள். ஏழைகளுக்கு இரங்குபவர்கள். சமயப்பற்றார்வம் உடையவர்கள். அயரா ஊக்கத்துடன் உழைப்பவர்கள்.

தமிழரிடையே நீண்டநாள் வாழ்ந்த ஐரோப்பிய சமயகுரு ஒருவர்[1] அவர்களைப்பற்றிக் கூறுவதாவது:

"எங்கெங்கெல்லாம் உழைத்துப் பணம் ஈட்டுவதற்குரிய வாய்ப்பு உண்டோ, எங்கெங்கெல்லாம் உழைப்பை விரும்பாத சோம்பல் உயர்குடி வகுப்பு உழைப்பின் வாய்ப்பைப் பிறர்க்களித்து ஒதுங்கி வாழ விரும்புகிறதோ, அங்கங்கெல்லாம் தமிழ்மக்கள் சென்று மொய்க்கின்றனர். கீழை உலகின் ஸ்விட்ஸ் மக்கள் என்றோ, கிரேக்கர் என்றோ அவர்களைக் குறிக்கலாம். இந்துக்களிடையே மூடநம்பிக்கைக்குப் பெரிதும் ஆட்படாத, உழைப்பூக்கத்திலும் விடா முயற்சியிலும் மேம்பட்ட இனத்தவர்களும் அவர்களே!"

இன்றும் இந்தியப் பழங்குடி மக்களிடையே கல்வியறிவில் முதன்மையுடையவர் தமிழர்களே.

அறிவார்ந்த ஒரு தற்கால அரசியல்[2] நாடெங்கும் பிணைத்துப் பாதைகளும் இருப்புப் பாதைகளும் தந்தி

1. கால்டுவெல் தலைமகனார் (Bishop Caldwell).
2. மூல ஆசிரியர் கால அரசியல், பிரிட்டிஷ் அரசியல்.

அஞ்சல் இணைப்புக்களும் பரப்பியுள்ளது. சாதிசமய வேறுபாடற்ற முறையில் தொகுக்கப்பட்ட மிகச் சீரிய சட்ட ஆட்சிமுறை வகுத்தமைக்கப்பட்டுள்ளது. கல்வி நிலையங்களும் மருத்துவமனைகளும் திறக்கப்பட்டுள்ளன. பல்வேறு வகைப்பட்ட அரசியல் துறையரங்கங்கள் வகுக்கப்பட்டுள்ளன—இவற்றுள் சில ஆங்கிலநாடே அறியாத புதுத்துறைகளாகக்கூட அமைந்துள்ளன.

இம் மாறுபாடுகளின் முழுப்பயனையும் அடைய வேண்டுமானால், தமிழர் தங்கள் இடைக்கால ஊழியின் உறக்கத்திலிருந்து விழித்தெழ வேண்டும். நம் வாழ்வில் ஒரு முக்கியமான கவர்வழிச் சதுக்கத்தை நாம் அடைந்திருக்கிறோம் என்பதை அவர்கள் அறியவேண்டும். இப்போது செய்யும் தவறுகள் விரைவில் எளிதில் சரி செய்ய முடியாத பெருந் தவறுகள் ஆகிவிடத் தக்கவை. எடுத்துக்காட்டாகச், சாதிமுறையை இன்னும் விட்டொழிக்காதிருப்பது மடமையாகும். இதனை இன்னும் அவர்கள் காணத்தவறினால், சாதி போய்விடுமென்ற அச்சங் காரணமாக ஐரோப்பியருடன் சமுதாய முறையில் கலந்துறவாடத் தயங்கினால், ஆளும் இனத்தவரின் வெறுப்புக்கும் அவநம்பிக்கைக்கும் அவர்கள் ஆளாதல் உறுதி. அந்நிலை ஏற்பட்டால், ஆள்பவர் ஆளப்படுபவர் இடையில் மெய்யான ஒத்துணர்வு இல்லாது போய்விடும். தற்போது இருசாரா ரிடையேயும் இருந்துவரும் பிளவு இதனால் இன்னும் வளர்ந்து, பல தப்பெண்ணங்களை உண்டுபண்ணி, அரசியலார் எவ்வளவு உறுதி உரம் படைத்தவர்களாயினும், அவர்கள் உள்ளப்பாங்கில் பல சிக்கல்களைத் தோற்றுவிக்கக் கூடும். இது ஆளப்படும் இனத்துக்கு ஆரிடர் தருவதாகும்.[1]

தமிழர்கள் நீண்டநாள் பின்பற்றிவந்துள்ள செயலற்ற மாயாவாத வேதாந்தம் அவர்கள் தற்பண்பையும் தன்மதிப்பையும் துறக்கும்படி கற்பித்து அத் திசையிலே

1. பிரிட்டிஷ் ஆட்சியின் போது எழுதப்பட்ட மூல ஆசிரியர் உணர்ச்சிகள் இவை.



அவர்களைப் பயிற்றுவித்துப் படிமானமாக்கியுள்ளது. இதனால் ஏற்படும் வருந்தத்தக்க இடர்களை நாம் எளிதில் காணலாகும்.[1] இதைவிட்டுச் செயல்முறைக் கோட்பாட்டைத் தமிழர் பின்பற்றுவரா?[2] இனியாவது தனி மனிதருக்குரிய தற்பண்பு மேற்கொண்டு செயல் முனைப்பான திறங்களை வளர்க்க முந்துவரா? உயிர்க்குறுதி பேணுவதைப் பெரிதாகப் பாவித்துக் காடுசெல்ல நாடாமல், உயிர்களிடையே வாழ்ந்து கடமையாற்றி, மன்னுயிர் நலத்துக்கு உழைத்து உயிர்களின் படைப்பு முதல்வன் பெயருக்கு உரிய புகழ்நாட்டுவரா?

இன்னும் நாம் நம் பழைய தப்பெண்ணங்களை வைத்துக் காத்து மூடி, புனைவியலான வேறு உலகுபற்றியகனவு காண்பதானால்; இன்னும் நம் அறிஞர் பிறப்பிறப்பின் சுழலுக்கு அஞ்சி அவாவெல்லாம் அடக்க முனைவதானால்; நம் உளப்பண்புகளை இறைவன் நாம் பயன்படுத்தும்படி அளித்துள்ளார் என்று கொள்ளாமல், அடக்கி ஒடுக்கி அழிக்கவும் பயன்படாது நம்மிடமிருந்து துருப்பிடிக்கவுமே வழங்கியுள்ளார் என்று நாம் இன்னும் எண்ணுவதானால்;

**1. பகவத்கீதை : இயல் 2 : சாங்கியயோகம் : சுலோ. 71.**
அவாக்கள் அனைத்தையும் துறந்து, பற்றில்லாமல், தன்னலமில்லாமல், தற்பெருமையில்லாமல் வாழ்பவனே அமைதிநிலை பெறுகிறான்.

ஷை இயல் 12 : பக்தியோகம் : சுலோ. 16.
தூய உள்ளமுடையவன், அறிவுடையவன், இன்பதுன்பங்களில் ஈடுபடாதவன், வீறமைதியுடன் எல்லாச் செயல்களையும் துறந்து என்னிடம் மெய்பீடுபாடுடையவன்—அவனே என் விருப்பத்துக்குகந்தவன்.

ஷை இயல் 17 : மோட்சயோகம் : சுலோ. 66.
செயல்கள் அனைத்தையும் துறந்துவிட்டு என்னிடம் தஞ்சமடை. அப்போது உன்னை எல்லாப் பொலலாங்குகளிலிருந்தும் நான் காப்பேன். மனத்தளர்வடைய வேண்டா!

2. வள்ளுவர் தமிழ்ப்பண்பார்ந்த கோட்பாடு இதுவே. கீழ் வரும் குறட்பாக்கள் காண்க.

''ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாம் செயல்'' (குறள் 33)
''தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்'' (குறள் 619)
''ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்'' (குறள் 620)
''ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே ஒல்லாக்கால்
செல்லும்வாய் நோக்கிச் செயல்'' (குறள் 673)

வாழ்க்கையென்னும் பந்தயக் களத்தில் நாம் பிந்தியவர்களாவோம்; மனித இனத்தின் இழிந்த குற்றேவல் மாக்களாகவே நாம் அமைந்து விடவும் நேரும்.

இவ்வாறு செய்யாமல், மேனாட்டு நாகரிகத்தின் மொத்த முன்னேற்றத்தைப் பின்பற்றித் தொடர்ந்தும், அதே சமயம் அதில் காணப்படும் வழுக்களை மேற்கொள்ளா தகற்றியும் வந்தால், வகுப்புக்கு வகுப்பு ஒத்துழைப்புப் பண்பை இடைநின்று தடுத்து மக்களின் அறிவும் ஊக்கமும் மறக்கச்செய்து பாழ்படுத்தும் சாதி விலங்கை உடைத்தெறிந்தால், நம் பெண்பாலருக்குக் கல்வி தந்து அவர்களை அறிவுடைய மனைவியராகவும் அன்னையராகவும் பயிற்றுவித்தால், தொழில் நுணுக்கக் கல்வி நிலையங்கள் நிறுவி அறிவியல் புத்தாராய்ச்சிகளை நாம் ஊக்கினால்; வெறுங் கைத்தொழிலாளிகள் இயந்திரங்களுடன் போட்டியிட முடியாதென்பதை உணர்ந்து இயந்திரப்பொறிகளைத் தொழில்களில் ஈடுபடுத்த முனைந்தால், உருவ வணக்கத்தையும் குறுகிய சமயக் கிளை, உட்கிளைச் சிறுபூசல்களையும் விடுத்து இந்து சமயத்தைச் சீர்திருத்தி அதனை ஒரே உயிர்ப்பற்றுடைய தெய்வ வழிபாட்டு முறையாக்கினால், நாம் வளம்பெற்று வாழ்ந்து ஓங்குவது உறுதி! இந்துப் பேரினத்தின் ஒரு பகுதியாய் உலகப் பேரினங்களிடையே மதிப்பு வாய்ந்த ஓர் இடம் பெறுவதிலும் ஐயம் இராது.

இச் செய்திகளில் யாராவது ஒருவர் வந்து தொடங்கி வழிகாட்டுவது வரை நம் மக்களில் ஆற்றலும் அறிவுமுடையவர்கள் காத்திருக்கத் தேவையில்லை. இக் கருத்துக்களை மெல்லத் தம் குடும்பங்களிலும் உறவுமுறைச் சூழல்களிலும் பரப்பிக் கூடுமானவரை எத்தகைய கிளர்ச்சிகரமான மோதலுக்கும் இடமில்லாமலே அதைச் செயலுக்குக் கொண்டுவருவோமானால். நம் சமுதாயத்தைக் காத்தவர்கள் என்ற புகழ்ப்பெயரை நாம் வருங்காலத் தலைமுறைகளில் நிலைநாட்டியவர்களாவோம்.

-ழக வெளியீடு: அரு.கூ

பதிப்பாளர் :

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிட்.,
1/140, பிராட்வே, சென்னை-1.

தலைமை நிலையம் :

98, கீழைத் தேர்த்தெரு, திருநெல்வேலி-6.

விலை ரூ. 6–75

அப்பர் அச்சகம், சென்னை